# பதிப்புரை

அகத்தே நிகழும் இன்பம் 'அகப்பொருள்' எனப்படும். அகப் பொருள் நூல்கள் தமிழிற் பல உள்ளன. ஆயினும், 'அகம்' என்றே பெயரமைந்த பழைய இலக்கியநூல் இப்போது ஒன்றே உள்ளது. அதுதான் 'அகநானூறு' என்பது.

கடைச்சங்க காலத்தின் எட்டுத்தொகை நூல்களுள் அகநானூறும் ஒன்று. நானூறு அகவற் பாட்டுக்களால் ஆனது; புலவர் பலரால் இயற்றப்பட்டு, மதுரை உப்பூரிகுடிகிழான் மகனார் உருத்திரசன்மரால் தொகுக்கப்பட்டது.

அகநானூறு மூன்று பகுதிகளாக உள்ளது. முதல் நூற்றிருபது பாட்டுக்கள் 'களிற்றியானை நிரை' எனப்படும். அடுத்த நூற்றெண்பது பாட்டுக்கள் 'மணிமிடை பவளம்' எனப்படும். கடைசி நூறு பாட்டுக்கள் 'நித்திலக் கோவை' எனப்படும்.

இந் நூலுக்குப் பழைய உரை ஒன்று உண்டு. அது, முதல் கூ௦-பாட்டுகட்கு மட்டும் குறிப்புரையாக இருக்கின்றது. அடுத்து ஏ௦-பாட்டுகட்கு அகநானூற்றின் முதற் பதிப்பாசிரியரான திரு. வே. இராசகோபாலாசாரியார் உரை எழுதியிருக்கின்றார். ஆதலால் நூல் முழுமைக்கும் ஒரே வகையாகத் தெள்ளிய உரையொன்று எழுதி வெளிவரவேண்டிய இன்றியமையாமை இந் நூலுக்கு நெடுங்காலமாக இருந்துவந்தது.

அக் குறையினை நீக்கும்பொருட்டு, இப்போது தஞ்சை நாவலர் திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்களும், கரந்தைக் கவியரசு R. வேங்கடாசலம் பிள்ளையவர்களும் சேர்ந்து இந்நூல் முழுமைக்கும் உரையெழுதி வருகின்றனர். நூலும் விரைந்து அச்சாகி வருகின்றது.

செய்யுட்களைப் பதம் பிரித்து, முதலில் தெளிவாகத் தலைப்புக் கொடுத்துப, பின்பு பொருள் செல்லும் நெறிக்கு ஏற்ப முறைப் படுத்திப் பதவுரை கண்டு, அதன் மேல் முடிபும் விளக்கவுரையும் எழுதி, உள்ளுறை புலப்படுத்தி, மேற்கோள் இடங்களை விளக்கி, உரிய அடிக் குறிப்புக்களுடன் இவ்வுரை தெளிந்து செல்கின்றது.

முதற்கண் 'களிற்றியானை நிரை' என்னும் முதற்பகுதி ஒரு தனிப் புத்தகமாக வெளியிடப்பெற்றது. இப்போது இரண்டாம் பகுதியாகிய 'மணிமிடை பவளமும்' ஒரு தனிப் புத்தகமாக வெளியிடப்பெறுகின்றது. இறுதியிற் பாட்டு முதற் குறிப்பு, ஆசிரியர் பெயர் வரிசையும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அகநானூறு முழுப் புத்தகமாக வெளிவரும்போது நூல் வரலாறு, உரை வரலாறு, அரும் பொருட் குறிப்பு முதலிய பிற குறிப்புக்களும் சேர்க்கப்பெறும்.

மு. காசிவிசுவநாதன்.

இரண்டாவது

## மணிமிடை பவளம்

### 121. பாலை

[தோழியால் தலைமகளை உடன்வருமெனக் கேட்ட தலைமகன் நெஞ்சிற்குச் சொல்லியது.]

[1]நாம்நகை யுடையம் நெஞ்சே கடுந்தெறல்
வேனில் நீடிய வானுயர் வழிநாள்
வறுமை கூரிய மண்ணீர்ச் சிறுகுளத்
தொடுகுழி மருங்கில் துவ்வாக் கலங்கல்
ரு கன்றுடை மடப்பிடிக் கயந்தலை மண்ணிச்
சேறுகொண் டாடிய வேறுபடு வயக்களிறு
செங்கோல் வாலிணர் தயங்கத் தீண்டிச்
சொரிபுறம் உரிஞிய நெறியயல் மராஅத்து
அல்குறு வரிநிழல் அசைஇ நம்மொடு
கo தான்வரும் என்ப தடமென் தோளி
[2]உறுகண் மழவர் உருள்கீண் டிட்ட
ஆறுசெல் மாக்கள் சோறுபொதி வெண்குடைக்
[3]கனைவிசைக் கடுவளி யெடுத்தலின் துணைசெத்து
வெருளேறு பயிரும் ஆங்கண்
கரு கருமுக முசுவின் கானத் தானே.

—மதுரை மருதனிளநாகனார்.

(சொ - ள்.) க. நெஞ்சே -,

கக—ரு. உறுகண் மழவர் உருள் கீண்டிட்ட - வழிச் செல்வார்க்குத் துன்பத்தைச் செய்யும் மழவரது சாகாடு கிழித்துச் சென்ற சுவடாகிய, ஆறுசெல் மாக்கள் - நெறியிலே செல்லும் சாத்தரது, சோறு பொதி வெண் குடை - சோறு பொதிந்த வெள்ளிய பனை ஓலையாலாய குடையினை, கனைவிசைக் கடுவளி எடுத்தலின் - மிக்க விசையினையுடைய சூறாவளி தூக்கலின் எழுந்த ஒலியினை, துணை செத்து - தனது பிணையினது குரலென எண்ணி, வெருள் ஏறு - அஞ்சிய மானேறு, பயிரும் ஆங்கண் - அப் பிணையை அழைத்திடும் இடங்களையுடைய, கருமுக முசுவின் கானத்தான் - கரிய முகத்தினையுடைய முசுக்களை யுடைய காட்டின்கண்ணே.

---

பா-ம். 1. நாணகை. 2. உறு கணமழவர். உறுகணை மறவர். ஊறுகணை மழவர். உன் கீண்டிட்ட. 3. கணை விசை. கண் மிசை.

க—கo. கடுதெறல் வேனில் நீடிய வான் உயர் வழி - மிக்க காய் தலையுடைய கோடை நீண்ட மிக உயர்ந்த நெறியில், நாள் வறுமை கூரிய - நாளும் தன் வறுமை மிக, மண் நீர்ச் சிறு குளத் தொடு குழி மருங்கில் - குளிக்கும் நீராகிய சிறு குளத்தில் தோண்டப் பெற்ற குழியின்கண், துவ்வாக் கலங்கல் - உண்ணற் காகாத கலங்கிய நீரால், கன்று உடை மடப்பிடிக் கயந்தலை மண்ணி - கன்றினையுடைய இளமை வாய்ந்த பிடியின் மெல்லிய தலையை முதலிற் கழுவி, சேறுகொண்டு ஆடிய வேறுபடு வயக் களிறு - பின் எஞ்சிய சேற்றினைக்கொண்டு அளைந்துகொண்ட நிறம் வேறுபட்ட வலிய ஆண்யானை, செங் கோல் வால் இணர் தயங்கத் தீண்டி - சிவந்த காம்பினையுடைய வெள்ளிய கொத்துக்கள் அசையத் தனது துதிக்கையால் பற்றி, சொரிபுறம் உரிஞ்ய - தினவு பொருந்திய தன் முதுகினை உராய்ந்து கொண்டதாய, நெறி அயல் மராஅத்து - வழியின் பக்கத்துள்ள வெண்கடம்பின், அல்குறு வரி நிழல் அசைஇ - சுருங்கிய வரி வரியாகவுள்ள நிழலிலே தங்கி, நம்மொடு தட மென்தோளி வரும் என்ப - நம்முடன் பெரிய மென்மை வாய்ந்த தோளையுடைய தலைவி வரும் என்பர், நாம் நகை யுடையம் - ஆகலின் நாம் நகையுடையேமாயிராநின்றேம்.

(முடிபு) நெஞ்சே! முசுவின் கானத்தான், தடமென்றோளி வரி நிழலசைஇ நம்மொடு வருமென்ப; நாம் நகை யுடையம்.

(வி - ரை.) 'நாணகை' யென்பது பாடமாயின் நாளும் நகையுடையேம் என்க. வானுயர் வழிநாள் என்று கொண்டு மேகம் கால் வீழ்த்துப் பெய்யாது உயர்ந்த பிற்காலத்து என்றுரைத்தலுமாம். மண் நீர் - கழுவும் நீர்; மண் கலந்த நீருமாம். வேறு படு களிறு - சேறு காய்ந்திடத் தன்னுடல் வெண்ணிறம் ஆயினமையின் வேறு படுகளிறென்றார். தான் வரு மென்ப: தான், அசை. உறு கணை மழவர் என்பது பாடமாயின், மிக்க கூட்டமாகிய மழவர் என்க. கணைவிசை யென்னும் பாடத்திற்கு அம்பு போலும் விசை என்க.

(உ - றை.) களிறு துவ்வாக் கலங்கலால் முதற்கண் பிடியின் தலையை மண்ணிப் பின்பு சேற்றினைக் கொண்டு தான் ஆடியது என்றது, தலைவன் தலைவியைத் தலையளி செய்வன் என்றவாறும்.

(மே - ள்.) [1]'கரணத்தினமைந்து' என்னுஞ் சூத்திரத்து, உடன் சேறல் செய்கையொ டன்ன பிறவும், மடம்பட வந்த தோழிக் கண்ணும் என்னும் பகுதியில், தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறியதற்கு இச் செய்யுளைக் காட்டினர் நச்.

[2]'எள்ளல் இளமை' என்னுஞ் சூத்திரத்து, 'நாணகையுடையம் நெஞ்சே நம்மொடு, தான் வருமென்ப தடமென்றோளி' என்பது பிறர் மடம் பொருளாக நகை தோன்றியது என்றனர் பேரா.

---

1. தொல். கற். ரு. 2. தொல். மெய்ப். ச.

## 122. குறிஞ்சி

[தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொற்றது. தோழி சொல்லெடுப்பத் தலைமகள் சொல்லியதூஉமாம்.]

[1]இரும்பிழி மாரி அழுங்கன் மூதூர்
விழவின் றாயினுந் துஞ்சா தாகும்
மல்ல லாவண மறுகுடன் மடியின்
வல்லுரைக் கடுஞ்சொ லன்னை துஞ்சாள்
௫ பிணிகோ ளருஞ்சிறை யன்னை துஞ்சின்
துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்
இலங்குவே லிளையர் துஞ்சின் வையெயிற்று
வலஞ்சுரித் தோகை ஞாளி [2]மகிழும்
அரவவாய் ஞமலி [3]மகிழாது மடியிற்
௧0 பகலுரு [4]வுறழ நிலவுக்கான்று விசும்பின்
அகல்வாய் மண்டிலம் நின்றுவிரி யும்மே
திங்கள் கல்சேர்பு கனையிருண் மடியின்
இல்லெலி வல்சி வல்வாய்க் கூகை
கழுதுவழங் கியாமத் தழிதகக் குழறும்
௧௫ வளைக்கட் சேவல் வாளாது மடியின்
மனைச்செறி கோழி மாண்குர லியம்பும்
எல்லாம் மடிந்த காலை யொருநாள்
நில்லா நெஞ்சத் தவர்வா ரலரே, அதனால்
அரிபெய் புட்டி லார்ப்பப் பரிசிறந்து
௨0 ஆதி போகிய பாய்பரி நன்மான்
நொச்சி வேலித் தித்த னுறந்தைக்
கன்முதிர் புறங்காட் டன்ன
பன்முட் டின்றால் தோழிநங் களவே.

—பரணர்.

(சொ - ள்.) ௨௩. தோழி -,

௧—௧௮. மாரி இரும்பிழி இவ்அழுங்கல் மூதூர் - மழையை ஒத்த மிக்க கள்ளினையும் ஆரவாரத்தினையுமுடைய இந்த முதிய ஊரானது, விழவு இன்று ஆயினும் - விழா இல்லையாயினும், துஞ்சாது ஆகும் - துயிலப் பெறாதாகும், மல்லல் ஆவணம் மறுகு உடன் மடியின் - வளஞ் சான்ற கடைத் தெருவும் ஏனைய தெருக்களும் ஒருங்கே உறங்கி ஒலியடங்கினும், வல் உரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள் - வலிய ஒலியுடன் கூடிய கொடிய சொற்களையுடைய அன்னை உறங்காள், பிணிகோள் அருஞ்சிறை அன்னை துஞ்சின் - பிணித்தலைக் கொண்ட அரிய சிறையினைப் போன்ற அன்னை

பா - ம். 1. இரும்பிழி மகாஅரிவ். 2. மருளும். 3. குரையாது. 4. உறழ் நிலாக் கான்று.

உறங்கினும், துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர் - துயிலாத கண்களை யுடையராய் ஊர்காவலர் விரைந்து சுழல்வர், இலங்குவேல் இளையர் துஞ்சின் - விளங்கும் வேலினராய அக் காவலர் துஞ்சினும், வை எயிற்று வலம் சுரித்தோகை ஞாளி மகிழும் - கூரிய பல்லினையும் வல மாகச் சுரிதலுடைய வாலினையுமுடைய நாய் குரைக்கும், அரவ வாய் ஞமலி மகிழாது மடியின் - ஒலிமிக்க வாயினையுடைய நாய் குரை யாது உறங்கினும், பகல் உரு உறழ நிலவுக் கான்று - பகலின் ஒளி யினை யொக்க நிலவினைத் தந்து, விசும்பின் அகல்வாய் மண்டிலம் நின்று விரியும் - வானின்கண் அகற்சி வாய்ந்த மதியம் விளங்கிப் பரவும், திங்கள் கல் சேர்பு கனையிருள் மடியின் - திங்கள் மேற்கு மலையினை அடைந்து மிக்க இருள் தங்கின், இல் எலி வல்சி வல்வாய்க் கூகை - இல்லிலுள்ள எலியை இரையாகக் கொண்ட வலிய வாயின தான கூகையின் சேவல், கழுது வழங்கு யாமத்து அழிதகக் குழறும் - பேய்கள் திரியும் நள்ளிரவில் அழிவு உண்டாகக் குழறும், வளைக் கண் சேவல் வாளாது மடியின் - பொந்தில் வாழும் அச் சேவல் வறிதே உறங்கின், மனைச் செறி கோழி மாண் குரல் இயம்பும் - மனையிற் றங்கிய கோழிச் சேவல் மாண்புற்ற குரலை எழுப்பிக் கூவும், எல் லாம் மடிந்த காலை ஒருநாள் - ஒருநாள் இவை யெல்லாம் ஒழிந்த காலத்தும், நில்லா நெஞ்சத்து அவர் வாரலர் - நிலைபெறாத நெஞ் சினையுடைய நம் தலைவர் - வருதலிலர்;

கஅ—உ௩. அதனால் -, நம் களவு - நமது இந்தக் களவொழுக் கம், அரி பெய் புட்டில் ஆர்ப்பப் பரி சிறந்து - பரல் பெய்துள்ள கெச்சை ஒலிக்க வேகத்தாற் சிறந்து, ஆதி போகிய - ஆதி யெனும் கதியிலே தேர்ச்சியுற்ற, பாய்பரி நன்மா - பாயும் செலவினை யுடைய நல்ல குதிரைகளை யுடைய, தித்தன் - தித்தன் என்பானது, நொச்சி வேலி - மதிலாகிய வேலியையுடைய, உறந்தை - உறையூரைச் சூழ்ந் துள, கல்முதிர் புறங்காடு அன்ன - கற்கள் நிறைந்த காவற் புறங் காடு போன்ற, பல் முட்டின்று - பல தடைகளையுடையதாகின்றது.

(முடிபு) தோழி! மூதூர் துஞ்சாதாகும்; ஆவணம் மறுகு மடியின் அன்னை துஞ்சாள்; அன்னை துஞ்சில் காவலர் கடுகுவர்; இளையர் துஞ்சின் ஞாளிமகிழும்; ஞமலி மடியின் மண்டிலம் விரியும்; திங்கள் மடியின் கூகை குழறும்; சேவல் மடி யின் கோழி குரலியம்பும்; எல்லாம் மடிந்த காலை அவர் வாரலர் ; அதனால் நம் களவு தித்தன் உறந்தைப் புறங்காட்டன்ன பன்முட்டின்று.

(வி - ரை.) கள்ளின் மிகுதியைக் குறித்தற்கு [1]"சேறுசெய் மாரியி னளிக்குநின், சாறுபடு திருவி னனைமகி ழானே" எனப் பிறரும் மாரியை உவமை கூறியுள்ளா ராகலின், 'இரும்பிழி மாரி' எனப் பாடங் கொள்ளப்பட்டது. 'மகாஅர்' என்னும் பாடத்திற்கு, மாக் கள் என நலிந்து பொருள் கொள்ளல் வேண்டும். கள்ளுண்பாரை மிகவுடைமையின் ஆரவாரமுடைய ஊர் என்க. விழவின் றாயினும் என்றதனால் விழா நிகழ்தலிற் றுஞ்சாமையும் பெறப்பட்டது. ஆவ ணமும் மறுகுமென்க. ஈன்று புறந்தந்த அன்னையையும் 'வல்லுரைக்

1. பதிற். ௬௫.

கடுஞ் சொலன்னே' யென வெறுத்துரைக்குமாறு செய்யும் காதலின் பெற்றியை யாரே அறியவல்லர்! தோகை யென்றது ஈண்டு வாலி னைக் குறித்தது. மகிழ்தல் - மகிழ்ந்து குரைத்தல். இருள் மடியின் - இருள் தங்கின். யாமத்து மென்னும் உம்மை தொக்கது. வளை - பொந்து. புட்டில் - சதங்கை; கெச்சை; [1]"அரிபுனை புட்டிலும்," "நூபுரப் புட்டில்" என்னுமிடங்களில் நச்சினார்க்கினிய ருரைத் தமை காண்க. ஆதி - குதிரையின் நேரோட்டம்; [2]"ஆதிக்கொளீஇ" என்புழி, 'ஆதிமாதி யென்பவற்றுள் ஆதி - நெடுஞ்செலவு' என்றார் நச்சினார்க்கினியர்.

(மே - ள்.) [3]'குடையும் வாளும்' என்னுஞ் சூத்திரத்து, நொச்சி யாவது - காவல் . . . அது மதிலைக் காத்தலும் உள்ளகத்தைக் காத்தலு மென இருவர்க்குமாயிற்று. இக் கருத்தானே, 'நொச்சி வேலித் தித்த னுறந்தை' என்றார் சான்றோரும்" என்றும், [4]'இருவகைக் குறிபிழைப் பாகிய விடத்தும்' என்னுஞ் சூத்திரத்து, காணாவகையிற் பொழுது நனி யிகப்பினும்' என்னும் பகுதியில் இப் பாட்டினைக் காட்டி, 'என்றது தாய் துஞ்சாமை, ஊர் துஞ்சாமை, காவலர் கடுகுதல், நிலவு வெளிப்படுதல், நாய் துஞ்சாமை போல்வனவற்றால் தலைவன் குறியின்கண் தலைவி வரப் பெறாமல் நீட்டித்தலாம்' என்றும் உரைத்தனர் நச்.

இறையனார் களவிய லுரையாசிரியர் [5]"காம மிக்க" என்னுஞ் சூத்தி ரத்துக் 'காப்புச் சிறை மிக்க கையறு கிளவியும்' என்னும் பகுதியில் இப் பாட்டினை யெடுத்துக் காட்டி, இதனைச் சிறை காவல் எல்லாம் வந்த செய் யுள் என்றனர். [6]'முட்டு வயிற் கழறல்' என்னுஞ் சூத்திரத்து, முட்டு வயிற் கழறல் என்னும் மெய்ப்பாட்டிற்கு 'நொச்சி வேலி . . . தோழி நங்களவே' என்ற அடிகளை எடுத்துக்காட்டி, இது தலைமகன் கேட்பக் கழறி யுரைத்தது என்று உரைத்தனர் பேரா.

---

## 123. பாலை

[தலைமகன் இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]

உண்ணா மையின் [7]உயங்கிய மருங்கின்
ஆடாப் படிவத் தான்றோர் போல
வரைசெறி சிறுநெறி நிரைபுடன் செல்லுங்
கான யானை கவினழி குன்றம்
௫ இறந்துபொருள் தருதலும் ஆற்றாய் சிறந்த
சில்லைங் கூந்தல் நல்லகம் பொருந்தி
ஒழியின் வறுமை யஞ்சுதி அழிதக
[8]உடைமதி வாழிய நெஞ்சே நிலவென

---

1. கலி. அ0; கூகூ. 2. கலி. கூகூ. 3. தொல். புறத். கஉ. 4. தொல். கள கசு. 5. இறையனார். அகப். ௩0. 6. தொல். மெய்ப். உ௩.
(பாடம்) 7. உறங்கிய. 8. உடையை.

நெய்கனி நெடுவேல் எஃகிலை யிமைக்கும்
க0 மழைமருள் பஃறோல் மாவண் சோழர்
கழைமாய் காவிரிக் கடல்மண்டு பெருந்துறை
இறவொடு வந்து கோதையொடு பெயரும்
பெருங்கட லோதம் போல
[1]ஒன்றிற் கொள்ளாய் சென்றுதரு பொருட்கே.

—காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக் கண்ணனார்.

(சொ - ள்.) அ. நெஞ்சே வாழிய -,

க—ரு. உண்ணாமையின் உயங்கிய மருங்கின் - உண்ணாமையாலே வாடிய வயிற்றினையும், ஆடாப் படிவத்து ஆன்றோர் போல - நீராடாத விரதத்தினையுமுடைய தவத்தினர் போல, வரை செறி சிறு நெறி நிரைபுஉடன் செல்லும் - மலைகள் செறிந்த சிறிய நெறிகளிலே நிரைந்து சேரச் செல்லும், கான யானை கவின் அழி குன்றம் - காட்டு யானைகள் அழகு அழியும் இடமாய குன்றத்தினை, இறந்து பொருள் தருதலும் ஆற்றாய் - கடந்து பொருள் ஈட்டி வருதலும் செய்திலை ;

ரு—எ. சிறந்த சில் ஐங்கூந்தல் நல் அகம் பொருந்தி - சிறப்புற்ற சிலவாகிய ஐம் பகுதியையுடைய கூந்தலையுடைய நம் தலைவியின் நல்ல ஆகத்திற் பொருந்தி, ஒழியின் - மனையிற் றங்கிவிடினும், வறுமை அஞ்சுதி - வறுமையை அஞ்சாநின்றாய் ;

அ—கச. சென்று தரு பொருட்கு - சுர நெறிகளிற் சென்று ஈட்டி வரும் பொருட்காக, நிலவு என - நிலவு போல், எஃகு இலை இமைக்கும் - கூரிய இலை விளங்கும், நெய்கனி நெடுவேல் - நெய் மிக்க நெடிய வேலினையும், மழை மருள் பல் தோல் - கரிய மேகம் போன்ற நிறமுடைய பல கிடுகுகளையுமுடைய, மாவண் சோழர் - பெரிய வண்மை வாய்ந்த சோழருடைய, கழை மாய் காவிரிக் கடல் மண்டு பெருந்துறை - ஓடக் கோலும் மறையும் நீத்தத்தையுடைய காவிரி கடலில் மண்டும் பெருந் துறையின் கண்ணே, இறவொடு வந்து கோதையொடு பெயரும் பெருங்கடல் ஓதம்போல - இருமீனொடு வந்து மாலையோடு மீளும் பெரிய கடல் நீர்போல, ஒன்றில் கொள்ளாய் - போதல் ஒழிதல் எனும் இரண்டினொன்றில் உறுதி கொண்டிலை ;

எ—அ. அழிதகவு உடைமதி - நீ வருந்துதலை உடையை யாவாய்.

(முடிபு) நெஞ்சே! குன்ற மிறந்து பொருள் தருதலு மாற்றாய் ; சில்லைங் கூந்தல் நல்லகம் பொருந்தி ஒழியின் வறுமை யஞ்சுதி ; சோழர் காவிரிக் கடன் மண்டு பெருந்துறை ஓதம் போலச் சென்று தருபொருட்கு ஒன்றிற்கொள்ளாய் ; அழிதகவுடைமதி.

(வி - ரை.) "உண்ணா மையி னுயங்கிய மருங்கின், ஆடாப் படிவத் தான்றோர் போல. . . . கானயானை கவினழி" என்னும் இவ்வுவமை, [2]"உண்ணா நோன்போ டுயவல் யானையின், மண்ணா மேனியன்

1. (பாடம்) ஒன்றிற் கொல்லாய், 2. மணி. ந: கூ0-க.

வருவோன்" என மணிமேகலையில் எதிர் நிலையாக வந்திருத்தல் காண்க. அகம் - ஆகம். உடைமதி - உடையை யாகுதி. எஃகிலை இமைக்கும் வேல் என மாறுக. கழை - மூங்கில்; ஓடக் கோல். மாய் - மறைக்கு மெனலுமாம். கோதை - நீராடுவார் களைந்திட்டவை. ஓதம் - அலையுமாம்.

நெஞ்சு செல்லுதல் ஒழிதல் என்னும் இரண்டனுள் ஒன்றைத் துணியாது பொருளை யுள்ளிச் செலவயர்தலும் தலைவியது ஆகத்தை யுள்ளிச் செலவொழிதலுமாக உழலுதற்கு ஓதம் இறவொடு வருதலும் பின்பு அதனை விடுத்துக் கோதையொடு பெயர்தலும் உவமமாயின.

(மே - ள்.) [1]'கரணத்தி னமைந்து முடிந்த காலை' என்னுஞ் சூத்திரத்து, 'வேற்றுநாட் டகல்வயின் விழுமத் தானும்' என்னும் பகுதியில், அஃதாவது, பிரிவு ஒருப்பட்ட பின்பு போவேமோ தவிர்வேமோ எனச் சொல்லும் மன நிகழ்ச்சி என்றுரைத்து, அதற்கு இச் செய்யுளை உதாரணமாகக் காட்டினர் இளம்.

அச்சூத்திரத்து அப்பகுதியில் இச்செய்யுளைக்காட்டி, இது போவேமோ தவிர்வேமோ என்றது என்றும், [2]'நோயும் இன்பமும்' என்னுஞ் சூத்திரத்து, உண்ணுமையின் என்னும் அகப்பாட்டினுள், 'இறவொடு வந்து கோதையொடு பெயரும், பெருங்கட லோதம் போல, ஒன்றிற் கொள்ளாய் சென்று தரு பொருட்கே' என்றவழி 'அழிதக வுடைமதி வாழிய நெஞ்சே' என்றதனுன் நிலையின்றுகுதியென நெஞ்சினை உறுப்புடையது போலக் கழறி நன்குரைத்தவாறும், ஓதத்தையும் நெஞ்சையும் உயர்திணையாக்கி உவம வாயிற் படுத்தவாறுங் காண்க என்றும் உரைத்தனர் நச்.

---

## 124. முல்லை

[தலைமகன் தேர்ப்பாகற் குரைத்தது.]

நன்கலங் களிற்றொடு நண்ணா ரேந்தி
வந்துதிறை கொடுத்து வணங்கினர் வழிமொழிந்து
சென்றீ கென்ப வாயின் வேந்தனும்
நிலம் [3]வருந் துருஅ வீண்டிய தானையொடு
ரு இன்றே புகுதல் வாய்வது நன்றே
மாட [4]மாணகர்ப் பாடமை சேக்கைத்
துனிதீர் கொள்கைநங் காதலி யினிதுறப்
பாசறை வருத்தம் வீட நீயும்
மின்னுநிமிர்ந் தன்ன பொன்னியற் புனைபடைக்
கO கொய்சுவற் புரவிக் கைகவர் வயங்குபரி

---

1. தொல். கற். ரு. 2. தொல். பொருளி. உ. (பாடம்) 3. வருத்துரு. 4. மாநகர்.

வண்பெயற் கவிழ்ந்த பைங்கொடி முல்லை
வீகமழ் நெடுவழி யூதுவண் டிரியக்
காலை யெய்தக் கடவுமதி மாலை
அந்திக் கோவல ரம்பணை யிமிழிசை
கரு அரமிய வியலகத் தியம்பும்
நிரைநிலை ஞாயில் நெடுமதி லூரே.

—மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்.

(சொ - ள்.) க—ரு. நண்ணார் நன்கலம் ஏந்தி வந்து - பகைவர் நல்ல அணிகலன்களைக் கொண்டு வந்து, களிற்றொடு திறை கொடுத்து வணங்கினர் - அவற்றைக் களிற்றொடு திறையாகக் கொடுத்து வணங்கி, வழிமொழிந்து சென்றீக என்ப ஆயின் - பணிமொழி கூறிச் சென்றருள்க என்பாராயின், வேந்தனும் நிலம் வருத்துறூஉ ஈண்டிய தானையோடு - நம் அரசனும் பார மிகுதியாற் புவியினை வருத்துதல் செய்து திரண்ட சேனையுடன், இன்றே புகுதல் நன்றே வாய்வது - இன்றே தன் ஊர்க்கேகல் பெரிதும் உண்மையாகும்;

சூ—அ. மாட மாண் நகர்ப் பாடு அமை சேக்கை - மாடங்களால் மாண்புற்ற நமது மாளிகையில் பெருமை அமைந்த படுக்கையின் கண்ணுள்ள, துனி தீர் கொள்கை நம் காதலி இனிது உற - வெறுப் பற்ற கொள்கையினையுடைய நம் தலைவி இனிமை உறவும், பாசறை வருத்தம் வீட - நமக்குப் பாசறைக்கண் மேவிய வருத்தங்கள் ஒழிய வும்,

அ—கO. நீயும் - (பாகனே) நீயும், மின்னு நிமிர்ந்த அன்ன - மின்னல் பரந்து விளங்கினாலொத்த ஒளியினையுடைய, பொன் இயல் புனை படை - பொன்னாலியன்ற அலங்கரிக்கப்பட்ட கலனையையும், கொய் சுவல் - கொய்யப்பெற்ற பிடரி மயிரினையும், கைகவர் வயங்குபரி - செலுத்தும் கை விரும்பும் விளக்கம் அமைந்த செலவினையும் உடைய, புரவி - குதிரையை,

கக—ங. காலை - செலுத்துங் காலத்தே, வண் பெயற்கு அவிழ்ந்த பைங் கொடி முல்லை - வளம் மிக்க மழையால் மலர்ந்த பசிய முல்லைக் கொடியின், வீ கமழ் நெடு வழி ஊதுவண்டு இரிய - மலர் மணக்கும் நெடிய வழியில் ஊதும் வண்டுகள் இரிந்தோட,

கங—சூ. அந்திக் கோவலர் அம் பணை இமிழ் இசை - அந்திக் காலத்தே இடையரது அழகிய குழலின் ஒலிக்கும் இசை, அரமிய வியல் அகத்து இயம்பும் - நிலாமுற்றமாய அகன்றவிடத்தே வந்து ஒலிக்கும், நிரைநிலை ஞாயில் நெடு மதில் ஊர் - வரிசையாக நிற்கும் சூட்டுக்களையுடைய நீண்ட மதில் சூழ்ந்த ஊரின்கண், மாலை எய்தக் கடவுமதி - மாலைப் போழ்தில் நாம் எய்திடச் செலுத்துவாயாக.

(முடிபு) நண்ணார் திறைகொடுத்துச் சென்றீக என்பராயின், வேந்தனும் தானையொடு இன்றே புகுதல் வாய்வது; ஆதலின், பாகனே நீயும் காதலி இனிது உறவும் வருத்தம் வீடவும், புரவியை, வண்டுஇரிய, நெடுமதில் ஊர் மாலை எய்தக் கடவுமதி.

(வி - ரை.) சென்றீக - செல்லுக. [1]' என்போர் யானை வந்திக' [2]' வினைகலந்து வென்றீக வேந்தன்' என்னுமிடங்களிற்போல வியங்கோள். சென்றீ கென்ப - அகரம் தொக்கது. வருத்துறூஅ - தான் கைப்பற்றிய நாட்டிலுள்ளாரை வருத்துறாமல் என்றுமாம். வகுத்துறு என்பது பாடமாயின், நிலத்தை வகுத்துக் கொண்டு என்க. சேக்கைத் துனிதீர் கொள்கை நம் காதலி என்றதனால், தலைவனைப் பிரிந்த வருத்தத்தை, அவன் கூறிய சொற் பிழையாத கற்பினால் மாற்றியிருப்பவள் என்பது பெறப்பட்டது. 'மின்னு நிமிர்ந்தன்ன வயங்குபரி' என இயைத்து உரைத்தலுமாம். பெயற்கு அவிழ்ந்த, வேற்றுமை மயக்கம். காலை - பொழுது; [3]' கழகத்துக் காலை புகின்' என்புழிப்போல. அந்தி காவலர் அம்பணை என்னும் பாடத்திற்கு, அந்திப் பொழுதில் காத்தல் செய்யும் காவலரது அழகிய முரசு எனப் பொருள் கொள்க. அரமியம் - வடசொற் சிதைவு. ஞாயில் - சூட்டு; ஏவறை.

(மே - ள்) [4]' மேலோர் முறைமை' என்னுஞ் சூத்திரத்து 'நன்கலங் களிற்றொடு நண்ணா ரேந்தி, வந்துதிறை கொடுத்து வணங்கினர் வழீ மொழிந்து' என்புழி, நன்கலந் திறைகொடுத்தோ ரென்றலிற் பகைவயிற் பிரிவே பொருள் வருவாயாயிற்று என்றனர் நச்.

---

## 125. பாலை

[[5]தலைமகன் வினைமுற்றி மீண்டமை யுணர்ந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.]

அரம்போ ழவ்வளை தோணிலை நெகிழ
நிரம்பா வாழ்க்கை நேர்தல் வேண்டி
இரங்கா முன்ன அரும்புமுதி ரிங்கை
ஆலி யன்ன வால்வீ தாஅய்
௫ வைவா லோதி மையணல் ஏய்ப்பத்
தாதுறு குவளைப் போதுபிணி யவிழப்
படாஅப் பைங்கட் பாவடிக் கயவாய்க்
கடாஅம் மாறிய யானை போலப்
பெய்துவறி தாகிய பொங்குசெலற் கொண்மூ
௧0 மைதோய் விசும்பின் மாதிரத் துழிதரப்
பனியடூஉ நின்ற பானாட் கங்குல்
தமியோர் மதுகை தூக்காய் தண்ணென
முனிய அலைத்தி முரணில் காலைக்
கைதொழு மரபிற் கடவுள் சான்ற
௧௫ செய்வினை மருங்கிற் சென்றோர் வல்வரின்

---

1. கலி. அ௬. 2. குறள். ௩௨௬அ. 3. குறள். ௬௩௭. 4. தொல். அகத். ௨௯. (பா - ம்.) 5. தலைமகன் வினைமுற்றி மீண்டமை தோழியுணரத் தலைமகள் சொல்லியது.

விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வெருவரு தானையொடு வேண்டுபுலத் திறுத்த
பெருவளக் கரிகால் முன்னிலைச் செல்லார்
சூடா வாகைப் பறந்தலை ஆடுபெற
உ௦ ஒன்பது குடையும் நன்பக லொழித்த
பீடில் மன்னர் போல
ஓடுவை மன்னால் வாடைநீ யெமக்கே.

—பரணர்.

(சொ - ள்.) ங—கங. இரங் காழ் அன்ன அரும்பு முதிர் ஈங்கை ஆலி அன்ன வால் வீ தாஅய் - இரவம் வித்தினை ஒக்கும் அரும்பு முதிர்ந்த ஈங்கையினது ஆலங்கட்டி போலும் வெள்ளிய பூக்கள் தாவ, வை வால் ஓதி மை அணல் ஏய்ப்ப தாதுஉறு குவளைப் போது பிணி அவிழ - கூரிய வாலினையுடைய ஓந்தியின் கரிய தாடியை ஒத்திட தாதுமிக்க குவளையின்போது பிணிப்பு நெகிழவும், படாஅப் பைங்கண் பா அடிக் கய வாய் கடாஅம் மாறிய யானை போல - உறங்காத பசிய கண்ணினையும் பரந்த அடியினையும் பெரிய வாயினையும் உடைய மதம் ஓய்ந்த யானையைப் போல, பெய்து வறிது ஆகிய பொங்கு செலல் கொண்மூ - நீரினைப் பெய்து வறுமை எய்திய பொங்கிய செலவினை யுடைய் மேகம், மை தோய் விசும்பின் மாதிரத்து உழிதர - கருமை பொருந்திய வானின் திசைகளிற் றிரியவும், பனி அடூஉ நின்ற பால் நாள் கங்குல் - பனி நலிகின்ற நடு இரவின் இருளில், தமியோர் மதுகை தூக்காய் - தனிமை எய்தியவர் பொறுக்கும் வலி யளவை ஆராயாது, முரண் இல் காலை - மாறுபாடு இல்லாத காலத்தும், தண்ணென முனிய அலைத்தி - வெறுக்கும்படி தண் ணென்று வீசி அலைக்கின்றாய் ;

க—உ. நிரம்பா வாழ்க்கை நேர்தல் வேண்டி - முற்றுப்பெறாத இல்வாழ்க்கையை முற்றுவிக்க வேண்டி, அரம் போழ் அ வளை தோள் நிலை நெகிழ - அரத்தாற் பிளக்கப்பட்ட அழகிய வளைகள் எம் தோளில் நிற்றலினின்று நெகிழ்ந்துவீழ,

கச—ரு. கை தொழு மரபில் கடவுள் சான்ற - கையாற் றொழும் மரபினையுடைய கடவுட்டன்மை நிரம்பிய, செய்வினை மருங்கின் சென்றோர் வல் வரின் - ஓதல்வினை யிடத்துச் சென்ற தலைவர் விரைந்து வருவரேல்,

கசு—உஉ. வாடை - வாடையே, விரி உளை பொலிந்த பரி உடை நல்மான் - விரிந்த தலையாட்டத்தாற் சிறந்த விரைந்த செல வினையுடைய நல்ல குதிரைப் படையுடன் கூடிய, வெருவரு தானை யொடு வேண்டு புலத்து இறுத்த - பகைவர்க்கு அச்சந் தரும் சேனை யுடன் தான் விரும்பும் புலத்திற்றங்கிய, பெருவளக் கரிகால் முன்னிலைச் செல்லார் - பெரிய வளத்தை யுடைய கரிகால் வளவன் முன் னிற்றலை ஆற்றாராய், சூடா வாகைப் பறந்தலை - வாகைப் பறந்தலை எனும் போர்க்களத்தின்கண், ஆடு பெற - அவன் வெற்றி பெற,

ஒன்பது குடையும் நன் பகல் ஒழித்த - தமது ஒன்பது குடைகளையும் நன்ருகிய பகலிற் போகட்டுச் சென்ற, பீடு இல் மன்னர் போல - பெருமை யில்லாத மன்னர் ஒன்பதின்மரையும்போல, நீ எமக்கு ஓடுவை மன் - நீ எமக்குத் தோற்று மிகவும் விரைந்து ஓடுவை.

(முடிபு) வாடை ! நீ குவளைப்போது அவிழ, மேகம் உழிதர, பானாட்கங்குல் முனிய அலைத்தி ; செய்வினை மருங்கின் சென்ருேர் வரின், கரிகால் வளவன் வாகைப் பறந்தலை ஆடுபெற, ஒன்பது குடையும் நன்பகல் ஒழித்த பீடில் மன்னர் போல, நீ எமக்குத் தோற்று விரைந்து ஓடுவை.

(வி - ரை.) நிரம்பா வாழ்க்கையாவது, துறவு பூண்டு மெய் யுணர்ந்து வீடுபெறுதல் இல்லறத்தின் பயனுகலின், அவை நிகழா வழி நிரம்புதல் இல்லாத வாழ்க்கை என்பது நச்சினுர்க்கினியர் கருத்து. இர - ஒரு மரம்; இது, இரா, இரவு, இரவம் எனவும் வழங் கும். தாஅய் - தாவ எனத் திரிக்க. ஓதி - இடைக்குறை. பொங்கு செலல் : பொங்குதல் - விளங்கிப் பரத்தல் ; உயர்தலுமாம். தமி யோர் - தன்மையிற் படர்க்கை. கடவுட் சான்ற செய்வினை என் றமையால், வினை ஓதலாயிற்று. சூடாவாகை - வாகைப் பறந்தலைக்கு வெளிப்படை.

(மே - ள்.) [1]'மேவிய சிறப்பின்' என்னுஞ் சூத்திரத்து, இச் செய் யுளைக் கூறி, இது தேவர் காரணமாகப் பிரியும் பிரிவு என்றனர் இளம்.

[2]'பனி யெதிர் பருவமும்' என்னுஞ் சூத்திரத்து. 'உரித்து என்றதனுற் கூதிர் பெற்ற யாமமும் முன்பனி பெற்று வரும்' என்று கூறி, 'பனியடூஉ நின்ற பானாட் கங்குல் . . . முரணில் காலை' என்பதைக் காட்டி, முன்பனி யாமம் குறிஞ்சிக்கண் வந்தது என்றும், [3]'அவற்றுள் ஓதலுந் தூதும்' என்னுஞ் சூத்திரத்து, இச் செய்யுளைக் காட்டி, இதனுட் பலருங் கை தொழும் மரபினையுடைய கடவுட்டன்மை யமைந்த செய்வினை யெனவே, ஓதற் பிரிவென்பது பெற்றும் என்றும் மேலும் [4]'சிறந்தது பயிற்றல் இறந்த தன் பயனே' என்பதனுற் கிழவனுங் கிழத்தியும் இல்லறத்திற் சிறந்தது பயிற்ருக்கால் இறந்ததனுற் பயனின்ருதலின், இல்லறம் நிரம்பா தென் றற்கு, 'நிரம்பா வாழ்க்கை' என்ருர் என்றும், [5]'வேண்டிய கல்வி' என்னுஞ் சூத்திரத்து, ஓதற் பிரிவிற்குக் கால வரையறை யின் றென்று கூறி, 'அரம் போ ழவ்வளை' என்னும் பாட்டினுள் 'பானாட் கங்குல் . . . முனிய வலைத்தி, . . . கடவுட் சான்ற, செய்வினை மருங்கிற் சென்ருேர் வல்வரின், ஓடுவை' என்றது, இராப் பொழுது அகலாது நீட்டித்ததற்கு ஆற்ருளாய்க் கூறினுள் என்று உணர்க என்றும் கூறுவர் நச்.

---

1. தொல், அகத். ௩௦. 2. தொல், அகத். எ. 3. தொல். அகத். உகூ; 4. தொல். கற். ருக. 5. தொல். கற். சஎ.

## 126. மருதம்

[௧. உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது. ௨. அல்ல குறிப்பட் டழிந்ததுமாம். ௩. தோழியைப் பின்னின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியதுமாம்.]

நினவாய் செத்து நீபல உள்ளிப்
பெரும்புன் பைதலை வருந்த லன்றியும்
மலைமிசைத் தொடுத்த மலிந்துசெலல் நீத்தம்
தலைநாண் மாமலர் தண்டுறைத் தயங்கக்
௫ கடற்கரை மெலிக்குங் காவிரிப் பேரியாற்
[1]றறல்வார் நெடுங்கயத் தருநிலை கலங்க
மாலிருள் நடுநாட் போகித் தன்னையர்
காலைத் தந்த கணைக்கோட்டு வாளைக்
கவ்வாங் குந்தி அஞ்சொற் பாண்மகள்
௧௦ நெடுங்கொடி நுடங்கு நறவுமலி மறுகிற்
பழஞ்செந் நெல்லின் முகவை கொள்ளாள்
கழங்குறழ் முத்தமொடு நன்கலம் பெறாஉம்
பயங்கெழு வைப்பிற் பல்வேல் லெவ்வி
நயம்புரி நன்மொழி அடக்கவு மடங்கான்
௧௫ பொன்னிணர் நறுமலர்ப் புன்னை வெஃகித்
திதியனொடு பொருத அன்னி போல
விளிகுவை கொல்லோ நீயே கிளியெனச்
சிறிய மிழற்றுஞ் செவ்வாய்ப் பெரிய
கயலென அமர்த்த உண்கட் புயலெனப்
௨௦ புறந்தாழ் பிருளிய பிறங்குகுரல் ஐம்பால்
மின்னேர் மருங்குற் குறுமகள்
பின்னிலை விடாஅ மடங்கெழு நெஞ்சே.

—நக்கீரர்.

(சொ-ள்.) ௧௭—௨௨. கிளி எனச் சிறிய மிழற்றும் செவ்வாய் - கிளிபோல மென்சொற்களைக் கூறும் சிவந்த வாயினையும், பெரிய கயல் என அமர்த்த உண்கண் - பெரிய கயல்மீன் என்னுமாறு ஒன்றையொன்று பொருத மையுண்ட கண்களையும், புயல்என புறம் தாழ்பு இருளிய பிறங்கு குரல் ஐம்பால் - மேகம் எனும்படி முதுகில் தாழ்ந்து இருண்ட விளங்கும் கொத்தாய ஐந்து பகுப்பையுடைய கூந்தலையும், மின் நேர் மருங்குல் - மின்னலை யொத்த இடையினையும் உடைய, குறுமகள் பின் நிலை விடாஅ மடம்கெழு நெஞ்சே - இளைய தலைவியின் பின்னே தாழ்ந்து நிற்றலை விடாத அறியாமை மிக்க நெஞ்சே !

௧—௨. நீ நின வாய் செத்து - நீ நின் எண்ணங்களை உண்மை யானவை எனக் கருதி, பல உள்ளி - பலவும் எண்ணி, பெரும் புன்

(பாடம்) 1. அறல் வாழ்.

பைதலை வருந்தல் அன்றியும் - மிகப் பெரிய துன்பத்தினையுடையை யாய் வருந்துதல் அன்றியும்,

ந—கந. மலைமிசைத் தொடுத்த மலிந்து செலல் நீத்தம் - மலை உச்சியினின்று தொடர்புற்று வீழ்ந்த மிக்குச் செல்லுதலையுடைய வெள்ளத்தால், தலைநாள் மாமலர் தண் துறை தயங்க - முதல் நாட் பூத்த சிறந்த மலர் தண்ணிய துறைகளில் விளங்க, கடற்கரை மெலிக்கும் காவிரிப் பேர் யாற்று - கடற்கரையினைக் கரைத்திடும் காவிரி யாய பெரிய ஆற்றினது, அறல்வார் நெடுங்கயத்து அருநிலை கலங்க - கருமணல் ஒழுகும் நீண்ட மடுவின் நிலைக்கொள்ளாத நீர் கலங்கு மாறு, மால் இருள் நடுநாள் போகி - கரிய இருளினையுடைய நடு இரவில் சென்று, தன்னையர் காலை தந்த கணைக் கோட்டு வாளைக்கு - தன் தமையன்மார் விடியலிற் கொணர்ந்த திரண்ட கோடுகளை யுடைய வாளை மீனுக்கு விலையாக, அவ் வாங்கு உந்தி அம் சொல் பாண்மகள் - அழகிய வளைந்த உந்தியினையும் அழகிய சொற்களையு முடைய பாண்மகள், நெடுங்கொடி நுடங்கும் நறவு மலி மறுகில் - நீண்ட கொடிகள் அசையும் கள் மிக்க தெருவில், பழம் செந்நெல் லின் முகவை கொள்ளாள் - பழைய செந்நெல்லை முகந்து தருதலைக் கொள்ளாளாகி, கழங்கு உறழ் முத்தமொடு நல்கலன் பெறூஉம் - கழங்கினை ஒத்த பெரிய முத்துக்களுடன் சிறந்த அணிகளையும் பெறும், பயம்கெழு வைப்பில் - வளம் மிக்க ஊர்களையுடைய, பல் வேல் எவ்வி - பல வேற்படைகளையுடைய எவ்வி யென்பான்,

கச—எ. நயம்புரி நன்மொழி அடக்கவும் அடங்கான் - நீதியை உட்கொண்ட சிறந்த மொழிகளைக் கூறித் தணிக்கவும் தணியானாகி, பொன் இணர் நறுமலர் புன்னை வெஃகி - பொன் போலும் கொத் துக்களாகிய நறிய மலர்களையுடைய (காவன் மரமாய) புன்னையைக் குறைக்க விரும்பி, திதியனொடு பொருத அன்னிபோல - திதியன் என்பானொடு போரிட்டிறந்த அன்னி என்பானைப்போல, நீ விளிகுவை கொல்லோ - நீ இறந்துபடுவை போலும்.

(முடிபு) குறுமகள் பின்னிலை விடா நெஞ்சே! நீ பெரும் புன் பைதலையாய் வருந்தலன்றியும், புன்னை வெஃகித் திதியனொடு பொருத அன்னிபோல விளிகுவை கொல்லோ!

தன்னையர் தந்த வாளைக்குப் பாண்மகள் நெல்லின் முகவை கொள்ளாள் முத்தமொடு நன்கலன் பெறூஉம் வைப்பின் எவ்வி என்க.

(வி - ரை.) நின - நின்னுடையன; குறிப்பு வினைப்பெயர். புன்மை - துன்பம். புன் பைதலை - ஒரு பொருட் பன்மொழி. தயங்க - அசைய என்றுமாம். வாளை துஞ்சுங்காலத்துப் பற்றுதற் பொருட்டு மாலிருள் நடுநாட் போயினர் என்க. [1]'கடல்மீன் துஞ்சும் நள்ளென் யாமத்து' என வருதலுங் காண்க. நெடுங்கொடி - கள் விற்குமிடத்தில் எடுத்தவை. முகவை - முகந்து அளக்கப்பட் டவை. நன்மொழி கூறி என ஒரு சொல் வருவிக்க. விளிகுவை

1. அகம். கசஉ.

கொல்லோ - விளிகுதலுஞ் செய்வையோஎன உம்மை விரித்துரைக்க, மின் ஏர் எனப் பிரித்து மின்போலும் அழகிய என்றுரைத்தலுமாம். [1]'உணர்ப்புவரை யிறப்பினும் செய்குறி பிழைப்பினும், புலத்தலும் ஊடலும் கிழவோற் குரிய' என்னுஞ் சூத்திரத்தாற் கற்பின்கண் தலைவற்கும் ஊடல் நிகழும் எனக் கொள்க. பின் இரண்டு துறைகளுமாயின், மருதத்துக் களவு நிகழ்ந்ததென்று கொள்க. இது திணை மயக்கம்.

(மே - ள்.) [2]'மெய்தொட்டுப் பயிறல்' என்னுஞ் சூத்திரத்து, 'மற்றைய வழியும்' என்னும் பகுதிக்கு இப்பாட்டினை எடுத்துக்காட்டி, இது நெஞ்சினை இரவு விலக்கியது என்றனர் நச்.

---

## 127. பாலை

[பிரிவிடை ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.]

இலங்குவளை நெகிழச் சாஅய் அல்கலும்
கலங்கஞ ருழந்து நாமிவண் ஒழிய
வலம்படு முரசிற் சேர லாதன்
முந்நீ ரோட்டிக் கடம்பறுத் திமயத்து
௫ முன்னோர் மருள வணங்குவிற் பொறித்து
நன்னகர் மாந்தை முற்றத் தொன்னார்
பணிதிறை தந்த பாடுசால் நன்கலம்
பொன்செய் பாவை வயிரமொ டாம்பல்
ஒன்றுவாய் நிறையக் குவைஇ அன்றவண்
௧0 நிலந்தினத் துறந்த நிதியத் தன்ன
ஒருநா ளொருபகற் பெறினும் வழிநாள்
தங்கலர் வாழி தோழி செங்கோற்
கருங்கால் மராத்து வாஅன் மெல்லிணர்
சுரிந்துவணர் பித்தை பொலியச் சூடிக்
௧௫ கல்லா மழவர் வில்லிடந் தழீஇ
வருநர்ப் பார்க்கும் வெருவரு கவலை
மொழிபெயர் தேஎத்த ராயினும்
பழிதீர் காதலர் சென்ற நாட்டே.

—மாமூலனார்.

(சொ - ள்.) ௧௨. தோழி வாழி -,

௧—௨. இலங்கு வளை நெகிழச் சாஅய் - விளங்கும் கைவளை கழல மெலிந்து, அல்கலும் கலங்கு அஞர் உழந்து நாம் இவண் ஒழிய - நாளும் கலங்கும் துன்பத்தால் வருந்தி நாம் இங்கே தனித்திருக்க,

---

1. தொல். கற். ௧௫. 2. தொல். களவு. ௧௧.

கஉ—எ. செங்கோல் கருங்கால் மராஅத்து வால்மெல் இணர் - சிவந்த கொம்புகளையும் கரிய அடியினையுமுடைய வெண்கடம்பின் வெள்ளிய மெல்லிய பூங்கொத்தினை, சுரிந்து வணர் பித்தை பொலியச் சூடி - சுரிந்து வளைந்த தலைமயிர் அழகுபெறச் சூடி, கல்லா மழவர் வில் இடம் தழீஇ - அறிவில்லாத மழவர் வில்லினை இடப்பக்கத்தே தழுவிக் கொண்டு, வருநர்ப் பார்க்கும் வெருவரு கவலை - வழி வருவோரைப் பார்த்திருக்கும் அச்சம்வரும் கவர்த்த வழிகளையுடைய, மொழிபெயர் தேஎத்தர் ஆயினும் - மொழி வேறுபட்ட தேயத்தில் உள்ளார் ஆயினும்,

ந—கக. வலம்படு முரசின் சேரலாதன் - வெற்றி தங்கிய முரசினையுடைய சேரலாதன் என்னும் அரசன், முந்நீர் ஓட்டிக் கடம்பு அறுத்து - கடல் நாப்பணுள்ள பகைவர்களைப் புறக்கிடச் செய்து அவர் காவன்மரமாகிய கடம்பினை வெட்டி, இமயத்து - இமைய மலையில், முன்னோர் மருள வணங்குவில் பொறித்து - தமது முன்னோரை யொப்ப வளைந்த வில்இலச்சினையைப் பொறித்து, மாந்தை நல்நகர் முற்றத்து - மாந்தை எனும் ஊரிலுள்ள தனது நல்ல மனையின் முற்றத்து, ஒன்னார் பணி திறை தந்த - பகைவர் பணிந்து திறையாகத் தந்த, பாடு சால் நன்கலம் - பெருமை சான்ற நல்ல அணிகலங்களுடன், பொன் செய் பாவை வயிரமோடு - பொன்னாலியன்ற பாவையினையும் வயிரங்களையும், ஆம்பல் ஒன்று வாய் நிறையக் குவைஇ - ஆம்பல் எனும் எண்ணளவு இடம் நிறையக் குவித்து, அன்று அவண் நிலம் தினத் துறந்த நிதியத்தன்ன - அக்காலத்தே அவ்விடத்தே நிலம் தின்னும்படி விட்டொழித்த நிதியம் போன்ற பொருளை, ஒரு நாள் ஒரு பகல் பெறினும் - ஒரு நாளில் ஒரு பகற் பொழுதிற் பெற்றாலும்,

கஅ. பழிதீர் காதலர் - குற்றமற்ற நம் காதலர், சென்ற நாட்டு - தாம் சென்றுள்ள அந்நாட்டில்,

கக—உ. வழி நாள் தங்கலர் - பிற்றை ஞான்று தங்காது வருவர்.

(முடிபு) தோழி! வாழி! நாம் இவண் ஒழிய, நம் தலைவர், மொழி பெயர் தேஎத்தர் ஆயினும், சேரலாதன் குவைஇ நிலம் தினத் துறந்த நிதியத்தன்ன பொருளினை ஒரு நாள் ஒரு பகல் பெறினும் அவர் தாம் சென்ற நாட்டு, வழிநாள் தங்கலராகி மீள்வர்.

(வி - ரை.) முந்நீரோட்டி என்பதற்குக் கடலின்கண் நாவாயைச் செலுத்தியென்று உரைத்தலுமாம். கடம்பறுத்தியற்றிய வலம்படுமுரசு எனக் கூட்டி யுரைத்தலுமாம்; என்னை? [1]'சேரலாதன், மால்கடலோட்டிக் கடம்பறுத் தியற்றிய, பண்ணமை முரசு' என வருதலின். பணிதிறை - பணிதலாற் றிறையாகத் தந்த என்க. [2]'ஐயம் பல்லென வரூஉ மிறுதி, அல்பெய ரெண்ணினு மாயியல் நிலையும்' என்னுஞ் சூத்திரத்தால், ஆம்பல் - ஒரு பேரெண்ணும் என்க. நிலந்தின என்றது [3]'உண்டற்குரிய வல்லாப் பொருளை, யுண்டன

1. அகம். நசஎ. 2. தொல். புள்ளி. கஅ. 3. தொல். பொருளி. கக.

போலக் கூறலு மரபே' என்னுஞ் சூத்திரத்து உம்மையாற் கொள்ளப்படும். நிதியத்தன்ன பொருளென விரித்துரைக்க.

---

## 128. குறிஞ்சி

[இரவுக்குறி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லுவளாய்ச் சொல்லியது.]

*மன்றுபா டவிந்து மனைமடிந் தன்றே*
*கொன்றோ ரன்ன கொடுமையோ டின்றே*
*யாமங் [1]கொளவரிற் கனைஇக் காமங்*
*கடலினு முரைஇக் கரைபொழி யும்மே*
௫ *எவன்கொல் வாழி தோழி மயங்கி*
*இன்ன மாகவும் நன்னர் நெஞ்சம்*
*என்னொடும் நின்னொடுஞ் சூழாது கைம்மிக்*
*கிறும்புபட் டிருளிய இட்டருஞ் சிலம்பிற்*
*குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக்*
க0 *கான நாடன் வரூஉம் யானைக்*
*கயிற்றுப்புறத் தன்ன கன்மிசைச் சிறுநெறி*
*மாரி வானந் தலைஇ நீர்வார்பு*
*இட்டருங் கண்ண படுகுழி யியவின்*
*இருளிடை மிதிப்புழி நோக்கியவர்*
கடு *தளரடி தாங்கிய சென்ற தின்றே.*

—கபிலர்.

(சொ - ள்.) ௫. தோழி வாழி -,

க—ச. மன்று பாடு அவிந்து மனை மடிந்தன்று - அம்பலம் ஒலியடங்க மனைகளும் துயின்றன, கொன்றோரன்ன கொடுமையொடு - கொன்றாலொத்த கொடுமையுடன், இன்று யாமம் கொளவரின் - இன்று நடுயாமம் பொருந்தவரின், காமம் கனைஇ - காமம் செறிந்து, கடலினும் உரைஇ - கடலைக் காட்டினும் பரவி, கரை பொழியும் - கரை கடந்து செல்லும்;

௫—எ. இன்னம் ஆகவும் - யாம் இந்நிலையினம் ஆகவும், நன்னர் நெஞ்சம் - நமது நல்ல நெஞ்சம், மயங்கி - மயங்கலுற்று, என்னொடும் நின்னொடும் சூழாது - என்னையும் நின்னையும் உசாவியுணராது, கை மிக்கு - கை கடந்து,

அ—கக. இறும்புபட் டிருளிய இட்டு அரும் சிலம்பில் - சிறு காடாய் இருண்ட சிறிய செல்லற்கரிய பக்கமலையின்கண் ணுள்ள, குறும் சுனைக் குவளை வண்டுபடச் சூடி - குறிய சுனையிற் பூத்த குவளைப் பூவினை வண்டு மொய்த்திடச் சூடி, கான நாடன் வரூஉம் -

---

(பாடம்) 1. கோள்வரின்.

காட்டு நாட்டினையுடைய நம் தலைவன் வருகின்ற, யானைப் புறத்துக் கயிறு அன்ன - யானையின் முதுகிலுள்ள கயிற்றுத் தழும்பை யொத்த, கல்மிசைச் சிறு நெறி - மலைமீதுள்ள சிறிய வழியாகிய,

கஉ—ரு. மாரி வானம் தலைஇ நீர் வார்பு - மேகம் மழை பெய்தலால் நீர் ஒழுகா நிற்க, இட்டு அரும் கண்ண - செல்லுதற்கரிய சிறிய இடங்களிலுள்ள, படுகுழி இயவில் - படுகுழிகளைக் கொண்ட நெறியில், இருளிடை மிதிப்புழி நோக்கி - இருளின் கண் மிதிக்குமிடத்துப் பார்த்து, அவர் தளர் அடி - அவரது தளராநின்ற அடியை, தாங்கிய இன்று சென்றது - தாங்கும் பொருட்டு இன்று சென்று விட்டது:

ரு. எவன் கொல் - இஃதென்னையோ !

(முடிபு) தோழி! வாழி! மன்று பாடவிந்து மனை மடிந்தன்று; காமம் கரைபொழியும்; நாம் இன்னம் ஆகவும் நெஞ்சம் இன்று கான நாடன் வரூஉம் நெறிக்கட் படுகுழி யியவின் இருளிடை மிதிப்புழி நோக்கி அவர் தளரடி தாங்கிய சென்றது; இஃது எவன் கொல்.

(வி - ரை.) அவிந்து - அவிய. மனை - ஆகுபெயர். கரைபு ஒழியும் எனப் பிரித்து, முழங்கி யொழியும் என்றலுமாம். ஒழியும், ஈண்டு விடும் என்பதுபோலத் துணிபுப் பொருட்டாய துணைவினை. சிலம்பில் கானநாடன் வரூஉம் சிறு நெறியாகிய படுகுழி யியவின் என்க. யானையும் அதன் புறத்துக் கயிற்றுத் தழும்பும் கல்லிற்கும் அதன் மேலுள்ள சிறு நெறிக்கும் உவமை. கயிற்றை யொத்த சிறு நெறி என்றலுமாம். தலைஇ, வார்பு என்னும் எச்சங்களைத் திரிக்க. நெஞ்சம் தளரடி தாங்கிய சென்றது என்றது, இரவுக் குறிக்கண் தலைவன் வரும் நெறியின் ஏதத்தை நினைந்து வருந்துதல் புலப்படுத்தியவாறு.

(மே - ள்.) [1]'மறைந்தவற் காண்டல்' என்னுஞ் சூத்திரத்து, 'பொழுது மாறும் புரைவ தன்மையின், அழிவுதலை வந்த சிந்தைக் கண்ணும்' என்ற பகுதியில், இச் செய்யுளைக் காட்டி, காமம் கரைபொழியா நிற்கவும், என்ன நன்றி கருதி, இருவரொடுஞ் சூழாது சென்றது நெஞ்சென இரண்டும் (பொழுதும் ஆறும்) கூறினள். மனைமடிந் தன்றென்பது பொழுது; சிறு நெறி யென்பது ஆறின்னுமை என்றும், [2]'நோயு மின்பமும்' என்னும் சூத்திரத்து, 'நெஞ்சம். . . தளரடி தாங்கிய சென்ற தின்றே' என்பது, நெஞ்சினை உறுப்புடையதுபோல் அழுகைபற்றிக் கூறியது என்றும், [3]'பொழுது மாறும்' என்னுஞ் சூத்திரத்து, 'மன்று பாடவிந்து' என்பது, பொழுது வழுவுதலிற் குற்றங்காட்டியது என்றும் கூறுவர் நச்.

[4]'முட்டுவயிற் கழறல்' என்னுஞ் சூத்திரத்து, அச்சத்தி னகறல் என்னும் மெய்ப்பாட்டிற்கு, இப் பாட்டினைக் காட்டி, இதன் கருத்தாவது, 'நாம் அவர் இருளிடை வருதலேத மஞ்சி அகன்று அவலித் திருப்பவும்

1. தொல். கள. உ0. 2. தொல். பொருளி. உ, 3. தொல். பொருளி. கசு. 4. தொல். மெய்ப். உ௩.

என்னையும் நின்னையும் கேளாது என் நெஞ்சு போவானேன் என்றவா றுயிற்று' என்பர் பேரா.

---

## 129. பாலை

[பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.]

உள்ளல் வேண்டும் ஒழிந்த பின்னென
நள்ளென் கங்குல் நடுங்குதுணை யாயவர்
நின்மறந் துறைதல் யாவது [1]புல்மறந்
தலங்கல் வான்கழை யுதிர்நெல் நோக்கிக்
ரு கலைபிணை விளிக்குங் கானத் தாங்கண்
கல்சேர் பிருந்த கதுவாய்க் குரம்பைத்
தாழிமுதற் கலித்த கோழிலைப் பருத்திப்
பொதிவயிற் றிளங்காய் பேடை யூட்டிப்
போகில்பிளந் திட்ட[2] பொங்கல் வெண்காழ்
க0 நல்கூர் பெண்டிர் [3]அல்கற் கூட்டும்
கலங்குமுனைச் சீறூர் கைதலை வைப்பக்
கொழுப்பா தின்ற கூர்ம்படை மழவர்
செருப்புடை யடியர் தெண்சுனை மண்டும்
அருஞ்சுரம் அரிய வல்ல வார்கோல்
கரு திருந்திழைப் பணைத்தோட் டேறு கதுப்பிற்
குவளை யுண்கண் இவளொடு செலற்கென
நெஞ்சுவா யவிழ்ந்தனர் காதலர்
அஞ்சி லோதி யாயிழை நமக்கே.

—குடவாயிற்கீரத்தனார்.

(சொ - ள்.) கஅ. அம் சில் ஓதி ஆய் இழை - அழகிய சில வாகிய கூந்தலையும் ஆராய்ந்த அணிகலையுமுடைய தலைவியே!

க—உ. ஒழிந்தபின் - இவளைப் பிரிந்து சென்றபின், உள்ளல் வேண்டும் என - இவளை எண்ணி நாம் இரங்கல் வேண்டிவரும் என்று நினைத்து, நள் என் கங்குல் நடுங்கு துணையாயவர் - நள் ளென்னும் ஒலியினையுடைய நடு இரவில் நடுங்கும் துணையினரான,

கஎ. காதலர் - நம் தலைவர்,

ங—கச. புல் மறந்து - புல்லைத் தின்னுதலை மறந்து, அலங்கல் வான் கழை உதிர் நெல் நோக்கி - அசையும் நெடிய மூங்கிலினின்று உதிர்ந்த நெல்லைப்பார்த்து, கலைபிணை விளிக்கும் கானத்து ஆங்கண் - கலைமான் தன் பிணையினை அழைக்கும் காட்டிடத்தே, கல்சேர்பு இருந்த கதுவாய்க் குரம்பை - பாறையைச் சேர்ந்திருந்த சிதைவுற்ற குடிலில், தாழி முதற் கலித்த கோழ் இலைப் பருத்தி - தாழியிடத்தே தழைத்த கொழுவிய இலையையுடைய பருத்திச் செடியின், பொதி

(பாடம்) 1. புன்மறைந்து. 2. பொங்கர். 3. அல்குற் கூட்டும்.

வயிற்று இளங் காய் பேடை ஊட்டி - பருத்த வயிற்றினையுடைய இளங் காயைப் பேடைகட்கு அருத்தி, போகில் பிளந்திட்ட பொங் கல் வெண் காழ் - ஆண் பறவைகள் பிளந்து போகட்ட பஞ்சினை யுடைய வெள்ளிய கொட்டையை, நல்கூர் பெண்டிர் அல்கல் கூட் டும் - வறுமையுற்ற மகளிர் வைத்துண்ணும் உணவாகச் சேர்க்கும், கலங்கு முனைச் சீறூர் கை தலை வைப்ப - கலங்குதற்கு ஏதுவாய போர் நிகழும் இடங்களையுடைய சீறூரிலுள்ளார் கையைத் தலைமீது வைத்து அலற, கொழுப்பு ஆ தின்ற கூர்ம் படை மழவர் - அவர்க ளுடைய கொழுத்த ஆக்களைக் கவர்ந்து சென்று கொன்று தின்ற கூரிய படைகளை யுடைய மழவர்கள், செருப்பு உடை அடியர் - செருப்பினைப் பூண்ட அடியராகி, தெண் சுனை மண்டும் - தெளிந்த சுனை நீரை மிகுதியாகப் பருகும், அரும் சுரம் - அரிய சுரநெறிகள்,

கச—அ. வார் கோல் திருந்து இழை பணைத் தோள் தேன் நாறு கதுப்பின் குவளை உண்கண் - நீண்ட கோற்றொழிலமைந்த வளையலையும் திருந்திய அணிகளையும் மூங்கில் போன்ற தோளினை யும் தேன்மணக்கும் கூந்தலினையும் கருங்குவளைபோன்ற மையுண்ட கண்களையும் உடைய, இவளொடு செலற்கு அரியவல்ல என - இவளுடன் செல்லுதற்கு அருமை யுடையன அல்லவென, நமக்கு நெஞ்சு வாய் அவிழ்ந்தனர் - நமக்குத் தமது உள்ளக் கருத்தை வாய் விட்டு மொழிந்தனர்;

ந. நின் மறந்து உறைதல் யாவது - ஆகலின் நின்னை மறந்து வேற்று நாட்டுத் தங்குதல் எங்ஙனம் கூடும்?

(முடிபு) ஆயிழை, நடுங்கு துணை யாயவர், காதலர், நமக்கு அருஞ்சுரம் இவளொடு செலற்கு அரியவல்ல என நெஞ்சு வாய் அவிழ்ந்தனர்; ஆகலின் நின் மறந்து உறைதல் யாவது?

கானத் தாங்கண் சீறூர் கை தலைவைப்பக் கொழுப்பாதின்ற மழவர் சுனை மண்டும் அருஞ் சுரம் என்க.

(வி - ரை.) முதலிலே பிரிவிற்கு அஞ்சி நடுங்கிய காதலர், அதன் மேலும் இவளொடு செலற்கு அருஞ்சுரம் அரியவல்ல எனக் கூறினாராதலின், நின்னை மறந்து வேற்று நாட்டின்கண் நீட்டித் திருப்பாரல்லர் என்று தோழி தலைவியை ஆற்றுவித்தாள் என்க. விரைந்து வந்து நின்னை உடன் கொண்டு செல்வார் என்றுளாயிற்று. புல் கரிந்து போயினமையின் மான் அதனை உண்ணுதலை மறந்த தென்க. புல் மறைந்து என்னும் பாடத்திற்கு புல் அற்றொழிந்தமை யால் என்று பொருள் கொள்க. போகில் - பறவைப் பொதுப் பெயர். பொங்கர் என்பது பாடமாயின், சிறு கோட்டிலுள்ள என்க. அல்குற் கூட்டும் என்பது பாடமாயின் இடைமருங்கிலுள்ள மடியிற் சேர்க்கும் என்க. மண்டுதல் - மிக்குப் பருகுதல். பருகு தற்கு விரைதல் என்றுமாம்.

## 130. நெய்தல்

[கழறிய பாங்கற்குத் தலைமகன் கழற்றெதிர் மறுத்தது.]

அம்ம வாழி கேளிர் முன்னின்று
கண்டனி ராயிற் கழறலிர் மன்னோ
நுண்டாது பொதிந்த செங்காற் [1]கொழுமுகை
முண்டகங் கெழீஇய மோட்டுமண லடைகரைப்
௫ பேஎய்த் தலைய பிணரரைத் தாழை
எயிறுடை நெடுந்தோடு காப்பப் பலவுடன்
வயிறுடைப் போது வாலிதின் [2]விரீஇப்
புலவுப்பொரு தழித்த பூநாறு பரப்பின்
இவர்திரை தந்த ஈர்ங்கதிர் முத்தம்
௧௦ [3]கவர்நடைப் புரவிக் கால்வடுத் தபுக்கும்
நற்றேர் வழுதி கொற்கை முன்றுறை
வண்டுவாய் திறந்த வாங்குகழி நெய்தற்
போதுபுறங் கொடுத்த உண்கண்
மாதர் வாண்முக மதைஇய நோக்கே.

—வெண்கண்ணனார்.

(ப-சா-ள்.) ௧. கேளிர் அம்ம வாழி - பாங்கீர், யான் கூறுவதனைக் கேட்பீராக; வாழி!

௩—௧௪. நுண் தாது பொதிந்த செங் கால் கொழு முகை - நுண்ணிய பூந்துகளால் மூடப்பட்ட சிவந்ததண்டினையும் கொழுவிய மொட்டினையுமுடைய, முண்டகம் கெழீஇய மோட்டு மணல் அடைகரை - கழிமுள்ளி பொருந்திய உயர்ந்த மணல் அடைந்த கரையிடத்தே, பேஎய்த் தலைய பிணர் அரைத் தாழை - பேய் போலும் தலையினையுடைய சருச்சரை வாய்ந்த அரையினையுடைய தாழையின், எயிறு உடை நெடுந்தோடு பல உடன் காப்ப - முள்ளாகிய பற்களை யுடைய நீண்ட புற இதழ்கள் பலவும் ஒருங்கு காவா நிற்ப, வயிறு உடைப் போது வாலிதின் விரீஇ - அதன் அகட்டினை இடமாக வுடைய பூ தூய்தாக விரிந்து, புலவுப் பொருது அழித்த பூ நாறு பரப்பின் - புலால் நாற்றத்தைத் தாக்கி யொழித்த மலர் நாற்றம் கமழும் இடத்தின்கண்,

இவர் திரை தந்த ஈர்ங் கதிர் முத்தம் - பரக்கும் அலைகள் கொணர்ந்து வீசிய குளிர்ந்த ஒளியினையுடைய முத்துக்கள், கவர் நடைப் புரவிக் கால்வடுத் தபுக்கும் - விரும்பும் நடையினையுடைய குதிரையது காலினை வடுச்செய்து அதன் செலவினைக் கெடுக்கும், நல் தேர் வழுதி கொற்கை முன்துறை - நல்ல தேரையுடைய பாண்டியனது கொற்கை யென்னும் பதியின் கடற்றுறைக் கண்ணுள்ள,

வண்டு வாய் திறந்த வாங்கு கழி நெய்தற்போது - வண்டினால் வாய் திறக்கப்பெற்ற வளைந்த கழியிடத்தி லுள்ள நெய்தற்

(பாடம்) 1. குறுமுகை. 2. விரைஇப். 3. கவர்பரி.

பூவானது, புறங்கொடுத்த மாதர் வாள்முக உண்கண் - புறங் கொடுத்த அழகிய ஒளி பொருந்திய முகத்தின்கண்ணுள்ள மை யுண்ட கண்களது, மதைஇய நோக்கு - செருக்கிய பார்வையினை,

க—உ. முன் நின்று கண்டனிர் ஆயின் கழறலிர் - முன்னே நின்று கண்டீராயின் இங்ஙனம் கழறிக் கூறீர்.

(முடிபு) கேளிர், வாழி, கொற்கை முன்றுறையின் நின்ற அவள் உண் கண் நோக்கு முன் நின்று கண்டனிராயின் கழறலிர், கண்டிலிர்.

அம்ம : கேட்பித்தற் பொருளில் வரும் இடைச்சொல். கழறுதல் - இடித் துரைத்தல். மன் - கழிவு. வடுத் தபுக்கும் - காலை வடுச் செய்து முடமாக்கும் என் றலுமாம்; வடுச்செய்து என ஒரு சொல் வருவிக்க. தபுக்கும் முன்றுறை : பெய ரெச்சம் இடப்பெயர் கொண்டது. மாதர் - காதலுமாம்.

(உ - றை.) முண்டகமுகை கெழீஇய தாழையின்போது எயிறுடை நெடுங்தோடு பல காப்ப இருந்து விரீஇப் புலவுப் பொரு தழித்ததென்பது, காதற்றோழியுடன் கூடி ஆயவெள்ளம் புடை சூழநின்ற தலைவியின் இயல், நீ கூறிய உறுதி மொழிகளை யெல்லாம் அழித்தது என்றபடி.

---

## 131. பாலை

[பொருள் கடைக் கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.]

விசும்புற நிவந்த மாத்தாள் [1]இகணைப்
பசுங்கேழ் மெல்லிலை யருகுநெறித் தன்ன
வண்டுபடு பிருளிய தாழிருங் கூந்தற்
சுரும்புண விரிந்த பெருந்தண் கோதை
ரு இவளினுஞ் சிறந்தன் [2]றீத னமக்கென
வீளை யம்பின் விழுத்தொடை மழவர்
நாளா வுய்த்த நாமவெஞ் சுரத்து
நடைமெலிந் தொழிந்த சேட்படர் கன்றின்
கடைமணி யுகுநீர் துடைத்த ஆடவர்
க0 பெயரும் பீடு மெழுதி அதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்
வேலூன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்
வெருவரு தகுந கானம் நம்மொடு
வருக வென்னுதி யாயின்
வாரேன் நெஞ்சம் வாய்க்கநின் வினையே.

—மதுரை மருதனிளநாகனார்.

(சொ - ள்.) கரு. நெஞ்சம் - நெஞ்சமே!

க—ரு. விசும்பு உற நிவந்த மா தாள் இகணை - வானை அளாவ உயர்ந்த கரிய அடியினையுடைய இகணைமரத்தினது, பசுகேழ் மெல் இலை அருகு நெறித்தன்ன - பசிய நிறமுடைய மெல்லிய இலைகளை

(பாடம்) 1. இதணைப். 2. ஈகை.

நெருங்கச் செறித்து வைத்தால் ஒத்த, வண்டு படுபு இருளிய தாழ் இருங் கூந்தல் - வண்டு மொய்த்து இருண்ட தாழ்ந்த பெரிய கூந்தலையும், சுரும்பு உண விரிந்த பெரும் தண் கோதை - வண்டுகள் தேன் உண்ணும்படி மலர்ந்த பூக்களாலாய பெரிய குளிர்ந்த மாலையையும் உடைய, இவளினும் நமக்கு ஈதல் சிறந்தன்று என - இத் தலைவியினும் நமக்கு ஈதலே சிறந்தது என்று,

௬—௧௩. விளை அம்பின் விழுத்தொடை மழவர் - சீழ்க்கை போலும் ஒலியுடன் செல்லும் அம்பினது தப்பாத தொடையினையுடைய வெட்சி மறவர், நாள் ஆ உய்த்த நாம வெம் சுரத்து - விடியற் காலையில் ஆக்களைக் கவர்ந்து கொண்டுபோன அச்சம்தரும் கொடிய சுர நெறியிலே, சேண்படர் நடைமெலிந்து ஒழிந்த கன்றின் - நெடுந் தூரம் கடந்து வருதலின் நடை ஓய்ந்து நின்றுவிட்ட கன்றினது, கடைமணி உகுநீர் துடைத்த ஆடவர் - கடைக்கண்ணினின்றும் ஒழுகும் நீரைத் துடைத்த கரந்தையோரது, பெயரும் பீடும் எழுதிப் பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல் - பெயரும் சிறப்பும் பொறித்து மயிற்றோகையினைச் சூட்டிய விளங்கும் நிலையினையுடைய நடுகல்லின்முன், ஊன்று வேல் பலகை - ஊன்றிய வேலும் அதன்கட் சார்த்திய கேடகமும், அதர் தொறும் வேற்றுமுனை கடுக்கும் - செல்லும் வழிதோறும் பகைவர் போர்முனையிருப்பை ஒக்கும், வெரு வரு தகுந கானம் - அச்சம்வரும் இயல்பினவாய காட்டில்,

௧௩—௫. நம்மொடு வருக என்னுதியாயின் - எம்மோடு வருக என்பையாயின், வாரேன் - யான் வருவேனல்லேன்; நின்வினை வாய்க்க - நீ மேற்கொண்ட வினை வாய்ப்பதாக.

(முடிபு) நெஞ்சம், இவளினும் ஈதல் சிறந்தன்றெ‌ன, கானம் நம்மொடு வருக என்னுதியாயின், வாரேன் ; நின் வினை வாய்க்க.

(வி - ரை.) இகணை - ஒரு மரம் ; இது செழுமையுடன் அடர்ந்திருக்கும் தழைகளைத்தலையில் உடையதாகும் என்பது [1]'துன்னிய, ஈர நெஞ்சத் தார்வ லாளர், பாரந் தாங்கும் பழமை போல, இலைக் கொடிச் செல்வமொடு தலைப்பரந் தோங்கிய, கணைக்கா லிகணை' என்னும் பெருங் கதையாற் பெறப்படும். இதணை எனப் பாடம் கொள்வாருமுளர். இவளினும் சிறந்தன்றீதல் - ஈதலால் வரும் இன்பம் இவளால் வரும் இன்பத்தினும் சிறந்தது என்றபடி. விளையினையும் அம்பின் தொடையினையுமுடைய மழவர் என்னலுமாம். விளை - சீழ்க்கை யொலி. விழு - இடும்பை என்னலுமாம். கடைமணி யுகுநீர் - இவ்வாறே [2]'ஆவின் கடைமணி யுகுநீர்' என வருதலுங் காண்க. உகுநீர் துடைத்த என்றது, ஆநிரையை மீட்டமையால் அதன் துயரைப் போக்கிய என்றபடி. துடைத்த ஆடவர் நடுகல் என்றமையால், நிரைமீட்ட கரந்தையார் பொருதுபட்டமை பெற்றும். வாய்க்க நின்வினை என்றது இகழ்ச்சி.

(மே - ள்.) [3]'வெறியறி சிறப்பின் 'என்னும் சூத்திரத்து, 'ஆ பெயர்த்துத் தருதலும்' என்னும் பகுதிக்கு, இச் செய்யுளையும் காட்டி, இதனுள்

1. பெருங். ௩-௧௬, ௩௪-௩௮. 2. சிலப். ௨௦-௫௪. 3. தொல். புறத். ௫.

மறவர் நாளா வுய்த்த' என வேந்துறு தொழில் அல்லாத வெட்சித்திணையும் பொதுவியற் கரந்தைக் கண்ணே கொள்க; இஃது ஏழற்கும் பொதுவாக லின்; என்றும், இச் சூத்திரம் 'பெயரும் பீடும் எழுதி யதர்தொறும், பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்' என அகத்திற்கும் வருதலிற் பொதுவியலா யிற்று என்றும், [1]'நோயு மின்பமும்' என்னுஞ் சூத்திரத்து, 'வருக வென் னுதி யாயின், வாரே னெஞ்சம் வாய்க்கநின் வினையே' என்பது, மறுத்து ரைப்பது போல் தறுகண்மை பற்றிய பெருமிதங் கூறிற்று' என்றுங் கூறி னார் நச்.

---

## 132. குறிஞ்சி

[தோழி தலைமகளை இடத்துய்த்து வந்து தலைமகனை எதிர்ப்பட்டுநின்று வரைவுகடாயது.]

ஏனலும் இறங்குகுரல் இறுத்தன நோய்மலிந்
தாய்கவின் றொலைந்தவிவள் நுதலும் நோக்கி
ஏதில மொழியுமிவ் வூரு மாகலிற்
களிற்றுமுகந் திறந்த கவுளுடைப் பகழி
ரு வாளிணைப் புகவிற் கானவர் தங்கை
அம்பணை மென்றோள் ஆயிதழ் மழைக்கண்
ஒல்கியற் கொடிச்சியை நல்கினை யாயிற்
கொண்டனை சென்மோ நுண்பூண் மார்ப
துளிதலைத் தலைஇய சாரல் நளிசுனைக்
கம் கூம்புமுகை அவிழ்த்த குறுஞ்சிறைப் பறவை
வேங்கை விரியிணர் ஊதிக் காந்தட்
டேனுடைக் குவிகுலைத் துஞ்சி யானை
இருங்கவுட் கடாஅங் கனவும்
பெருங்கல் வேலிநும் உறைவி னூர்க்கே.

—தாயங்கண்ணனார்.

(சொ - ள்.) அ. நுண்பூண் மார்ப - நுண்ணிய தொழிற்றிற மமைந்த பூணணிந்த மார்பனே!

க—உ. ஏனலும் இறங்கு குரல் இறுத்தன - தினையும் முதிர்ந்து வளைந்த கதிர் அறுக்கப் பெற்றன, இவள் நுதலும் நோய் மலிந்து ஆய்கவின் தொலைந்த - இவள் நெற்றியும் காமநோய் மிக்கமையால் ஒள்ளிய அழகு தொலையப் பெற்றது, இவ்வூரும் - இவ்வூராரும், நோக்கி - அதனை நோக்கி, ஏதில மொழியும் - இயைபில்லாதன கூறுவர், ஆகலின் - ஆதலால்,

ச—எ. களிற்று கவுள் உடை முகம் திறந்த பகழி - களிற்றி யானையின் மதம் பொருந்திய கன்னத்தையுடைய முகத்தைக் கிழித்த

---

1. தொல், பொருளி. உ.

அம்பினையும், வால் நிணப் புகவின் - வெள்ளிய நிணத்துடன் கூடிய உணவினையும் உடைய, கானவர் தங்கை - வேடர்களது தங்கையும், அம் பணை மெல்தோள் - அழகிய மூங்கிலையொத்த மெல்லிய தோளினையும், ஆய்இதழ் மழைக்கண் - அழகிய இமையுடன்கூடிய குளிர்ந்த கண்ணினையும், ஒல்குஇயல் - அசையும் இயலினையும் உடைய, கொடிச்சியை நல்கினை ஆயின் - கொடிச்சியுமாகிய இவளை அருள் செய்தாய் ஆயின்,

கூ—கச. துளி தலைத் தலைஇய சாரல் - வானம் மழைத்துளியை முதற்கண்ணே பெய்த பக்க மலையிலே, நளிசுனைக் கூம்பு முகை அவிழ்த்த குறுஞ் சிறைப் பறவை - பெரிய சுனைக்கண்ணே குவிந்த அரும்பினை விரித்த குறுகிய சிறையினவாய வண்டுகள், வேங்கை விரி இணர் ஊதி - வேங்கையின் விரிந்த பூங்கொத்துக்களில் தாதினை ஊதி, காந்தள் தேன் உடைக் குவிகுலை துஞ்சி - காந்தளின் தேன் பொருந்திய குவிந்த குலையில் உறங்கி, யானை இரு கவுள் கடாஅம் கனவும் - யானையின் பெரிய கன்னத்தில் ஒழுகும் மதத்தினை உண்பதாகக் கனாக் காணும், பெருங் கல்வேலி - பெரிய மலையைச் சூழக்கொண்ட, உறைவு இன் நும் ஊர்க்கு - உறைதற்கு இனிய நுமது ஊர்க்கு,

அ. கொண்டனை சென்மோ - வரைந்து கொண்டு செல்வாயாக.

(முடிபு) நுண்பூண் மார்ப! ஏனல் குரல் இறுத்தன; நுதலும் கவின் தொலைந்த; இவ்வூரும் ஏதில மொழியும்; கொடிச்சியை நல்கினையாயின், நும் ஊர்க்கு (வரைந்து) கொண்டனை சென்மோ.

(வி - ரை.) ஏனலுங் குரல் இறுத்தன, இவ்வூரும் கவின் தொலைந்த இவள் நுதல் நோக்கி ஏதில மொழியும் ஆகலின் என்றுரைத்தலுமாம். இதற்கு நுதலும் என்பதிலுள்ள உம்மை இசை நிறை; நுதலும் பிறவுமென எச்சவும்மையுமாம்.

(உ - றை.) முகையவிழ்த்த வண்டு வேங்கை மலரையூதி, காந்தட் குலையிலே துஞ்சி யானையின் கடாத்தினைக் கனவும் என்றது, தலைவியின் நாண் முதலிய தளைகளை நெகிழ்த்த தலைவன் அவளை நுகர்ந்து, அக் களவொழுக்கத்திலே அழுந்தி, மேலும் பகற்குறி இரவுக்குறிகளால், அடைதற்கரிய அவளைப் பெறுதற்கு நினைக்கின்றான் என்றபடி.

(மே - ள்.) [1]'ஆயர் வேட்டுவர்' என்னுஞ் சூத்திரத்து ஆயர் வேட்டுவர் என்னும் இரண்டு பெயரேயன்றி, ஒன்றென முடித்தலாற் கொள்ளப் படும் தலைவரும் தலைவியரும் உளர் என்றுரைத்து, 'வானிணப் புகவிற் கானவர் தங்கை' என வருவனவுங் கொள்க என்றனர் நச்.

---

1. தொல். அகத். உக.

## 133. பாலை

[பிரிவிடை யாற்ருளாயினுளெனக் கவன்ற தோழிக்குத் தலைமகள் ஆற்றுவலென்பதுபடச் சொல்லியது.]

குன்றி யன்ன கண்ண குரூஉமயிர்ப்
புன்ருள் வெள்ளெலி மோவா யேற்றை
செம்பரல் முரம்பிற் சிதர்ந்த பூழி
நன்னுள் வேங்கைவீ நன்களம் வரிப்பக்
௫ கார்தலை மணந்த பைம்புதற் புறவின்
வில்லெறி பஞ்சியின் வெண்மழை தவழும்
கொல்லை யிதைய குறும்பொறை மருங்கிற்
கரிபரந் தன்ன காயாஞ் செம்மலொடு
எரிபரந் தன்ன இலமலர் விரைஇப்
௧௦ பூங்கலுழ் சுமந்த தீம்புனற் கான்யாற்று
வான்கொள் தூவல் வளிதர உண்கும்
எம்மொடு வருதல் வல்லையோ மற்றெனக்
கொன்னுென் றுு வினவினர் மன்னே தோழி
இதல்முள் ளொப்பின் முகைமுதிர் வெட்சி
௧௫ கொல்புனக் குருந்தொடு கல்லறைத் தாஅம்
[1]மிளைநாட் டத்தத் தீர்ஞ்சுவற் கலித்த
வரிமரற் கறிக்கும் மடப்பிணைத்
திரிமருப் பிரலைய காடிறந் தோரே.

—உறையூர் மருத்துவன் தாமோதரனுர்.

(சொ - ள்.) ௧௩. தோழி -,

௧௪—அ. இதல்முள் ஒப்பின் - சிவலின் காலிலுள்ள முள்ளை ஒத்த, முகை முதிர் வெட்சி - அரும்பு முதிர்ந்த வெட்சிப் பூக்கள், கொல்புனக் குருந்தொடு - வெட்டித்திருத்திய கொல்லை நிலத்திலுள்ள குருந்த மலர்களொடு, கல்அறைத் தாஅம் - கற் பாறையிலே பரந்துகிடக்கும், மிளைநாட்டு அத்தத்து - மிளை என்னும் நாட்டின் பாலை நெறியில், ஈர்சுவல் கலித்த - ஈரமுடைய மோட்டு நிலத்தே தழைத்த, வரி மரல் கறிக்கும் - வரிகளையுடைய மரலைக் கடித்துண்ணும், மடப்பிணை திரி மருப்பு இரலைய - மடப்பத்தையுடைய பெண் மானுடன் கூடிய முறுக்குண்ட கொம்பினையுடைய ஆண்மான்களையுடைய, காடு இறந்தோர் - காட்டினைக் கடந்துசென்ற நம் தலைவர்,

௧—௪. குன்றி அன்ன கண்ண - குன்றிமணி போன்ற கண்களையுடைய, குரூஉமயிர் - நல்ல நிறம் வாய்ந்த மயிரையும், புல் தாள் - மெல்லிய கால்களையும், மோவாய் - தாடியினையுமுடைய, வெள்ளெலி ஏற்றை - ஆண்வெள்ளெலி, செம்பரல் முரம்பில் சிதர்ந்த பூழி - சிவந்த பரல்கள் மிக்க வன்னிலத்தில் கிளறிப் போகட்ட புழுதியில், நல்நாள் வேங்கை வீ நன் களம் வரிப்ப - மணநாளை

(பாடம்) 1. இரநாட் டத்தத்து.

அறிவிக்கும் இயல்புடைய வேங்கைப் பூக்கள் உதிர்ந்து சிறந்த வெறியாடு களம் போல அழகு செய்ய,

ரு—எ. கார்தலை மணந்த பைம்புதல் புறவின் - கார்காலம் கூடிய தால் பசிய புதல்களையுடைய முல்லை நிலத்தே, வில் எறி பஞ்சியின் வெண் மழை தவழும் - வில்லினால் அடிக்கப்பெற்ற பஞ்சுபோல வெள்ளிய மேகம் தவழ்ந்திடும், கொல்லை இதைய குறும்பொறை மருங்கில் - புதுக் கொல்லைகளையுடைய சிறிய மலையின் பக்கலில்,

அ—கங. கரி பரந்தன்ன காயா செம்மலொடு - கரி பரந்தா லொத்த காயாவின் வாடற் பூக்களொடு, எரி பரந்தன்ன இலமலர் விரைஇ - நெருப்புப் பரந்தா லொத்த இலவமலர் கலக்க, பூ கலுழ் சுமந்த தீம்புனல் - அப் பூக்களின் ஒழுகுதலைச் சுமந்துவரும் இனிய புனலையுடைய, கான்யாற்று - காட்டாற்றின்கண்ணே, வளிதர வான் கொள் தூவல் - காற்று எழுப்புதலின் மேலே எழும் துளிகளையே, உண்கும் - உண்பேமாகிய, எம்மொடு வருதல் வல்லையோஎன - எம் முடன் வருதற்கு வன்மையுடையையோவென்று, கொன் ஒன்று வினவினர் - பெருமை தங்கிய ஒரு மொழியினைக் கூறி வினவினர்.

(முடிபு) தோழி! மிளைநாட்டத்தத்துக் காடிறந்தோர் ஆய நம் தலைவர், குறும்பொறை மருங்கிற் கான்யாற்றுத் தூவல் உண்கும் எம்மொடு வருதல் வல்லையோவெனக் கொன் ஒன்று வினவினர்; (ஆதலின் விரைந்து வந்து உடன் கொண்டு செல்லுதலும் கூடும்.)

(வி-ரை.) இதை - புதுப்புனம். இலவ மலர் - இலமலரென விகாரமாயிற்று. விரைஇ - விரவ எனத்திரிக்க. கலுழ் - வண்டலு மாம். உண்கும் - உண்பேமாக என்னலுமாம். மற்று,அசை. மன், ஒழியிசை. மிளைக்கந்தன், மிளைகிழான் நல்வேட்டன், மிளைவேள் தித்தன் எனவரும் புலவர் பெயர்களால் மிளையென்பது நாட்டின் பெயராதல் அமையும்; இளைநா டெனப் பிரித்தலுமாம். தலைவர் அங்ஙனம் வினவினராதலின் உடன்கொண்டு செல்லுதலும் கூடு மென எண்ணினளென்க. நச்சினார்க்கினியர் கருத்தின்படி, தலைவர் வினவினதன்றி அங்ஙனம் செய்திலரே என்று தலைவி இரங்கினள் எனக் கொள்ளல் வேண்டும்.

(மே - ள்.) [1] 'கொண்டு தலைக் கழியினும்' என்னுஞ் சூத்திரத்து, இது பாலைக்கண் இரங்கல் நிகழ்ந்ததென்றனர் நச்.

---

## 134. முல்லை

[வினைமுற்றி மீண்ட தலைமகன் பாகற் குரைத்தது]

வானம் வாய்ப்பக் கவினிக் கானம்
கமஞ்சூல் மாமழை கார்பயந் திறுத்தென
மணிமருள் பூவை அணிமல ரிடையிடைச்

---

1. தொல். அகத். கரு.

செம்புற மூதாய் பரத்தலின் நன்பல
௫ முல்லை வீகழல் தாஅய் வல்லோன்
செய்கை யன்ன செந்நிலப் புறவின்
வாஅப் பாணி வயங்குதொழிற் கலிமாத்
தாஅத் தாளிணை மெல்ல வொதுங்க
இடிமறந் தேமதி வலவ குவிமுகை
௧௦ வாழை வான்பூ வூழுறு புதிர்ந்த
ஒழிகுலை யன்ன திரிமருப் பேற்றொடு
கணைக்கா லம்பிணைக் காமர் புணர்நிலை
கடுமான் றேரொலி கேட்பின்
நடுநாட் கூட்ட மாகலு முண்டே.

—சீத்தலைச் சாத்தனார்.

(சொ - ள்.) ௯—௧௪. வலவ - பாகனே! கடுமான் தேர்ஒலி கேட்பின் - நமது விரைந்த குதிரைபூண்ட தேரின் ஒலியினை கேட்டால், வாழை வான் பூ ஊழ்உறுபு உதிர்ந்த குவிமுகை ஒழிகுலை அன்ன - வாழையின் பெரிய பூ மடல்கள் முறையாக முற்றி உதிர எஞ்சிய குவிந்த மொட்டும் ஒழிந்த குலையை ஒத்த, திரி மருப்பு ஏற்றொடு - முறுக்கிய கொம்பினையுடைய மானேற்றுடன், கணைக்கால் அம்பிணைக் காமர் புணர்நிலை - திரண்ட காலினையுடைய அழகிய பெண்மானினது விருப்பம் பொருந்தும் நிலையினதாகிய, நடுநாள் கூட்டம் - நள்ளிரவின் கூட்டம், ஆகலும் உண்டே - நிகழ்தலும் கூடுமோ? (கூடாதாகலின்,)

௧—௬. கமம்சூல் மாமழை - நிறைந்த சூலினையுடைய கரிய மேகங்கள், கார் பயந்து இறுத்தென - கார் காலத்தினைத் தந்து தங்கிற்றாக, வானம் வாய்ப்ப - மழை தப்பாது பெய்தலால், கானம் கவினி - காடு அழகுபெற்று, மணி மருள் பூவை அணிமலர் இடை இடை - நீலமணியை ஒக்கும் காயாவின் அழகிய மலர்களின் இடையிடையே - செம்புற மூதாய் பரத்தலின் - சிவந்த புறத்தினையுடைய இந்திரகோபப்பூச்சி பரத்தலோடு, முல்லை கழல் நன்பல வீ தாஅய் - முல்லையினின்றும் உதிர்ந்த நன்றாகிய பல பூக்களும் பரந்து கிடத்தலால், வல்லோன் செய்கை அன்ன - ஓவியம் வல்லோன் செய்த ஓவியம் போன்ற, செம்நிலப் புறவின் - சிவந்த நிலமாகிய முல்லை நிலத்தே,

௭—௯. வாஅ பாணி வயங்கு தொழிற் கலிமா - தாவிச் செல்லும் தாளச்சீர் விளங்கும் நடை வாய்ந்த செருக்கிய குதிரையின், தாஅ தாள் இணை மெல்ல ஒதுங்க - தாவிச் செல்லும் இணையொத்த கால்கள் மெல்லென நடக்கும்படி, இடிமறந்து - தாற்றுக் கோலால் குத்துதலை மறந்து, ஏமதி - செலுத்துவாயாக.

(முடிபு) வலவ! தேரொலி கேட்பின் ஏற்றொடு பிணையின் நடுநாட் கூட்டம் ஆகலுமுண்டோ? (ஆகாதாகலின்) புறவின்கண் கலிமாத்தாளிணை மெல்ல வொதுங்க இடிமறந்து ஏமதி.

(வி - ரை.) வீகழல் - கழல்வீ என மாறுக. தாஅய் - தாவ எனத் திரிக்க. வாவும், தாவும் என்பன விகாரப்பட்டன. இடி, முதனிலைத் தொழிற்பெயர். இடித்தல் - கசையால் அடித்தலுமாம். ஏவுமதி என்பது ஏமதி என்றாயிற்று. காமம் - காமர் என ஈறு திரிந்தது. தலைவியைக் கூட வருகின்ற பெருங்காதலுடைய னாகலின், மானினங்களின் அத்தகைய கூட்டத்திற்கு இடையூறு விளைத்தல் ஆகாதென அஞ்சினானென்க.

---

## 135. பாலை

[தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொற்றது.]

திதலை மாமை தளிர்வனப் பழுங்கப்
புதலிவர் பீரின் எதிர்மலர் கடுப்பப்
பசலை பாய்ந்த நுதலே னாகி
எழுதெழில் மழைக்கண் கலுழ நோய்கூர்ந்
ரு தாதி மந்தியின் அறிவுபிறி தாகிப்
பேதுற் றிசினே காதலந் தோழி
காய்கதிர் திருகலிற் கணைந்துகால் கடுகி
ஆடுதளி ரிருப்பைக் கூடுகுவி வான்பூக்
கோடுகடை கழங்கின் அறைமிசைத் தாஅம்
க0 காடிறந் தனரே காதலர் அடுபோர்
வீயா விழுப்புகழ் விண்டோய் வியன்குடை
ஈரெழு வேளிர் இயைந்தொருங் கெறிந்த
கழுவுள் காமூர் போலக்
கலங்கின்று மாதவர்த் தெளிந்தவென் னெஞ்சே.

—பரணர்.

(சொ - ள்.) சு. காதலந் தோழி - காதலையுடைய அழகிய தோழியே!

எ—க0. காதலர் - நம் காதலர், காய்கதிர் திருகலின் - காயும் ஞாயிறு தாக்குதலால், ஆடுதளிர் இருப்பை - அசையும் தளிரினையுடைய இருப்பை மரத்தின், கூடு குவி வான் பூ - இதழ் குவிந்த வெள்ளிய பூக்கள், கோடு கடை கழங்கின் - யானை மருப்பினைற் கடைந்து செய்த கழங்கினைப் போன்று, அறைமிசைத் தாஅம் - பாறைமீது பரவிக் கிடக்கும், காடு இறந்தனரே - காடு கடந்து சென்றனர் ஆதலின்,

க0—சு. அவர் தெளிந்த என் நெஞ்சு - அவரைப் பிரியாரென்று தெளிவுற்றிருந்த என்மனம், அடுபோர் வீயா விழுப்புகழ் - அடும் போரினையும் நீங்காத சிறந்த புகழினையும், விண்தோய் வியன் குடை - வானை அளாவிய பெரிய குடையினையுமுடைய, கழுவுள் -

கழுவுள் என்பானுடையதும், ஈர் எழு வேளிர் இயைந்து ஒருங்கு எறிந்த - பதினான்கு வேளிர் ஒருங்குகூடித் தாக்கியதுமாகிய, காமூர் போல - காமூரைப்போல, கலங்கின்று - கலங்காநின்றது;

க—சு. திதலை மாமை தளிர் வனப்பு அழுங்க - தேமலுடன்கூடிய எனது மாமை நிறமும் தளிர்போலும் அழகும் கெட்டொழிய, புதல் இவர் பீரின் எதிர்மலர் கடுப்ப - புதர்களிற் படர்ந்த பீர்க்கினது புதிய மலரையொக்க, பசலை பாய்ந்த நுதலேன் ஆகி - பசலை பரந்த நெற்றியை யுடையேன் ஆகி, எழுது எழில் மழைக்கண் கலுழ - ஓவியம் வல்லார் பார்த்து எழுதுதற்குரிய அழகிய குளிர்ந்த கண் அழ, நோய் கூர்ந்து - துன்பம் பெருகி, ஆதிமந்தியின் அறிவு பிறிதாகி - ஆதிமந்திபோல அறிவு திரிந்து, பேதுற்றிசின் - யான் மயங்கியுளேன்.

(முடிபு) தோழி, காதலர் காடிறந்தனர் ஆகலின், நெஞ்சு காமூர்போலக் கலங்கின்று; (அவர் இன்னும் வந்திலாமையால்) வனப்பு அழுங்க, பசலை பாய்ந்த நுதலேன் ஆகி மழைக்கண் கலுழ நோய் கூர்ந்து, ஆதிமந்திபோல அறிவு பிறிதாகிப் பேதுற்றிசின்.

(வி - ரை.) ஆதிமந்தி - கரிகால் வளவன் மகள். இவள் தன் காதலனைக் கெடுத்து வருந்தினாளென்பது, அகம் சரு, எசு, உஉஉ- ஆம் செய்யுட்களாலும் அறியப்படும். இருப்பையின் பூவிற்கு யானைக் கொம்பினுற் கடைந்தவை உவமையாதலை, மேல்,[1]'இருப்பை, மருப்புக் கடைந்தன்ன கொள்ளை வான்பூ' [2]' இருப்பைக், கோடு கடைந்தன்ன கொள்ளை வான்பூ' என வருவனவற்றாலும் அறிக. கலங்கின்றுமாது : மாது, அசை.

---

## 136. மருதம்

[உணர்ப்புவயின் வாரா வூடற்கண் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]

மைப்பறப் [3]புழுக்கி னெய்க்கனி வெண்சோறு
வரையா வண்மையொடு புரையோர்ப் பேணிப்
புள்ளுப்புணர்ந் தினிய வாகத் தெள்ளொளி
அங்க ணிருவிசும்பு விளங்கத் திங்கட்
௫ [4]சகட மண்டிய துகடீர் கூட்டத்துக்
கடிநகர் புனைந்து கடவுட் பேணிப்
படுமண முழவொடு பரூஉப்பணை யிமிழ
வதுவை மண்ணிய மகளிர் [5]விதுப்புற்றுப்
பூக்கணு மிமையார் நோக்குபு மறைய
க௦ மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை
பழங்கன்று கறித்த பயம்பம லறுகைத்

1. அகம். உகள. 2. அகம். ௩௩௧. (பாடம்) 3. புழுக்கி நெய்க்கனி. 4. சகடம் வேண்டிய. 5. விருப்புற்று.

தழங்குகுரல் வானின் றலைப்பெயற் கீன்ற
மண்ணுமணி யன்ன மாயிதழ்ப் பாவைத்
தண்ணறு முகையொடு வெண்ணூல் சூட்டித்
௧௫ தூவுடைப் பொலிந்து மேவரத் துவன்றி
மழைபட் டன்ன மணன்மலி பந்தர்
இழையணி சிறப்பிற் பெயர்வியர்ப் பாற்றித்
தமர்நமக் கீத்த தலைநா ளிரவின்
உவர்நீங்கு கற்பினெம் உயிருடம் படுவி
௨0 முருங்காக் கலிங்கம் முழுவதும் வளைஇப்
பெரும்புழுக் குற்றநின் பிறை[1] நுதற் பொறிவியர்
உறுவளி யாற்றச் சிறுவரை திறவென
ஆர்வ நெஞ்சமொடு போர்வை வவ்வலின்
உறைகழி வாளின் உருவுபெயர்ந் திமைப்ப
௨௫ மறைதிற ன்றியா ளாகி ஒய்யென
நாணினள் இறைஞ்சி யோளே பேணிப்
பரூஉப்பகை யாம்பற் குரூஉத்தொடை நீவிச்
சுரும்பிமி ராய்மலர் வேய்ந்த
இரும்பல் கூந்தல் இருண்மறை யொளித்தே.

—விற்றூற்று மூதெயினனார்.

(சொ - ள்.) ௧—௯. நெஞ்சே -, மைப்பு அற - குற்றம் நீங்க, புழுக்கின் - இறைச்சியுடன் கூட்டி ஆக்கிய, நெய்க்கனி - நெய்மிக்க, வெண்சோறு - வெள்ளிய சோற்றை, வரையா வண்மையொடு - வரைதலில்லாத வள்ளன்மையுடன், புரையோர்ப் பேணி - உயர்ந்த சுற்றத்தார் முதலாயினாரை உண்பித்து, புள் இனியவாகப் புணர்ந்து - புள் நிமித்தம் இனிதாகக் கூட, தெள் ஒளி அம்கண் இரு விசும்பு விளங்க - தெள்ளிய ஒளியையுடைய அழகிய இடமகன்ற பெரிய வானம் களங்கமற விளங்குதலுற, திங்கள் சகடம் மண்டிய துகள்தீர் கூட்டத்து - திங்களை உரோகணி கூடிய குற்றமற்ற நன்னாட் சேர்க்கையில், கடிநகர் புனைந்து - மண மனையை அழகுறுத்தி, கடவுள் பேணி - கடவுளை வழிபட்டு, படுமண முழவொடு - ஒலிக்கும் மண முழவுடன், பரூஉப் பணை இமிழ - பெரிய முரசம் ஒலிக்க, வதுவை மண்ணிய மகளிர் - தலைவிக்கு மணநீராட்டிய மகளிர், பூக்கணும் இமையார் நோக்குபு - தமது கூரிய கண்களாலும் இமையாராய் நோக்கி, விதுப்புற்று மறைய - விரைந்து மறைந்திட,

௧0—௮. மென்பூ வாகைப் புல்புறக் கவட்டு இலை - மெல்லிய பூவையுடைய வாகையின் புல்லிய புறத்தினை யுடைய கவர்த்த இலையை, பழங்கன்று கறித்த - முதிய கன்று கறித்த, பயம்பு அமல் - பள்ளத்திற் படர்ந்த, அறுகை - அறுகினது, தழங்கு குரல் வானின் தலைப்பெயற்கு ஈன்ற - ஒலிக்கும் குரலையுடைய மேகத்தின் முதற் பெயலால் ஈன்ற, மண்ணுமணி அன்ன - கழுவிய நீலமணியை ஒத்த,

1. நுதற்குறுவியர்,

மாஇதழ் - கரிய இதழையுடைய, பாவை - பாவைபோலுங் கிழங் கிடத்துள்ள, தண் நறு முகையொடு - தண்ணிய நறிய அரும்புடன் (சேரக்கட்டிய), வெண் நூல் சூட்டி - வெள்ளிய நூலைச் சூட்டி, தூ உடைப் பொலிந்து - தூய உடையாற் பொலியச்செய்து, மேவரத் துவன்றி - விருப்பம் உண்டாக நெருங்கி, மழைப்பட்டன்ன மணன்மலி பந்தர் - மேகம் ஒலித்தாலொத்த மணவொலி மிக்க பந்தலிலே, இழை அணி சிறப்பின் - அணிகளை அணிவித்த சிறப்பினெடு, பெயர் வியர்ப்பு ஆற்றி - தோன்றிய வியர்வையை ஆற்றி, தமர் நமக்கு ஈத்த தலைநாள் இரவின் - சுற்றத்தார் நமக்குத் தந்த முதல் நாள் இரவில்,

கக—உக. உவர் நீங்கு கற்பின் எம் உயிர் உடம்பு அடுவி - வெறுப்பு நீங்கிய கற்பினையுடைய என் உயிர்க்கு உடம்பாக அடுத் தவள், முருங்காக் கலிங்கம் முழுவதும் வளைஇ - கசங்காத புத் துடையால் உடல் முழுவதும் போர்த்தியதால், பெரும் புழுக்கு உற்ற நின் பிறை நுதல் பொறி வியர் - மிக்க புழுக்கத்தை எய்திய நினது பிறைபோன்ற நெற்றியில் அரும்பிய வியர்வை, உறுவளி ஆற்ற சிறுவரை திற என - மிக்க காற்றுப் போக்கிடச் சிறுபொழுது திறவாய் என்று கூறி, ஆர்வம் நெஞ்சமொடு போர்வை வவ்வலின் - அன்பு மிக்க நெஞ்சமொடு போர்வையைக் கவர்தலின், உறை கழி வாளின் - உறையினின்றும் எடுத்த வாளைப்போல, உருவு பெயர்ந்து இமைப்ப - அவள் உருவம் வெளிப்பட்டு விளங்க, மறை திறன் அறி யாள் ஆகி - மறையும் வகை அறியாதவள் ஆகி, பரூஉப்பகை ஆம் பல் குரூஉத் தொடை நீவி - ஆம்பற்பூவின் முறிக்கப்பட்ட இதழ் களால் ஆய பருத்த நிறம் பொருந்திய மாலையை நீக்கி, சுரும்புஇமிர் ஆய் மலர் வேய்ந்த - வண்டுகள் ஒலிக்கும் ஆராய்ந்த மலரினைச் சூடிய, இரும் பல் கூந்தல் இருள் - பெரிய பலவாய கூந்தலின் இரு ளால், மறைஒளித்து - மறைத்தற்குரிய உறுப்புக்களை மறைத்து, ஒய் யென நாணினள் பேணி இறைஞ்சியோள் - விரைவாக நாணி விருப் புற்று இறைஞ்சினுள்; (அத்தகையாள், இன்று நாம் பல கூறி உணர்த்தவும், உணராது ஊடுகின்ருள்; இவள் என்ன உறவினள் நமக்கு !)

(முடிபு) நெஞ்சே! சோற்றைப் புரையோரைப் பேணி, கடிநகர் புனைந்து கடவுட்பேணி, வதுவை மண்ணிய மகளிர் நோக்குப மறைய, தமர் வெண்ணூல் சூட்டி உடையாற் பொலிவித்து மணமலி பந்தரிடத்து வியர்ப்பாற்றி நமக்கு ஈத்த தலைநாளிரவின்கண், எம் உயிருடம்படுவி, கலிங்கம் வளைஇப் புழுக்குற்ற வியரை வளி ஆற்றத் திறவென யாம் போர்வை வவ்வலின், உரு இமைப்ப மறைதிறனறி யாளாகி, கூந்தல் இருள் மறையொளித்து, ஒய்யென நாணினள் பேணி இறைஞ்சி யோளாயினள்; (அத்தகையாள் இன்று நாம் பலகூறி உணர்த்தவும் உணராது ஊடு கின்ருள் ஆகலின், இவள் நமக்கு என்ன உறவினளோ)

•(வி - ரை.) புள்ளு - புள் நிமித்தம். சகடம் - உரோகிணி. பழந் தமிழ் மக்கள் உரோகிணியைத் திருமணத்திற்குச் சிறந்த நாளாகக் கொண்டிருந்தனர்; உரோகிணியுடன் கூடிய சந்திரன் உச்சன்

ஆகலின் எவ்வகைத் தீங்கும் நீங்கும் என்னுங் கருத்தினர் போலும்: [1]'வானூர் மதியம் சகடணைய வானத்துச், சாலி யொருமீன் தகையா ளைக் கோவலன் . . . தீவலம் செய்வது' என்பது காண்க. சகடம் வேண்டிய என்பதும் பாடம். கடவுட் பேணி என்பதனால், திருமணத் தின் தொடக்கத்தில், கடவுளை வழிபடும் வழக்கம் பண்டும் உளதென் பது பெற்றாம். [2]'பூக்கண் : பூ - கூர்மை; பூவாட் கோவலர்' என்புழி பூ இப்பொருட்டாதல் காண்க. மகளிர் விதுப்புற்றுப் பூக்கண்ணும் இமையார் நோக்குபு என்றதனால், தலைவி மகளிரும் விரும்பும் பேரழகினள் என்பது பெறப்படும். [3]'கஞ்சத்துக் களிக்கு மின்றேன் . . . மஞ்சர்க்கும் மாதரார்க்கும் மனமென்ப தொன்றே யன்றே!' [4]'நெய்விலை பசும் பொற்றோடு . . . செய்தவர் சிறுபுன் கோலம் தொறுத்தியர் திகைத்து நின்றார்' என்பன ஈண்டு அறியற்பாலன. விதுப்புற்று மறைதல் கண் எச்சில் படாமைப் பொருட்டு. அறுகை - அறுகு. பெயற்கு - பெயலால்; வேற்றுமை மயக்கம். அறுகின் கிழங்கினைப்பாவை என்றல் மரபு. மாயிதழ் முகை எனக் கூட்டுக. மணன்மலி : மணம், மணன் எனப் போலியாயிற்று. மணல் மலிந்த என்றலுமாம். பரூஉப்பகை யாம்பற் குரூஉத் தொடை நீவி - பாரத்தாற் பகையாயிருக்கிற பருத்த ஆம்பற் பூவாலாகிய தொடை யினை நீக்கி என்றலுமாம்.

(மே - ள்.) [5]'பொய்யும் வழுவும்' என்னுஞ் சூத்திரத்து, இச் செய் யுள், களவின்வழி நிகழ்ந்த கற்புங்கோடற்கு உதாரணமாகும் என்றார் நச்.

[6]'புகுமுகம் புரிதல்' என்னுஞ் சூத்திரத்து 'பெரும்புழுக் குற்றநின் பிறைநுதற் பொறிவியர், உறுவளி யாற்றச் சிறுவரை திறவென' என்பது பொறிநுதல் வியர்த்தல் எனும் மெய்ப்பாடும் ஆகும் என்றும், இம் மெய்ப் பாடு தலைமகட்கே யுரித்து தலைமகற்கு உரித்தன்று, உட்கும் நாணும் அவற்கு இன்மையின் என்றும் கூறினர் பேரா.

---

## 137. பாலை

[தலைமகன் பிரியுமெனக் கருதி வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.]

ஆறுசெல் வம்பலர் சேறுகிளைத் துண்ட
சிறுபல் கேணிப் பிடியடி நசைஇக்
களிறுதொடூஉக் கடக்குங் கான்யாற் றத்தஞ்
சென்றுசேர் பொல்லா ராயினும் நினக்கே
(ரு) வென்றெறி முரசின் விறற்போர்ச் சோழர்
இன்கடுங் கள்ளின் உறந்தை யாங்கண்
வருபுனல் நெரிதரு மிகுகரைப் பேரியாற்

1. சிலப். க-டுO-டுக. 2. புறம். உஉச. 3. கம்ப. பால. கோலங்காண். கக. 4. சிவக. கோவிந்தை. அO. 5. தொல். கற்பு. ச. 6. தொல். மெய்ப். கக.

றுருவ வெண்மணல் முருகுநாறு தண்பொழிற்
பங்குனி முயக்கங் கழிந்த வழிநாள்
க௦ வீயிலை அமன்ற மரம்பயி லிறும்பில்
தீயி லடுப்பி னரங்கம் போலப்
பெரும்பாழ் கொண்டன்று நுதலே தோளும்
தோளா முத்திற் றெண்கடற் பொருநன்
திண்டேர்ச் செழியன் பொருப்பிற் கவாஅன்
கரு நல்லெழில் நெடுவேய் புரையுந்
தொல்கவின் றொலைந்தன நோகோ யானே.

—[1]உறையூர் முதுகூத்தனார்.

(சொ - ள்.) க—ச. ஆறுசெல் வம்பலர் - சுரநெறியிற் செல்லும் புதியர், சேறு கிளைத்து உண்ட சிறுபல் கேணி - சேற்றைக் கிண்டி ஊறிய நீரை உண்ட சிறிய பலவாய கேணிகளை, பிடிஅடி நசைஇ - தன் பிடியின் அடிச் சுவடென விரும்பி, களிறு தொடூஉக் கடக்கும் - களிறுகள் தொட்டுப் பார்த்துக் கடந்து செல்லும், கான் யாற்று அத்தம் - காட்டாற்றினையுடைய அச் சுர நெறியில், சென்று சேர்பு ஒல்லார் ஆயினும் - சென்று சேர்தலை நம் தலைவர் இசையார் ஆயினும்,

ச—கஉ. வென்று எறி முரசின் விறற்போர்ச் சோழர் - பகைவரை வென்று அடிக்கும் முரசினையும் போர் வென்றியையுமுடைய சோழரது, இன்கடுங் கள்ளின் உறந்தை ஆங்கண் - இனிய கடுப்பு மிக்க கள்ளினையுடைய உறையூரிடத்து, வருபுனல் நெரிதரும் இகு கரைப் பேர் யாற்று - வரும்நீர் உடைத்திடும் கரைந்து மெலிந்த கரையினையுடைய பெரிய யாறாகிய காவிரியின், உருவ வெண்மணல் முருகு நாறு தண் பொழில் - அழகிய வெண்மணல் நிறைந்த தேன் நாறும் தண்ணிய பொழிலில், பங்குனி முயக்கம் கழிந்த வழிநாள் - பங்குனி விழாக் கழிந்த பிற்றை நாளில், வீ இலை அமன்ற மரம்பயில் இறும்பில் - பூக்களுடன் கூடிய இலைகள் நிறைந்த மரங்கள் அடர்ந்த சிறு காட்டில், தீஇல் அடுப்பின் அரங்கம்போல - அடுதல் இன்மையின் தீ இல்லையாகிய வெற்றடுப்புக்களையுடைய விழாக்களம்போல, நினக்கு நுதல் பெரும்பாழ் கொண்டன்று - உனக்கு நெற்றி பெரிதும் பொலிவற்ற நிலையினைக் கொண்டது;

கஉ—கசு. தோளா முத்தின் தெண்கடல் பொருநன் - துளையிடாத புதிய முத்துக்கள் விளையும் தெளிந்த கடலையுடைய வீரனாகிய, திண்தேர்ச் செழியன் - திண்ணிய தேரினையுடைய பாண்டியனது, பொருப்பின் கவாஅன் - பொதியிலின் பக்கமலையிலுள்ள, நல் எழில் நெடுவேய் புரையும் தோளும் - நல்ல அழகிய நெடிய மூங்கிலை ஒக்கும் நின்தோளும், தொல் கவின் தொலைந்தன - பழைய அழகு கெட்டன; நோகோ யானே - யான் நோவேன்.

(பாடம்.) 1. முதுகூற்றனார்.

(முடிபு) நம் தலைவர் அத்தம் சேர்பு ஒல்லார் ஆயினும் நினக்கு நுதல் பெரும்பாழ் கொண்டன்று ; தோளும் தொல்கவின் தொலைந்தன; யான் நோகோ.

(வி - ரை.) கேணியை என இரண்டனுருபு விரிக்க. அடி நசைஇ - அடியென நசைஇ. முயக்கம் - கூட்டம்; உத்தரமும் நிறை மதியுங் கூடிய கூட்டம். பங்குனித் திங்களில் உத்தரமும் நிறைமதி யுங் கூடிய நாள் நன்னாளாகும். அந்நாளில் உறையூரில் பங்குனி உத்தர விழாச் சிறப்புற்றிருந்த தென்பது, [1]'களவினுட் டவிர்ச்சி' என்னும் இறையனார் அகப்பொருட் சூத்திர உரையில், 'இனி, ஊர்துஞ்சாமை என்பது, ஊர்கொண்ட பெருவிழா நாளாய்க் கண் பாடில்லையாமாகவும் இடையீடாம் என்பது; அவை, மதுரை ஆவணி யவிட்டமே, உறையூர்ப் பங்குனி யுத்தரமே, கருவூர் உள்ளி விழாவே என இவையும் இவைபோல்வன பிறவும் எல்லாம் அப் பெற்றியான பொழுது இடையீடாம் என்பது' என வருதலான் அறி யப்படும். தீயிலடுப்பி னரங்கம்போல என்பதை தீயில் அடுப்பினர் அங்கம்போல எனக் கண்ணழித்து, விறலியர் உறுப்புப்போல என நலிந்துரை கூறுதல் சிறப்பின்றாம் என்க.

---

## 138. குறிஞ்சி

[தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலை மகள் சொல்லியது.]

இகுளை கேட்டிசிற் காதலந் தோழி
குவளை யுண்கண் டெண்பனி மல்க
வறிதியான் வருந்திய செல்லற் கன்னை
பிறிதொன்று கடுத்தன ளாகி வேம்பின்
ரு வெறிகொள் பாசிலை நீலமொடு சூடி
உடலுநர்க் கடந்த கடலந் தானைத்
திருந்திலை நெடுவேற் றென்னவன் பொதியில்
அருஞ்சிமை யிழிதரும் ஆர்த்துவர லருவியிற்
றதும்புசீ ரின்னியங் கறங்கக் கைதொழுது
க0 உருகெழு சிறப்பின் முருகுமனைத் தரீஇக்
கடம்புங் களிறும் பாடி நுடங்குபு
தோடுந் தொடலையுங் [2]கைக்கொண் டல்கலும்
ஆடின ராதல் நன்றோ நீடு
நின்னொடு தெளித்த நன்மலை நாடன்
கரு குறிவர லரைநாட் குன்றத் துச்சி
நெறிகெட வீழ்ந்த துன்னருங் கூரிருள்
திருமணி யுமிழ்ந்த நாகங் காந்தட்
கொழுமடற் புதுப்பூ வூதுந் தும்பி

---

1. களவியல், சூத். கக. (பாடம்) 2. கைக்கொண்டாடின, ளாதந் னன்றோ வன்றே நீடு.

நன்னிறம் மருளும் அருவிடர்
உ0 இன்னா நீளிடை நினையுமென் னெஞ்சே.
—எழுஉப்பன்றி நாகன் குமரனார்.

(சொ - ள்.) க. இகுளை - இகுளையே! காதல்அம் தோழி - காதலையுடைய தோழியே! கேட்டிசின் - கேட்பாயாக;

கரு—உ0. நீடு நின்றெனடு தெளித்த நல்மலை நாடன் - நெடு நாளாக நின்னொடு கடிதுவரைந்து கொள்வல்எனத் தெளிவித்து வந்த நல்ல மலை நாடனாகிய நம் தலைவன், குறிவரல் அரை நாள் - இரவுக் குறி வரும் நடுஇரவில், குன்றத்து உச்சி - அவர் வரும குன்றின் உச்சியில், நெறிகெட வீழ்ந்த துன்அரும் கூர்இருள் - வழி தவறுமாறு செறிந்த அணுகற்கரிய மிக்க இருளிலே, திருமணி உமிழ்ந்த நாகம் - தனது அழகிய முடி மணியை உமிழ்ந்த நாகமானது, காந்தள் கொழு மடல் புதுப்பூ ஊதும் தும்பி - காந்தளது கொழுவிய மடலையுடைய புதிய பூவினை ஊதித் தாதினை அளைந்த வண்டின், நல்நிறம் மருளும் - நல்ல நிறத்தினைக் கண்டு தன் மணி என மயங்கும், அரு விடர் இன்னா நீள் இடை - அரிய பிளப்புக்களையுடைய இன்னாத நெடிய வழியை, என் நெஞ்சு நினையும் - என் மனம் நினைந்து கவலும்;

உ—ச. குவளை உண்கண் தெண் பனி மல்க - (அதனால்) குவளைப் பூவை ஒத்த எனது மையுண்ட கண்களில் தெளிந்த நீர் ததும்ப, வறிது யான் வருந்திய செல்லற்கு - யான் சிறிது வருந்திய துன்பத்தினைக் கண்டு, அன்னை - நமது அன்னை யானவள், பிறிது ஒன்று கடுத்தனள் ஆகி - இது தெய்வத்தால் ஆயதோ எனும் வேறோர் ஐயமுற்றனளாக,

ச—கரு. வேம்பின் வெறிகொள் பசுஇலை நீலமொடு சூடி - கட்டுவிச்சியும் வேலனும் வேம்பினது நாற்றமுடைய பசிய இலையுடன் நீலப்பூக்களைச் சூடி, உடலுநர்க் கடந்த கடல் தானை - மாறுபட்ட பகைவரைவென்ற கடல்போலும் சேனைகளையும், திருந்து இலை நெடு வேல் - திருந்திய இலையினைக் கொண்ட நெடிய வேலையுமுடைய, தென்னவன் பொதியில் அரும் சிமை இழிதரும் ஆர்த்துவரல் அருவியில் - பாண்டியனது பொதியில் மலையில் அடைதற்கரிய உச்சியினின்றும் இழியும் ஆரவாரித்து வருதலையுடைய அருவி ஒலிபோல, ததும்பு சீர் இன்னியம் கறங்க - ஒலிக்கும் சீரையுடைய இனிய வாச்சியங்கள் ஒலிக்க, கைதொழுது - கையால் வணங்கி, உருகெழு சிறப்பின் முருகு மனைத்தரீஇ - அச்சம் தோன்றும் தலைமையையுடைய முருகனை மனைக்கண் வருவித்து, கடம்பும் களிறும் பாடி - அவனது கடம்பினையும் களிற்றினையும் பாடி, தோடும் தொடலையும் கைக்கொண்டு - பனந் தோட்டினையும் கடப்ப மாலையையும் கையிற் கொண்டணிந்து, நுடங்குபு - அசைந்தசைந்து, அல்கலும் - இரவெல்லாம், ஆடினர் ஆதல் நன்றோ - ஆடுதல் நன்றாகுமோ!

(முடிபு) **தோழி, நன்மலை நாடன் குறிவரல் அரைநாட் கூரிருள் இன்னா நீளிடை என் நெஞ்சு நினையும்; அதனால் உண்கண் பனிமல்க, வருந்திய**

**செல்லற்கு, அன்னை பிறிதொன்று கடுத்தனளாக, கட்டுவிச்சியும் வேலனும் முருகுமனைத் தரீஇ ஆடினராதல் நன்றோ.**

(வி - ரை.) கடுத்தனளாகி : ஆக எனத் திரிக்க. கட்டுவிச்சியும் வேலனும் கட்டினானும் கழங்கினானும் குறி பார்த்து, பாசிலை நீலமொடு சூடி என விரித்துரைக்க. காதல் அம் தோழி, கடலங் கானை என்ற இடங்களில் 'அம்' அசை. பனந்தோடும் கடப்ப மாலையும் அணிந்து ஆடுதல், மேல், [1]'வெண்போழ் கடம்பொடு சூடி' என வந்தமையால் அறிக. தொடலை - காந்தள் மாலையுமாம். ஆடினர் எனப் பன்மை கூறினமையின், கட்டுவிச்சியும் வேலனும் என்க. [2]'வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன், வெறியாட் டயர்ந்த காந்தளும்' என்பதற்கு, 'செவ்வேள் வேலைத் தான் ஏந்தி நிற்றலின், 'வேலன்' என்றார்; காந்தள் சூடி ஆடுதலிற் காந்தள் என்றார்; வேலனைக் கூறினமையிற் கணி காரிகையுங் கொள்க. காந்தளையுடைமையானும், பனந்தோடுடைமையானும் மகளிரை வருந்துதலானும், வேலன் வெறியாட்டயர்ந்த என்றதனானும் வேலன் ஆடுதலே பெரும்பான்மை; ஒழிந்தோர் ஆடுதல் சிறுபான்மை யென்றுணர்க, என நச்சினார்க்கினியர் உரைத்தது ஈண்டு அறிதற்பாலது. காந்தட் பூவை யூதுந்தும்பி நாகத்தின் மணிபோலும் என்னுங் கருத்து, [3]'காந்தள் அணிமலர் நறுந்தா தூதுந் தும்பி, கையாடு வட்டிற் றோன்றும்' என்பதனோடு ஒத்திருத்தல் அறிந்து மகிழற்பாலது.

(உ - றை.) திருமணி யுமிழ்ந்த நாகம், காந்தட்புதுப்பூவை நுகர்ந்ததனால் நன்னிறம்பெற்ற தும்பியைக்கண்டு, ஐயுற்று மயங்குதல்போல, நம் அன்னை தலைவனொடு இன்பந் துய்த்ததனாற் புதுச் செவ்வியுற்ற என்னைக் கண்டு மயங்குகின்றாள் என்றவாறு.

(மே - ள்.) [4]'களவல ராயினும்' என்னுஞ் சூத்திரத்து, 'கட்டினுங் கழங்கினும் . . . செய்திக் கண்ணும்' என்ற துறைக்கு இச் செய்யுளைக் காட்டி, இதன்கண் கட்டென்றாயினும் கழங்கென்றாயினும் விதந்து கூறாமையின் இரண்டும் ஒருங்கு வந்தன' என்றும், [5]'பொழுது மாறும்' என்னுஞ் சூத்திரத்து, அன்னவை பிறவும் எனும் பகுதியில், 'கடம்புங் களிறும் . . . ஆகனன்றோ' என்பது, தலைவற்கு வெறியாட்டு உணர்த்தியது என்றும் கூறினர் நச்.

---

## 139. பாலை

[பிரிவிடை மெலிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

துஞ்சுவது போல இருளி விண்பக
இமைப்பது போல மின்னி உறைக்கொண்டு

---

1. அகம். ௯௮. 2. தொல். புறத். ௫. 3. அகம். ௪௦௮. 4. தொல். கள. ௨௪. 5. தொல். பொருளி. ௧௬.

ஏறுவது போலப் பாடுசிறந் துரைஇ
நிலம்நெஞ் சுட்க ஓவாது இலைத்தாங்
௫ கார்தளி பொழிந்த வார்பெயற் கடைநாள்
ஈன்றுநா ளுலந்த வாலா வெண்மழை
வான்றோ யுயர்வரை யாடும் வைகறைப்
[1]புதலொளி சிறந்த காண்பின் காலைத்
தண்ணறும் படுநீர் மாந்திப் பதவருந்து
௧௦ வெண்புறக் குடைய திரிமருப் பிரலை
வார்மண லொருசிறைப் பிடவவிழ் கொழுநிழற்
காமர் [2]துணையொ டேமுற வதிய
அரக்குநிற வுருவின் ஈயல் மூதாய்
பரப்பி யவைபோற் பாஅய்ப் பலவுடன்
௧௫ நிர்வார் மருங்கின் ஈரணி திகழ
இன்னும் வாரா ராயின் நன்னுதல்
யாதுகொல் மற்றவர் நிலையே காதலர்
கருவிக் காரிடி யிரீஇய
[3]பருவ மன்னவர் வருதுமென் றதுவே.

—இடைக்காடனார்.

(சொ - ள்.) ௧௬. நன்னுதல் - நல்ல நெற்றியையுடைய தோழியே!

௧—அ. துஞ்சுவதுபோல இருளி - மேகம் உறங்குவது போல இருண்டு, இமைப்பதுபோல விணபகமின்னி - கண் இமைப்பதுபோல விண்பிளக்க மின்னி, உறைக்கொண்டு ஏறுவதுபோல பாடு சிறந்து உரைஇ - நீரைக்கொண்டு மேலேறுவதுபோல ஒலிமிக்குப் பரந்து, நிலம நெஞ்சு உட்க ஓவாது சிலைத்து - நிலத்தின் நெஞ்சு துணுக்குற ஒழியாது இடித்து, ஆர் தளி பொழிந்த வார்பெயல் கடைநாள் - மிகக நீரைச் சொரிந்த நீண்ட பெயலைக் கொண்ட கார் காலத்தின் கடைநாளில், ஈன்று நாள் உலந்த வாலா வெண் மழை - பெய்து நாள் கழிந்த தூய்மையில்லா வெள்ளிய மேகம், வான்தோய் உயர் வரை ஆடும் வைகறை - வானை அளாவிய உயர்ந்த மலையில் தவழும் வைகறையாகிய, புதல் ஒளி சிறந்த காண்பு இன்காலை - புதல்கள் ஒளியால் சிறந்த காண்டற்கு இனியவாகும் காலத்தே,

௭—௧௫. தண் நறும படுநீர் மாந்தி - குளிர்ந்த நறிய குளத்தின் நீரை நிறைய உண்டு, பதவு அருந்து - அறுகம்புல்லை மேயும, வெண் புறக்கு உடைய திரிமருப்பு இரலை - வெள்ளிய புறத்தினையுடைய திரிந்த கொம்பினையுடைய ஆண மான், வார்மணல் ஒரு சிறை பிடவு அவிழ்கொழு நிழல் - நீணட மணலின் ஒரு பக்கத்தே மலர் விரிந்த பிடவினது கொழுவிய நிழலிலே, காமர் துணையொடு ஏம் உற வதிய - அழகிய தன்பிணையுடன் இன்பம் பொருந்தத் தங்க, அரக்குநிற

(பாடம்) 1. புதலே ரணிந்த. 2. துணையோ டமர்துயில். 3. பருவ மன்றவர்.

உருவின் ஈயல் மூதாய் - செவ்வரக்கு அனைய நிறத்தையும் அழகினையு முடைய தம்பலப் பூச்சிகள், பரப்பியவைபோற் பாஅய்ப் பலவுடன் - பரப்பி வைத்தாற்போலப் பலவும் ஒருங்கே பரந்து, நீர்வார் ஈர் மருங்கின் அணி திகழ - நீர் ஒழுகிய ஈரமுடைய இடத்தில் அழகுடன் விளங்க,

கசா—எ. இன்னும் காதலர் வாரார் ஆயின் - இன்னும் நமது காதலர் வந்திலரேல், அவர் நிலை யாது கொல் - அவரது நிலை என்னையோ,

கஅ—கூ. அவர் வருதும் என்றது - அவர் மீண்டு வருவேம் என்று கூறியது, கருவிக் கார்இடி இரீஇய பருவம்மன் - தொகுதியை யுடைய மேகங்கள் இடிகளைக் கொண்ட இந்தப் பருவம் அன்றோ !

(முடிபு) மேகம் தளி பொழிந்த கடைநாள் வெண் மழை ஆடும் வைகறை யாகிய காலை, இரலை துணையொடு ஏமுற வதிய, ஈயன் மூதாய் அணி திகழ, காத லர் இன்னும் வாராராயின், அவர் நிலை யாது கொல். அவர் வருதும் என்றது கார் ஆகிய பருவம் மன்.

(வி - ரை.) சிலைத்தாங்கு : ஆங்கு, அசை. ஆம்கார் எனப் பிரித்து நீரையுடைய மேகம் என்பாரும் உளர். வைகறையாகிய காலை என்க. படு - குளம். புறக்கு - புறம்; உடலின் வெளிப்புறம். இரலை வதியவும், ஈயன் மூதாய் திகழவும் இக்காலத்தும் வந்திலரா யின் என்க. பருவ மன்றவர் என்பது பாடமாயின், மன்ற என்றதன் அகரம் தொக்கதாகக் கொள்க. இப்பாட்டு உரிப் பொருளாற் பாலையாயிற்று.

(மே - ள்.) [1]‘திணைமயக் குறுதலும்’ என்னுஞ் சூத்திரத்து, இச் செய்யுட்கண், பாலைக்கண் முன்பனியும் வைகறையும் ஒருங்கு வந்தன என்றும், [2]‘வேந்துறு தொழிலே யாண்டின தகமே’ என்னுஞ் சூத்திரத்து, ‘கருவிக் காரிடி யிரீஇய, பருவ மன்னவர் வருதுமென் றதுவே’ (என்றும்) இது, கார் குறித்து வருவரென்றலின், அறுதிங்கள் இடையிட்டது என் றும் கூறினர் நச்.

---

## 140. நெய்தல்

[இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்கும் தலைமகன் பாங்கற் குரைத் தது.]

பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடிப் பரதவர்
இருங்கழிச் செறுவின் உழாஅது செய்த
வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி
என்றூழ் விடர குன்றம் போகும்
ரு கதழ்கோல் உமணர் காதல் மடமகள்
சில்கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி

1. தொல். அகத். கஉ. 2. தொல். கற்பு. சஅ.

நெல்லின் நேரே வெண்கல் உப்பெனச்
சேரி விலைமாறு கூறலின் மனைய
விளியறி ஞமலி குரைப்ப வெரீஇய
௧௦ மதர்கயல் மலைப்பி னன்ன கண்ணெமக்
கிதைமுயல் புனவன் புகைநிழற் கடுக்கும்
மாமூ தள்ளல் அழுந்திய சாகாட்
டெவ்வந் தீர வாங்குந் தந்தை
கைபூண் பகட்டின் வருந்தி
௧௫ வெய்ய உயிர்க்கும் நோயா கின்றே.

—அம்மூவனார்.

(சொ - ள்.) ௧—௫. பெருங் கடல் வேட்டத்து - பெரியகடலில் மீன் வேட்டை செய்யும், சிறுகுடிப் பரதவர் - சிறுகுடியில் வாழும் பரதவர், இருகழி செறுவில் - பெரிய உப்பங்கழியாய செய்யில், உழாஅது செய்த வெண்கல் உப்பின் - உழாமலே விளைவித்த வெள்ளிய கல்உப்பின், கொள்ளை சாற்றி - விலை கூறி, என்றூழ் விடர குன்றம் போகும் - ஞாயிற்றின் வெம்மையாலாய பிளப்புக்களையுடைய குன்றங்களைக் கடந்துபோகும், கதழ்கோல் உமணர் காதல் மடமகள் - கடாவினை விரையத் தூண்டும் கோலினையுடைய உப்பு வாணிகரது காதலையுடைய இளைய மகள்,

௬—௧௦. சில் கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி - சிலவாகிய திரண்ட இலங்கும் வளைகள் ஒலிக்க வீசி, நெல்லின் நேரே வெண் கல்உப்பு என - நெல்லுக்கு ஒத்த அளவினதே வெள்ளிய கல்லுப்பு என்று, சேரி விலை மாறு கூறலின் - சேரியில் பண்ட மாற்றாகிய விலை கூறலின், விளி அறிமனைய ஞமலி குரைப்ப - ஒலி வேற்றுமை அறியும் மனையிலுள்ள நாய் வேற்றுக் குரலென்று குரைத்துவர, வெரீஇய மதர் கயல் மலைப்பின் அன்ன கண் - அதற்கு அஞ்சிய மதர்த்த கயல் இரண்டு எதிர்த்துப் பொருவது போன்ற அவள் கண்கள்,

௧௦. எமக்கு - எமக்கு, இதை முயல் புனவன் புகை நிழல் கடுக்கும் - புதுக்கொல்லை ஆக்க முயலும் குறவன் மரங்களைச் சுட்டெரிக்கும் தீயின் புகை நிழலை ஒக்கும், மாமூது அள்ளல் - கரிய பழஞ் சேற்றிலே, அழுந்திய சாகாட்டு எவ்வம்தீர - அழுந்திய பண்டியின இடையூறு நீங்க, வாங்கும் - வருந்தி இழுக்கும், தந்தை கைபூண் பகட்டின் வருந்தி - அவள் தந்தை கையிற் பற்றிய பகடுபோல் வருந்தி, வெய்ய உயிர்க்கும் நோய் ஆகின்று - வெய்யவாக உயிர்த்தலைச் செய்யும் நோய் ஆகின்றது.

(முடிபு) உமணர் காதல் மடமகள் சேரிக்கண் விலைமாறு கூறலின், ஞமலி குரைப்ப, வெரீஇய கண், எமக்கு நோய் ஆகின்று.

(வி - ரை.) பகடு - கடா; எருதுமாம். கண்ணால் நோயா கின்றது என்றலுமாம்.

---

## 141. பாலை

[பிரிவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி யுரைத்தது.]

அம்ம வாழி தோழி கைம்மிகக்
கனவுங் கங்குல்தோ றினிய நனவும்
புனைவினை நல்லிற் புள்ளும் பாங்கின
நெஞ்சு நனிபுகன் றுறையு மெஞ்சாது
௫ உலகுதொழி லுலந்து நாஞ்சில் துஞ்சி
மழைகால் நீங்கிய மாக விசும்பிற்
குறுமுயல் மறுநிறங் கிளர மதிநிறைந்து
அறுமீன் சேரும் அகலிருள் நடுநாள்
மறுகுவிளக் குறுத்து மாலை தூக்கிப்
௧௦ பழவிறல் மூதூர்ப் பலருடன் [1]துவன்றிய
விழவுட னயர வருகதில் லம்ம
துவரப் புலர்ந்து தூமலர் கஞலித்
தகரம் நாறுந் தண்ணறுங் கதுப்பிற்
புதுமண மகடூஉ அயினிய கடிநகர்ப்
௧௫ பல்கோட் டடுப்பிற் பாலுலை யிரீஇக்
கூழைக் கூந்தற் குறுந்தொடி மகளிர்
பெருஞ்செய் நெல்லின் வாங்குகதிர் முறித்துப்
பாசவ லிடிக்கும் இருங்கா ழுலக்கைக்
கடிதிடி [2]வெரீஇய கமஞ்சூல் வெண்குருகு
௨௦ தீங்குலை வாழை யோங்குமட லிராது
நெடுங்கால் மராஅத்துக் குறும்பறை பயிற்றுஞ்
செல்குடி நிறுத்த பெரும்பெயர்க் கரிகால்
வெல்போர்ச் சோழன் இடையாற் றன்ன
நல்லிசை வெறுக்கை தருமார் பல்பொறிப்
௨௫ புலிக்கே ழுற்ற பூவிடைப் பெருஞ்சினை
நரந்த நறும்பூ நாண்மல ருதிரக்
கலைபாய்ந் துகளுங் கல்சேர் வேங்கைத்
தேங்கமழ் நெடுவரைப் பிறங்கிய
வேங்கட வைப்பிற் சுரனிறந் தோரே.

—நக்கீரர்.

(சொ - ள்.) க—ச. அம்ம வாழி தோழி - தோழியே! நான் கூறுவதனைக் கேட்பாயாக; கங்குல்தோறு கனவும் கைம்மிக இனிய - இரவுதோறும் கனவும் மிகவும் இனியவாகின்றன, நனவும் புனைவினை நல்இல் புள்ளும் பாங்கின - நனவிலும் புனையப் பெற்ற தொழில்களையுடைய நல்ல மனையிலே புள் நிமித்தங்கள் நல்லனவாகின்றன, நெஞ்சும் எஞ்சாது நனி புகன்று உறையும் -

---

(பாடம்) 1. துவன்றி. 2. வெரீஇ.

என் நெஞ்சம் சுருங்காது மிகவும் விருப்பம் மேவி அமைதியுற்றிருக்கும்;

கஉ—உச. துவரப் புலர்ந்து - முற்ற உலர்ந்து, தூமலர் கஞலி - தூய மலர்கள் நெருங்கப்பெற்று, தகரம் நாறும் - மயிர்ச்சந்து மணக்கும், தண்நறும் கதுப்பின் - தண்ணிய நறிய கூந்தலையுடைய, புதுமண மகடூஉ - புதிய மணமகள், அயினிய - உணவு மிக்க, கடிநகர் - மணமனையில், பல்கோட்டு அடுப்பில் - பல புடைகளையுடைய அடுப்பில், பால்உலை இரீஇ - பாலை உலையாக வார்த்து, கூழைக் கூந்தல் குறுந்தொடி மகளிர் - கூழையாகிய கூந்தலையும் சிறிய வளையலையும் உடைய இளமகளிருடன். பெரும் செய் நெல்லின் வாங்கு கதிர் முறித்து - பெரிய வயலில் விளைந்த நெல்லின் வளைந்த கதிரினை முறித்து, பசுஅவல் இடிக்கும் - பசிய அவலாகக் குற்றும், இரும்காழ் உலக்கைக் கடிது இடி வெரீஇய - கரிய வயிரமாய உலக்கையின் விரைந்த இடிக்கு அஞ்சிய, கமம் சூல் வெண் குருகு - நிறைந்த சூலினையுடைய வெள்ளிய பறவை, தீம்குலை வாழை ஓங்கு மடல் இராது - இனிய குலையினையுடைய வாழையின் உயர்ந்த மடலிலிராது, நெடுகால் மாஅத்துக் குறும் பறை பயிற்றும் - நெடிய காலையுடைய மாமரத்தின்கண் குறுகப் பறந்து செல்லும் பதியாய, செல்குடி நிறுத்த பெரும்பெயர் - கெட்ட குடிகளைத் தாங்கிய பெரும் புகழையும், வெல்போர் - வெல்லும் போரையுமுடைய, கரிகால் சோழன் - கரிகால் வளவனது, இடையாறு அன்ன - இடையாற்றினை ஒத்த, நல் இசை வெறுக்கை தருமார் - நல்ல புகழ் வாய்ந்த செல்வத்தை ஈட்டிவர,

உ—க. கல்சேர் வேங்கை - மலையிடத்துள்ள வேங்கை மரத்தின், பல்பொறிப் புலிக் கேழ் உற்ற பூ இடை - பல புள்ளிகளையுடைய புலியின் நிறத்தினைப் பொருந்திய பூக்களிடையே, பெருஞ்சினை நரந்தம் நறும் பூ நாண்மலர் உதிர - பெரிய கிளையினையுடைய நாரத்தை மரத்தின் நறிய அழகிய புதிய மலர்கள் உதிர, கலைபாய்ந்து உகளும் - முசுக்கலை பாய்ந்து தாவும், தேம்கமழ் நெடுவரைப் பிறங்கிய - தேன் நாறும் நீண்ட சிமையங்களால் விளங்கிய, வேங்கட வைப்பின் சுரன் இறந்தோர் - வேங்கட மலையைச் சார்ந்த ஊர்களையுடைய சுரநெறியைக் கடந்து சென்றோர்,

ரு—கக. நாஞ்சில் துஞ்சி - கலப்பைகள் மடிந்து, உலகு தொழில் உலந்து - உலகின்கண் உழுதொழில் முடிந்துவிட, மழை கால் நீங்கிய மாக விசும்பில் - மழை பெய்தல் ஒழிந்த வானின் கண்ணே, குறுமுயல் மறுநிறம் கிளர - குறிய முயலாகிய மறுவின் நிறம் விளங்க, மதி நிறைந்து - மதி நிறைவுற்று, அறுமீன் சேரும் இருள் அகல் நடுநாள் - கார்த்திகையைச் சேரும் இருள் அகன்ற நடு இரவில், மறுகு விளக்கு உறுத்து - தெருக்களில் விளக்குக்களை நிரல்படஏற்றி, மாலை தூக்கி - மாலைகளைத் தொங்கவிட்டு, பழவிறல் மூதூர் பலர் உடன் துவன்றிய - பழமையான வென்றியுடைய முதிய ஊரின்கண் பலரும்

ஒருங்கு சேர்ந்த, விழவு உடன் அயர - விழவினை நம்முடன் கொண்டாட, வருக - வருவாராக.

(முடிபு) தோழி! வாழி! கனவும் இனிய; நனவும் புள்ளும் பாங்கின; நெஞ்சும் எஞ்சாது புகன்று உறையும்; கரிகால் இடையாற்றன்ன வெறுக்கை தருமார் வேங்கட வைப்பின் சுரம் இறந்தோர், (ஆய நம் தலைவர்), பழவிறல் மூதூர் மதி நிறைந்து அறுமீன் சேரும் நடுநாள் விழவு நம்முடன் அயர வருகதில்.

(வி - ரை.) கனவும் நனவும் என்பவற்றின் உம்மை எச்சவும்மை. புள் - புள் நிமித்தம். உலந்து - உலக்க எனத் திரிக்க. மாக விசும்பு: இரு பெயரொட்டு. அறுமீன் - கார்த்திகை. கார்த்திகைத் திங்களின் கார்த்திகை நாளில், மறுகுகளில் நிரைநிரையாக விளக்கு ஏற்றி விழாக் கொண்டாடும் வழக்கம் பண்டுதொட்டுள்ளதென்பது, இதனானும், பிறண்டு வருவனவற்றானும் அறியப்படும்; [1] 'இலையில மலர்ந்த முகையி லிலவம், கலிகொ ளாய மலிபு தொகுபெடுத்த, அஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றி' [2] 'கார்த்திகைச் சாற்றிற் கழிவிளக்குப் போன்றனவே' என்பன காண்க. தில், விழைவு. அம்ம, அசை. உலையிற் பெய்தற் பொருட்டு அவல் இடிப்பர் என்க. இடி வெரீஇய - இடியாலாய ஓசையை வெருவிய என்க, இடையாறு - இடையாற்று மங்கலம் என்னும் ஊர். கனவு முதலியவற்றால், தலைவர் விரைந்து வருவர் எனத் துணிந்து, ஆற்றுவல் என்பதுபடத் தலைமகள் தோழிக்குக் கூறினாள்.

---

## 142. குறிஞ்சி

[இரவுக்குறி வந்து நீங்குந் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]

இலமல ரன்ன அஞ்செந் நாவிற்
புலமீக் கூறும் புரையோ ரேத்தப்
பலர்மேந் தோன்றிய கவிகை வள்ளல்
நிறையருந் தானை வெல்போர் மாந்தரம்
௫ பொறையன் கடுங்கோப் பாடிச் சென்ற
குறையோர் கொள்கலம் போல நன்றும்
உவவினி வாழிய நெஞ்சே காதலி
முறையின் வழாஅ தாற்றிப் பெற்ற
கறையடி யானை நன்னன் பாழி
௧௦ ஊட்டரு மரபின் அஞ்சுவரு பேஎய்க்
கூட்டெதிர் கொண்ட வாய்மொழி மிஞிலி
புள்ளிற் கேம மாகிய பெரும்பெயர்
வெள்ளத் தானை [3]யதிகற் கொன்றுவந்
தொள்வா ளமலை யாடிய ஞாட்பிற்
௧௫ பலரறி வுறுத லஞ்சிப் பைப்பைய
நீர்த்திரள் கடுக்கும் மாசில் வெள்ளிச்
சூர்ப்புறு கோல்வளை செறித்த முன்கைக்

1. அகம். ௧௧. 2. களவழி. ௧௭. (பாடம்) 3. அதியற்.

குறையற லன்ன இரும்பல் கூந்தல்
இடனில் சிறுபுறத் திழையொடு துயல்வரக்
௨0 கடன்மீன் துஞ்சும் நள்ளென் யாமத்து
உருவுகிளை ரேர்வினைப் பொலிந்த பாவை
இயல்கற் றன்ன ஒதுக்கினள் வந்து
[1]பெயலலைக் கலங்கிய மலைப்பூங் கோதை
இயலெறி பொன்னிற் கொங்குசோர் புறைப்பத்
௨௫ தொடிக்கண் வடுக்கொள முயங்கினள்
வடிப்புறு நரம்பிற் றீவிய மொழிந்தே.

—பரணர்.

(சொ - ள்.) எ. நெஞ்சே -, வாழிய -, காதலி - நம் காதலியானவள்,

அ—கரு. முறையின் வழாஅது ஆற்றிப் பெற்ற - நீதி முறையின் வழுவாமல் கடமையினைச் செய்து பெற்ற, கறை யடி யானை நன்னன் பாழி - உரல்போலும் அடியினையுடைய யானையையுடைய நன்னனது பாழியிலுள்ள, ஊட்டு அரும மரபின் அஞ்சு வரு பேய்க்கு - பலியிடற்கு அரிய தன்மையையுடைய அஞ்சத்தக்க பேய்க்கு, ஊட்டு எதிர்கொண்ட வாய்மொழி மிஞிலி - ஊட்டுதலை ஏற்றுக்கொண்ட வாய்மை பொருந்திய மிஞிலி என்பான், புள்ளிற்கு ஏமம் ஆகிய - புட்களுக்குப் பாதுகாவல் ஆகிய, பெரும்பெயர் - பெரும் புகழினையுடைய, வெள்ளத் தானை அதிகன் கொன்று உவந்து - வெள்ளம் போன்ற சேனையினையுடைய அதிகன் என்பானைக்கொன்று மகிழ்ந்து, ஒள்வாள் அமலை ஆடிய ஞாட்பின் - 'ஒள்வாள் அமலை' எனும் வென்றிக்கூத்தை ஆடிய போர்க்களப் பூசலைப்போல, பலர் அறிவுறுதல் அஞ்சி - பலரும் அறிந்து அலர் கூறலை அஞ்சி,

கரு—௨௨. நீர்த் திரள் கடுக்கும் - நீரின் திரட்சியை ஒக்கும், மாசு இல் வெள்ளி - குற்றமற்ற வெள்ளியினாலாய, சூர்ப்பு உறு கோல்வளை - வளைவு பொருந்திய திரண்ட வளைகள், செறித்த முன்கை - செறிக்கப்பெற்ற முன் கையளாய், குறை அறல் அன்ன இரும்பல் கூந்தல் - நீர் குறைந்த அறலை ஒத்த கரிய பலவாய கூந்தல், இடன் இல் சிறுபுறத்து இழையொடு துயல்வர - அகற்சியில்லாத பிடரியின்பா லுள்ள அணியோடு கூடி அசைய, கடல்மீன் துஞ்சும் நள் என் யாமத்து - கடல் மீன்கள் துயிலும் நள்ளென்று ஒலிக்கும் இடையாமத்தில், உருவு கிளர் ஏர்வினை பொலிந்த பாவை - அழகு கிளர்ந்த பொலிவினையுடைய செய்தொழிலாற் சிறந்தபாவை, இயல் கற்றன்ன ஒதுக்கினள் - நடை கற்றாற்போன்ற நடையினளாய், பைப்பய வந்து - மெல்ல மெல்ல வந்து,

௨௩—௬. பெயல் அலை கலங்கிய - மழையின் அலைத்தலாற் கலங்கிய, மலை பூ கோதை - மலைப் பூக்களாலாய மாலையினின்றும், எறி இயல் பொன்னில் - உலைக்களத்து அடிக்குங்கால் தெறித்துவிழும்

(பாடம்) 1. பெயலை.

பொற்றாள்போல், கொங்கு சோர்பு உறைப்ப - தேன் துளித்து விழ, வடிப்பு உறு நரம்பில் தீவிய மொழிந்து - வடித்தல் அமைந்த யாழ் நரம்பின் ஒலிபோல இனிய மொழிகளைக்கூறி, தொடிக்கண் வடுக்கொள முயங்கினள் - வட்டமாய முலைக்கண்ணின் வடுவுண்டாகத் தழுவினாள்;

க—எ. இலமலர் அன்ன அம் செம் நாவின் - இலவமலர் போன்ற அழகிய சிவந்த நாவினால், புலம் மீக் கூறும் புரையோர் ஏத்த - புலமையால் உயர்த்திக் கூறப்பெறும் மேலோர் புகழ, பலர் மேந்தோன்றிய கவிகை வள்ளல் - பலரினும் மேம்பட்ட கொடுத்தலாற் கவிந்த கையினையுடைய வள்ளலாய, நிறை அருந் தானை - நிறுத்துதற்கரிய சேனையினையுடைய, வெல்போர் - போர் வெல்லும், மாந்தரம் பொறையன் கடுங்கோ - மாந்தரம் பொறையன் கடுங்கோ என்னும் சேர மன்னனை, பாடிச் சென்ற குறையோர் கொள்கலம் போல - பாடிச் சென்ற வறியோரது பிச்சை ஏற்கும் கலம்போல, நன்றும் உவஇனி - இனிப் பெரிதும் நிறைவுற்று மகிழ்வாயாக.

(முடிபு) நெஞ்சே! வாழிய! காதலி, மிஞிலி அதிகற்கொன்று ஒள்வாள் அமலை ஆடிய ஞாட்பின் பலர் அறிவுறுதல் அஞ்சி, நள்ளென் யாமத்து வந்து, தீவிய மொழிந்து, தொடிக்கண் வடுக்கொள முயங்கினள்; மாந்தரம் பொறையன் கடுங்கோப் பாடிச்சென்ற குறையோர் கொள்கலம்போல இனி உவப்பாயாக. நன்னன் பாழிப் பேய்க்கு ஊட்டெதிர் கொண்ட வாய்மொழி மிஞிலி என்க. காதலி கூந்தல் துயல்வர வந்து தீவிய மொழிந்து தொடிக்கண் வடுக்கொள முயங்கினள் என்க.

(வி - ரை.) இலவ மலர்: இலமலர், விகாரம். கறையடி - குருதிக் கறை பொருந்திய அடி எனலுமாம். ஊட்டு எதிர்கொண்ட - உண்பித்தலை ஏற்றுக்கொண்ட; களவேள்வியாற் பேய்க்கு ஊட்டிய என்றபடி. புள்ளிற்கு ஏமமாயினான் என்பது, [1]'துன்னருங் கானம்' [2]'யாம இரவின்' என்னுஞ் செய்யுட்களானும் அறியப்படுகின்றது. அதிகன் என்பது, ஆய் எயினனுர்குரிய வேறு பெயர் போலும், எயினன் என்றே பிறண்டு வந்திருத்தலின்; அன்றி எயினற்கொன்றுவந்து என்று பாடங் கொள்ளுதலுமாம். ஒள்வாளமலையென்பது தும்பைத் திணையின் ஓர் துறை; வாள்வீரர் தம் தலைவனுடன் ஆடுதல் அதன் இலக்கணம். சூர்ப்பு - வளைவு. தொடி - வட்டம். தொடிக்கண் - வளையாலாய என்றுரைத்தலுமாம்; ஈவைடுக் கன் வேற்றுமை மயக்கம்.

(மே - ள்.) [3]'செல்வம் புலனே' என்னுஞ் சூத்திரத்து, 'தொடிக்கண் வடுக்கொள முயங்கினள், வடிப்புறு நரம்பிற் றீவிய மொழிந்தே' என்பது, புணர்ச்சிபற்றிய உவகை மெய்ப்பாடு என்றும், [4]'வினைபயன் மெய்யுரு' என்னுஞ் சூத்திரத்து, 'உருவுகிள ரேர்வினைப் பொலிந்த பாவை, இயல்கற் றன்ன வொதுக்கினள்' என்பது வடிவு பற்றிய உவமம் என்றும் கூறினர் பேரா.

---

1. அகம். ௬௮௧. 2. அகம். உ0அ. 3. தொல். மெய்ப். ௧௧. 4. தொல். உவம. ௧.

## 143. பாலை

[பொருள்வயிற் பிரியக் கருதிய தலைமகனைத் தோழி தலைமகளது ஆற்றாமை கண்டு செலவழுங்குவித்தது.]

செய்வினைப் பிரித லெண்ணிக் கைம்மிகக்
காடு [1]கவி னொழியக் கடுங்கதிர் தெறுதலின்
நீடுசினை வறிய வாக ஒல்லென
[2]வாடுபல் லகலிலை கோடைக் கொய்யும்
ரு தேக்கமல் அடுக்கத் தாங்கண் மேக்கெழுபு
முளியரிற் பிறந்த வளிவளர் கூரெரிச்
சுடர்நிமிர் நெடுங்கொடி விடர்முகை முழங்கும்
[3]வெம்மலை யருஞ்சுரம் நீந்தி யைய
சேறு மென்ற சிறுசொற் கிவட்கே
கo வசையில் வெம்போர் வானவன் மறவன்
நசையின் வாழ்நர்க்கு நன்கலஞ் சுரக்கும்
பொய்யா வாய்வாட் புனைகழற் பிட்டன்
மைதவ ழுயர்சிமைக் குதிரைக் கவாஅன்
அகலறை நெடுஞ்சுனைத் துவலையின் மலர்ந்த
கரு தண்கமழ் நீலம் போலக்
கண்பனி கலுழ்ந்தன நோகோ யானே.

—ஆலம்பேரி சாத்தனார்.

(சொ - ள்.) க—கூ. ஐய-ஐயனே! செய்வினைப் பிரிதல் எண்ணி-பொருள் ஈட்டும் வினைக்கண் பிரிதலை எண்ணி, காடு கவின் ஒழிய-காடு அழகுகெட, கடும் கதிர் கைம்மிகத் தெறுதலின் – ஞாயிற்றின் கடிய கதிர் அளவு கடந்து காய்தலின், நீடுசினை வறிய ஆக - நீண்ட கிளைகள் வறியன ஆக, ஒல்லென வாடு பல் அகல் இலை - ஒல்லெனும் ஒலியுடன் வாடிய பல அகன்ற இலைகள், கோடைக்கு ஒய்யும் - மேல் காற்றால் உதிர்க்கப்பெறும், தேக்கு அமல் அடுக்கத்து ஆங்கண் - தேக்கு மரங்கள் நிறைந்த பக்கமலைகளாய அவ்விடத்து, முளி அரில் பிறந்த வளிவளர் கூர் எரி - காய்ந்த தூறுகளிற் பிறந்ததும் காற்றினால் வளர்ந்தோங்கியதுமான மிக்க தீயின், சுடர் நிமிர் நெடும் கொடி - ஒளிமிக்க நீண்ட ஒழுங்கு, மேக்கு எழுபு விடர்முகை முழங்கும் - மேலே எழுந்து மலைப் பிளப்பாகிய குகைகளில் முழங்கும், வெம்மலை அரும்சுரம் நீந்தி - வெப்பம் மிக்க மலையைச் சார்ந்த அரிய சுரத்தினைக் கடந்து, சேறும் என்ற சிறு சொற்கு - நாம் போவேம் என்று கூறிய நுமது சிலவாய சொல்லைக் கேட்டதற்கே,

கூ—கக. இவட்கு - இத்தலைவிக்கு, வசைஇல் வெம்போர் வானவன் மறவன் - பழியில்லாத கொடிய போர் வல்ல சேரன் படைத்தலைவனும், நசையின் வாழ்நர்க்கு நன்கலம் சுரக்கும் - பரிசில் விருப்புடன் வாழ்வார்க்கு நல்ல அணிகலன்களை அளிக்கும், பொய்யா

(பாடம்) 1. கவின் அழிய. 2. ஆடுபல் லகலிலை. 3. வெம்முலை.

வாய்வாள் புனைகழல் பிட்டன் - தப்பாது வென்றி வாய்க்கும் வாளினையும் புனைந்த கழலினையும் உடைய பிட்டன் என்பானது, மை தவழ் உயர் சிமை குதிரைக் கவான் - மேகம் தவழும் உயர்ந்த உச்சியினையுடைய குதிரை மலையின் பக்க வரையில், அகல் அறை நெடும் சுனைத் துவலையின் மலர்ந்த - அகன்ற பாறையிலுள்ள நெடிய சுனையிடத்து மழைத் துவலையால் மலர்ந்த, தண்கமழ் நீலம் போல - குளிர்ந்த மணம் கமழ்கின்ற நீலமலர் நீர் ஒழுகுவது போல, கண் பனி கலுழ்ந்தன - கண்கள் நீரைச் சொரிந்தன, யான் நோகு - யான் அது கண்டு நோவேன் ஆயினன்.

(முடிபு) ஐய! நீ செய்வினைப் பிரிதல் எண்ணி, வெம்மலை அருஞ்சுரம் நீந்திச் சேறும் என்ற சிறு சொற்கு, இவட்கு, பிட்டன் குதிரைக் கவான் சுனை நீலம் போலக் கண் பனி கலுழ்ந்தன; யான் நோகோ.

அடுக்கத் தாங்கண் கூரெரி நெடுங்கொடி விடர்முகை முழங்கும் வெம்மலை அருஞ்சுரம் என்க.

(வி - ரை.) ஒல்லென ஆடு எனப் பிரித்து, ஒல்லென்னும் ஒலியுண்டாக அசையும் என்றலுமாம். கோடைக்கு - கோடையால். ஒய்தல் - செலுத்தல். மேக்கு - மேலிடம். கொடி - ஒழுங்கு. விடராகிய முகை என்க. சிறு சொல் - நன்மை யல்லாத சொல்லுமாம். பொய்யாத பிட்டன் எனவும், பொய்யாது சுரக்கும் பிட்டன் எனவும் கூட்டி யுரைத்தலுமாம். துவலையின் மலர்ந்த - துவலையொடு மலர்ந்த என்றுமாம்.

---

## 144. முல்லை

[வினைமுற்றிய தலைமகன் தன்னெஞ்சிற் குரைப்பானைப் பாகற்குச் சொல்லியது ]

[1]வருதும் என்ற நாளும் பொய்த்தன
[2]அரியே ருண்கண் நீரும் நில்லா
தண்கார்க் கின்ற பைங்கொடி முல்லை
வைவாய் வான்முகை அவிழ்ந்த கோதை
௫ பெய்வனப் பிழந்த கதுப்பும் உள்ளார்
அருள்கண் மாறலோ மாறுக அந்தில்
அறனஞ் சலரே ஆயிழை நமரெனச்
சிறிய சொல்லிப் பெரிய புலம்பினும்
பனிபடு நறுந்தார் குழைய நம்மொடு
௧௦ துனிதீர் முயக்கம் பெற்றோள் போல
உவக்குவள் வாழிய நெஞ்சே விசும்பின்
ஏறெழுந்து முழங்கினும் மாறெழுந்து சிலைக்கும்
கடாஅ யானை கொட்கும் பாசறைப்

பாடம்) 1. வருவேமென்ற. 2. வரியே ருண்கண். வரியே யுண்கண்,

போர்வேட் டெழுந்த மள்ளர் [1]கையதை
௧௫ கூர்வாட் குவிமுகஞ் சிதைய நூறி
மானடி மருங்கிற் பெயர்த்த குருதி
வான மீனின் வயின்வயின் இமைப்ப
[2]அமரோர்த் தட்ட செல்வம்
தமர்விரைந் துரைப்பக் கேட்கும் ஞான்றே.

—மதுரை அளக்கர் ஞாழலார் மகனார் மள்ளனார்.

(சொ - ள்.) ௧௧. நெஞ்சே -, வாழிய -,

௧—அ. (நம் தலைவி தன் தோழியை நோக்கி) ஆயிழை - தோழியே! நமர் - நமது தலைவர், வருதும் என்ற நாளும் பொய்த்தன - தாம் வருவேம் என்று கூறிய நாட்களும் பொய் யாயின; அரி ஏர் உண் கண் நீரும் நில்லா - செவ்வரி பரந்த அழகிய மையுண்ட கண்களினின்று நீரும் நில்லாதொழுகுகின்றன; தண் கார்க்கு ஈன்ற பைங்கொடி முல்லை வைவாய் வான்முகை அவிழ்ந்த - குளிர்ந்த மழையால் அரும்பிய பசிய முல்லைக் கொடி யினது கூரிய முனைவாய்ந்த வெள்ளிய அரும்புகள் மலர்ந்தன; கோதை பெய்வனப்பு இழந்த கதுப்பும் உள்ளார் - மாலையைத் தரிக் கும் அழகினை இழந்த கூந்தலையும் நினையார் ஆயினர்; அறன் அஞ் சலர் - அறத்திற்கும் அஞ்சுகின்றிலர்; அந்தில் அருள்கண் மாறலோ மாறுக - இங்ஙனமெல்லாம் ஆகலின் அவரிடத்தினின்றும் அருள் மாறினும் மாறுக என, சிறிய சொல்லிப் பெரிய புலம்பினும் - சிறி யவாகச் சொல்லிப் பெரியவாக வருத்தமுறுவாளாயினும்,

௧௧—௧௫. விசும்பின் ஏறு எழுந்து முழங்கினும் - வானில் இடி யேறு எழுந்து முழங்கினும், மாறு எழுந்து சிலைக்கும் - அதற்கு எதி ராக எழுந்து தானும் முழங்கும், கடாஅ யானை கொட்கும் பாசறை - மதம் பொருந்திய களிறு சுழலும் பாசறைக்கண், போர்வேட்டு எழுந்த மள்ளர் கையதை - போர் விரும்பிக் கிளர்ந்தெழும் வீரர்தம் கையிடத்ததாகிய, கூர்வாள் குவிமுகம் சிதைய நூறி - கூரிய வாளின் குவிந்தமுனை சிதைந்திட மாற்றார் படையை வீசிக்கொன்று, மான் அடி மருங்கில் பெயர்த்த குருதி - மான் அடிபதிந்த பள்ளங்களிலே பாய்ச்சிய உதிரம், வான மீனின் வயின்வயின் இமைப்ப - வானின் கண் மீன்போல இடந்தோறும் இடந்தோறும் மின்ன, ஓர்த்து அமர் அட்ட செல்வம் - அறிய வேண்டுவனவற்றை யெல்லாம் ஆராய்ந்து அறிந்து போரினைவென்ற செல்வத்தை, தமர் விரைந்து உரைப்பக் கேட்கும் ஞான்று - நம் சுற்றத்தார் விரைந்து சென்று உரைக்கக் கேட்கும் பொழுது,

௯—௧௧. பனிபடு நறுந்தார் குழைய - குளிர்ச்சி பொருந்திய நறிய மாலை குழைந்திட, நம்மொடு துனிதீர் முயக்கம் பெற்றோள்போல - நம்முடன் வெறுப்பு ஒழிந்த கூட்டம் பெற்றவளைப்போல, உவக்கு வள் - மகிழ்வள் அன்றே.

(பாடம்) 1. கைய. 2. அமரொராத்தட்ட.

(முடிபு) நெஞ்சே! வாழிய! (நம் தலைவி தன் தோழியை நோக்கி), ஆயிழை! நமர் அருள்கண் மாறலோ மாறுக எனச் சிறிய சொல்லிப் பெரிய புலம்பினும், அமரோர்த்தட்ட செல்வம் தமர் விரைந்துரைப்பக் கேட்கு ஞான்று நம்மொடு துனிதீர் முயக்கம் பெற்றோள்போல உவக்குவள்.

நாளும் பொய்த்தன; நீரும் நில்லா; முகை அவிழ்ந்த; கருப்பும் உள்ளார்; அறன் அஞ்சலர் மாறலோ மாறுக; எனச் சிறிய சொல்லி என்க.

(வி-ரை.) வரி ஏர் எனப் பிரித்துரைத்தலுமாம். கண்மாறல், ஒரு சொல். அந்தில் - அசையுமாம். புலப்பினும என்ற பாடத்திற்கு வெறுப்பினும் என்றுரைக்க. கையதை, ஐ சாரியை. மான் - விலங்கு என்றுமாம். செல்வம் - வெற்றியாகிய செல்வம். அட்டதனாற் பெற்ற பொருளாகிய செல்வம் என்றுமாம். கேட்கு ஞான்று உவக்குவள் என்றதனால் நீ தேரினை விரையக் கடவுதி எனத் தலைவன் பாகற்குக் குறிப்பிற் கூறினனாயிற்று.

(மே-ள்.) [1]'ஏவன் மரபின்' என்னுஞ் சூத்திரத்து, இப் பாட்டினுள், வேந்தன் தலைவ னாயினவாறும், தான் அமரகத்தட்ட செல்வத்தையே மிக்க செல்வமாகக் கருதுதற்குரியாள் அரச வருணத்திற் றலைவியே என்பதூஉம் உணர்க என்றனர் நச்.

[2]'இன்பத்தை வெறுத்தல்' என்னுஞ் சூத்திரத்து, பொய்யாக் கோடல் என்ற துறைக்கு மெய்யைப் பொய்யாக் கோடல் என்றுரைத்து, 'வருது மென்ற நாளும் பொய்த்தன, வரியே ருண்கண் ணீரு நில்லா' எனவரும் என்றார் பேரா.

---

## 145. பாலை

[மகட் போக்கிய செவிலித்தாய் சொல்லியது.]

வேர்முழு துலறி நின்ற புழற்காற்
றேர்மணி யிசையிற் சிள்வீ டார்க்கும்
வற்றன் மரத்த பொற்றலை யோரி
வெயிற்கவின் இழந்த வைப்பிற் பையுள்கொள
௫ நுண்ணிதின் நிவக்கும் வெண்டேர் மையன்காட்டு
ஆளி [3]லத்தத் தளிய ளவனொடு
வாள்வரி பொருத புண்கூர் யானை
புகர்சிதை முகத்த குருதி வார
உயர்சிமை நெடுங்கோட் டுருமென முழங்கும்
௧0 அருஞ்சுர மிறந்தன ளென்ப பெருஞ்சீர்
அன்னி குறுக்கைப் பறந்தலைத் திதியன்
தொன்னிலை முழுமுதல் துமியப் பண்ணிய
நன்னர் மெல்லிணர்ப் புன்னை போலக்
கடுநவைப் படீஇயர் மாதோ களிமயில்

---

1. தொல். அகத். ௨௪. 2. தொல். மெய்ப். ௨௨. (பாடம்) 3. அத்தந் தமியள்.

கரு குஞ்சரக் குரல குருகோ டாலும்
துஞ்சா முழவிற் [1]றுய்த்தியல் வாழ்க்கைக்
கூழுடைத் தந்தை யிடனுடை வரைப்பின்
ஊழடி யொதுங்கினும் உயங்கு மைம்பாற்
சிறுபல் கூந்தற் போதுபிடித் தருளாது
உ௦ எறிகோல் சிதைய நூறவுஞ் சிறுபுறம்
எனக்குரித் தென்னுன் நின்றவென்
அமர்க்க ணஞ்ஞையை யலைத்த கையே.

—கயமனார்.

(சொ - ள்.) க—கஉ. வேர் முழுது உலறி நின்ற புழல்கால் - வேர் முதல் முழு மரமும் வற்றி நின்ற துளைபட்ட அடியினை யுடையதும், தேர்மணி இசையில் சிள்வீடு ஆர்க்கும் - தேரின் மணி ஒலி போலச் சிள்வீடு எனும் வண்டுகள் ஒலிப்பதும் ஆகிய, வற்றல் மரதத - வற்றல் என்னும் மரத்தினிடத்தவாகிய, பொன் தலைஓதி - பொன்னிறம் வாய்ந்த தலையையுடைய ஓந்தி, வெயில் கவின் இழந்த வைப்பில் - வெய்யிலால் அழகு ஒழிந்த ஊர்களில், பையுள் கொள நுண்ணிதின் நிவக்கும் - வருத்தங் கொள்ளுதலின் மெல்லெனத் தாவும், வெண் ஞெமை வியன் காட்டு - வெள்ளிய ஞெமை மரங்களை யுடைய அகன்ற காட்டகத்தே, ஆள் இல் அத்தத்து - ஆட்கள் வழங்காத அரிய நெறியாய, வாள்வரி பொருத புண்கூர் யானை - வாள் போலும் வரியினையுடைய புலியுடன் போர் செய்தமையால் புண் மிக்க யானைகள், புகர் சிதை முகத்த - புள்ளிகள் சிதைந்த முகத்தினவாய், குருதி வார - உதிரம் ஒழுக, உயர்சிமை நெடும் கோட்டு உரும் என முழங்கும் - உயர்ந்த உச்சியினையுடைய நெடிய சிகரத்தில் இடிக்கும் இடிபோல முழங்குகின்ற, அரும்சுரம் - அரிய பாலை நிலத்திலே, அளியள் - இரங்கத்தக்களாய என்மகள், அவனொடு - அத்தலைவனுடன், இறந்தனள் என்ப - சென்றுள் என்று கண்டார் கூறுவர் ;

கச—உஉ. களிமயில் - களிக்கும் மயில்கள், குஞ்சரக் குரல குருகோடு ஆலும் - யானைபோலும் குரலுடைமையான் யானையங் குருகு எனப் பெயர்பெறும் பறவைகளுடன் சேர்ந்து ஒலிக்கும், துஞ்சா முழவின் - இடையறாது ஒலிக்கும முழவினையும், துய்த்து இயல் வாழ்க்கை - செல்வம் நுகர்ந்து வாழும் வாழ்க்கையினையும் உடைய, கூழ் உடை தந்தை இடன் உடை வரைப்பில் - செல்வமிக்க தந்தையின் அகன்ற இடமுடைய மாளிகையில், ஊழ் அடி ஒதுங்கினும் உயங்கும் - முறையாக அடியிட்டு நடக்கினும் வருந்தும் (என் அமர்க்கண் அஞ்ஞையை), ஐம்பால் சிறுபல் கூந்தல் போது பிடித்து - ஐம்பகுதியான சிறிய பலவாய கூந்தலை வேய்ந்த மாலையுடன் கையாற்பற்றி, அருளாது - இரங்காது, எறிகோல் சிதைய நூறவும் - அடிக்குங்கோல் சிதையும் பரிசு (முதுகில்) அடிக்கவும், சிறுபுறம்

(பாடம்) 1. துயக்கில் வாழ்க்கை.

எனக்கு உரித்து என்னுள் நின்ற - என் முதுகு எனக்கு உரியது என்று கருதாது நின்ற, அமர்க் கண் என் அஞ்ஞையை - அமர்த்த கண்களையுடைய எனது மகளை, அலைத்த கை - துன்புறுத்திய கைகள்,

௧0—௪. பெருஞ்சீர் அன்னி - பெரிய புகழையுடைய அன்னி யானவன், குறுகைப் பறந்தலை — குறுக்கைப் பறந்தலை என்னும் போர்க்களத்திலே, திதியன் - திதியன் என்பானது, தொல்நிலை முழு முதல் - பழைமை பொருந்திய பரிய அடியுடன், துமியப் பண்ணிய - துணித்திட்ட, நன்னர் மெல்இணர் - நன்றாகிய மெல்லிய பூங்கொத்துக்களையுடைய, புன்னை போல - புன்னை மரம்போல, கடு நவைப் படீஇயர் - பெரிய துன்பத்தை அடைவனவாக.

(முடிபு) அளியள் வியன்காட்டு ஆளில் அத்தத்து அருஞ்சுரம் அவனொடு இறந்தனள் என்ப; அமர்க்கண் அஞ்ஞையை அலைத்த கைகள் அன்னி துமியப் பண்ணிய திதியன் புன்னைபோலக் கடுநவைப் படீஇயர்.

(வி - ரை.) வற்றல் - ஒருவகை மரம். ஓஇ - இடைக்குறை. வாள் வரி - ஆகுபெயர். திதியனது புன்னை அன்னி என்பவனாற் குறைக்கப்பட்ட தென்பது, 'அன்னி குறுக்கைப் பறந்தலைத் திதியன் . . . புன்னை குறைத்த ஞான்றை' (௪௫) என முன் வந்தமையாலறிக. இதற்கு, திதியன் புன்னையை முதல் துமியப்பண்ணிய அன்னிபோலக் கடுநவைப் படீஇயர் எனக் கொண்டுகூட்டிப் பொருளுரைத்தலும் ஆம். என்னை? 'பொன்னிணர் நறுமலர்ப் புன்னை வெஃகித், திதியனொடு பொருத அன்னிபோல, விளிகுவை கொல்லோ' (௧௨௬) என்றதனால், அன்னி துஞ்சினான் என்பது பெறப்படுதலின் என்க. குஞ்சரக் குரல குருகு - யானை போலும் குரலுடையையான் யானையங்குருகு எனப்படும் பறவை; இது, [1]'யானையங் குருகின் பெருந்தோடு' எனவும், [2]'யானையங் குருகின் சேவலொடு' எனவும் பிறண்டும் வந்துள்ளமை காண்க. இதற்கு வண்டாங்குருகு எனவும் பெயருண்டென்பது நச்சினார்க்கினியர் உரையால் அறியப்படுவது. அஞ்ஞை - அன்னை.

(மே - ள்.) [3]'கொண்டு தலைக் கழியினும்' என்னுஞ் சூத்திரத்து, 'கூழுடைத் தந்தை யிடனுடை வரைப்பின், ஊழடி யொதுங்கினு முயங்கும்' என நெல்லுடைமை கூறிய அதனானே, வேளாண் வருணமென்பது பெற்றும்; என்றனர் நச்.

---

## 146. மருதம்

[வாயில் வேண்டிச் சென்ற பாணற்குத் தலைமகள் வாயில் மறுத்தது.]

வலிமிகு முன்பின் அண்ணல் ஏஎறு
பனிமலர்ப் பொய்கைப் பகல்செல மறுகி
மடக்க ணெருமை மாணாகு தழீஇப்

1. குறு. ௩௪. 2. மதுரைக்காஞ்சி. ௬௭௪. 3. தொல். அகத். ௪௫.

[1]படப்பை நண்ணிப் பழனத் தல்கும்
௫ கலிமகி ழூரன் ஒலிமணி நெடுந்தேர்
ஒள்ளிழை மகளிர் சேரிப் பன்னாள்
இயங்க லானா தாயின் வயங்கிழை
யார்கொல் அளியள் தானே யெம்போல்
மாயப் பரத்தன் வாய்மொழி நம்பி
௧௦ வளிபொரத் துயல்வருந் தளிபொழி மலரிற்
கண்பனி ஆகத் துறைப்பக் கண்பசந்
தாயமும் அயலும் மருளத்
தாயோம் பாய்நலம் வேண்டா தோளே.

—உவர்க்கண்ணூர்ப் புல்லங்கீரனார்.

(சொ - ள்.) ௧—௪. வலிமிகு முன்பின் அண்ணல் ஏறு - வலிமிக்க திண்மையையும் தலைமையையுமுடைய எருமைக்கடா, பனி மலர்ப் பொய்கை பகல் செல மறுகி - குளிர்ந்த மலர்களையுடைய பொய்கையில் பகலெல்லாம் கழியச் சுழன்று, மடக்கண் எருமை மாண் நாகு தழீஇ - மடப்பம் வாய்ந்த கண்ணினையுடைய மாண்புற்ற பெண் எருமையினை அணைந்து, படப்பை நண்ணி - தோட்டங்களில் பொருந்தி மேய்ந்து, பழனத்து அல்கும் - வயல்களிற்றங்கும், கலி மகிழ் ஊரன் - ஆரவாரம் பொருந்திய மகிழ்ச்சியையுடைய ஊரனது, ஒலி மணி நெடுந்தேர் - ஒலிக்கும் மணி பொருந்திய நெடிய தேரானது, ஒள் இழை மகளிர் சேரி - ஒளி பொருந்திய அணிகளையுடைய பரத்தையர் சேரியின்கண், பல்நாள் இயங்கல் ஆனாது ஆயின் - பல நாளும் இயங்குதல் அமையாதாயின்,

எ—௧௩. மாயப் பரத்தன் வாய்மொழி எம்போல் நம்பி - மாயம் செய்யும் பரத்தமைத் தொழிலுடைய அவனது வாய்மைபோலும் மொழியினை எம்மைப்போல மெய்யென விரும்பி, வளிபொரத் துயல்வரும் தளிபொழி மலரில் - காற்றுமோதுதலின் அசையும் மழை பெய்யப்பட்ட மலரைப்போல, கண் பனி ஆகத்து உறைப்ப - கண்கள் நீரினை மார்பிலே சொரிய, கண் பசந்து - கண்கள் கலங்கி, ஆயமும் அயலும் மருள - ஆயத்தாரும் அயலாரும் மயங்க, தாய் ஓம்பு ஆய்நலம் வேண்டாதோள் - தன் தாயர் பாதுகாத்து வளர்த்த அழகிய நலத்தினை வேண்டாது இழப்பாள் ஆகிய, வயங்கு இழை - விளங்கும் அணியினை யுடையாள், யார்கொல் - யாவளோ, அளியள் - அவள் இரங்கத்தக்காள்.

(முடிபு) ஊரன் நெடுந்தேர் சேரிப் பன்னாள் இயங்கல் ஆனாதாயின், பரத்தன் வாய்மொழி நம்பி கண்பனி யுறைப்பப் பசந்து, தாய் ஓம்பு நலம் வேண்டாதோள் யார்கொல்! அளியள்.

(வி - ரை.) முன்பு - வலிமை. வலிமிகு முன்பு - மிக்க பெருவலியுடைய என்க. ஏறு என்பது எருமைக்கும் உரித்தென்பது

(பாடம்) 1. படப்பை நண்ணிய.

[1] 'எருமையும் மரையும் பெற்றமு மன்ன' என்பதனுற் பெறப்படும். [2] 'எருமையும் மரையும் பெற்றமும் நாகே' என்றதனால் எருமை நாகு எனப்பட்டது. பரத்தன் - புறத்தொழுக்க முடையவன். வாய் மொழி - வாய் என்பதனை வேண்டா கூறலாக்கி உள்ளத்தொடு கூடாத மொழி என்றலுமாம். துயல்வரும் மலர் எனக் கூட்டுக. மருள வேண்டாதோள் என்க. மருள - வியக்க எனக்கொண்டு, மருள ஓம்பிய நலம் என்றுரைத்தலுமாம். நலம் வேண்டாதோளாகிய வயங்கிழை அளியள் என்றமையால், நீ அவள் பால் வாயில் வேண்டிச்சென்று அவளது ஊடலைத் தீர்ப்பாயாக எனத் தலைவி பாணனுக்கு வாயின் மறுத்தாளென்க.

(உ - றை.) எருமை யேறு பொய்கையிற் பகல்செல மறுகி, எருமை நாகு தழீஇப் படப்பை நண்ணிப் பழனத்தல்கும் என்றது, தலைவன் பரத்தையர் சேரியிற்றிரிந்து அவர்களை நுகர்ந்து, பின்பு இளையளாய பரத்தையொடும் சோலையில் விளையாடி, சேற்றினையுடைய பழனம் போலும் எம் இல்லில் தங்குதல் மாத்திரைக்கு இப்பொழுது வந்துளான் என்றவாறு.

## 147. பாலை

[செலவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

ஓங்குமலைச் சிலம்பிற் பிடவுடன் மலர்ந்த
வேங்கை வெறித்தழை வேறுவகுத் தன்ன
ஊன்பொதி அவிழாக் கோட்டுகிர்க் குருளை
மூன்றுடன் ஈன்ற முடங்கர் நிழத்த
ரு துறுகல் விடரளைப் பிணவுப்பசி கூர்ந்தெனப்
பொறிகிள ருழுவைப் போழ்வா யேற்றை
அறுகோட் டுழைமான் ஆண்குர லோர்க்கும்
நெறிபடு கவலை நிரம்பா நீளிடை
வெள்ளி வீதியைப் போல நன்றுஞ்
கய செலவயர்ந் திசினால் யானே பலபுலந்
துண்ணு வுயக்கமொ டுயிர்செலச் சாஅய்த்
தோளுந் தொல்கவின் றொலைய நாளும்
பிரிந்தோர் பெயர்வுக் கிரங்கி
மருந்துபிறி தின்மையின் இருந்துவினை யிலனே.

—ஔவையார்.

(சொ - ள்.) கய—ச. (தோழியே, நம் தலைவன் பிரிதலால்,) பல புலந்து உண்ணு உயக்கமொடு உயிர்செலச் சாஅய் - பலவற்றையும் வெறுத்து உண்ணாத வருத்தத்தால் உயிர்மெலிந்து ஒழுகக்கெடவும், தோளும் தொல்கவின் தொலைய - தோளும் பழைய அழகு கெடவும், நாளும் - நாடோறும், பிரிந்தோர் பெயர்வுக்கு இரங்கியிருந்து - நம்

1. தொல், மரபு. நக. 2. தொல். மரபு. சுஉ.

மைப் பிரிந்த தலைவரது நீக்கத்திற்கிரங்கி யிருந்தும், மருந்து பிறிது இன்மையின் - அதனைப் போக்கும் மருந்து பிறிதொன்று இல்லாமையால், வினையிலன் - வேறு செயலில்லேன் ஆயினேன் ஆகலின்,

௧—௧௦. ஓங்குமலைச் சிலம்பில் - உயர்ந்த மலைச்சாரலில், பிடவுடன் மலர்ந்த வேங்கை வெறிதழை - பிடவுடன் சேர மலர்ந்த வேங்கையின் வெறிகமழும் பூவுடன் கூடிய தழையை, வேறு வகுத்தன்ன - வேறு வேறாக வகுத்து வைத்தாற்போன்ற, ஊன்பொதி அவிழாக் கோட்டு உகிர் குருளை மூன்று உடன் ஈன்ற - தசையின் மறைப்பு நீங்காத வளைந்த நகத்தினையுடைய குட்டிகள் மூன்றை ஒருசேரப் பெற்றதும், முடங்கர் - முடக்கமான இடத்திலே, துறுகல் விடர் அளை - பாறையின் பிளப்பாகிய குகையிலுள்ளதுமாகிய, நிழத்த பிணவு பசி கூர்ந்தென - ஓய்ந்த பெண் புலி பசி மிக்கதாக, பொறி கிளர் போழ் வாய் உழுவை ஏற்றை - புள்ளிகள் விளங்கும் பிளந்த வாயையுடைய ஆண்புலி, அறுகோட்டு உழைமான் ஆண் குரல் ஓர்க்கும் - அறல்பட்ட கொம்பினையுடைய ஆண் மானினது குரலினை உற்றுக் கேட்கும், கவலை நெறிபடு நிரம்பா நீள்இடை - கவர்த்த நெறிகள் பொருந்திய செல்லத் தொலையாத நீண்ட காட்டிலே, வெள்ளி வீதியைப்போல - தன் கணவனைத் தேடிச் சென்ற வெள்ளி வீதி என்பாளைப் போன்று, நன்றும் செலவு அயர்ந்திசின் - செல்லுதலை பெரிதும் விரும்பியுளேன்.

(முடிபு) தோழி! தலைவர் பிரிதலால், யான், உயிர் செல்லவும், தோளும் கவின் தொலையவும், பிரிந்தோர் பெயர்வுக்கிரங்கி யிருந்தும் மருந்து பிறிதின்மையால், வேறு வினையிலேன் ஆயினேன் ஆகலின், உழுவை யேற்றை உழைமான் குரல் ஓர்க்கும் கவலை நெறிபடு நிரம்பா நீளிடையில் வெள்ளி வீதியைப்போல நன்றும் செலவயர்ந்திசின்.

(வி - ரை.) வேறு வகுத்தன்ன குருளை எனவும் கோட்டுகிர்க் குருளை எனவும் தனித்தனி கூட்டுக. அவிழா உகிர் என்க. முடங்கர் - முடக்கமான இடம். நிழத்தல் - மெலிதல். வெள்ளி வீதியைப் போலும் என்ற உவமையான் அவள் கணவனைப் பிரிந்து பலவிடத்தும் தேடித் திரிந்தாளாதல் பெற்றாம். இலன் என அன்விகுதி தன்மைக்கண் வந்தது. செலவயர்ந்திசின் என்பதனை எச்சப்படுத்தி வினையிலனாயினன் என முடிப்பது நச்சினார்க்கினியர் கருத்தாகும்.

(மே - ள்.) [1]'கொண்டு தலைக் கழியினும்' என்னுஞ் சூத்திரத்து, 'தலைவி பிரிந்திருந்து மிகவும் இரங்குதலின், இரங்கினும் எனச் சூத்திரஞ் செய்து அதனானே பாலைப் பொருட்கண் இரங்கற் பொருள் நிகழுமென்றார். உதாரணம் - ஓங்குமலைச் சிலம்பிற் . . . வினையிலனே' (என்பது) இதனுள் வெள்ளி வீதியைப்போலச் செல்லத் துணிந்து, யான் பலவற்றிற்கும் புலந்திருந்து, பிரிந்தோரிடத்தினின்றும் பிரிந்த பெயர்வுக்குத் தோணலந் தொலைய உயிர்செலச் சாஅய், இரங்கிப் பிறிது மருந்தின்மையிற் செயலற் றேனென மிகவும் இரங்கியவாறு மெய்ப்பாடுபற்றி யுணர்க' என்றும், [2]'மக்க ணுதலிய' என்னுஞ் சூத்திரத்து 'வெள்ளி வீதியைப் போல

1. தொல். அகத். ௪௫. 2. தொல். அகத். ௫௪.

நன்றும், செலவயர்ந்திசினல் யானே' என்பதன்கண் பெயர் அகத்திணைக் கட் சார்த்துவகையான் வந்ததன்றித் தலைமை வகையாக வந்திலது என்றும் கூறினர் நச்.

---

## 148. குறிஞ்சி

[பகல் வருவானை இரவு வருகென்றது.]

பனைத்திர ளன்ன பரேர்எறுழ்த் தடக்கைக்
கொலைச்சினந் தவிரா மதனுடை முன்பின்
வண்டுபடு கடாஅத் துயர்மருப் பியானை
தண்கமழ் சிலம்பின் மரம்படத் தொலைச்சி
௫ உறுபுலி உரறக் குத்தி விறல்கடிந்து
சிறுதினைப் பெரும்புனம் வவ்வு நாட
கடும்பரிக் குதிரை ஆஅய் எயினன்
நெடுந்தேர் மிஞிலியொடு பொருதுகளம் பட்டெனக்
காணிய செல்லாக் கூகை நாணிக்
௧௦ கடும்பகல் வழங்கா தாஅங் கிடும்பை
பெரிதா லம்ம இவட்கே அதனுன்
மாலை வருதல் வேண்டும் சோலை
முளைமேய் பெருங்களிறு வழங்கும்
மலைமுதல் அடுக்கத்த சிறுகு லாறே.

—பரணர்.

(சொ - ள்.) ௧—௬. திரள் பனை அன்ன பரு ஏர் எறுழ்த் தடக் கை - திரண்ட பனையை யொத்த பருத்த அழகிய வலிய வளைந்த கையையும், கொலைச் சினம் தவிரா மதன் உடை முன்பின் - கொல்லும் சினம் நீங்காத செருக்குப் பொருந்திய வலிமையினையும், வண்டுபடு கடாஅத்து - வண்டு மொய்க்கும் மதத்தினையும், உயர்மருப்பு யானை - நிமிர்ந்த கோட்டினையுமுடைய யானை, தண் கமழ் சிலம்பின் மரம் படத் தொலைச்சி - குளிர்ந்த மணம் கமழ்கின்ற பக்க மலையிலுள்ள மரம் வீழ ஒடித்துத்தள்ளி, உறுபுலி உரறக் குத்தி விறல் கடிந்து - மாறுபாடுற்ற புலியினைக் கதறுமாறு குத்தி அதன் வெற்றியினைத் தொலைத்து, சிறுதினைப் பெரும்புனம் வவ்வும் நாட - சிறிய தினை விளைந்த பெரிய புனத்தினைக் கவர்ந்து கொள்ளும் நாடனே!

௭—௧௧. கடும் பரிக் குதிரை ஆஅய் எயினன் - கடிய செலவினை யுடைய குதிரையையுடைய ஆய் எயினன் என்பான், நெடும் தேர் மிஞிலியொடு பொருது களம் பட்டென - நெடிய தேரையுடைய மிஞிலி என்பானொடு போர்புரிந்து களத்தில் இறந்தனனாக, காணிய செல்லாக் கூகை நாணி - (புள்ளின் பாதுகாவலனாகிய அவனை ஏனைப் பறவைகளைப் போலச் சென்று) காண வியலாத பகற்குருடாகிய கூகையானது நாணுதலுற்று, கடும்பகல் வழங்காதாங்கு - கடிய பகலிலே இயங்காது இடும்பை யுற்றாற்போல, இவட்கு இடும்பை

பெரிது - இவளுக்குப் பகற்குறிக்கட் செல்லாத துன்பம் பெரிதா யிற்று ;

கக—௪. அதனால்-, சோலை முளைமேய் பெருங்களிறு வழங்கும் - சோலையின்கண் மூங்கிற் குருத்தினைத் தின்னும் பெரிய களிறு இயங்குகின்ற, மலைமுதல் அடுக்கத்து - மலைச்சாரலிலுள்ள, சிறுகல் ஆறு - சிறிய பாறைகள் செறிந்த நெறியில், மாலை வருதல் வேண்டும் - நீ மாலைக் காலத்தே வருதல் வேண்டும்.

(முடிபு) நாட! இவட்குப் பகற்குறிக்கண் இடும்பை பெரிது ; அதனால் சிறுகல்ஆறு மாலை வருதல் வேண்டும்.

(வி - ரை.) பனைத்திரள் என ஐகாரங் கெடாது வல்லெழுத்துப் பெற்று முடிந்தது, [1]'கொடிமுன் வரினே யையவ ணிற்பக், கடிநிலை யின்றே வல்லெழுத்து மிகுதி' என்ற சூத்திரத்து இலேசாற் கொள்ளப்படும். பரேர் என்றது மரூஉ முடிபு. ஆஅய் எயினன் என்பான் புட்களுக்குப் பாதுகாவலனாக இருந்தான் என்பதும், அதனால் அவன் களத்திற் பொருது வீழ்ந்தபோது புட்களெல்லாம் வானிலே நெருங்கி வட்டமிட்டு, அவன் மீது வெயிற்படாது மறைத்தன என்பதும் வேறுசில [2]செய்யுட்களாற் பெறப்படுகின்றன. ஏனைப் பறவைகளெல்லாம் செல்லவும் பகலிலே தான் செல்லலாற்றாமையின் [3]கூகை நாணி வருந்தியிருந்ததென்றார். அகம் - உ0அ ஆம் பாட்டில் எயினன் . . . பாழிப் பறந்தலை . . . மிஞிலியொடு நண்பகலுற்ற செருவிற் புண்கூர்ந், தொள்வாண் மயங்கமர் வீழ்ந்தெனப் புள்ளொருங்கு, அங்கண் விசும்பின் விளங்கு ஞாயிற்று, ஒண்கதிர் தெறாமைச் சிறகரிற் கோலி, நிழல்செய் துழறல் காணேன் யானெனப், படுகளங் காண்டல் செல்லான் சினஞ் சிறந்து, உருவினை நன்ன னருளான் கரப்ப' என வரும் நன்னன் என்பானே பகலிற் செல்லா ஒப்புமை பற்றி இச் செய்யுளிற் [4]'கூகை யென வழங்கப் பட்டானவன் எனக் கருதுவாருமுளர்.'

---

## 149. பாலை

[தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது.]

சிறுபுன் சிதலை சேண்முயன் றெடுத்த
நெடுஞ்செம் புற்றத் தொடுங்கிரை முனையிற்
புல்லரை யிருப்பைத் தொள்ளை வான்பூப்
பெருங்கை யெண்கின் இருங்கிளை கவரும்
௫ அத்த நீளிடைப் போகி நன்றும்
அரிதுசெய் விழுப்பொருள் எளிதினிற் பெறினும்
வாரேன் வாழியென் நெஞ்சே சேரலர்

---

1. தொல். உயிர்மய. அ௩. 2. அகம். க௪உ, க௮௯, உ0அ. 3. அகம். உ0அ. 4. பரணர் - பக்கம் கஉ, க௪.

சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க
யவனர் தந்த வினைமா ணன்கலம்
௧௦ பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளங்கெழு முசிறி ஆர்ப்பெழ வளைஇ
[1]அருஞ்சமங் கடந்து படிமம் வவ்விய
நெடுநல் யானை அடுபோர்ச் செழியன்
கொடிநுடங்கு மறுகிற் கூடற் குடாஅது
௧௫ பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யுயரிய
ஒடியா விழவின் நெடியோன் குன்றத்து
வண்டுபட நீடிய குண்டுசுனை நீலத்
தெதிர்மலர்ப் பிணைய லன்ன இவள்
அரிமதர் மழைக்கண் தெண்பனி கொளவே.

—[2]எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார்.

(சொ - ள்.) எ. என் நெஞ்சே - எனது நெஞ்சமே!

௧—௬. பெரும் கை எண்கின் இரும் கிளை - பெரிய கையினையுடைய கரடியின் பெரிய கூட்டம், சிறு புன் சிதலை சேண் முயன்று எடுத்த - சிறிய புல்லிய கறையான் நெடிது முயன்று ஆக்கிய, நெடும் செம் புற்றத்து - உயர்ந்த சிவந்த புற்றில், ஒடுங்கு இரை முனையில் - மறைந்துகிடந்த புற்றும் பழஞ்சோற்றைத் தின்று வெறுப்பின், புல் அரை இருப்பை - புற்கென்ற அரையினையுடைய இருப்பை மரத்தின், தொள்ளை வான் பூ கவரும் - தொளை பொருந்திய வெள்ளிய பூவைக் கவர்ந்து உண்ணும், அத்தம் நீள் இடைப் போகி - சுரத்தின் நீண்டவழியே சென்று, நன்றும் அரிது செய் விழுப்பொருள் எளிதினிற் பெறினும் - பெரிதும் அரிதாக ஈட்டும் சிறந்த பொருளை எளிதாகப் பெறுவதாயினும்,

எ—௧௯. சேரலர் சுள்ளிஅம் பேரியாற்று வெண் நுரை கலங்க - சேர அரசரது சுள்ளியாகிய பேர் யாற்றினது வெள்ளிய நுரை சிதற, யவனர் தந்த வினைமாண் நல்கலம் - யவனர்கள் கொண்டு வந்த தொழில் மாட்சிமைப்பட்ட நல்ல மரக்கலம், பொன்னொடு வந்து கறியொடு பெயரும் - பொன்னுடன் வந்து மிளகொடு மீளும், வளம் கெழு முசிறி ஆர்ப்பு எழ வளைஇ - வளம் பொருந்திய முசிறி என்னும் பட்டினத்தை ஆரவாரம் மிக வளைத்து, அரும் சமம் கடந்து படிமம் வவ்விய - அரிய போரை வென்று அங்குள்ள பொற்பாவையினைக் கவர்ந்துகொண்ட, நெடு நல் யானை அடுபோர்ச் செழியன் - நெடிய நல்ல யானைகளையும் வெல்லும் போரினையுமுடைய செழியனது, கொடி நுடங்கு மறுகில் கூடல் குடாஅது - கொடி அசையும் தெருவினையுடைய கூடலின் மேல்பாலுள்ள, பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய - பல பொறிகளையுடைய வெல்லும் மயிற் கொடியினை உயர்த்த, ஒடியா விழவின் நெடியோன் குன்றத்து - இடையறாத விழவினையுடைய முருகனது திருப்பரங்குன்றத்தே,

(பாடம்) 1. பெருஞ்சமம். 2. ஏர்க்காட்டூர்.

வண்டுபட நீடிய குண்டு சுனை நீலத்து - வண்டுவீழ நீண்ட ஆழமான சுனையிற்பூத்த நீலப்பூவின், எதிர்மலர்ப் பிணையல் அன்ன - புதிய மலர் இரண்டின் சேர்க்கை போன்ற, இவள் அரிமதர் மழைக் கண் தெண்பனி கொள - இவளது செவ்வரி படர்ந்த மதர்த்த குளிர்ந்த கண்கள் தெளிந்த நீரினைக் கொள்ள, வாரேன் - வாரேன், வாழி -.

(முடிபு) நெஞ்சே! அத்த நீளிடைப்போகி, அரிதுசெய் விழுப் பொருள் எளிதிற் பெறினும், இவள் அரிமதர் மழைக்கண் தெண்பனி கொள வாரேன்; வாழி!

(வி - ரை.) சுள்ளி, பேரியாறு என்பன சேரநாட்டு முசிறி மருங்கு கடலிற் கலக்கும் ஓர் யாற்றின் பெயர்கள். யவனர் என்பார் எகித்து, கிரேக்கம் முதலிய புறநாட்டினர். மரக்கலம் பொன்னொடு வந்து கறியொடு பெயரும் என்றது, பொன்னைக் கொண்டு வந்து விலையாகக் கொடுத்து மிளகை ஏற்றிச் செல்லும் என்றபடி. எனவே அந்நாளில் சேரர் நாட்டு வாணிபம் சிறந்திருந்தமை பெற்றாம். படிமம் என்றது முசிறியி லிருந்ததோர் தெய்வ விம்பம்போலும். கூடலின் குடக்கின் கண்ணதாகிய குன்றம் என்க. வாரேன் என்றதனால் நீ வேண்டிற் செல்லுதி என்றாரும்.

## 150. நெய்தல்

[பகற்குறி வந்து கண்ணுற்று நீங்கும் தலைமகனைத் தோழி தலைமகளை இடத்துய்த்து வந்து, செறிப்பறிவுறீஇ வரைவு கடாயது.]

பின்னுவிட நெறித்த கூந்தலும் பொன்னென
ஆகத் தரும்பிய சுணங்கும் [1]வம்புவிடக்
கண்ணுருத் தெழுதரு முலையும் நோக்கி
எல்லினை பெரிதெனப் பன்மாண் கூறிப்
௫ பெருந்தோ ளடைய முயங்கி நீடுநினைந்
தருங்கடிப் படுத்தனள் யாயே கடுஞ்செலல்
வாட்சுறா வழங்கும் வளைமேய் பெருந்துறைக்
கனைத்த நெய்தற் கண்போன் மாமலர்
நனைத்த செருந்திப் போதுவாய் அவிழ
௧௦ மாலை மணியிதழ் கூம்பக் காலைக்
கண்ணுறு காவியொடு தண்ணென மலருங்
கழியுங் கானலுங் காண்டொறும் பலபுலந்து
வாரார் கொல்லெனப் பருவரும்
தாரார் மார்பநீ தணந்த ஞான்றே.

—குறுவழுதியார்.

(சொ - ள்.) ௧௩—௧௪. தார் ஆர் மார்ப - மாலை பொருந்திய மார்பனே, நீ தணந்த ஞான்று - நீ பிரிந்தகாலை, கடும் செலல் வாள் சுறு வழங்கும் - விரைந்த செலவினையும் வாள் போன்ற

(பா - ம்) 1. வம்புடை,

கொம்பினையுமுடைய சுறு மீன் இயங்கும், வளை மேய் பெருந் துறை - சங்குகள் மேயும் பெரிய துறையையுடைய, கணைத்த நெய் தல் கண்போல் மாமலர் - இதழ் செறிந்த நெய்தலது கண்போலும் பெரிய மலர், மாலை மணி இதழ் கூம்ப - மாலைப் போதில் அழகிய இதழ்கள் குவிய, காலை - விடியலில், நனைத்த செருந்திப் போது வாய் அவிழ - அரும்பிய செருந்தியின் போதுகள் இதழ் விரிய, கள் நாறு காவியொடு - தேன் நாறுகின்ற குவளையுடன், தண் என மலரும் - தட்பம் உற மலருகின்ற, கழியும் கானலும் காண் தொறும் - கழியையும் சோலையினையும் காணுந் தோறும், பல புலந்து - பலவும் எண்ணி வெறுத்து, வாரார்கொல் எனப் பருவரும் - நம் தலைவர் வாராரோ எனத் தலைவி வருந்துவள்; அதன்மேலும்,

க—௪. யாய் - அன்னையானவள், பின்னு விட நெறித்த கூந் தலும் - பின்னும்படி (வளர்ந்து) நெளிந்த கூந்தலையும், பொன் என ஆகத்து அரும்பிய சுணங்கும் - பொன் போல மார்பிலே தோன்றிய தேமலையும், வம்பு விடக் கண் உருத்து எழுதரும் முலையும் - கச்சு அறக் கண்ணுடன் உருப் பெற்று எழுந்த முலையினையும், நோக்கி - பார்த்து, பெரிது எல்லினை என - பெரிதும் அழகுடையை என்று, பல் மாண் கூறி - பல முறையும் கூறி, பெரும் தோள் அடைய முயங்கி - பெரிய தோளை முழுவதும் முயங்கி, நீடு நினைந்து - நெடிது நினைந்து, அருங்கடி படுத்தனள் - (தலைவியை) அரிய காவலில் வைத் தனள்.

(முடிபு) தாரார் மார்ப! தலைவி, நீ தணந்த ஞான்று கழியுங் கானலுங் காண்டொறும் வாரார்கொல் லெனப் பருவரும்; (அதன் மேலும்) யாய் கூந்தலும் சுணங்கும் முலையும் நோக்கி, எல்லினை எனக் கூறி, முயங்கி அருங் கடிப்படுத் தனள்.

(வி - ரை.) உருத்து - வெகுண்டு என்றுமாம். வாட் சுறு வழங் கும் கழியெனவும், பெருந்துறையையுடைய கழியெனவும் இயை யும். செருந்தியும் நெய்தலுங் காவியும் காலையில் மலரும் என்க. கழியுங் கானலும் இயற்கைப் புணர்ச்சிக் காலத்துத் தலைவன் சூளுற்ற இடமாகலின் அவற்றைக் காண்டொறும் வெறுத்தாள் என்றலுமாம்.

(மே - ள்.) [1]'களவலராயினும்' என்னும் (செவிலி கூற்று நிகழு மாறு கூறும்) சூத்திரத்து, அளவு மிகத் தோன்றினும் என்னும் துறைக் கண், இச் செய்யுள் தோழி செவிலி கூறியதைக் கொண்டுகூறியது என்று கூறினர் நச்.

[2]'இன்பத்தை வெறுத்தல்' என்னுஞ் சூத்திரத்து, 'ஏதமாய்தல்' என் னும் மெய்ப்பாட்டிற்கு, கூட்டத்திற்கு வரும் இடையூறு உண்டென்று பலவும் ஆராய்தல், அது, நொதுமலர் வரையக் கருதுவர்கொல் லெனவும், பிரிந்தோர் மறந்து இனி வாரார்கொல் லெனவும் தோன்றும் உள்ள நிகழ்ச்சி என்று உரைத்து, அது, 'வாரார் கொல்லெனப் பருவரும், தாரார் மார்ப நீ தணந்த ஞான்றே' என வரும் என்று கூறினர் பேரா.

---

1. தொல். களா. ௨௪. 2, தொல், மெய்ப். ௨௨.

## 151. பாலை

[தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் சொல்லியது.]

தந்நயந் துறைவோர்த் தாங்கித் தாநயந்
தின்னமர் கேளிரொ டேமுறக் கெழீஇ
நகுத லாற்றார் நல்கூர்ந் தோரென
மிகுபொரு ளினையு நெஞ்சமொ டருள்பிறி
ரு தாபமன் வாழி தோழி கால்விரிபு
உறுவளி யெறிதொறுங் கலங்கிய பொறிவரிக்
கலைமான் றலையின் முதன்முதற் கவர்த்த
கோடலங் கவட்ட குறுங்கா லுழிஞ்சிற்
றுறுசினை விளைந்த நெற்றம் ஆடுமகள்
கம அரிக்கோற் பறையின் ஐயென வொலிக்கும்
பதுக்கைத் தாய செதுக்கை நீழற்
கள்ளி முள்ளரைப் பொருந்திச் செல்லுநர்க்
குறுவது கூறுஞ் சிறுசெந் நாவின்
மணியோர்த் தன்ன தெண்குரற்
கரு கணிவாய்ப் பல்லிய காடிறந் தோரே.

—[1]காவன்முல்லைப் பூதரத்தனார்.

(சொ – ள்.) ரு—கரு. தோழி -, வாழி -, கால் விரிபு உறுவளி எறிதொறும் - இடமெலாம் விரிந்து மிக்க காற்று வீசுந்தொறும், கலங்கிய - கலங்கியதும், பொறிவரிக் கலைமான் தலையில் - புள்ளிகளையும் வரிகளையுமுடைய கலைமானின் தலையின், முதன்முதல் கவர்த்த - அடியிடத்திற் கப்புவிட்ட, கோடு கவட்ட குறுங்கால் உழிஞ்சில் - கொம்புபோன்ற கவட்டினையுடைய குறிய காலினையுடைய வாகைமரத்தின், சினை விளைந்த - கிளையில் விளைந்ததும் ஆகிய, தாறுநெற்றம் - நெற்றின் குலை, ஆடுமகள் அரிகோல் பறையின் – ஆடும் கூத்தியரது கோலால் அரித்தெழும் ஒலியுண்டாக்கும் பறைபோல, ஐயென ஒலிக்கும் - வியப்புண்டாக ஒலிக்கும், பதுக்கைத்து ஆய செதுக்கை நீழல் - பதுக்கையினையுடையதாய குறைந்த நிழலையுடைய, கள்ளி முள் அரை பொருந்தி - கள்ளியின் முட்பொருந்திய அடியிற்றங்கி, செல்லுநர்க்கு உறுவது கூறும் - வழிச் செல்வார்க்கு உண்டாகும் நிகழ்ச்சிகளைக் கூறும், சிறு செந்நாவின் - சிறிய செவ்விய நாவினது, மணி ஓர்த்தன்ன - மணியொலி கேட்டாற் போலும், தெண்குரல் - தெளிந்த குரலைக் கொண்ட, கணிவாய்ப் பல்லிய காடு இறந்தோர் - சோதிடம் கூறும் வாயையுடைய பல்லிகளையுடைய காட்டைக்கடந்து சென்ற நம் தலைவர்,

க—ரு. தம் நயந்து உறைவோர்த் தாங்கி - தம்மை விரும்பியிருப்போரைப் புரந்து, தாம் நயந்த இன்அமர் கேளிரொடு ஏம்உறக்

(பாடம்) 1. காவன் முல்லை மழுக்கரத்தனார். காவன்முல்லைப் பூக்கரத்தனார். காவன்முல்லைப் பூச்சாத்தனார்.

கெழீஇ - தாம் விரும்பிய இனிமை பொருந்திய நட்டாரோடு இன்பம் மிக இயைந்து, நகுதல் ஆற்றுர் நல்கூர்ந்தோர் என - மகிழ்ந்திருத்தலை மாட்டாராவர் வறுமை யுற்றோர் என்று கூறி, மிகுபொருள் நினையும் நெஞ்சமொடு - மிக்க பொருளை ஈட்ட நினையும் நெஞ்சத்தால், மன்அருள் பிறிதுஆப - நம்பால் மிகவும் அருளுடையர் அல்லர் ஆவர்.

(முடிபு) தோழி! வாழி! காடிறந்தோர், தாங்கி, கெழீஇ, நகுதல் ஆற்றுர் எனப் பொருள் நினையும் நெஞ்சமொடு அருள் பிறிதாப; என் செய்வாம்.

(வி - ரை.) தந்நயந் துறைவோர் - தம் குடிக்கண் இளையாரும் பணியாளரும் பாணர் முதலாயினருமாம். தாம் நயந்த என்னும் பெயரெச்சத்து அகரம் தொக்கது. கேளிர் - நட்டார். நெஞ்சமொடு - நெஞ்சத்தால். பொருளையே காதலிப்பவர் அருளைக் கைவிடுவர் என்னும் கருத்தினை, [1]'பொருளே காதலர் காதல், அருளே காதலர் என்றி நீயே' என்றதனுன் அறிக. கால் விரிபு என்புழிக் கால் இடமென்னும் பொருட்டு. கலங்கிய நெற்றம் எனவும், சினைவிளைந்த நெற்றம் எனவும் தனித்தனி இயையும். முதல் இரண்டனுள் முன்னது அடி, பின்னது இடம் என்னும் பொருளன. கோடலங் கவட்ட: அல்லும் அம்மும் சாரியைகள். நெற்றம்: அம், அசை; பகுதிப்பொருள் விகுதி என்றலுமாம். செந்நாவின் குரல் எனவும் மணியோர்த்தன்ன குரல் எனவும் இயையும். உறுவது கூறும் சிறு செந்நாவின் என்றமையால், கணிவாய் என்றது பல்லிக்கு இயற்கை யடை.

---

## 152. குறிஞ்சி

[இரவுக்குறிவந்து நீங்குந் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]

நெஞ்சுநடுங் கரும்படர் தீர வந்து
குன்றுழை நண்ணிய சீறூ ராங்கட்
செலீஇய பெயர்வோள் வணர்சுரி மைம்பால்
நுண்கோ லகவுநர்ப் புரந்த பேரிசைச்
௫ சினங்கெழு தானைத் தித்தன் வெளியன்
இரங்குநீர்ப் பரப்பிற் கானலம் பெருந்துறைத்
தனந்தரு நன்கலஞ் சிதையத் தாக்குஞ்
சிறுவெள் ளிறவின் குப்பை யன்ன
உறுபகை தரூஉம் மொய்ம்மூசு [2]பிண்டன்
௧௦ முனைமுர ணுடையக் கடந்த வென்வேல்
இசைநல் லீகைக் களிறுவீசு வண்மகிழ்ப்
பாரத்துத் தலைவன் ஆர நன்னன்
ஏழில் நெடுவரைப் பாழிச் சிலம்பிற்

1. அகம். ருட. (பாடம்) 2. பிண்ட - னுண்முரண்.

களிமயிற் கலாவத் தன்ன தோளே
௧௫ வல்வி லிளையர் பெருமகன் நள்ளி
சோலை யடுக்கத்துச் சுரும்புண விரிந்த
கடவுட் காந்த ளுள்ளும் பலவுடன்
இறும்பூது கஞலிய வாய்மலர் நாறி
வல்லினும் வல்லா ராயினுஞ் சென்றோர்க்குச்
௨௦ சாலவிழ் நெடுங்குழி நிறைய வீசும்
மாஅல் யானை யாஅய் கானத்துத்
தலையாற்று நிலைஇய சேயுயர் பிறங்கல்
வேயமைக் கண்ணிடை புரைஇச்
சேய வாயினும் நடுங்குதுயர் தருமே.

—பரணர்.

(சொ - ள்.) நெஞ்சே,

௧—௩. நெஞ்சு நடுங்கு அரும்படர் தீர வந்து - நம் நெஞ்சம் நடுங்குதற்குக் காரணமான பிறிதொன்றாற் றீர்தற்கரிய துன்பமானது தீர வந்து கூடி, குன்று உழை நண்ணிய சீறூர் ஆங்கண் செலீஇய பெயர்வோள் - குன்றிடத்துப் பொருந்திய தனது சிறிய ஊர்க்குச் செல்ல மீள்வோளாய நம் தலைவியின், வணர் சுரி ஐம்பால் - வளைந்து சுருண்ட கூந்தல்கள்,

௪—௧௪. நுண்கோல் அகவுநர்ப் புரந்த பேரிசை - நுண்ணிய கோலையுடைய பாணரைப் புரந்த பெரிய புகழையும், சினம் கெழு தானை - சினம் மிக்க படையினையுமுடைய, தித்தன் வெளியன் - தித்தன் வெளியன் என்பானது, இரங்கும் நீர்ப் பரப்பின் கானல் அம் பெருந்துறை - ஒலிக்கும் நீர்ப் பரப்பினையுடைய கானலம் பெருந் துறை என்னும் பட்டினத்தே, தனம் தரு நன்கலம் சிதையத் தாக்கும் - பொன்னைக் கொண்டுவரும் நல்ல மரக்கலம் சிதையுமாறு தாக்குகின்ற, சிறு வெள் இறவின் குப்பை அன்ன - சிறிய வெள்ளிய இரு மீனின் தொகுதி போன்ற, உறுபகை தரூஉம் மொய்மூசு பிண்டன் - மிக்க பகையைத்தரும் வலிமிக்க பிண்டன் என்பானது, முனை முரண் உடையக் கடந்த வென்வேல் - போர் செய்யும் மாறுபாடு சிதைய வென்ற வெற்றி வேலையும், இசைநல் ஈகைக் களிறு வீசு வண்மகிழ் - புகழ் மேவிய நல்ல ஈகையினையும் களிறுகளை வழங்கும் வண்மையாகிய களிப்பினையும் உடைய, பாரத்துத் தலைவன் ஆரம் நன்னன் - பாரம் என்னும் ஊர்க்குத் தலைவனாகிய ஆரம்பூண்ட நன்னன் என்பானது, ஏழில் நெடுவரைப் பாழிச் சிலம்பில் - ஏழில் என்னும் நீண்ட மலையின் பாழி யென்னும் பக்க மலையிடத்துள்ள, களிமயில் கலாவத்து அன்ன - களிக்கும் மயிலின் தோகையை ஒத்தன ;

௧௪—௨௪. தோளே - இவள் தோள்கள், வல்வில் இளையர் பெருமகன் நள்ளி - வலிய வில்லையுடைய வீரர்கட்குத் தலைவனான நள்ளி என்பானது, சோலை அடுக்கத்து - சோலைகள் மிக்க பக்க மலையிடத்தே, சுரும்பு உண விரிந்த கடவுள் காந்தளுள்ளும் - வண்டு

உண்ண விரிந்த கடவுள் சூடுதற்குரிய காந்தட் பூவுள்ளும். இறும்பூது கஞலிய ஆய்மலர் பல உடன்நாறி - வியப்பு மிக்க அழகிய மலர் பலவும் ஒருங்கு நாறுவதுபோல நாறி, வல்லினும் வல்லாராயினும் சென்றோர்க்கு - பரிசில் கருதி வந்தார்க்கு அவர் கல்வியில் வல்லுநராயினும் அல்லாராயினும், சால்அவிழ் - மிடாச்சோற்றை, நெடுங்குழி நிறைய வீசும் - மண்டையின் நெடியகுழி நிறையும்படியாக அளிக்கும், மாஅல் யானை ஆஅய் கானத்து - பெரிய யானைகளையுடைய ஆய் என்பானது காட்டினையுடைய, தலையாற்று நிலைஇய சேய் உயர் பிறங்கல் - தலையாறு என்னுமிடத்து நிலைபெற்ற மிக உயர்ந்த மலையிடத்துள்ள, வேய் அமைகண் இடைபுரைஇ - மூங்கிலிற் பொருந்திய கணுக்களின் நடுவிடத்தை யொத்து, சேய ஆயினும் நடுங்கு துயர் தரும் - சேய்மைக்கண் உள்ளனவாயினும் நாம் நடுங்கத்தக்க துயரினைத்தரும்.

(முடிபு) நெஞ்சே ! சிறாரங்கட் செலீஇய பெயர்வோள் ஐம்பால், நன்னன் பாழிச் சிலம்பின் மயிற் கலாவத்தன்ன; தோள் நள்ளி அடுக்கத்து ஆய்மலர் நாறி, ஆஅய் கானத்துப் பிறங்கல் வேயமைக் கண்ணிடை புரைஇ, நடுங்குதுயர் தரும்.

தித்தன் வெளியன் பெருந்துறை நன்கலம் சிதையத் தாக்கும் இறவின் குப்பையன்ன உறுபகை தருஉம் பிண்டனது முரண் உடையக் கடந்த நன்னன் என்க.

(வி - ரை.) நடுங்குதுயர் தருமே என்பதனை மூன்னுங் கூட்டி ஐம்பால் கலாவத்தன்னவாய் நடுங்குதுயர் தரும் என்று உரைத்துக் கொள்க. சால் - மிடா. சாலவிழ் நிறைய வீசும் எனவும், நெடுங்குழி மாஅல் யானை யெனவுங் கூட்டி யுரைத்தலு மாம்; குழி - ஈண்டு யானையை அகப்படுத்தும் பயம்பு. யானையையுடைய ஆஅய் என்க; ஆஅய் கானம் என்றலுமாம். என்னை ? [1]'. . . அண்டிரன், குன்றம் பாடின கொல்லோ, களிறுமிக வுடைய விக் கவின்பெறு காடே' என்பவாகலின்.

---

## 153. பாலை

[மகட் போக்கிய செவிலித்தாய் சொற்றது]

நோகோ யானே நோதகு முள்ளம்
அந்தீங் கிளவி யாயமொடு கெழீஇப்
பந்துவழிப் படர்குவ ளாயினும் நொந்துநனி
வெம்புமன ளியள் தானே யினியே
௫ வன்க ணாளன் மார்புற வளைஇ
இன்சொற் பிணிப்ப நம்பி நங்கண்
உறுதரு விழுமம் முள்ளாள் ஒய்யெனத்
தெறுகதி ருலைஇய வேனில் வெங்காட்

1. புறம். ௧௩௧.

டுறுவளி யொலிகழைக் கண்ணுறுபு தீண்டலிற்
௧0 பொறிபிதிர் பெடுத்த பொங்கெழு கூரெரிப்
பைதறு சிமையப் பயநீங் காரிடை
நல்லடிக் கமைந்த வல்ல மெல்லியல்
வல்லுநள் கொல்லோ தானே யெல்லி
ஓங்குவரை யடுக்கத் துயர்ந்த சென்னி
௧௫ மீனொடு பொலிந்த வானிற் றோன்றித்
தேம்பாய்ந் தார்க்குந் தெரியிணர்க் கோங்கின்
காலுறக் கழன்ற [1]கண்கமழ் புதுமலர்
கைவிடு சுடரிற் றோன்றும்
மைபடு மாமலை விலங்கிய சுரனே.

—சேரமான் இளங்குட்டுவன்.

(சொ - ள்.) உ—ச. அளியள் - இரங்கத்தக்காளாய என்மகள், அம் தீம் கிளவி ஆயமொடு கெழீஇ - அழகிய இனிய சொற்களை யுடைய ஆயத்தாருடன் பொருந்தி, பந்துவழிப் படர்குவள் ஆயி னும் - பந்தாடு மிடத்துச் சிறிது சென்று வருவாளாயினும், நனி நொந்து வெம்பும் மன் - மிகவும் நொந்து பெரிதும் வருந்துவாள் ;

௧௩—௧௫. ஓங்கு வரை அடுக்கத்து - உயர்ந்த மலைச் சாரலி லுள்ள, தேம் பாய்ந்து ஆர்க்கும் தெரி இணர்க் கோங்கின் - வண்டு கள் பாய்ந்து ஆரவாரிக்கும் விளக்கமுற்ற கொத்துக்களையுடைய கோங்கினது, உயர்ந்த சென்னி - உயர்ந்த உச்சியில், எல்லி - இர வின்கண், மீனொடு பொலிந்த வானில் தோன்றி - மீனொடு விளங்கும் வானெனத் தோன்றிப் (பின்), கால் உறக் கழன்ற கண் கமழ் புது மலர் - காற்று அடித்தலின் கழன்று விழும் இடனெல்லாம் கமழும் புதிய மலர், கைவிடு சுடரில் தோன்றும் - கையினால் விடப்பெறும் சுடர்ப் பொறி போலத் தோன்றும், மை படு மாமலை விலங்கிய சுரன் - மேகம் பொருந்திய பெரிய மலை குறுக்கிட்ட சுர நெறியில்,

ச—௧௩. வேனில் தெறு கதிர் உலைஇய - வேனிற் காலத்துக் காய்கின்ற ஞாயிற்றின் கதிர் கெடுத்த, வெம் காட்டு - வெப்பம் மிக்க காட்டிலே, உறு வளி - விரைந்து அடிக்கும் மிக்க காற்று, ஒலி கழைக் கண் உறுபு தீண்டலின் - தழைத்த மூங்கிலின் கணுக்களைப் பொருந்தித் தாக்கலின், எடுத்த - எழுப்பப்பட்ட, பொங்கு - விளங்கு கின்ற, பொறி பிதிர்பு எழு கூர்எரி - பொறியைச் சிதறி எழுகின்ற மிக்க நெருப்பினால், பைது அறு சிமையம் பயம் நீங்கு - பசுமையற்ற உச்சியையுடைய பயன் ஒழிந்தவும், நல் அடிக்கு அமைந்த அல்ல - தன் நல்ல அடிகட்கு ஏற்றன அல்லவுமாகிய, ஆர் இடை - அரிய வழிகளை, இனி - இப்பொழுது, மெல்லியல் - மென்மைத்தன்மை யுடைய அவள், வன்கணாளன் மார்பு உற வளைஇ - கொடுமை யுடைய தலைவன் தன் மார்பினாலே முற்ற வளைத்து, இன் சொல் பிணிப்ப - இனிய சொல்லாலே கட்டிவிட, நம்பி - அதனை விரும்பி,

(பாடம்) 1. தண்கமழ் பனிமலர்.

நம் கண் உறுதரு விழுமம் உள்ளாள் - நம்மிடத்தே உறும் துன்பத்தினை நினையாளாகி, ஒய்யென வல்லுநள் கொல்லோ - விரையச் செல்ல வல்லமையுடையள் ஆவளோ ;

கஅ. நோதகும் உள்ளம் - என் உள்ளம் அதனை நினைந்து வருந்துகின்றது ; நோகு - யானும் நோகின்றேன்.

(முடிபு) அளியள் பந்துவழிப் படர்குவள் ஆயினும் நனி நொந்து வெம்பும் மன் ; இனி மெல்லியல், மலை விலங்கிய சுரனில், வேனில் வெங்காட்டு பயம் நீங்கு ஆரிடையில் ஒய்யெனச் செல்ல வல்லுநள்கொல்லோ ! உள்ளம் நோதகும் ; யான்நோகு.

(வி - ரை.) நோகோ - ஓ, அசைநிலை. ஒழியிசையாகக் கொண்டுஉரைத்தலுமாம். பந்துவழி - பந்து விளையாடுமிடம். வெம்பும் மன்: மன் மிகுதிப் பொருட்டு; கழிவுமாம். ஒய்யெனச் செல்ல என விரித்துரைக்க. கைவிடு சுடர் - பரணின் மீதுள்ள கானவர் கையினின்றும் விடுத்த பந்தம்.

---

## 154. முல்லை

[வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.]

படுமழை பொழிந்த பயமிகு புறவின்
நெடுநீ ரவல பகுவாய்த் தேரை
சிறுபல் லியத்தின் நெடுநெறிக் கறங்கக்
குறும்புதற் பிடவின் நெடுங்கா லலரி
௫ செந்நில மருங்கின் நுண்ணயிர் வரிப்ப
வெஞ்சின வரவின் [1]பையணந் தன்ன
தண்கமழ் கோடல் தாதுபிணி யவிழத்
திரிமருப் பிரலை தெள்ளறல் பருகிக்
[2]காமர் துணையொ டேமுற வதியக்
௧௦ காடுகவின் பெற்ற தண்பதப் பெருவழி
ஓடுபரி மெலியாக் கொய்சுவற் புரவித்
[3]தாடாழ் தார்மணி தயங்குபு இயம்ப
ஊர்மதி வலவ தேரே சீர்மிகுபு
நம்வயிற் புரிந்த கொள்கை
௧௫ அம்மா அரிவையைத் துன்னுகம் விரைந்தே.

—போதும்பிற் புல்லாளங் கண்ணியார்.

(சொ - ள்.) ௧௩. வலவ - பாகனே !

௧—௧௦. படுமழை பொழிந்த பயம் மிகு புறவின் - மிக்க மழை சொரிந்தமையால் பயன் மிக்க முல்லை நிலத்தே, நெடுநீர் அவல பகுவாய்த் தேரை - ஆழமாகிய நீரினையுடைய பள்ளங்களிலுள்ள பிளந்த வாயினையுடைய தேரைகள், நெடுநெறி - நீண்டவழியெலாம்,

---

(பாடம்) 1. பை யணர்த்தன்ன. 2. காமர் பிணையோடு. 3. தோடார்.

சிறு பல்லியத்தின் கறங்க - சிறிய பலவாகிய வாச்சியங்களைப்போல ஒலிக்கவும், குறும்புதல் பிடவின் நெடுங்கால் அலரி - குறிய புதரா கிய பிடவின் நீண்ட காம்பினையுடைய மலர்கள், செம்நில மருங்கின் நுண்அயிர் வரிப்ப - செம்மண்ணாகிய நிலத்திடத்து நுண்ணிய மணலில் உதிர்ந்து கோலம் செய்யவும், வெம்சின அரவின் பை அணந் தன்ன - கொடிய சினமுடைய பாம்பின் படம் மேலே நிவந்தாற் போன்ற, தண் கமழ் கோடல் தாதுபிணி அவிழ - தண்ணென மணக் கின்ற காந்தட்பூவின் தாது கட்டவிழ்ந்து விரியவும், திரிமருப்பு இரலை தெள்அறல் பருகி - முறுக்கிய கொம்பினையுடைய ஆண்மான் தெளிந்த நீரைக் குடித்து, காமர் துணையோடு ஏம்உற வதிய - விருப் பம் வாய்ந்த பிணையுடன் இன்பம் மிகத் தங்கவும், காடு கவின் பெற்ற தண்பதப் பெருவழி - காடு அழகுபெற்ற தண்ணிய செவ்வி வாய்ந்த பெரிய வழியிலே,

௧௧—௩. ஓடுபரி மெலியாக் கொய்சுவல் புரவி - ஓடும் வேகம் குறையாத கொய்யப்பட்ட பிடரி மயிரினையுடைய குதிரையின், தாள் தாழ் தார்மணி தயங்குபு இயம்ப - தாளின் அளவு தாழ்ந்த மாலையிடத்து மணிவிளங்கி ஒலிக்க, தேர் ஊர்மதி - தேரை ஓட்டுவா யாக;

௧௩—௫. சீர்மிகுபு - சீர்மிக்கு, நம் வயின் புரிந்த கொள்கை - நம்மிடத்து விரும்பிய கொள்கையினையுடைய, அம் மா அரிவையை - அழகிய மாமை நிறத்தையுடைய நம் தலைவியை, விரைந்து துன்னு கம் - விரைந்து சென்று அடைவோம்.

(முடிபு) வலவ! தேரை கறங்க, அலரி வரிப்பக் காந்தட்பூ தாது பிணி அவிழ இரலை ஏமுறக் காடு கவின்பெற்ற பெருவழி, புரவித் தார்மணி இயம்பு தேர் ஊர்மதி, அரிவையை விரைந்து துன்னுகம்.

(வி - ரை.) தேரையின் ஒலியும் சிறு பல்லியத்தின் ஒலியும் ஒரு தன்மையவாதல், [1]'தேரை யொலியின் மானச் சிரமைத்துச், சில் லரி கறங்கும் சிறுபல் லியத்தொடு' எனப் பின் வருவதனாலும் அறி யப்படும். 'அரவின் பையணந்தன்ன தண்கமழ் கோடல் தாது பிணி அவிழ' என்னும் இக் கருத்து, [2]'அரவின் அணங்குடை அருந்தலை பைவிரிப் பவைபோல் . . . பஃறுடுப் பெடுத்த அலங்குகுலைக் காந் தள்' என முன்னரும் வந்துள்ளமை காண்க. அரிவையைத் துன்னு தற் பொருட்டுத் தேர் விரைந்து ஊர்மதி என்று உரைத்தலுமாம். தோடார் தார்மணி என்பது பாடமாயின், தொகுதி கொண்ட தார் மணி என்க. தார் - குதிரையின் கழுத்திற் கட்டும் மாலை.

---

1. அகம். ௩0௧. 2. அகம். ௧0௮.

## 155. பாலை

[தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் சொல்லியது.]

அறன்கடைப் படாஅ வாழ்க்கையு மென்றும்
பிறன்கடைச் செலாஅச் செல்வமு மிரண்டும்
பொருளி னாகும் புனையிழை யென்றுநம்
இருளே ரைம்பால் நீவி யோரே
௫ நோய்நா முழக்குவ மாயினுந் தாந்தம்
செய்வினை முடிக்க தோழி பல்வயிற்
பயநிரை சேர்ந்த பாணாட் டாங்கண்
நெடுவிளிக் கோவலர் கூவற் றோண்டிய
கொடுவாய்ப் பத்தல் வார்ந்துகு சிறுகுழி
௧௦ நீர்காய் வருத்தமொடு சேர்விடம் பெறாது
பெருங்களிறு மிதித்த அடியகத் திரும்புலி
ஒதுங்குவன கழிந்த செதும்ப லீர்வழி
செயிர்தீர் நாவின் வயிரியர் பின்றை
மண்ணார் முழவின் கண்ணகத் தசைத்த
௧௫ விரலூன் றுவடுவிற் றோன்றும்
மரல்வாடு மருங்கின் மலையிறந் தோரே.

—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

(சொ - ள்.) ௬. தோழி -,

௩—௪. புனை யிழை - அழகிய அணியுடையாளே! என்றும் அறன்கடைப் படாஅ வாழ்க்கையும் - பாவநெறியிற் செல்லாத வாழ்க்கையும், பிறன் கடைச் செலாஅச் செல்வமும் - பிறன் மனை வாயிலிற் சென்று நில்லாத மேம்பாடும் ஆய, இரண்டும் - இவ் விரண்டும், பொருளின் ஆகும் என்று - பொருளானே யாகும் என்று கூறி, நம் இருள் ஏர் ஐம்பால் நீவியோர் - நமது இருண்ட அழகிய கூந்தலைத் தடவிய தலைவர்,

௬—௧௨. பல் வயின் பயம் நிரை சேர்ந்த பாணாட்டாங்கண் - பல விடத்தும் பாற்பசுக் கூட்டம் சேர்ந்துள பாணுடென்னும் அவ்விடத்தே, நெடு விளிக் கோவலர் தோண்டிய கூவல் - நீண்ட சீழ்க்கை யொலியை யுடைய கோவலர் தோண்டிய கிணற்றினின்று முகந்த, கொடு வாய்ப் பத்தல் நீர் வார்ந்து உகு சிறுகுழி - வளைந்த வாயினை யுடைய பத்தலினின்று நீர் வடிந்து செல்லும் சிறிய குழி, காய் வருத்தமொடு – நீரின்றிக் காய்ந்ததனுலாய வருத்தத்துடன், சேர்வு இடம் பெறாது - நீர் வேட்கை தணித்தற்குச் சேரத்தக்க வேறிடம் பெறாமல், பெருங்களிறு மிதித்த அடியகத்து - பெரிய களிறு மிதித்தேகிய அடிச்சுவட்டில், இரும்புலி ஒதுங்குவன கழிந்த - பெரிய புலிகள் அடிவைத்து நடந்து சென்ற, செதும்பல் ஈர்வழி - சேற்று நிலமாய ஈரமுடைய வழிகள்,

௧௩—௬. செயிர் தீர் நாவின் வயிரியர் - குற்றமற்ற நாவினை யுடைய கூத்தர், பின்றை அசைத்த - தோளின் பின்னேகட்டிய,

மண் ஆர் முழவின் கண் அகத்து - மார்ச்சனை அமைந்த மத்தளத்தின் கண்ணிடத்தே, விரல் ஊன்று வடுவில் தோன்றும் - விரலால் எறிந்த வடுக்கள் போலத் தோன்றும், மரல் வாடு மருங்கின் மலை இறந்தோர் - மரல்கள் வாடிய இடங்களையுடைய மலையைக் கடந்து சென்றார்;

௫—௬. நோய் நாம் உழக்குவம் ஆயினும் - அவரது பிரிவால் நாம் நோயுழப்போம் ஆயினும், தாம் தம் செய்வினை முடிக்க - அவர் தமது பொருள்ஈட்டு வினையினை முடித்து வருவாராக.

(முடிபு) தோழி, வாழ்க்கையும் செல்வமும் இரண்டும் பொருளினுகும் என்று கூறி நம் ஐம்பால் நீவியோர், மரல் வாடு மருங்கின் மலையிறந்தோர்; நாம் நோயுழக்குவம் ஆயினும், தாம் தம் செய்வினை முடிக்க.

(வி - ரை.) அறன்கடை - பாவம்; அறத்தின் நீக்கப்பட்டமையின் அறன்கடையாயிற்று என்பது [1]பரிமேலழகர் உரை. பாவமாவது இரந்தோர்க்கு இல்லை என்றல். அறன்கடைப் படா வாழ்க்கை - இரந்தார்க்கு ஈதலும், பிறன்கடைப் படாஅச் செல்வம் - பிறர்பாற் சென்று இரவாமையும் ஆம் என்க. என்றும் என்பதனை இரண்டிடத்தும் கூட்டுக. செல்வம் - வீறு, மேம்பாடு. இருள் ஏர் - இருளையொத்த என்றுமாம். ஐம்பால் நீவியோர் என்றது, பிரிவு கருதித் தலையளி செய்தோர் என்றவாறு. பாணுடு - பாணன் நாடென்க; 'பாணன் நன்னுட்டும்பர்' (௧௧௩), 'வடா அது, நல்வேற்பாணன் நன்னுட்டுள்ளதை' (௩௨௫) எனப் பிறண்டு வருதல் காண்க. பாணன் நாட்டில் ஆனிரைகள் திரண்டிருந்தன வென்றும், அவற்றிற்கு நீருட்டற்குக் கோவலர் தாம் தோண்டிய கூவலினின்றும் பத்தலால் நீர் இறைத்துப் பல சிறு குழிகளில் நிரப்புவர் என்றும், வேனில் வெம்மையால் கூவல் நீர் வற்றினமையின் நீர் இறைக்கப்பெருது அக் குழிகள் காய்ந்திருந்தன வென்றும், அவற்றின்கண் நீருண்ண வந்த களிறுகள் நீரில்லாமையாலாய வருத்தத்தோடு அவற்றை மிதித்து நடந்து சென்றன என்றும், பின் ஆண்டுச் சென்ற புலிகள் அக் களிறுகளின் அடிச்சுவட்டிலே கால் வைத்து நடந்து சென்றன என்றும், அக் களிற்றின் அடிச்சுவட்டிற் பதிந்த புலியின் கால் விரற் சுவடு, முழவின் கண்ணிலே விரலூன்றிய வடுப் போலத் தோன்றின என்றும் கொள்க. களிறு குழியில் அடிவைத்து ஏகியதும், புலி, அக் களிற்றடியில் மிதித்துச் சென்றதும் அவ்வுழிச் சிறிது ஈரம் இருந்தமையால் என்க. செதும்பு - சேறு; அல், பகுதிப் பொருள் விகுதி. நாம் நோயுழத்தலால் தலைவர் கருதிய வினை முடியாது ஒழியுங்கொல் என்னும் கருத்திஞல், தாம் தம் செய்வினை முடிக்க வென ஓம்படை கூறினளென்க.

(உ - றை.) யானை யடியகத்துப் புலியடிவைத்துச் சென்ற சுவடு, முழவின் கண்ணிலே விரலூன்றிய வடுப்போலத் தோன்றும் வழியிற் சென்றார் என்பது, தலைவர் பொருளீட்டுதற்கண் எய்தும் துன்பத்தையே இன்பமாகக் கருதிச் சென்றார் என்றபடி.

---

1. குறள். ௧௪௨-உரை.

## 156. மருதம்

[தலைமகளை இடத்துய்த்துவந்த தோழி தலைமகனை வரைவு கடாயது.]

முரசுடைச் செல்வர் புரவிச் சூட்டு
மூட்டுறு கவரி தூக்கி யன்ன
செழுஞ்செய் நெல்லின் [1]சேயரிப் புனிற்றுக் கதிர்
மூதா தின்றல் அஞ்சிக் காவலர்
௫ பாக லாய்கொடிப் பகன்றையொடு பரீஇக்
காஞ்சியி னகத்துக் கரும்பருத்தி [2]யாக்குந்
தீம்புன லூர திறவ தாகக்
குவளை யுண்கண் இவளும் யானும்
[3]கழுநீ ராம்பல் முழுநெறிப் பைந்தழை
௧௦ [4]காயா ஞாயிற் றாகத் தலைப்பப்
பொய்தலாடிப் பொலிகென வந்து
நின்னகாப் பிழைத்த தவறோ பெரும
கள்ளுங் கண்ணியுங் கையுறை யாக
நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாஅய்
௧௫ நிலைத்துறைக் கடவுட் குளப்பட வோச்சித்
தணிமருங் கறியாள் யாயழ
மணிமருள் மேனி பொன்னிறங் கொளலே.

—ஆலூர் மூலங்கிழார்.

(சொ - ள்.) ௧—௭. முரசு உடைச் செல்வர் புரவிச்சூட்டு - முரசங்களையுடைய செல்வரது குதிரையது தலையின் உச்சியிடத்து, மூட்டுறு கவரி தூக்கி அன்ன - இணைத்துத் தைத்த கவரியை நிமிர்த்து வைத்தாலொத்த, செழும் செய் நெல்லின் சேய் அரி புனிற்றுக கதிர் - செழுமை வாய்ந்த வயலிலுள்ள நெல்லின் சிவந்த அரிகளையுடைய இளங்கதிரை, முதுஆ தின்றல் அஞ்சி - முதிய பசு தின்பதைக்கண்டு அஞ்சி, காவலர் - வயற்காவலர், கரும்பு அருத்தி - கரும்பினை உண்பித்து, பாகல் ஆய் கொடி பகன்றையொடு பரீஇ - பாகலின் சிறந்த கொடியைப் பகன்றையின் கொடியுடன் அறுத்து (அவற்றால்), காஞ்சியின் அகத்து யாக்கும் - காஞ்சி மரத்திடத்துக் கட்டிவைக்கும், தீம்புனல் ஊர - நீர்வளம் பொருந்திய ஊரையுடைய தலைவனே!

௧௨. பெரும - பெருமானே!

௧௩—௭. யாய் - எம் அன்னை, நிலைத்துறைக் கடவுட்கு - துறையினிடத்து நிலைபெற்ற தெய்வத்திற்கு, கையுறையாக - கையுறைப் பொருளாக, கள்ளும் கண்ணியும் - கள்ளினையும் மாலையையும், நிலைக் கோட்டு நால்செவி வெள்ளைக் கிடாஅய் ஓச்சி - நிமிர்ந்த கொம்பினையும் தொங்கும் காதினையுமுடைய வெள்ளாட்டுக் கிடாய் உட்படச்

(பாடம்) 1. சேயரிப் புனிற்றுக் கதிர்முதல் தின்ற. 2. ஆர்க்கும். 3. கழுநீ யாம்பல். 4. காமர் ஞாயிற்.

செலுத்தியும், தணி மருங்கு அறியாள் அழ - தன் மகளுக்கு உற்ற நோய் தணியும் உபாயம் அறியாளாய் அழ; மணிமருள் மேனி - இத் தலைவியின் நீலமணி போன்ற மேனி, பொன் நிறம் கொளல் - பசலை யால் பொன் நிறத்தினை யடைதல்,

எ—கஉ. *குவளை உண்கண் இவளும் யானும் - நீலப்பூப்போலும் மையுண்ட கண்ணினையுடைய இத்தலைவியும் யானும், திறவிது ஆக - செவ்விதாக, கழுநீர் ஆம்பல் முழுநெறிப் பைந் தழை - கழுநீர் ஆம் பல் இவற்றின் இதழ் ஒடியாத பூக்களுடன் கூடிய பசிய தழையுடை, ஆகத்து அலைப்ப - ஆகத்தின்கண் அலைத்திட, காயா ஞாயிற்று - ஞாயிறு காய்தலில்லாத காலைப்பொழுதில், பொய்தல் ஆடி - விளை யாடி, பொலிக என வந்து - (பின்பு) நீ வாழ்வாயாக எனக்கூறி வந்து, நின் நகாப் பிழைத்த தவறோ - நின்னுடன் நகையாடிப் பிழைத்த குற்றத்தாலாய தொன்றோ.

(முடிபு) தீம் புனலூர! பெரும! யாய், நிலைத்துறைக் கடவுட்குக் கள்ளும் கண்ணியும் கிடாயும் உட்பட ஒச்சித் தணிமருங்கு அறியாள் அழ, இவள் மேனி பொன்னிறங் கொளல், இவளும் யானும் பொய்தல் ஆடி நீ பொலிகென வந்து நின் நகாப் பிழைத்த தவறோ!

(வி - ரை.) மூதா - முதிய எருமையுமாம். முழுநெறி - இதழ் ஒடிக்கப்படாத முழுப் பூ.

புனிற்றுக், கதிர்முதல் தின்றல் அஞ்சி என்னும் பாடத்திற்கு, ஈன்றணிமையுடைய பசு நெல்லின் கதிரையுடைய முதலினைத் தின் றலை அஞ்சி என்க. பொய்தலாடிப் பொலிகென வந்து - நீவிர் பொய்தலாடிப் பொலிக எனத் தாய் விடுக்க வந்து என்றுரைத்தலு மாம். நிலைக்கோடு - அருது நிற்கும் கொம்பு என்றலுமாம்.

(உ - றை.) விளைந்த பின் பெரிது பயன்படும் இளங்கதிரை ஆ தின் றலை அஞ்சிக் கரும்பருத்திக் கட்டிப் பயன் கொள்வார்போல, பின்னே பெரும்பயன் தரும் களவினை அழித்துப் பயன்தராது செய்யும் அலர் கூறுவார் வாயடங்கி யொழிய வரைந்து கொள்வாயாக என்றவாறு.

---

## 157. பாலை

[பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

அரியற் பெண்டிர் அல்குற் கொண்ட
[1]பகுவாய்ப் பானைக் குவிமுனை சுரந்த
அரிநிறக் கலுழி ஆர மாந்திச்
செருவேட்டுச் சிலைக்குஞ் செங்க ணாடவர்
ரு வில்லிட வீழ்ந்தோர் பதுக்கைக் கோங்கின்
எல்லி மலர்ந்த பைங்கொடி அதிரல்
பெரும்புலர் வைகறை அரும்பொடு வாங்கிக்

(பாடம்) 1. பகுவாய்ப் பானைக் குவிமுலை. பகுவாய் யானைக் குவிகுலை.

கான யானை கவளங் கொள்ளும்
அஞ்சுவரு நெறியிடைத் தமியர் சென்மார்
௧௦ நெஞ்சுண மொழிப மன்னே தோழி
முனைபுலம் பெயர்த்த புல்லென் மன்றத்துப்
பெயலுற நெகிழ்ந்து வெயிலுறச் சாஅய்
வினையழி பாவையின் உலறி
மனையொழிந் [1]திருத்தல் வல்லு வோர்க்கே.

—வேம்பற்றூர்க் குமரனார்.

(சொ - ள்.) ௧௦—௪. தோழி -, முனைபுலம் பெயர்த்த புல் என் மன்றத்து - போர் நிகழ்ச்சி குடிகளை இடத்தினின்றும் பெயரச் செய்தமையின் பொலிவற்றிருக்கும் மன்றிடத்தே, பெயல் உற நெகிழ்ந்து வெயில் உறச் சாஅய் - மழை பெய்தலால் இளகியும் வெயில் உறுதலால் காய்ந்து நுணுகியும், வினை அழி பாவையின் - வண்ணம் முதலிய வேலைப்பாடுகள் அழிந்த பாவையைப்போல, உலறி - மேனி வாடி, மனை ஒழிந்திருத்தல் வல்லுவோர்க்கு - மனையின்கண் தலைவரைப் பிரிந்து தனித்திருத்தலை வல்லார்க்கு,

௧—௯. அரியல் பெண்டிர் அல்குல் கொண்ட - கள் விற்கும் மகளிர் இடையிற் சுமந்துவந்த, பகு வாய்ப் பானை குவிமுனை சுரந்த - விரிந்த வாயையுடைய பானையின் குவிந்த முனை சொரிந்த, அரி நிறக் கலுழி ஆர மாந்தி - அரிக்கப்பெற்ற நிறமுடைய கள்ளின் வண்டலை நிறையக் குடித்து, செருவேட்டுச் சிலைக்கும் செம்கண் ஆடவர் - போரினை விரும்பி ஆரவாரிக்கும் சிவந்த கண்ணையுடைய வீரர், வில் இட வீழ்ந்தோர் பதுக்கைக் கோங்கின் - வில்லால் எய்ய வீழ்ந்தோரது கற்குவியலின் அயலதாய கோங்கின்மீது படர்ந்து, எல்லி மலர்ந்த பைங்கொடி அதிரல் - இரவில் மலர்ந்த பசிய அதிரற் கொடியை, கான யானை - காட்டு யானைகள், பெரும்புலர் வைகறை - பெரிய இருள் புலர்கின்ற விடியலில், அரும்பொடு வாங்கி - அரும்புடன் இழுத்து, கவளம் கொள்ளும் அஞ்சுவரு நெறி இடை - கவளமாக உண்ணும் அச்சம் வருகின்ற சுரநெறியில்,

௯—௧௦. தமியர் சென்மார் நெஞ்சு உண மொழிப - தனியராகச் செல்லும் தலைவர் அதனை அவர் தம் மனம் விரும்பி ஏற்றுக் கொள்ளும்படி சொல்லுவர்; மன் - யான் அவ்வாறு தனித்திருத்தலை மாட்டுகிலேன்.

(முடிபு) தோழி! அஞ்சுவரு நெறியிடைத் தமியர் சென்மார், வினையழி பாவையின் உலறி மனை ஒழிந்திருத்தல் வல்லுவோர்க்கு அவர் நெஞ்சுண மொழிப; மன்.

(வி - ரை.) அல்குல் - மருங்குல். அல்கில் என்பது பாடமாயின், தங்கிய இல்லில் என்க. குவிமுனை - கள்ளினைச் சொரிவதற்கு மூக்குப் போற் குவிந்திருக்கும் வாய். அரி - பன்னாடையால் அரிக்கப் பட்ட என்க. செங்கண் - கள்ளுண்டலாலும் சினத்தாலும் சிவந்த கண். மன், ஒழியிசை.

(பாடம்) 1. இருத்தலாற்று வோர்க்கே.

## 158. குறிஞ்சி

[தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி செவிலித்தாய்க்குச் சொல்லு வாளாய்த் தலைமகன் கேட்பச் சொல்லியது.]

உருமுரறு கருவிய பெருமழை தலைஇப்
பெயலான் றவிந்த தூங்கிருள் நடுநாள்
[1]மின்னுநிமிர்ந் தன்ன கனங்குழை யிமைப்பப்
பின்னுவிடு நெறியிற் கிளைஇய கூந்தலள்
௫ வரையிழி மயிலின் ஒல்குவனள் ஒதுங்கி
மிடையூர் பிழியக் கண்டனென் இவளென
அலையல் வாழிவேண் டன்னைநம் படப்பைச்
சூருடைச் சிலம்பிற் சுடர்ப்பூ வேய்ந்து
தாம்வேண் டுருவின் அணங்குமார் வருமே
௧0 நனவின் வாயே போலத் துஞ்சுநர்க்
கனவாண்டு மருட்டலும் உண்டே இவள்தான்
சுடரின்று தமியளும் பனிக்கும் வெருவர
[2]மன்ற மராஅத்த கூகை குழறினும்
நெஞ்சழிந் தரணஞ் சேரும் அதன்றலைப்
௧௫ புலிக்கணத் தன்ன நாய்தொடர் விட்டு
[3]முருக னன்ன சீற்றத்துக் கடுந்திறல்
எந்தையும் இல்ல னாக
அஞ்சுவள் அல்லளோ [4]இவளிது செயலே.

—கபிலர்.

(சொ - ள்.) எ. அன்னை -, வாழி -,

க—எ. உரும் உரறு கருவிய பெருமழை தலைஇ - இடி முழங்கும் தொகுதியவாய மிக்க மழை பெய்து விட்டு, பெயல் ஆன்று அவிந்த தூங்கு இருள் நடு நாள் - அப் பெயல் நீங்கி ஓலியடங்கிய செறிந்த இருளையுடைய நள்ளிரவில், இவள் - இவள், மின்னு நிமிர்ந்தன்ன கனம் குழை இமைப்ப - மின்னல் நிமிர்ந்தாலொத்தவாய்க் கனத்த குழைகள் ஒளிவிட, பின்னு விடு நெறியில் கிளைஇய கூந்தலள் - பின்னல் நெகிழ்ந்தமையின் நெறிப்புடன் அகன்ற கூந்தலையுடையளாய், வரை இழி மயிலின் ஒல்குவனள் ஒதுங்கி - மலையினின்று இறங்கும் மயிலைப் போலத் தளர்ந்து நடந்து, மிடை ஊர்பு இழியக் கண்டனென் என அலையல் - பரணில் ஏறி இறங்கி வரக் கண்டேன் என்று கூறி இவளை வருத்தாதே, வேண்டு - நான் கூறுவதனை விரும்பிக் கேட்பாயாக;

எ—கக. சூர் உடைச் சிலம்பில் - தெய்வங்களையுடைய மலையை யடுத்த, நம் படப்பை - நம் தோட்டத்தின்கண், அணங்கு — ஒரு தெய்வம், சுடர்ப் பூ வேய்ந்து - ஒளி தங்கிய பூவைச் சூடி, தாம்

(பா - ம்) 1. மின்னு மிளிர்ந்தன்ன. 2. மன்ற மாத்த. 3. முருகினன்ன. 4. இவளது செயலே.

வேண்டு உருவின் வரும் - தாம் அவ்வப்போது விரும்பிய உருவங் கொண்டு வரும்; (அன்றியும்), நனவின் வாயே போல - நனவினது உண்மைத் தோற்றம் போலவே, துஞ்சுநர் கனவு ஆண்டு மருட்டலும் உண்டு - துயில்வோரைக் கனவு அவ்விடத்து மயக்கலும் உண்டு;

௧௧—௪. இவள்தான் - இவளோ, சுடர் இன்று தமியளும் பனிக்கும் - விளக்கு இல்லாமல் தனியளாக இருத்தற்கும் நடுங்குவள்; வெருவர - அச்சம் தோன்ற, மன்ற மராஅத்த கூகை குழறினும் - மன்றத்தின்கண்ணுள்ள மராமரத்திலுள்ள கூகை குழறினாலும், நெஞ்சு அழிந்து அரணம் சேரும் - மனம் நடுங்கிப் பாதுகாப்பான இடத்திற்கு வந்துவிடுவள்;

௧௪—அ. அதன்தலை - அதன்மேலும், புலிக்கணத்து அன்ன நாய் தொடர் விட்டும் - புலிக் கூட்டத்தை ஒத்த நாய்கள் தொடர்தல் நீங்கினவாயினும், முருகன் அன்ன சீற்றத்துக் கடுந்திறல் - முருகனை யொத்த சினத்தினையும் கடிய வலியினையும் உடைய, எந்தையும் இல்லன் ஆக - எம் தந்தை இல்லிடத்தானாகவும், இவள் - இத்தலைவி, இது செயல் - இங்ஙனம் படப்பை சென்று வரல், அஞ்சுவள் அல்லளோ - அஞ்சுவாள் ஆகாளோ.

(முடிபு) அன்னை! வாழி! இவள் தூங்கிருள் நடுநாள், கனங்குழை இமைப்ப, கூந்தலள், மயிலின் ஒதுங்கி மிடையூர்பு இழியக் கண்டனென் என அலையல்; வேண்டு; நம் படப்பை, தாம் வேண்டுருவின் அணங்கும் வரும்; கனவு மருட்டலும் உண்டு; இவள்தான் சுடரின்று தமியளும் பனிக்கும்; கூகை குழறினும் அரணம் சேரும்; அதன்றலை, நாய் தொடர்விட்டும், எந்தையும் இல்லனாக, இவள் இது செயல் அஞ்சுவள் அல்லளோ.

(வி - ரை.) மிடை - பரண். அணங்குமார்: மார் அசை, அவ் வணங்கு துஞ்சுநரைக் கனவின் மருட்டலும் உண்டு எனலுமாம். இன்று - இன்றி; இல்லையாக. தமியளும் - தனியே யிருத்தற்கும் என்க. குழறினும்: உம்மை இழிவு சிறப்பு. நாய் தொடர்தலாலும் இவள் அஞ்சுவள்; அவை அங்ஙனம் தொடராது விடினும் என விரித்துரைக்க. இதற்கு, நாய் தொடர்தல் விட, வேட்டம் ஒழிந்து எந்தையும் இல்லனாக என்றுரைத்தலுமாம். எந்தை இல்லனாகவும் என உம்மையை மாறுதலுமாம்.

(மே - ள்.) [1]'நாற்றமும் தோற்றமும்' என்னுஞ் சூத்திர உரையில் இச் செய்யுளைக் காட்டி, இது மிடையை ஏறி இழிந்தாள் என்றது காரணமாக ஐயுற்ற தாயைக் கனவு மருட்டலும் உண்டென்றது முதலாகப் பொய் யென மாற்றி அணங்கும் வருமென மெய்வழி கொடுத்தது, இது சிறைப் புறமாகக் கூறி வரைவு கடாயது என்றும், [2]'களவலராயினும்' என்னுஞ் சூத்திரத்து உரையில், இப் பாட்டினுள் 'மிடையூர் பிழியக் கண்டனென் இவளென, அலையல் வாழிவேண் டன்னை' என்றது தலைவி புறத்துப் போகக் கண்டு செவிலி கூறியதனைத் தோழி கொண்டு கூறினாள் என்றுங் கூறினர் நச்.

---

1. தொல். களவு. ௨௧. 2. தொல். களவு. ௨௪.

## 159. பாலை

[பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.]

தெண்கழி விளைந்த வெண்கல் உப்பின்
கொள்ளை சாற்றிய கொடுநுக ஒழுகை
உரனுடைச் சுவல பகடுபல பரப்பி
உமணுயிர்த் திறந்த ஒழிகல் அடுப்பின்
௫ வடியுறு பகழிக் கொடுவில் ஆடவர்
அணங்குடை நோன்சிலை வணங்க வாங்கிப்
பல்லான் நெடுநிரை தழீஇக் கல்லென
வருமுனை யலைத்த பெரும்புகல் வலத்தர்
கனைகுரற் கடுந்துடிப் பாணி தூங்கி
௧0 உவலைக் கண்ணியர் அன்புழுக் கயருங்
[1]கவலைக் காதலர் இறந்தன ரெனநனி
அவலங் கொள்ளன்மா காதலந் தோழி
விசும்பின் நல்லேறு சிலைக்குஞ் சேட்சிமை
நறும்பூஞ் சாரற் குறும்பொறைக் குணாஅது
௧௫ வில்கெழு தடக்கை வெல்போர் வானவன்
மிஞிறுமூசு கவுள சிறுகண் யானைத்
தொடியுடைத் தடமருப் பொடிய நூறிக்
கொடுமுடி காக்குங் குரூஉக்கண் நெடுமதிற்
சேண்விளங்கு சிறப்பின் ஆமூர் எய்தினும்
௨0 ஆண்டமைந் துறையுநர் அல்லர்நின்
பூண்டாங் காகம் பொருந்துதல் மறந்தே.

—ஆமூர்க் கவுதமன் சாதேவனார்.

(சொ - ள்.) ௧௨. காதல் அம் தோழி - காதலையுடைய தோழியே! ௧—௪. தெண்கழி விளைந்த வெண்கல் உப்பின் - தெளிந்த கழியின்கண் விளைந்த வெள்ளிய கல் உப்பினது, கொள்ளை சாற்றிய - விலையைக்கூறி விற்ற, உமண் - உப்பு வாணிகர், கொடுநுக ஒழுகை - வளைந்த நுகத்தையுடைய வண்டிகளிற் பூட்டிய, உரன் உடைச் சுவல பகடு பல பரப்பி - வலி பொருந்திய பிடரியினையுடைய எருதுகள் பலவற்றையும் மேயும்படி அவிழ்த்துவிட்டு, உயிர்த்து இறந்த - (உண்டு) இளைப்பாறி விடுத்துச் சென்ற, ஒழிகல் அடுப்பின் - ஒழிந்து கிடந்த கல்லாகிய அடுப்பிலே,

௫—௧௨. வடிஉறு பகழிக் கொடுவில் ஆடவர் - வடித்தல் உற்ற அம்பினையும் வளைந்த வில்லினையும் உடைய கரந்தை வீரர், அணங்கு உடை நோன்சிலை வணங்க வாங்கி - மாற்றார்க்கு வருத்தத்தை விளைக்கும் வலிய வில்லினை மிக வளைத்து, பல்ஆன்நெடு நிரை தழீஇ - பல பசுக்களையுடைய நீண்ட நிரையினைக் கவர்ந்து கொண்டு, கல் என - கல்லெனும் ஒலியுடன், வரும் முனை அலைத்த பெரும்புகல் வலத்தர் -

(பா - ம்) 1. கவலை காதலர்.

வரும் வெட்சி மறவர் போரினை அலைத்து ஓட்டிய பெரிய செருக்கினை யும் வெற்றியையும் உடையராய், கனை குரல் கடும் துடிப் பாணி தூங்கி - மிக்க குரலையுடைய கடிய துடியின் ஒலிக்கொத்த தாளத் தொடு ஆடி, உவலைக் கண்ணியர் ஊன் புழுக்கு அயரும் - தழையுடன் கட்டிய கண்ணியைச் சூடினராய் ஊனைப்புழுக்கி உண்ணும், கவலை - கவர்த்த நெறிகளிலே, காதலர் இறந்தனர் என - நம் காதலர் சென் றனரென்று, நனி அவலம் கொள்ளல் - மிகவும் துன்புறுதே;

௧௩—உ௧. விசும்பின் நல் ஏறு சிலைக்கும் சேண் சிமை - வானி டத்தே சிறந்த இடி ஒலிக்கும் நெடிய உச்சியை யுடையதும், நறும் பூ சாரல் - நறிய பூக்களையுடைய சாரல்களையுடையதுமான, குறும் பொறைக் குணஅது - குறும்பொறை என்னும் மலைக்குக் கிழக்கின் கண் உள்ளதும், வில்கெழு தட கை வெல்போர் வானவன் - விற் பொருந்திய பெரிய கையினையுடைய போர் வெல்லும் சேரனது, மிஞிறு மூசு கவுள சிறு கண் யானை - வண்டுகள் மொய்க்கும் (மதம் வழியும்) கன்னத்தினையுடைய சிறிய கண்ணினையுடைய யானையின், தொடி உடை தட மருப்பு ஒடிய நூறி - பூண் பூண்ட பெரிய கோட் டினை ஒடியும்படி அழித்து, கொடுமுடி காக்கும் - கொடுமுடி என் பான் காத்து வருகின்ற, குரூஉக்கண் நெடுமதில் - விளங்கிய இடத்தையுடைய நெடிய மதில் சூழ்ந்த, சேண் விளங்கு சிறப்பின் - நெடுந்தூரம் சென்று விளங்கும் சிறப்பினையுடைய, ஆமூர் எய்தினும் - ஆமூரையே அடைவதாயினும், நின் பூண் தாங்கு ஆகம் பொருந்துதல் மறந்து - நினது பூண் சுமந்த மார்பினைப் பொருந்துதலை மறந்து, ஆண்டு அமைந்து உறையுநர் அல்லர் - அங்கே மனம் பொருந்தித் தங்கிவிடுவா ரல்லர்.

(முடிபு) காதலம் தோழி! உமண் உயிர்த்திறந்த ஒழிகல் அடுப்பின், கொடு வில்லாடவர் ஊன்புழுக்கயரும் கவலையைக் காதலர் இறந்தனரென அவலங் கொள்ளல்; (அவர்) ஆமூர் எய்தினும் நின் ஆகம் பொருந்துதல் மறந்து, ஆண்டு அமைந்து உறையுநர் அல்லர்.

(வி - ரை.) அருமுனை அலைத்த எனப் பிரித்துரைத்தலுமாம். கொள்ளன்மா: மா, அசை. குறும்பொறை - ஒரு மலையின் பெயர். கொடுமுடி - ஆமூர்க் கண்ணிருந்த ஒரு தலைவன்.

---

## 160. நெய்தல்

[தோழி வரைவு மலிந்து சொல்லியது.]

ஓடுங்கீ ரோதி நினக்கு மற்றே
நடுங்கின் றளித்தென் நிறையில் நெஞ்சம்
அடும்புகொடி சிதைய வாங்கிக் கொடுங்கழிக்
குப்பை வெண்மணற் பக்கஞ் சேர்த்தி
௫ நிறைச்சூல் யாமை மறைத்தீன்று புதைத்த
கோட்டுவட் டுருவின் புலவுநாறு முட்டைப்

பார்ப்பிட னாகு மளவைப் பகுவாய்க்
கணவ னோம்புங் கானலஞ் சேர்ப்பன்
முள்ளுறிற் சிறத்த லஞ்சி மெல்ல
௧௦ வாவுடை மையின் வள்பிற் காட்டி
ஏத்தொழில் நவின்ற எழில்நடைப் புரவி
செழுநீர்த் தண்கழி நீந்தலின் ஆழி
நுதிமுகங் குறைந்த பொதிமுகிழ் நெய்தல்
[1]பாம்புயர் தலையிற் சாம்புவன நிவப்ப
௧௫ இரவந் தன்றால் திண்டேர் கரவாது
தொல்லென வொலிக்கும் இளையரொடு வல்வாய்
அரவச் சீறூர் காணப்
பகல்வந் தன்றாற் பாய்பரி சிறந்தே.

—குமுழி ஞாழலார் நப்பசலையார்.

(சொ - ள்.) ௩—௮. நிறைச் சூல் யாமை - நிறைவாய சூலுற்ற யாமை, அடும்பு கொடி சிதைய வாங்கி - அடும்பினைக் கொடி சிதைய இழுத்து, கொடும் கழி குப்பை வெண்மணல் பக்கம் சேர்த்தி - வளைந்த கழியிடத்து வெள்ளிய மணல் மேட்டின் பக்கத்தே சேர்த்து (அதன்கண்), மறைத்து ஈன்று புதைத்த - மறைய ஈன்று புதைத்த, கோட்டு வட்டு உருவின் புலவு நாறு முட்டை - யானைக்கொம்பினாற் செய்த வட்டின் வடிவமுடைய புலால் நாறும் முட்டையை, பகு வாய்க் கணவன் - பிளந்த வாயினையுடைய ஆண் யாமை, பார்ப்பு இடன் ஆகும் அளவை - அதனிடத்தினின்று குஞ்சு வெளிப்படும் அளவு, ஓம்பும் - பாது காத்திருக்கும், கானல் அம் சேர்ப்பன் - சோலையையுடைய கடற்கரைத் தலைவனது,

௯—௧௫. திண்தேர் - வலிய தேரானது, ஏ தொழில் நவின்ற எழில் நடை புரவி - அம்பின் வேகம்போலச் செல்லுதலைப் பழகிய அழகிய நடையினையுடைய குதிரைகள், முள் உறில் சிறத்தல் அஞ்சி - தாற்றினால் குத்தப்பெறின் வேகம் அளவு கடத்தலை அஞ்சி, வள்பிற் காட்டி - கடிவாளத்தினால் குறிப்பிக்க, மெல்ல வாவு உடைமையின் - மெல்லத் தாவிச் செல்லுதல் கொண்டமையின், செழுநீர் தண் கழி நீந்தலின் - செழுமை வாய்ந்த நீரினையுடைய குளிர்ந்த கழியினைக் கடக்குங்கால், ஆழி நுதி முகம் குறைந்த பொதி முகிழ் நெய்தல் - அத்தேர் உருளையின் கூரிய முனையால் அறுக்கப்பெற்ற பொதிந்த அரும்புகளையுடைய நெய்தல், பாம்பு உயர் தலையில் சாம்புவன நிவப்ப - பாம்பின் மேலே தூக்கிய தலையைப்போல வாடி மேலெழ, இரவந்தன்று - இதுகாறும் இராக்காலங்களில் வந்து கொண்டிருந்தது;

௧௬—௧. பாய்பரி சிறந்து - (இன்று அத்தேர்)பாயும் குதிரை வேகத்தாற் சிறப்புற்று, கரவாது - மறையாமல், ஒல் என ஒலிக்கும் இளையரொடு - ஒல்லென ஆரவாரம் செய்யும் ஏவல் இளையரொடு

---

(பாடம்) 1. பாம்புயிர்.

வல்வாய் அரவச் சிறு ஊர் காண - வலிய வாயினாலே அலராகிய ஒலியைச் செய்யும் சிறிய ஊர்ப் பெண்டிர் காண, பகல் வந்தன்று - பகலிலே வந்தது ; (அதனால்),

௯—௨. என் நிறை இல் நெஞ்சம் நடுங்கின்று - எனது நிறையில்லாத நெஞ்சம் நடுங்கியது, அளித்து - அது இரங்கத்தக்கது, ஒடுங்கு ஈர் ஓதி - ஒடுங்கிய கரிய கூந்தலையுடைய தோழியே! நினக்கும் அற்றோ - நினக்கும் அவ்வாறு நெஞ்சம் நடுங்கியதோ ?

(முடிபு) காலனுஞ் சேர்ப்பன் தேர் இதுகாறும் இரவின்கண் வந்தன்று ; இப்பொழுது பகல் வந்தன்று ; என் நெஞ்சம் நடுங்கின்று ; அளித்து ! ஒடுங்கு ஈர் ஓதி ! நினக்கும் அற்றோ ?

(வி - ரை.) யாமையானது முட்டையை மறைவிடத்தில் ஈன்று புதைத்துப் போகுமெனவும், ஆண் யாமையானது அம் முட்டையைக் குஞ்சு வெளிப்படும் அளவு பாதுகாக்கும் எனவும் கொள்க. இவ்வுண்மை, [1]'தாயின் முட்டைபோல உட்கிடந்து, சாயி னல்லது பிறிதெவ னுடைத்தோ, யாமைப் பார்ப்பி னன்ன, காமங் காதலர் கையற விடினே,' [2]'தீம்பெரும் பொய்கை யாமையிளம் பார்ப்பு, தாய்முக நோக்கி வளர்ந்திசினாங்கு' என்னுஞ் செய்யுட்களானும் உணர்க. மூள் - தாறு. காட்டி - காட்ட எனத் திரிக்க. முன்பெல்லாம் இரவந்தன்று எனவும் இப்பொழுது பகல் வந்தன்று எனவும் விரித்துரைக்க. இப்பொழுது கரவாது இளையரொடு சீறூர்காணப் பரிசிறந்து பகல்வந்தன்று என்றமையால், முன்பெல்லாம் கரவிலே இளையரின்றிச் சீறூர் காணாமலும், பரிசிறவாமலும் இரவில் வந்ததென்க. இப்பொழுது தேர் இங்ஙனம் வந்தது என்றது வரைவு வேண்டி வந்ததென்றபடி. என் நெஞ்சம் நடுங்கின்று; ஒடுங்கீரோதி! நினக்கும் அற்றோ என்றது தலைவியை நோக்கி, வரைவு மலிந்து நகையாடிச் சொல்லியது.

(உ - றை.) 'நிறைச்சூல் யாமையைக் காமம் நிறைந்த தலைவியாகவும், அது அடும்பங் கொடியை யறுத்து அதனை வெண்மணற் பக்கத்தே சேர்த்தது, தலைவி தன் தாயர் தன்னையர்பாலுள்ள அற்புத் தளையை யறுத்து அவ்வன்பைத் தலைவன் பக்கலிலே சேர்த்த தன்மையாகவும், அதுதான் ஈன்ற முட்டையை மறைத்துப் புதைத்தது, தலைவிதான் ஒழுகிய களவொழுக்கத்தைப் புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்துவைத்த தன்மையாகவும், அம் முட்டை புலவு நாறியது, அக்களவு வெளிப்பட்டு அலரெழும் தன்மையாகவும், அம் முட்டையைக் கணவன் பார்ப்பாகுமளவும் ஓம்பியது, அக் களவொழுக்கத்தைத் தலைமகன் வரையவந்து மாட்சிமைப் படுத்துந் துணையும் இடையீடின்றிக் குறிவழி யொழுகித் தலைமகளை ஓம்பின தன்மையாகவும் உள்ளுறை யுவமம் கொள்க' என்பர் இராசகோபால ஐயங்கார்.

---

1. குறுந். ௩0௨. 2. ஐங்குறு. மருதம். ௪௪.

## 161. பாலை

[பிரிவுணர்த்திய தோழி தலைமகளது வேறுபாடு கண்டு முன்னமே யுணர்ந்தாள் நம்பெருமாட்டி யென்று தலைமகனைச் செலவு விலக்கியது.]

*வினைவயிற் பிரிதல் யாவது வணர்சுரி*
*வடியாப் பித்தை வன்க ணாடவர்*
*அடியமை பகழி ஆர வாங்கி*
*வம்பலர்ச் செகுத்த அஞ்சுவரு கவலைப்*
௫ *படுமுடை [1]நசைஇய வாழ்க்கைச் செஞ்செவி*
*எருவைச் சேவ லீண்டுகிளை பயிரும்*
*வெருவரு கானம் நீந்திப் பொருள்புரிந்*
*திறப்ப [2]வெண்ணினி ரென்பது சிறப்பக்*
*கேட்டனள் கொல்லோ தானே தோட்டாழ்பு*
௧௦ *சுரும்புண ஒலிவரும் இரும்பல் கூந்தல்*
*அம்மா மேனி யாயிழைக் குறுமகள்*
*சுணங்குசூ ழாகத் தணங்கென வுருத்த*
*நல்வர லிளமுலை நனையப்*
*[3]பல்லித ழுண்கண் பரந்தன பனியே.*

—மதுரைப் புல்லங் கண்ணனார்.

(சொ - ள்.) ௯—௧௪. (தலைவ!) சுரும்பு தோட்டு ஆழ்பு உண - வண்டுகள் மலரிதழுட்புக்குத் தேனை யுண்ண, ஒலிவரும் இரும் பல் கூந்தல் - தழைத்த கரிய பலவாய கூந்தலையும், அம் மா மேனி - அழகிய மாமை நிறமுடைய மேனியையும், ஆய் இழை - ஆய்ந்த அணிகளையுமுடைய, குறுமகள் - இளையளாய தலைவியின், சுணங்கு சூழ் ஆகத்து - திதலை படர்ந்த மார்பின்கண், அணங்கு என உருத்த - வீற்றுத் தெய்வமென உருக்கொண்ட, நல் வரல் இளமுலை நனைய - நல்ல வளர்ச்சியையுடைய இளைய முலைகள் நனைய, பல் இதழ் உண்கண் - பல இதழையுடைய நீலப் பூப்போன்ற மையுண்ட கண்கள், பனி பரந்தன - நீர் பரந் தொழுகின:

௧—௯. வணர் சுரி வடியாப் பித்தை வன்கண் ஆடவர் - வளைந்து சுருண்ட கோதப்பெறாத மயிரினையுடைய கொடிய மறவர், அடி அமை பகழி ஆர வாங்கி - குதை யமைந்த அம்பினை முழுதும் இழுத்து விடுத்து, வம்பலர்ச் செகுத்த அஞ்சுவரு கவலை - வழிச் செல்லும் புதியரைக் கொன்ற அச்சந்தோன்றும் கவர்த்த நெறியில், படுமுடை நசைஇய வாழ்க்கைச் செம் செவி எருவைச் சேவல் - பொருந்தும் முடை நாறும் புலாலை விரும்பி யுண்ணும் வாழ்க்கையினையுடைய சிவந்த செவியையுடைய பருந்தின் சேவல், ஈண்டு கிளை பயிரும் - நெருங்கிய தன் சுற்றத்தினை அழைக்கும், வெருவரு கானம் - அச்சம் தோன்றும் கானத்தை, பொருள் புரிந்து - பொருளை விரும்பி, நீந்தி இறப்ப எண்ணினிர் என்பது - கடந்து செல்ல

(பா - ம்) 1. நசைஇய வாழ்கட். 2. எண்ணினர். 3. பல்லிதழ் மழைக்கண்.

எண்ணினீர் என்பதை, தான் சிறப்பக் கேட்டனள் கொல் - அவள் முன்னரே நன்கு கேட்டுளாளோ ? (ஆயின்),

க. வினைவயிற் பிரிதல் யாவது - நீர் எண்ணியாங்கு பொருளீட்டும் வினையின்கண் அவளைப் பிரிந்து செல்லுதல் யாங்ஙனம் இயல்வதாகும் ? இயலாதுகாண்.

(முடிபு) குறுமகள் ஆகத்து முலை நனைய கண் பனி பரந்தன; வெருவரு கானம் பொருள் புரிந்து இறப்ப எண்ணினிர் என்பது, தான் சிறப்பக் கேட்டனள் கொல்லோ ? (ஆயின்), வினைவயிற் பிரிதல் யாவது ?

(வி - ரை.) சேவல் முடையை உண்டற்குக் கிளையைப் பயிரும் என்க. அணங்கு - வீற்றுத் தெய்வம். அது முலையிடத்திருக்கு மென்பது, [1]'ஆமணங்கு குடியிருந் தஞ்சுணங்கு பரந்தனவே' என்பதனாற் பெறப்படும். கண் பனி பரந்தன என்பது, இடத்தினிகழ் பொருளின் றொழில் இடத்தின்மேல் நின்றது.

---

## 162. குறிஞ்சி

[இரவுக் குறிக்கண் தலைமகளைக் கண்ணுற்று நீங்கிய தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]

கொளக்குறை படாஅக் கோடுவளர் குட்டத்
துளப்பரி தாகிய குவையிருந் தோன்றல
கடல்கண் டன்ன மாக விசும்பின்
அழற்கொடி யன்ன மின்னுவசிபு நுடங்கக்
௫ கடிதிடி உருமொடு கதழுறை சிதறி
விளிவிட னறியா வானுமிழ் நடுநாள்
அருங்கடிக் காவலர் இகழ்பதம் நோக்கிப்
பனிமயங் கசைவளி அலைப்பத் தந்தை
நெடுநக ரொருசிறை நின்றனெ னாக
௧௦ அறலெனா அவிர்வருங் கூந்தல் மலரென
வாண்முகத் தலமரு மாயிதழ் மழைக்கண்
முகைநிரைத் தன்ன மாவீழ் வெண்பல்
நகைமாண் டிலங்கு நலங்கெழு துவர்வாய்க்
கோலமை விழுத்தொடி விளங்க வீசிக்
௧௫ காலுறு தளிரி னடுங்கி ஆனாது
நோயசா வீட முயங்கினள் வாய்மொழி
நல்லிசை தருஉம் இரவலர்க் குள்ளிய
நசைபிழைப் பறியாக் கழல்தொடி [2]அதிகன்
கோளற வறியாப் பயங்கெழு பலவின்
௨௦ வேங்கை சேர்ந்த வெற்பகம் பொலிய

---

1. சீவக. ௧௭௪௧. (பா - ம்) . 2. அதியன் - அதகன்.

வில்கெழு தானைப் பசும்பூட் பாண்டியன்
களிறணி வெல்கொடி கடுப்பக் காண்வர
ஒளிறுவன இழிதரும் உயர்ந்துதோன் றருவி
நேர்கொள் நெடுவரைக் கவாஅற்
௨௫ சூரர மகளிரிற் பெறற்கரி யோளே.

—பரணர்.

(சொ-ள்.) நெஞ்சே,

௧—௬. கொளக் குறை படா - கொள்ளக் கொள்ளக் குறை படாததும், கோடு வளர் குட்டத்து - சங்குகள் பெருகும் ஆழத்தினை யுடைமையால், அளப்பு அரிதாகிய - அளத்தற்கு அரிதாகியதும், குவை இரு தோன்றல - திரண்ட கரிய தோற்றத்தினை யுடையதும் ஆகிய, கடல் கண் டன்ன - கடலைக் கண்டாலொத்த, மாக விசும்பின் - வானில், அழற் கொடி அன்ன மின்னு வசிபு நுடங்க - தீயின் கொடியை யொத்த மின்னல் மேகத்தைப் பிளந்துகொண்டு அசைந்துசெல்ல, கடிது இடி உருமொடு - கடுமையாக இடிக்கும் இடியுடன், கதழ் உறை சிதறி - விரைந்த நீரைச் சிதறி, விளிவு இடன் அறியா - முடிவிடம் அறியாவாறு, வான் உமிழ் நடு நாள் - மேகம் பெய்தலைச் செய்யும் நடு இரவில்,

௭—௧௦. அருங் கடிக் காவலர் இகழ் பதம் நோக்கி - அரிய காத்தற் றொழிலையுடைய காவலர் நெகிழ்ந்திருந்த செவ்வியை நோக்கி, பனி மயங்கு அசை வளி அலைப்ப - குளிர் பொருந்திய அசைந்து வரும் வாடைக் காற்று வருத்த, தந்தை நெடுநகர் ஒரு சிறை நின்றனென் ஆக - தனது தந்தையின் நீண்ட மாளிகையின் ஒரு புறத்தே நின்றுகொண்டிருந்தேனாக,

௧௧—௨௫. வாய் மொழி - வாய்மைச்சொல்லினையும், நல் இசை தரூஉம் இரவலர்க்கு உள்ளிய நசை பிழைப்பு அறியா - நல்ல கீர்த்தியினை அடைவிக்கும் இரவலர்க்கு அவர் எண்ணிய விருப்பம் பிழைத்தல் அறியப்படாத ஈகையினையும் உடைய, கழல் தொடி அதிகன் - கழலும் வீர வளையும் அணிந்த அதிகன் என்பானது, கோளறவு அறியாப் பயம் கெழு பலவின் - காய்த்தல் இல்லையாதலை அறியாத பயனுடைய பலா மரத்திேனாடு, வேங்கை சேர்ந்த வெற்பகம் பொலிய - வேங்கை மரமும் பொருந்தியுள்ள மலையிடம் பொலிவுற, வில் கெழு தானை பசும் பூட் பாண்டியன் - வில்லையுடைய சேனையினையுடைய பசும் பூட் பாண்டியனது, களிறு அணி வெல் கொடி கடுப்ப - களிற்றின் மீது எடுத்த வெல்லும் கொடியை யொப்ப, காண் வர ஒளிறுவன இழிதரும் உயர்ந்து தோன்று அருவி - அழகுபெற மிளிர்வனவாய் இழியும் உயர்ந்து காணப் பெறும் அருவிகளையுடைய, நேர் கொள் நெடுவரைக் கவான் - நேரான நெடியமலையின் சாரலிலுள்ள, சூர் அர மகளிரில் பெறற்கு அரியோள் - அச்சம் தரும் தெய்வப் பெண்களைப் போலப் பெறுதற்கு அரியளாகிய நம் தலைவி,

௧௦—௬. அறல் என அவிர்வரும் கூந்தல் - அறல்போல் விளங்கும் கூந்தலினையும், மலர் என வாள் முகத்து அலமரும் ஆய் இதழ் மழைக் கண் - நீல மலரென ஒளி பொருந்திய முகத்தில் சுழலும் அழகிய இதழினையுடைய குளிர்ந்த கண்ணினையும், மாவீழ் முகை நிரைத்தன்ன வெண் பல் - வண்டுகள் விரும்பும் முல்லை அரும்பினை வரிசையாக நிறுத்தினாலொத்த வெண் பல்லினையும், நகை மாண்டு இலங்கு நலம் கெழு துவர் வாய் - புன்னகையால் மாண்புற்று விளங்கும் நன்மை வாய்ந்த பவளம் போன்ற வாயினையும் உடையளாய், கோல் அமை விழுத் தொடி விளங்க வீசி - அழகு வாய்ந்த சிறந்த வளையல் விளங்கக் கையை வீசி, கால் உறு தளிரின் நடுங்கி - காற்று வீசப்பெற்ற தளிரென நுடங்கி வந்து, நோய் அசா வீட ஆனாது முயங்கினள் - நமது நோயாகிய வருத்தம் நீங்க அமையாது முயங்கினள்.

(முடிபு) நெஞ்சே! வான் உமிழ் நடுநாள் தந்தை நெடுநகர் ஒரு சிறை நின்றனனாக, சூரர மகளிரிற் பெறற் கரியோள் வீசி நடுங்கி வந்து நோயசா வீட முயங்கினள். விசும்பின் மின்னு வசிபு நுடங்க, வானம் உருமொடு உறைசிதறிப் பெயலுமிழ் நடுநாள் எனவும், வெற்பகம் பொலிய வெல்கொடி கடுப்ப உயர்ந்து தோன்று அருவி நெடுவரைக் கவானிலுள்ள சூரர மகளிர் எனவும் கொள்க.

(வி-ரை.) கோடு - கரையுமாம். மாக விசும்பு - இரு பெயரொட்டு. கருமையும் பரப்பும் பற்றிக் கடல் கண்டன்ன என்றார். விளிவிடன் - தங்கு மிடமுமாம். அருங்கடி என்றதனாற் காவலின் அருமை கூறப்பட்டது. வளி அசைப்ப ஒரு சிறை நின்றனென் என்றதனால், தலைவியாலுள்ள வேட்கை மிகுதியால், தலைவன் இரவுக் குறிக்கண் நின்ற அருமை குறிக்கப்பட்டது. கோலம் - கோல் எனக் குறைந்து நின்றது; கோல் - திரட்சியுமாம். நடுங்கி - அச்சத்தால் நடுங்கி என்றலுமாம். பிழைப்பறிய ஈகையினையுமுடைய என விரித்துரைக்க. கோளறவு அறியா என்றது, எஞ்ஞான்றும் காய்த் தலையுடைய என்றபடி. பசும்பூட் பாண்டியன், பெயர். நெடுவரைக் கவான் - நீண்ட மூங்கிலையுடைய பக்க மலையுமாம்.

## 163. பாலை

[பிரிவின்கண் வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் ஆற்றாமை மீதூரச் சொல்லியது.]

விண்ணதிர்பு தலைஇய விரவுமலர் குழையத்
தண்மழை பொழிந்த தாழ்பெயற் கடைநாள்
எமிய மாகத் துனியுளங் கூரச்
சென்றோ ருள்ளிச் சில்வளை நெகிழப்
௫ [1]பெருநசை யுள்ளமொடு வருதிசை நோக்கி
[2]விளியும் எவ்வமொ டளிய ளென்னாது
களிறுயிர்த் தன்ன கண்ணழி துவலை

(பாடம்) 1. வருநசை. 2. விளியா வெவ்வம். விளிய வெவ்வம்.

முளரி கரியும் முன்பனிப் பானாட்
குன்றுநெகிழ்ப் பன்ன குளிர்கொள் வாடை
எனக்கே வந்தனை போறி புனற்கால்
அயிரிடு குப்பையின் நெஞ்சுநெகிழ்ந் தவிழக்
கொடியோர் சென்ற தேஎத்து மடியா
தினையை யாகிச் சென்மதி
வினைவிதுப் புறுநர் உள்ளலு முண்டே.

—கழார்க்கீர னெயிற்றியார்.

(சொ - ள்.) க—சு. விரவு மலர் குழைய - பல வகையாய மலர் களும் குழைந்திட, விண் அதிர்பு தலைஇய - வானின்கண் முழங்கிக் கூடிய, தண் மழை பொழிந்த தாழ்பெயல் கடைநாள் - குளிர்ந்த மேகம் சொரிந்துபோன குறைந்த பெயலைக்கொண்ட கூதிரின் கடைநாளில், துனி உளம் கூர - மனத்தே வெறுப்பு மிக, எமியமாகச் சென்றோர் உள்ளி - யாம் தமியேமாகப் பிரிந்து சென்ற தலைவரை எண்ணி, சில்வளை நெகிழ - எஞ்சிய சிலவாய வளைகளும் கழன்று போக, பெருநசை உள்ளமொடு வருதிசை நோக்கி - பெரிய ஆர்வம் கொண்ட உள்ளத்தொடு அவர் மீண்டுவரும் திசையை நோக்கி (வருந்தி), விளியும் எவ்வமொடு அளியள் என்னாது - இறத்தற்கேது வாய துன்பத்தோடு கூடி யிருத்தலின் அளிக்கத்தக்காள் இவள் என்று நினையாது,

எ—கூ0. களிறு உயிர்த்தன்ன கண் அழி துவலை - யானை (நீரைப் பருகி) உயிர்ப்பது போலும் இடம் மறைய வீசும் பனித்துளியால், முளரி கரியும் முன்பனிப் பானாள் - தாமரை மலர் கரிந்திடும் முன் பனிக் காலத்துப் பாதி யிரவில், குன்று நெகிழ்ப்பு அன்ன குளிர் கொள் வாடை - மலையையும் நடுங்கச் செய்வது போன்ற குளிரைக் கொண்ட வாடைக்காற்றே, எனக்கே வந்தனை போறி - நீ என் பாலே நலிய வந்தனை போல்கின்றாய் :

கூ0—சு. புனல் கால் அயிர் இடு குப்பையின் - நீர் ஓடுகாலிடத் துள்ள நுண்மணலாலாய மேடு கரைந்திடல்போல, நெஞ்சு நெகிழ்ந்து அவிழ - நெஞ்சம் கரைந்து இளக, கொடியோர் சென்ற தேஎத்து - கொடியவராய அத் தலைவர் சென்ற திசையில், மடியாது இனையை ஆகிச் சென்மதி - அயராது இன்ன தன்மையினை ஆகிச் செல்வாயாக, (செல்லின்), வினை விதுப்பு உறுநர் உள்ளலும் உண்டு - பொருளீட்டும் தொழிலிற் பெருவேட்கை யுடையார் என்னை நினைத்து வருதலும் உண்டு.

(முடிபு) தாழ்பெயற் கடைநாள், சென்றோர் உள்ளி எவ்வமொடு (இருத் தலின்) அளியள் என்னாது, குளிர்கொள் வாடையே ! எனக்கே வந்தனை போறி; கொடியோர் சென்ற தேஎத்துச் சென்மதி ; வினை விதுப்புறுநர் உள்ளலு முண்டு.

(வி - ரை.) விளியும் எவ்வமொடு என்பதற்குத் துன்பத்தால் இறந்துபடுவள் என்றுரைத்தலுமாம். விளியா எவ்வமொடு என்பது பாடமாயின் கெடாத துன்பத்தினொடு (இருத்தலின்) என்றுரைக்க. என்னாது வந்தனை எனக் கூட்டுக.

## 164. முல்லை

[பாசறைக்கண் இருந்த தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]

கதிர்கை யாக வாங்கி ஞாயிறு
பைதறத் தெறுதலிற் பயங்கரந்து மாறி
விடுவாய்ப் பட்ட வியன்கண் மாநிலம்
காடுகவின் எதிரக் கனைபெயல் பொழிதலிற்
௫ பொறிவரி யினவண் டார்ப்பப் பலவுடன்
நறுவீ முல்லையொடு தோன்றி தோன்ற
[1]வெறியேன் றன்றே வீகமழ் கானம்
எவன்கொல் மற்றவர் நிலையென மயங்கி
இருபனி உறைக்குங் கண்ணொ [2]டினைபாங்
௧௦ கின்னா துறைவி தொன்னலம் பெறூஉம்
இதுநற் காலங் காண்டிசின் பகைவர்
மதில்முகம் முருக்கிய தொடிசிதை மருப்பிற்
கந்துகால் ஒசிக்கும் யானை
வெஞ்சின வேந்தன் வினைவிடப் பெறினே.

—மதுரைத் தமிழ்க்கூத்தன் நாகன்றேவனார்.

(சொ - ள்.) நெஞ்சே! ௧௧—௪. பகைவர் மதில் முகம் முருக்கிய தொடி சிதை மருப்பின் - பகைவரது மதிற்கதவினைச் சிதைத்த பூண் சிதைந்த கோட்டினையும், கந்து ஒசிக்கும் கால் யானை - கட்டுத் தறியினை ஒடிக்கும் காலினையுமுடைய யானைகளையுடைய, வெம்சின வேந்தன் வினைவிடப்பெறின் - கொடிய சினத்தினையுடைய நம்வேந்தன் இப் போரினை முடிக்கப்பெறின்,

௧—௭. ஞாயிறு கதிர் கையாக வாங்கி - ஞாயிறு தன் கதிரே கையாக ஈரத்தினைக் கவர்ந்து, பைது அற தெறுதலின் - பசுமையறக் காய்தலின், பயம் கரந்து மாறி - நீர் இல்லையாகி ஒழிய, விடுவாய்ப் பட்ட - பிளத்தல் பொருந்திய, வியன் கண் மாநிலம் - மிக்க இடம் வாய்ந்த பெரிய புவியிலே, காடு கவின் எதிர - காடு (பண்டை)அழகினை எய்த, கனை பெயல் பொழிதலின் - மிக்க மழை பொழிந்தமையால், பொறிவரி இனவண்டு ஆர்ப்ப - பொறிகளையும் வரிகளையும் உடைய கூட்டமாய வண்டுகள் ஆரவாரம் செய்ய, நறுவீ முல்லையொடு தோன்றி பல உடன் தோன்ற - நறிய முல்லைப்பூவுடன் செங்காந்தட் பூவும் வேறு பல பூக்களும் ஒருங்கு மலர, கானம் வீ கமழ் வெறி ஏன்றன்று - காடு மலர் நாறும் நாற்றம் பொருந்தியது;

௮—௧௧. அவர்நிலை எவன்கொல் என மயங்கி - நம் தலைவர் நிலை என்னாயிற்றோ என மயங்கி, இரு பனி உறைக்கும் கண்ணொடு - தாழும் நீரினைச் சிந்தாநிற்கும் கண்களுடன், ஆங்கு இனைபு இன்னாது உறைவி - மனையின்கண் வருந்தி இன்னாமையுடன் வதிவாளாய தலைவி, தொல்நலம் பெறூஉம் நல்காலம் இது காண்டிசின் -

(பாடம்) 1. வெறி வென்றன்றே. 2. ௯-௧௦. இனையாவின்னாது.

(நம்மைக் கண்டு) பழைய நலத்தினை அடையும் நல்ல காலம் இது வாகும் காண்பாயாக.

(முடிபு) நெஞ்சே! வெஞ்சின வேந்தன் வினைவிடப் பெறின், மாநிலம் காடு கவின் எதிரப் பெயல் பொழிதலின் கானம் வெறி என்றன்று; அவர் நிலை யாதோ என மயங்கி இனைபு ஆங்கு இன்னுது உறைவி தொன்னலம் பெறாஉம் நற்காலம் இதுகாண்.

(வி - ரை.) பயம் - வளமுமாம். விடுவாய் - பிளப்பு. நலம் பெறாஉம் நற்காலம் இது என மாறுக. வெஞ்சின வேந்தன் வினை விடப்பெறின் என்றமையால், வேந்தன் வெற்றி யெய்தியும் சின மிகுதியாற் சந்திற்கு ஒருப்படாதுளன் என்பது போதரும்.

(மே - ள்.) [1]'ஏனோர் மருங்கினும்' என்னுஞ் சூத்திரத்து, (இச்செய் யுள்) பிரிதற் பகுதியாகிய பாசறைப் புலம்பல் எனினும் நிலம்பற்றி முல்லை யாயிற்று என்றுரைத்தனர் இளம்.

---

## 165. பாலை

[மகட்போக்கிய தாயது நிலைமை கண்டார் சொல்லியது.]

கயந்தலை மடப்பிடி பயம்பிற் பட்டெனக்
களிறுவிளிப் படுத்த கம்பலை வெரீஇ
ஒய்யென வெழுந்த செவ்வாய்க் குழவி
தாதெரு மறுகின் மூதா ராங்கண்
௫ எருமை நல்லான் பெறுமுலை மாந்தும்
நாடுபல இறந்த நன்ன ராட்டிக்கு
ஆயமும் அணியிழந் தழுங்கின்று தாயும்
[2]இன்றோள் தாராய் இறீஇயரென் னுயிரெனக்
கண்ணும் நுதலும் நீவித் தண்ணெனத்
௧0 தடவுநிலை நொச்சி வரிநிழ லசைஇத்
தாழிக் குவளை வாடுமலர் [3]சூட்டித்
தருமணற் கிடந்த பாவையென்
[4]அருமக ளேயென முயங்கினள் அழுமே.

(சொ - ள்.) ௧—௫. கயந்தலை மடப் பிடி பயம்பிற் பட்டென - மெல்லிய தலையையுடைய இளைய பெண்யானை குழியில் அகப்பட்ட தாக, களிறு விளிப்படுத்த கம்பலை வெரீஇ - களிற்றியானை கூப்பீடு செய்த ஆரவாரத்திற்கு அஞ்சி, ஒய்யென எழுந்த செவ்வாய்க் குழவி - விரைந்தெழுந்த சிவந்த வாயினதாய அதன் கன்று, தாது எரு மறு கின் மூதூர் ஆங்கண் - தாதாகிய எருவினையுடைய தெருக்களை யுடைய பழைய ஊராய அவ்விடத்து, எருமை நல் ஆன் பெறு முலை

1. தொல். அகத். ௨௪. (பா - ம்) 2. ஈன்றோட்டாராய். 3. சூடி. 4. மருமகள்.

மாந்தும் - எருமையாய நல்ல மாட்டினின்றும் பெறுகின்ற முலைப்பாலை உண்ணும் இடமாய, நாடு பல இறந்த நன்ன ராட்டிக்கு - பல நாடு களைக் கடந்து சென்ற நன்மையையுடையாள் பொருட்டு,

எ. ஆயமும் அணி இழந்து அழுங்கின்று - ஆயமும் பொலி விழந்து வருந்துகின்றது;

எ—௧௩. தாயும் - தாயும், இறீஇயர் என் உயிர் என - என் உயிர் கெடுவதாக என்று நொந்து கூறி, தருமணல் கிடந்த பாவை - கொணர்ந்து பரப்பிய மணலில் கிடந்த மகளது பாவையை எடுத்து, கண்ணும் நுதலும் நீவி - அதன் கண்ணையும் நெற்றியையும் தடவி, தடவு நிலை நொச்சி வரிநிழல் தண் என அசைஇ - வளைந்த நிலையினை யுடைய நொச்சியின் வரிவரியாகவுள்ள நிழலில் தட்பமுறக் கிடத்தி, தாழிக் குவளை வாடு மலர் சூட்டி - தாழிக்கண்ணே யுள்ள குவளை யின் வாடிய மலரைச் சூட்டி, என் அருமகளே - எனது அரிய மகளே, இன் தோள் தாராய் என முயங்கினள் அழும் - நினது இனிய தோளைத் தருவாயாக என்று கூறித் தழுவி அழாநிற்பள்.

(முடிபு) நாடு பல இறந்த நன்னராட்டிக்கு ஆயமும் அழுங்கின்று ; தாயும், இறீஇயர் என் உயிர் எனக் கூறி, பாவையை கண்ணும் நுதலும் நீவி, நிழல் அசைஇ, மலர் சூட்டி, என் அருமகளே இன்றோள் தாராய் என முயங்கினள் அழும்.

(வி - ரை.) கற்புக்கடன் பூண்டு கணவனுடன் சென்றாளாக லின் 'நன்னராட்டி' என்றார். ஆயமும் அணியிழந் தழுங்கின்று என்றதனால் தாயது நிலைமையோடு ஆயத்தின் நிலைமையையும் கண் டார் சொல்லினர் என்று கொள்க. ஆயமும் தாயும் என்னும் உம் மைகள் எச்சப் பொருளன. ஈன்றோட்டாராய் என்பது பாடமாயின், தாய் பாவையை நோக்கி, நின்னை ஈன்றவளாகிய என்மகளைக் காட்டு வாயாக என்று கூறினாளெனக் கொள்ளல் வேண்டும். தண்ணென முயங்கினள் என்று இயைத்தலுமாம். தலைவி யிருந்து நீர் வார்க் கப் பெறாமையால், தாழிக் குவளையின் மலர் வாடுவதாயிற்று.

(மே - ள்.) [1]'தன்னும் அவனும் அவளும் சுட்டி' என்னுஞ் சூத் திரத்து, (இச்செய்யுள்) 'தாய் நிலையும் ஆயத்து நிலையும் கண்டோர் கூறிய வாறுணர்க' என்றும், [2]'பால்கெழு கிளவி நால்வர்க்கு முரித்தே' என்னுஞ் சூத்திரத்து,'தருமணற் கிடந்த பாவையென், அருமகளே யென முயங்கின ளழுமே' - இது நற்றாய் மணற்பாவையைப் பெண்பாலாகக் கூறித் தழீக் கொண்டழுதலிற் பால்கெழு கிளவியாயிற்று என்றும் கூறினர் நச்.

---

1. தொல். அகத். ௩௯. 2. தொல். பொருளி. ௫.

## 166. மருதம்

[பரத்தையொடு புனல்ஆடிய தலைமகன் தலைமகளிடைப் புக்கு யான் ஆடிற்றிலன் என்று சூளுற்றான் என்பது கேட்ட [1]பரத்தை தன் பாங்காயி னார் கேட்பச் சொல்லியது.]

நன்மரங் குழீஇய நனைமுதிர் சாடி
பன்னாள் அரித்த கோஒய் உடைப்பின்
மயங்குமழைத் துவலையின் மறுகுடன் பனிக்கும்
பழம்பல் நெல்லின் வேளூர் வாயில்
௫ நறுவிரை தெளித்த நாறிணர் மாலைப்
பொறிவரி யினவண் டூதல கழியும்
உயர்பலி பெறூஉம் உருகெழு தெய்வம்
புனையிருங் கதுப்பின் [2]நீகடுத் தோள்வயின்
அனையே னாயின் அணங்குக என்னென
௧௦ மனையோட் டேற்றும் மகிழ்ந னாயின்
யார்கொல் வாழி தோழி நெருநல்
தார்பூண் களிற்றிற் றலைப்புணை தழீஇ
வதுவை ஈரணிப் பொலிந்த நம்மொடு
புதுவது வந்த காவிரிக்
௧௫ [3]கோடுதோய் மலிர்நிறை யாடி யோரே.

—இடையன் நெடுங்கீரனார்.

(சொ - ள்.) ௧௧. தோழி -, வாழி -,

௧—௪. நல்மரம் குழீஇய - நல்ல மரங்கள் சூழ்ந்த (கள் விற்கும் இல்லில் உள்ள), பல் நாள் அரித்த நனைமுதிர் சாடி - பல நாளும் வடிக்கப்பெற்ற கள் நிறைந்த சாடியை, கோஒய் உடைப்பின் - முகக் கும் கலம் உடைத்திடின், மயங்கு மழைத் துவலையின் மறுகு உடன் பனிக்கும் - விரவிய மழைத் துளிபோலத் தெருவெலாம் துளிக்கும் (ஊராய), பழம் பல் நெல்லின் வேளூர் வாயில் - பழைய பலவகை நெற்களையும் உடைய வேளூரின் வாயிலிடத்து,

௫—எ. நறுவிரை தெளித்த நாறு இணர் மாலை - நறுமண நீர் தெளிக்கப்பெற்ற நாறும் கொத்துக்களாலாய பூமாலையை, பொறி வரி இனவண்டு ஊதல கழியும், புள்ளிகளையும் வரிகளையு முடைய கூட்டமாய வண்டு அஞ்சி ஊதாது ஒழிவதற்கு ஏது வான, உயர் பலி பெறூஉம் - உயர்ந்த பலிகளையே பெறும், உருகெழு தெய்வம் - அச்சம் தரும் தெய்வம்,

அ—௯. புனை இரும் கதுப்பின் நீ கடுத்தோள்வயின் - அணிந்த கரிய கூந்தலையுடையளாய நின்னால் ஐயுறப் பெற்றாளுடன், அனை யேன் ஆயின் அணங்குக என் என - யான் புனலாடி வந்தேனாயின் என்னை வருத்துவதாக என்று,

---

1. பரத்தை தன்பாங்கிக்கு. (பா - ம்) 2. நீ வெய்யோள். 3. தோடு தோய்.

௧௦. மனையோள் தேற்றும் மகிழ்நன் ஆயின் - தன் மனைவியை அவள் கணவன் சூளுரைத்துத் தெளியவைப்பானாயின்,

௧௧—௫. நெருநல் - நேற்று, புதுவது வந்த காவிரிக் கோடு தோய் மலிர் நிறை - புதிதாக வந்த காவிரியின் கரை யுச்சியினைத் தோய்ந்துவரும் மிக்க வெள்ளத்தில், தார்பூண் களிற்றில் தலைப்புணை தழீஇ - தாரணிந்த களிற்றினைப் போன்று புணையின் தலையிடத்தை தழுவியிருந்து, வதுவை ஈர் அணிப் பொலிந்த - கூட்டத்திற்குரிய பெரிய அணியாற் பொலிவுற்ற, நம்மொடு ஆடியோர் - நம்மொடு கூடிப் புனலாடினோர், யார் கொல் - யாரோதான்?

(முடிபு) வேளூர் வாயிலில் உயர்பலி பெறும் உருகெழு தெய்வம், நீ கடுத்தோள் வயின் அனையேனாயின், என் அணங்குக என, மகிழ்நன் மனையோளைத் தேற்றுமாயின், நெருநல், காவிரி மலிர் நிறை நம்மொடு ஆடியோர் யார்கொல்?

(வி - ரை.) 'நன்மரங் குழீஇய என்பதன்பின் கள் விற்கும் இல் என்பது வருவிக்கப்பட்டது. நனை - கள். கோழை - கள் விற்கும் கலம். கள்ளும் நெல்லும் மிகுதியாகவுடைய வேளூர் என்றபடி. நறு விரை - பனிநீரும், சந்தன முதலியவற்றின் கலவையுமாம். பலிபெறாஉம் தெய்வம் உருகெழு தெய்வம் என இயையும். கடுத்தல் - ஐயுறல். என் - என்னை. தேற்றுமாயின் எனக் கூட்டுக. புணை - மிதக்கும் கட்டையாலாகிய தெப்பம்; வேழக் கோலைச் சேர்த்துக் கட்டியது மாம். தலைப்புணை - புணையின் முற்பகுதி; 'மைந்து மலி களிற்றிற் றலைப்புணை தழீஇ' (உ௬௬) எனப் பின்னரும் இவ்வாறு வருதல் காண்க. ஈரணி - நீராட்டிற் குரிய அணியுமாம். பொலிந்து என்பது பாடமாயின் பொலிந்து ஆடியோர் என்க. [1]'தோடுதோய் என்பது பேராசிரியர் கொண்ட பாடம்.

(மே - ள்.) [2]'புல்லுதல் மயக்கும்' என்னுஞ் சூத்திரத்து, 'நல்லோர் செய்வினை இகழ்ச்சிக் கண்ணும்' என்னும் பகுதிக்கு இச் செய்யுளை எடுத்துக் காட்டி, இது, 'இளையோர் கூற்று' என்றும், [3]'கிழவோன் விளையாட்டாங்கு மற்றே' என்னுஞ் சூத்திரத்து, 'தோடு தோய் மலிர் நிறை யாடியோரே' எனப் பரத்தை பிறர் அலர்கூறியவழிக் காமஞ் சிறந்து புலந்தவாறு காண்க என்றும் கூறினர் நச்.

## 167. பாலை

[தலைமகன் பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லிச் செலவு அழுங்கியது.]

வயங்குமணி பொருந வகையமை வனப்பிற்
பசுங்காழ் அல்குல் மாஅ யோளொடு
வினைவனப் பெய்திய புனைபூஞ் சேக்கை
விண்பொரு நெடுநகர்த் தங்கி யின்றே
௫ இனிதுடன் கழிந்தன்று மன்னே நாளைப்

1. தொல். மரபியல், அ௭. உரை. 2. தொல். கற். ௧௦. 3. தொல். கற். ௨௩.

பொருந்தாக் கண்ணேம் புலம்புவந் துறுதரச்
சேக்குவங் கொல்லோ நெஞ்சே சாத்தெறிந்
ததர்கூட் டுண்ணும் அணங்குடைப் பகழிக்
கொடுவில் ஆடவர் படுபகை வெரீஇ
௧௦ ஊரெழுந் துலறிய பீரெழு முதுபாழ்
முருங்கை மேய்ந்த பெருங்கை யானை
வெரிநோங்கு சிறுபுறம் [1]உரிஞ ஒல்கி
இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென
மணிப்புறாத் துறந்த மரஞ்சோர் [2]மாடத்
௧௫ தெழுதணி கடவுள் போகலிற் புல்லென்
றொழுகுபலி மறந்த மெழுகாப் புன்றிணைப்
[3]பாணாய் துன்னிய பறைக்கட் சிற்றில்
குயில்காழ் சிதைய மண்டி அயில்வாய்க்
கூர்முகச் சிதலை வேய்ந்த
௨௦ போர்மடி நல்லிறைப் பொதியி லானே.

—கடியலூர் உருத்திரங்கண்ணனார்.

(சொ - ள்.) ௭. நெஞ்சே -,

௧—௫. வயங்கு மணி பொருத - பளிங்கு மணியினை யொத்த, வகை அமை வனப்பின் - கூறுபாடமைந்த அழகினையுடைய, பசு காழ் அல்குல் மாஅயோளொடு - பசிய சரத்தாலாய மேகலையை அணிந்த அல்குலையுடைய மாமை நிறத்தினளாய நம் தலைவியுடன், விண்பொரு நெடுநகர் - வானை அளாவும் நீண்ட மாளிகையில், வினை வனப்பு எய்திய புனை பூ சேக்கை தங்கி - அழகிய வேலைப்பாடு அமைந்த புனையப் பெற்ற பூக்களையுடைய பள்ளியின்கண் தங்குதலானே, இன்று - இன்றைப் போழ்து, இனிது உடன் கழிந்தன்று - முழுதும் இனிதாகக் கழிந்தது ;

௭—௨௦. சாத்து எறிந்து அதர் கூட்டுண்ணும் - வழிச் செல்லும் வாணிகச் சாத்தினைக் கொன்று அவர் பொருளைக் கொள்ளை கொண்டு உண்ணும், அணங்கு உடை பகழி - வருத்தத்தைச் செய்யும் அம்பினையும், கொடுவில் - வளைந்த வில்லையும் உடைய, ஆடவர் படு பகை வெரீஇ - மறவரது மிக்க பகையை அஞ்சி, ஊர் எழுந்து உலறிய - குடிபோகப் பெற்றமையின் வளன் அற்ற, பீர்எழு முதுபாழ் - பீர்க்குப் படர்ந்த பெரிய பாழ் இடத்தில், முருங்கை மேய்ந்த பெருங்கை யானை - முருங்கையினைத் தின்ற பெரிய கையினையுடைய யானையின், வெரிந் ஓங்கு சிறுபுறம் உரிஞ - முதுகினின் றுயர்ந்த பிடரி உராய்தலின், ஒல்கி இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென - தளர்ந்து செங்கல்லாலாய நீண்ட சுவரிலுள்ள விட்டமரம் வீழ்ந்ததாக, மணிப் புறாத் துறந்த மரம் சோர் மாடத்து - மணிப்புறா விட்டொழிந்த மரம் சோர்ந்த மாடத்தினையும், எழுது அணி கடவுள் போகலின் - எழுதப் பெற்ற அழகிய கடவுள் புறத்தே போய் விட்டமையின், புல்என்று -

(பா - ம்) 1. உரிஞ்ச. 2. மாடக் கெழுதணி. 3. பாணாய் துள்ளி பறைக்கட்சிறில்.

பொலிவற்று, ஒழுகு பலி மறந்த - இடையறாது நிகழும் பலி மறக்கப் பெற்ற, மெழுகாப் புன் திணை - மெழுகப்படாத புல்லிய திண்ணையில், பால் நாய் துன்னிய பறைக்கண் சிறுஇல் - ஈன்றணிமையுடைய நாய் தங்கிய பறிந்த இடத்தையுடைய சிற்றிலையும் அவ்விடத்தே, குயில் காழ் சிதைய மண்டி - இயற்றப்பட்ட கைம் மரங்கள் சிதையுமாறு பரவி, அயில்வாய் கூர்முக சிதலை வேய்ந்த - வேலின் முனை போன்ற கூரிய முகத்தினையுடைய கறையான் மூடிக் கொள்ளுதலின், போர் மடி நல்ல இறை பொதியில் ஆன் - கூரை மடிந்த நல்ல இறப்பினையுமுடைய அம்பலத்தின்கண்,

௫—எ. புலம்பு வந்து உறுதரப் பொருந்தாக் கண்ணேம் - தனிமை வந்தடையத் துயிலாத கண்களை யுடையேமாய், நாளை - நாளைப் போழ்தில், சேக்குவம் கொல் - தங்கி இருப்பேமோ (அஃது இயலாதன்றே.)

(முடிபு) நெஞ்சே! இன்று, நெடுநகர், சேக்கைக்கண் மாயோளொடு இனிதுடன் கழிந்தன்று மன்னே; நாளை, பொதியிலின்கண் பொருந்தாக் கண்ணேம் புலம்பு வந்துறுதரச் சேக்குவங் கொல்லோ.

மாடத்தினையும் சிற்றிலையும் இறப்பினையு முடைய பொதியில் என்க.

(வி - ரை.) வயங்கு மணி - பளிங்கு, கண்ணாடி. [1]'வயங்கலுள் துப்பெறிந்தவை போல' என்புழி வயங்கல் இப் பொருட்டாதல் உணர்க. மன் - மிகுதிப் பொருட்டு. ஊர் - ஊரினுள்ளார்க்கு ஆகுபெயர். எழுந்து - எழுதலால். முருங்கை - முருங்கையை; முருங்கை - தொடை நோக்கித் திரியாது நின்றது. இட்டிகை - செங்கல். பாணய் - பாலினையுடைய நாய்; ஈன்றணிமையுடைய நாய் என்றபடி. குயிலுதல் - இயற்றுதல்.

(மே - ள்.) [2]'கரணத்தினமைந்து' என்னுஞ் சூத்திரத்து 'தான் அவட் பிழைத்த நிலையின் கண்ணும்' என்னும் பகுதியில் இச் செய்யுள் நெஞ்சினொற் பிரியக் கருதி வருந்திக் கூறியது என்றார் நச்.

## 168. குறிஞ்சி

[இரவுக்குறி வந்த தலைமகனை இரவுக்குறி விலக்கி வரைவு கடாயது.]

யாமம் நும்மொடு கழிப்பி நோய்மிகப்
பனிவார் கண்ணேம் வைகுதும் இனியே
ஆன்றல் வேண்டும் வான்றோய் வெற்ப
[3]பல்லான் குன்றிற் படுநிழற் சேர்ந்த
௫ நல்லான் பரப்பிற் குழுமூர் ஆங்கண்
கொடைக்கடன் ஏன்ற கோடா நெஞ்சின்
உதியன் அட்டில் போல ஒலியெழுந்து
அருவி யார்க்கும் பெருவரைச் சிலம்பின்

1. கலி. ? 2. தொல். கற். ௫. (பா - ம்) 3. வல்லான் குன்றிற்.

ஈன்றணி யிரும்பிடி தழீஇக் களிறுதன்
௧௦ தூங்குநடைக் குழவி துயில்புறங் காப்ப
ஒடுங்களை புலம்பப் போகிக் கடுங்கண்
வாள்வரி வயப்புலி கன்முழை யுரறக்
கானவர் மடிந்த கங்குல்
மானதர்ச் சிறுநெறி வருதல் நீயே.

—கோட்டம்பலத்துத் துஞ்சிய சேரமான்

(சொ - ள்.) ௩. வான் தோய் வெற்ப - வானை அளாவிய மலையையுடைய தலைவனே!

௧—௨. யாமம் நும்மொடு கழிப்பி - இராப் பொழுதை நும்முடன் கூடிக் கழித்து, நோய் மிக - பின்பு இரவுக்குறியின் ஏதம் அஞ்சித் துன்பம் மிகுதலால், பனிவார் கண்ணேம் வைகுதும் - நீர் ஒழுகுங் கண்களை யுடையேமாய் வருந்தி யிருக்கின்றேம் ஆகலின்,

௪—௮. பல்லான் குன்றில் படுநிழல் சேர்ந்த - பல்லான் குன்று என்னும் மலையிற் பொருந்தும் நிழலின்கட் சேர்ந்த, நல்ஆன் பரப்பின் குழூஉர் ஆங்கண் - நல்ல ஆனிரையின் பரப்பினைக் கொண்ட குழூரிடத்தே, கொடைக் கடன் ஏன்ற கோடா நெஞ்சின் - ஈகையாய கடனை ஏற்றுக்கொண்ட கோட்டமில்லாத நெஞ்சினையுடைய, உதியன் அட்டில்போல - உதியன் என்பானது அடுக்களை போல, ஒலி எழுந்து அருவி ஆர்க்கும் பெருவரைச் சிலம்பின் - ஒலிமிக்கு அருவிகள் ஆரவாரித் திழியும் பெரிய வரையினது பக்க மலையில், களிறு ஈன்றணி இரும்பிடி தழீஇ - களிறு ஈன்ற அணிமையுடைய, பெரிய பிடியினைத் தழுவிக்கொண்டு, தன் தூங்கு நடைக்குழவி துயில் புறம் காப்ப - தனது அசைந்த நடையினையுடைய குழவி உறங்குகின்ற இடத்தைக் காத்திருக்க, கடுங்கண் வாள் வரி வயப் புலி - தறுகண்மையுடைய வாள்போன்ற வரியினையுடைய வலிய புலி, ஒடுங்கு அளை புலம்ப போகி - ஒடுங்கிய முழை தனித்திடப் புறம்போய், கல் முழை உரற - மலையின் குகையிடத்தில் முழங்க, கானவர் மடிந்த கங்குல் - வேட்டுவரும் துயிலும் நள்ளிரவில், மான் அதர்ச் சிறுநெறி - விலங்குகள் செல்லும் வழியாகிய சிறுநெறியில், நீ வருதல் - நீ வருதலை, இனி ஆன்றல் வேண்டும் - இனி ஒழிதல் வேண்டும்.

(முடிபு) வெற்ப! யாமம் நும்மொடு கழிப்பி, பனிவார் கண்ணேம் வைகுதும் ஆகலின், சிலம்பில், களிறு காப்ப, புலி உரற, கானவர் மடிந்த கங்குலிற் சிறு நெறிக்கண் நீ வருதலை இனி ஆன்றல் வேண்டும்.

(வி - ரை.) இராப் பொழுதை நும்முடன் கழிக்கும் நாளெல்லாம் அப்பொழுது இன்பமாயினும் நீ வரும் வழியின் ஏதத்தை நினைந்து பெரிதும் துன்புறுகின்றேம் ஆகலின் இனி நீ அவ்வாறு வருதலை ஒழிதல் வேண்டும் என்று கூறி இரவுக்குறி விலக்கி வரைவு கடாயினளென்க. ஆன்றல் - அமைதல்; ஒழிதல். பல்லான் குன்று -

ஒரு மலையின் பெயர் போலும்; வல்லாண்குன்று என்பது பாடமாயின் வல்லாண்மைக்கு இடமாகிய குன்று என்க. அட்டில்போல - அட்டிலில் ஒலி யெழுதல்போல. ஒலி, உண்ணவருவாராலாவது. ஈன்றணி - ஈன்ற அணிமை. ஒடுங்கு அளை - புலி துயின்ற இட்டிய முழை எனவும், கன்முழை - பெரிய மலையின் குகை எனவும் கொள்க. களிறு காக்குமாறு புலி உரற என்க. இக் கருத்து [1]'இலங்கு மருப்பி யானை, குறும்பொறை மருங்கின் அமர்துணை தழீஇக், கொடுவரி யிரும்புலி காக்கும்' என்னும் செய்யுளில் அமைந்திருத்தலுங் காண்க. மானதர்ச் சிறுநெறி என்றமையால் மக்கள் இயங்குதற்காகாத இடுகிய நெறி என்பது பெற்றாம்.

## 169. பாலை

[தலைமகன் இடைச் சுரத்துத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]

மரந்தலை கரிந்து நிலம்பயம் வாட
[2]அலங்குகதிர் வேய்ந்த அழல்திகழ் நனந்தலைப்
புலிதொலைத் துண்ட பெருங்களிற் றொழியூன்
கலிகெழு மறவர் காழ்க்கோத் தொழிந்ததை
௫ ஞெலிகோற் சிறுதீ மாட்டி யொலிதிரைக்
கடல்விளை யமிழ்தின் கணஞ்சால் உமணர்
சுனைகொள் தீநீர்ச் சோற்றுலைக் கூட்டுஞ்
சுரம்பல கடந்த நம்வயிற் படர்ந்துநனி
பசலை பாய்ந்த மேனியள் நெடிதுநினைந்து
௧௦ செல்கதிர் [3]மழுகிய புலம்புகொள் மாலை
மெல்விரல் சேர்த்திய நுதலள் மல்கிக்
கயலுமிழ் நீரிற் கண்பனி வாரப்
பெருந்தோள் [4]நெகிழ்ந்த செல்லலொடு
வருந்துமால் அளியள் திருந்திழை தானே.

—தொண்டிஆமூர்ச் சாத்தனார்

(சொ - ள்.) நெஞ்சே!

௧—அ. மரம் தலை கரிந்து நிலம் பயம் வாட - மரங்கள் உச்சி கரியவும் நிலம் வளம் குன்றவும், அலங்கு கதிர் வேய்ந்த அழல் திகழ் நனந்தலை - அசைகின்ற ஞாயிற்றின் கதிர் சூழப்பெற்ற வெம்மை விளங்கும் அகன்ற பாலை நிலத்தே, புலி தொலைத்து உண்ட பெருங் களிற்று ஒழி ஊன் - புலியாற் கொன்று தின்னப்பெற்ற பெரிய யானையினது எஞ்சிக்கிடந்த ஊனில், கலிகெழு மறவர் காழ்கோத்து ஒழிந்ததை - ஆரவாரம் பொருந்திய ஆறலைப்போர் கோலிற் கோத்துக் (கொண்டேகியது போக) எஞ்சியதை, ஒலிதிரை கடல்விளை அமிழ்தின் கணம் சால் உமணர் - ஒலிக்கும் அலை பொருந்திய கடலில்

1. குறுந். உகரு. (பாடம்) 2. வயங்கு கதிர். 3. மழுங்கிய. 4. நெகிழ்த்த.

விளையும் உப்பினைக் கொணரும் கூட்டம் மிக்க உப்பு வாணிகர், ஞெலிகோல் சிறு தீ மாட்டி - தீக்கடை கோலாலாக்கிய சிறு தீயில் வதக்கி, சுனை கொள் தீ நீர் சோற்று உலை கூட்டும் - சுனையிற்கொண்ட இனிய நீரலாய சோற்றின் உலையில் கூட்டி ஆக்கும், சுரம்பல கடந்த நம் வயின் - பல சுர நெறிகளையும் கடந்து வந்துள நம்மிடத்து, படர்ந்து – தன் உள்ளம் படர்தலால்,

அ—கூ௯. திருந்து இழை - திருந்திய அணிகளையுடைய நம் தலைவி, செல்கதிர் மழுகிய புலம்பு கொள் மாலை - மறையும் கதிர் மங்கிய தனிமை கொண்ட மாலையில், நனி பசலை பாய்ந்த மேனியள் - பசலை மிகவும் பரந்த மேனியளாகி, நெடிது நினைந்து - நீள நினைந்து, மெல் விரல் சேர்த்திய நுதலள் - மெல்லிய விரல்களைச் சேர்த்த நெற்றியினளாய், கயல் உமிழ் நீரில் கண் பனி மல்கி வார - கயல்மீன் உமிழும் நீர்போலக் கண்களில் நீர் நிறைந்து ஒழுக, பெருந்தோள் நெகிழ்ந்த செல்லலொடு - பெரிய தோள் மெலிந்ததாலாய துன்பத்துடன், வருந்தும் - வருந்துவள்; அளியள் - இரங்கத்தக்காள்.

(முடிபு) நெஞ்சே! சுரம்பல கடந்த நம்வயின் தன் உள்ளம் படர்தலின், திருந்திழை, மாலையிலே நெடிது நினைந்து பசலை பாய்ந்த மேனியளாய், விரல் சேர்த்திய நுதலளாய், கண்பனி வாரச் செல்லலொடு வருந்தும்; அளியள்.

(வி - ரை.) கரிந்து - கரிய எனத் திரிக்க. பயம் - ஏனை வளங்கள். காழ் - இருப்புச் சலாகை. கடல் விளை அமிழ்து - உப்பு. கணம் சால் உமணர் என்றமையின் உமணர் கூட்டமாகவே வருவர் என்பது பெற்றும். சுனைகொள் தீ நீர் என்றமையால் சுரத்தில் நீர் இன்மைபெறப்படும். படர்ந்து - படர்தலால்.

## 170. நெய்தல்

[தலைமகள் காமமிக்க கழிபடர் கிளவியாற் சொற்றது.]

கானலுங் கழறாது கழியுங் கூறாது
தேனிமிர் நறுமலர்ப் புன்னையும் மொழியா
[1]தொருநின் னல்லது பிறிதியாதும் இலனே
இருங்கழி மலர்ந்த கண்போல் நெய்தற்
௫ கமழிதழ் நாற்றம் அமிழ்தென நசைஇத்
தண்டா தூதிய வண்டினங் களிசிறந்து
[2]பறைஇய [3]தளருந் துறைவனை நீயே
சொல்லல் [4]வேண்டுமால் அலவ பல்காற்
கைதையம் படுசினை யெவ்வமொ டசாஅங்
௧0 கடற்சிறு காக்கை காமர் பெடையொடு
கோட்டுமீன் வழங்கும் வேட்டமடி பரப்பின்

(பாடம்.) 1. பறைவ தளரும், பறைஇ தளரும். 2. ஒருநீய. 3. கிளரும் 4. வேண்டுமாரலவ.

வெள்ளிருக் கனவும் நள்ளென் யாமத்து
நின்னுறு விழுமங் களைந்தோள்
தன்னுறு விழுமம் நீந்துமோ வெனவே.

—மதுரைக் கள்ளிற் கடையத்தன் வெண்ணாகனார்.

(சொ - ள்.) அ. அலவ - நண்டே !

௪—எ. இரு கழி மலர்ந்த - கரிய நீரோடையில் மலர்ந்த, கண் போல் நெய்தல் கமழ் இதழ் நாற்றம் - கண்ணைப்போலும் நெய்தற் பூவின் கமழும் இதழ் நாற்றத்தினை, அமிழ்து என நசைஇ - அமிழ்தம் போலும் என விரும்பிச் சென்று, தண் தாது ஊதிய - குளிர்ந்த தாதினை உண்ட, வண்டு இனம் களி சிறந்து - வண்டின் கூட்டம் களிப்புமிக்கு, பறைஇய தளரும் துறைவனை - பறத்தற்கு இயலாது சோரும் துறையையுடைய தலைவனுக்கு,

க—உ. கானலும் கழறாது - கடற்கரைச் சோலையும் சென்று தூது கூறாது, கழியும் கூறாது - உப்பங்கழியும் இயம்பாது, தேன் இமிர் நறுமலர்ப் புன்னையும் மொழியாது - வண்டுகள் ஒலிக்கும் நறிய மலரினையுடைய புன்னையும் மொழியாது ;

௩. ஒரு நின் அல்லது பிறிது யாதும் இலன் - நின்னையே யன்றி வேறு எத்துணையும் இல்லேன் ;

அ—க௪. கைதைஅம் படு சினை - தாழை மரத்தின் தாழ்ந்த கிளையில், காமர் பெடையொடு எவ்வமொடு அசாஅம் - விருப்பம் மிக்க பெடையுடன் வருத்தமுடன் தளர்ந்திருக்கும், கடல் சிறு காக்கை - சிறிய கடற் காக்கை, கோட்டு மீன் வழங்கும் வேட்டம் மடி பரப்பின் - சுறாமீன் இயங்கும் வேட்டையாடுதல் நீங்கிய இடத்திலுள்ள, வெள் இரு கனவும் - வெள்ளிய இறாமீனைப் பற்றி யுண்பதாகக் கனவு காணும், நள் என் யாமத்து - இருள் செறிந்த நடுஇரவில் வந்து, பல்கால் நின் உறு விழுமம் களைந்தோள் - பலநாளும் நினது மிக்க துயரினை நீக்கியோள், தன் உறு விழுமம் நீந்துமோ எனவே - நின் பிரிவால் எய்திய தனது மிக்க துயரினைக் கடக்க வல்லளோ என்று,

எ—அ. நீயே சொல்லல் வேண்டும் - அத் தலைவன்பாற் சென்று நீயே கூறுதல் வேண்டும்.

(முடிபு) அலவ ! துறைவனுக்குக் கானலுங்கழறாது; கழியுங்கூறாது; புன்னையும் மொழியாது ; ஒரு நின்னல்லது பிறிது யாதும் இலன்; நள்ளென் யாமத்து வந்து பன்னாளும் நின்னுறு விழுமம் களைந்தோள், தன்னுறு விழுமம் நீந்துமோ என நீயே சொல்லல் வேண்டும்.

(வி-ரை.) கானல், கழி, புன்னை என்பன சான்றாகத் தலைவர் என்னைக் கலந்து சென்றாராயினும், அவை யெல்லாம் தலைவனைப் பிரிந்து எய்தும் வருத்தத்தை உணரவல்ல அன்மையானும், ஒருகால் உணரினும் சென்று கூறமாட்டாதன ஆகலானும் நீயே துறைவனுக்குச் சொல்லல்வேண்டு மெனத் தலைவி அலவனை நோக்கிக் கூறினா

ளன்க. கண்போல் நெய்தல் என்றது, [1]'பொருளே உவமம் செய்தனர் மொழியினும்' என்பதனால் அமைந்தது. துறைவனை - துறைவனுக்கு. காக்கை பெடையொடு வெள்ளிருக் கனவும் யாமம் என்க. கோட்டு மீன் வழங்கும் பரப்பு எனவும், வேட்டமடி பரப்பு எனவும் இயையும். நின்னுறு விழுமம் களைந்தோள் என்றமையால் நீ அவளது விழுமத்தைக் களையாதிருத்தல் நன்றி கோறலாம் என்பது பட நின்றது. இனி, பறைஇய தளரும் என்பதனை முற்றாக்கிக் கானல் முதலியன போலாது வண்டு சென்று கூறுதற்கு உரியதே னும், அது தேனையுண்ட களிப்பால் சோர்ந்து கிடக்கும் ஆகலின் நீயே சொல்லல் வேண்டும் என்றாள் எனலுமாம். காமம் மிக்க கழி படர் கிளவியாவது தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவி, தனது வேட்கை மிகுதியால், கேளாதனவற்றைக் கேட்பனவாக விளித்து, தலைவனிடத்துச் சென்று என் துன்பத்தை மொழியீரோ என்று கூறு தலாம். நீந்துமோ என்றதனால் விழுமம் கடல் என்று குறித்த வாறும்.

(உ - றை.) தாதினை உண்ட வண்டினம் களிசிறந்து பறக்க மாட் டாது தளரும் துறைவன் என்றது, தான் பெற்ற வேறு இன்பத்தில் மயங் கித் தலைவியை மறந்திருக்கும் தலைவன் என்றவாறு.

காக்கை பெடையொடு யாமத்து இருக் கனவும் என்றது தலைவி தலை வனுடன் கூடியிருந்து முன்புபெற்ற இன்பத்தை நினைந்து வருந்துகின்றாள் என்றவாறு.

(மே - ள்.) [2]'நோயு மின்பமும்' என்னுஞ் சூத்திரத்து இச் செய்யுள், 'சொல்லாமரபின சொல்லுவனவாக அழுகை பற்றிக் கூறியது; இவை உயர்திணையுமாயின' என்றார் நச்.

[3]'இன்பத்தை வெறுத்தல்' என்னுஞ் சூத்திரத்து 'நின்னுறு விழுமங் களைந்தோள், தன்னுறு விழுமம் நீந்துமோ எனவே' என்பது துன்பத்துப் புலம்பல் என்னும் மெய்ப்பாடு ஆகுமென்றும், [4]'முட்டுவயிற் கழறல்' என்னுஞ் சூத்திரத்து, 'கானலுங் கழறாது . . . நீயே, சொல்லல் வேண்டு மால் அலவ' என்பது, தூதுமுனி வின்மை என்னும் மெய்ப்பாடு ஆகு மென்றும் கூறினர் பேரா.

---

## 171. பாலை

[தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.]

> நுதலும் நுண்பசப் பிவரும் தோளும்
> அகன்மலை இறும்பின் ஆய்ந்துகொண் டறுத்த
> பணையெழில் அழிய வாடும் நாளும்

---

1. தொல். உவம. ௩- 2. தொல். பொருளி. ௨. 3. தொல். மெய்ப். ௨௨
4. தொல். மெய்ப். ௨௩. (பாடம்) ௩. ஒரு நீயல்லது. ௭. களரும். ௮. வேண்டுமோர்.

நினைவல் மாதவர் பண்பென் றோவா
௫ தினையல் வாழி தோழி புணர்வர்
இலங்குகோல் ஆய்தொடி நெகிழப் பொருள்புரிந்
தலந்தலை ஞெமையத் ததரடைந் திருந்த
மால்வரைச் சீறூர் மருள்பன் மாக்கள்
கோள்வல் ஏற்றை யோசை ஓர்மார்
௧௦ திருத்திக் கொண்ட அம்பினர் நோன்சிலை
எருத்தத் திரீஇ இடந்தொறும் படர்தலிற்
கீழ்ப்படு தாரம் உண்ணு மேற்சினைப்
பழம்போற் சேற்ற தீம்புழல் உணீஇய
கருங்கோட் டிருப்பை ஊரும்
௧௫ பெருங்கை எண்கின் சுரனிறந் தோரே.

—கல்லாடனார்.

(சொ - ள்.) ௫. தோழி -, வாழி -,

௬. பொருள் புரிந்து - பொருள் ஈட்டிவர விரும்பி, இலங்கு கோல் ஆய்தொடி நெகிழ - விளங்கும் திரட்சி பொருந்திய அழகிய நின் தொடி கழன்று விழ,

எ—௧௫. அலந்தலை ஞெமையத்து அதர் அடைந்திருந்த - வாடிய உச்சியினையுடைய ஞெமை மரங்களையுடைய வழியைச் சார்ந்திருந்த, மால்வரைச் சீறூர் - பெரிய மலையடிவாரத்துள்ள சிறிய ஊரில், மருள் பல் மாக்கள் - மருண்ட மக்களாய பலர், கோள்வல் ஏற்றை ஓசை ஓர்மார் - கொல்லுதல் வல்ல கரடி ஏற்றின் ஒலியினை உணர் வாராய், திருத்திக் கொண்ட அம்பினர் - செப்பம் செய்துகொண்ட அம்பினராய், நோன்சிலை எருத்தத்து இரீஇ - வலிய வில்லைத் தோளிற் கொண்டு, இடம்தொறும் படர்தலின் - இடமெலாம் பரவி வருதலின், கீழ்ப்படு தாரம் உண்ணு - தரையிற் கிடக்கும் உணவினை உண்ணுவாய், மேல்சினை பழம்போல் சேற்ற தீம்புழல் உணீஇய - மேலிடத்தே கிளைகளிலுள்ள பழங்களைப்போல இனிக்கும் சாற்றினை யுடைய இனிய துளையையுடைய பூக்களை உண்ண, கரும் கோட்டு இருப்பை ஊரும் - கரிய கொம்பினையுடைய இருப்பை மரத்தின் மேல் ஏறும், பெரும் கை எண்கின் சுரம் இறந்தோர் - பெரிய கையினையுடைய கரடிகளையுடைய சுரநெறியைக் கடந்து சென்றோர்,

௫. புணர்வர் - விரைவில் வருவர் ஆதலால்,

௧—௫. நுதலும் நுண் பசப்பு இவரும் - நெற்றியும் நுண்ணிய பசலை பரக்கப்பெறும், தோளும் அகல் மலை இறும்பின் ஆய்ந்து கொண்டு அறுத்த பணை எழில் அழிய வாடும் - தோளும் அகன்ற மலையிலுள்ள காட்டில் ஆராய்ந்துகொண்டு அறுத்த மூங்கிற் றுண்டை யொத்த அழகு ஒழிய வாட்டமுறும், நாளும் நினைவல் அவர் பண்பு என்று - நாடோறும் அவர் அருட்பண்பினை யான் நினைவேன் என்று கூறி, ஓவாது இனையல் - ஒழியாது வருந்தாதே கொள்,

(முடிபு) தோழி! வாழி! பொருள் புரிந்து, தொடி நெகிழச் சுரன் இறந்தோர் புணர்வர்; ஆதலின், நுதலும் பசப்பு இவரும், தோளும் வாடும், நாளும் நினைவல் என இனையல்.

மாக்கள் ஓசையோர்மார் சிலை இரீஇப் படர்தலின், எண்கு, கீழ்ப்படு தாரம் உண்ணு, புழல் உணீஇய இருப்பையூரும் சுரம். என்க.

(வி-ரை.) நினைவன் மாது: மாது, அசை. அலைந்தலை, விகாரம். ஞெமையத்து: அத்து, சாரியை. மருள் - கரடியின் ஓசையை முதலில் இன்னதென்றறியாது மருண்ட என்க. தாரம் - பண்டம் (உணவுப் பொருள்). புழல், ஆகுபெயர். கரடியும் மரத்தின் கோட்டில் இயங்க வல்லதாதல் அறியற்பாற்று.

---

## 172. குறிஞ்சி

[தோழி தலைமகளை இடத்து உய்த்து வந்து தலைமகனை வரைவு கடாயது.]

வாரணம் உரறு நீர்திகழ் சிலம்பிற்
பிரசமொடு விரைஇய வயங்குவெள் ளருவி
இன்னிசை இமிழியங் கடுப்ப இம்மெனக்
கன்முகை விடரகஞ் சிலம்ப வீழுங்
௫ காம்புதலை மணந்த ஓங்குமலைச் சாரல்
இரும்புவடித் தன்ன கருங்கைக் கானவன்
விரிமலர் மராஅம் பொருந்திக் கோல்தெரிந்து
[1]வரிநுதல் யானை அருநிறத் தழுத்தி
இகலடு முன்பின் வெண்கோடு கொண்டுதன்
௧0 [2]புல்வேய் குரம்பை புலர ஊன்றி
முன்றில் நீடிய [3]முழவுறழ் பலவிற்
பிழிமகிழ் உவகையன் கிளையொடு கலிசிறந்து
சாந்த ஞெகிழியின் ஊன்புழுக் கயருங்
குன்ற நாடன் அன்பிலை யாகுதல்
௧௫ அறியேன் யானஃ தறிந்தனென் ஆயின்
அணியிழை உண்கண் ஆயிதழ்க் குறுமகள்
மணியேர் மாணலம் சிதையப்
பொன்னேர் [4]பசலை பாவின்று மன்னே.

—மதுரைப் பாலாசிரியர் நப்பாலனார்.

(சொ-ள்.) ௧—௫. வாரணம் உரறும் நீர்திகழ் சிலம்பில் - யானை முழங்கும் தன்மை வாய்ந்த பக்க மலையில், பிரசமொடு விரைஇய வயங்குவெள் அருவி - தேனுடன் கலந்து வரும் விளக்கமுற்ற வெள்ளிய அருவி, இன்இசை இமிழ் இயம் கடுப்ப - இன்னொலியுடன் முழங்கும் மத்தளத்தை யொப்ப, இம் என கல்முகை

---

(பா-ம்.) 1. அணிநுதல். 2. புதற்போர் குரம்பை. 3. முழவு முதற் பலவு. 4. பசலை யாயின்று.

விடர் அகம் சிலம்ப வீழும் - இம்மெனும் ஒலியுடன் மலையின் குகைகளும் பிளப்பிடங்களும் ஒலிக்க விழும், காம்பு தலைமணந்த ஓங்கு மலைச் சாரல் - மூங்கில் நெருங்கிய உயர்ந்த மலைச்சாரலில் உள்ள,

௯—௧௪. இரும்பு வடித்தன்ன கருங்கைக் கானவன் - இரும்பினை வார்த்துச் செய்தாற் போன்ற வலிய கையினையுடைய வேட்டுவன், விரிமலர் மராஅம் பொருந்தி - விரிந்த மலரினையுடைய வெண்கடம்பினைச் சார்ந்து நின்று, கோல் தெரிந்து - அம்பினை ஆய்ந்துகொண்டு, வரிநுதல் யானை அரு நிறத்து அழுத்தி - வரி பொருந்திய நெற்றியினையுடைய களிற்றின் அரிய மார்பிற் செலுத்தி, இகல் அடு முன்பின் வெண்கோடு கொண்டு - பகையினைக் கொல்லும் வலியினையுடைய அதன் வெள்ளிய கொம்பினைக் கொண்டு வந்து, தன் புல் வேய் குரம்பை புலர ஊன்றி - தனது ஊகம் புல்லால் வேய்ந்த குடிசையில் புலால் நாற்றம் வீச ஊன்றுதல் செய்து, முன்றில் நீடிய முழவு உறழ் பலவின் பிழி மகிழ் உவகையன் - அக் குடிசை முன்றிலில் உயர்ந்த முழவு போலும் பலாக்கனியினின்று பிழிந்தெடுத்த மதுவினை உண்ட களிப்பினனாகி, கிளையொடு கலி சிறந்து - சுற்றத்துடன் ஆரவாரம் மிக்கு, சாந்த ஞெகிழியின் ஊன்புழுக்கு அயரும் - சந்தன விறகாலாய தீயில் ஊனுடன் கூடிய சோற்றை அட்டுண்ணும் இடமாகிய, குன்ற நாட - குன்றம் பொருந்திய நாட்டையுடைய தலைவனே !

௧௪—௮. நீ அன்பிலை ஆகுதல் அறியேன் யான் - நீ அன்பிலாய் ஆதலை யான் முன்பு அறிந்திலேன், அஃது அறிந்தனென் ஆயின் - அதனை யான் அறிந்துளேனாயின், அணிஇழை ஆய் இதழ் உண்கண் குறுமகள் - அழகிய அணிகலனையும் அழகிய இதழினையுடைய மையுண்ட கண்களையும் உடைய இளையளாய என் தலைவியின், மணி ஏர் மாண் நலம் சிதைய - நீலமணி போலும் சிறந்த அழகுகெட, பொன் நேர் பசலை பாஇன்று மன் - பொன்னை ஒத்த பசலை பெரிதும் பரத்தல் இல்லையாகும்.

(முடிபு) குன்ற நாட ! நீ அன்பிலையாகுதல் அறியேன்; அஃது அறிந்தனென் ஆயின் குறுமகள் மாணலம் சிதைய பசலை மன் பாஇன்று. அருவி இம்மென விழும் சாரலில் கானவன் யானைக்கோடு கொண்டு குரம்பை ஊன்றிச் சாந்த ஞெகிழியின் ஊன்புழுக்கு அயரும் குன்றம் என்க.

(வி - ரை.) நீர் - சுனை நீருமாம். முகையாகிய விடர் என்றலுமாம். அருவி வீழும் மலைச்சாரல் எனவும், காம்பு தலைமணந்த மலைச்சாரல் எனவும் தனித்தனி கூட்டுக. யானையைக் கொன்று அதன்கோடு கொள்ளும் வலிய கை யென்பது தோன்ற இரும்பு வடித்தன்ன கருங்கை எனப்பட்டது. மராஅம் பொருந்துதல், யானை தன் இருப்பை யறிந்து இரியாதவாறு பதுங்கி நிற்றல். இரவுக்குறியின் ஏதம் அஞ்சித் தலைவி வருந்துதலையும், ஊரில் அலர் எழுதலையும் கருதி விரைந்து வரைந்துகொள்ளாது களவொழுக்கத்திலேயே தாழ்ந்திருந்தல் பற்றித் தலைவனை 'அன்பிலை' என்றும் நீ இவ்வாறு ஒழுகுதி என்பதனை முன்னர் அறிந்திருப்பேனாயின், யான் கூட்டத்திற்கு உடன்பட்டிரேனாகலின், வரைவு நீட்டித்தல் காரண

மாகத் தலைவி நலன்சிதையப் பசலை படர்தல் இல்லையாகும் என்றும் தோழி கூறினாள் என்க.

(உ - றை.) பிரசமொடு விரைஇய அருவி விடரகம் சிலம்ப வீழும் என்றது, தலைவியுடன் கூடிய தலைவனது களவொழுக்கம் ஊரெங்கும் அலருண்டாக நிகழ்கின்றது என்றவாறு. யானை வெண்கோடு கொண்டு கானவன் குரம்பை புலர ஊன்றி உவகையன் கலிசிறந்து சாந்த ஞெகிழியின் ஊன்புழுக் கயரும் என்றது, தலைவன் அரியளாய தலைவியை எளியள் என மதித்துக் களவொழுக்கமாகிய இன்பத்திலே தருக்கி யிருத்தல் என்றவாறு.

---

## 173. பாலை

[தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.]

அறந்தலைப் பிரியா தொழுகலுஞ் சிறந்த
கேளிர் கேடுபல ஊன்றலும் நாளும்
வருந்தா உள்ளமொ டிருந்தோர்க் கில்லெனச்
செய்வினை புரிந்த நெஞ்சினர் நறுநுதல்
௫ மையீ ரோதி அரும்படர் உழத்தல்
சின்னாள் தாங்கல் வேண்டும் என்றுநின்
நன்மாண் எல்வளை திருத்தின ராயின்
வருவர் வாழி தோழி பலபுரி
வார்கயிற் றொழுகை நோன்சுவற் கொளீஇப்
௧௦ பகடுதுறை யேற்றத் துமண்விளி வெரீஇ
உழைமான் அம்பிணை இனனிரிந் தோடக்
காடுகவின் அழிய உரைஇக் கோடை
நின்றுதின விளிந்த அம்பணை நெடுவேய்க்
கண்விடத் தெறிக்கும் மண்ணா முத்தம்
௧௫ கழங்குறழ் தோன்றல பழங்குழித் தாஅம்
இன்களி நறவின் இயல்தேர் நன்னன்
விண்பொரு நெடுவரைக் கவாஅன்
பொன்படு மருங்கின் மலையிறந் தோரே.

—[1]முள்ளியூர்ப் பூதியார்.

(சொ - ள்.) அ. தோழி -, வாழி -,

க—ச. அறம் தலைப்பிரியாது ஒழுகலும் - அறநெறியினின்றும் நீங்காது இல்வாழ்க்கை நடத்தலும், சிறந்த கேளிர் கேடு பல ஊன்றலும் - சிறப்புற்ற சுற்றத்தாரது பலவகையான துன்பங்களையும் தாங்கலும், நாளும் வருந்தா உள்ளமொடு இருந்தோர்க்கு இல்என - எஞ்ஞான்றும் (முயற்சியால்) மெய் வருந்தாமைக்கு ஏதுவாய (ஊக்கமில்லாத) உள்ளமொடு இருந்தோர்க்கு இல்லையாகும் என்று, செய்வினை புரிந்த நெஞ்சினர் - பொருள் ஈட்டும் வினையை விரும்பிய நெஞ்சினராய நம் தலைவர்,

---

(பாடம்) 1. முள்ளியூர் வழுதியார்.

அ—௧அ. பலபுரி வார் கயிற்று ஒழுகை - பல புரிகளாலாய நீண்ட கயிற்றாற் பிணித்த வண்டியினை, பகடு நோன் சுவல் கொளீஇ - பகடுகளின் வலிய பிடரியில் பூட்டி, துறை ஏற்றத்து - ஏற்றமான துறைகளில் ஓட்டுமிடத்து, உமண் விளி வெரீஇ - உப்பு வாணிகர் அவற்றை உரப்பும் ஓசையைக் கேட்டு அஞ்சி, உழைமான் அம் பிணை இனன் இரிந்து ஓட - ஆண்மானும் பெண்மானும் ஆகிய இனங்கள் கெட்டு ஓடவும், காடு கவின் அழிய - காடுகள் அழகு கெடவும், கோடை உரைஇ - கோடை பரவி, நின்று தின விளிந்த அம் பணை நெடுவேய் - நிலைபெற்று நீரினை உறிஞ்சுதலால் வற்றிய அழகிய பெரிய நெடிய மூங்கிலின், கண்விடத் தெறிக்கும் மண்ணா முத்தம் - கணுக்கள் பிளக்கத் தெறித்து விழும் கழுவப்பெறாத முத்துக்கள், கழங்கு உறழ் தோன்றல - கழங்கினை யொத்த தோற்றம் உடையனவாகி, பழங்குழி தாஅம் - (அங்குள்ளார் கழங்காடிய) பழைய குழியிலே விழும் (இடமாகிய), இன்களி நறவின் இயல்தேர் நன்னன் - இனிய களிப்பைத்தரும் கள்ளினையும் இயற்றப்பட்ட தேரினையுமுடைய நன்னனது, விண்பொரு நெடுவரைக் கவான் - வானை அளாவிய நீண்ட மூங்கிலையுடைய பக்கமலையினையும், பொன் படு மருங்கின் மலை இறந்தோர் - பொன் பொருந்திய இடங்களையுமுடைய மலையினைக் கடந்து சென்றோராய நம் தலைவர்,

௯—௮. நறுநுதல் மை ஈர் ஓதி - நறிய நெற்றியையும் கரிய பெரிய கூந்தலையும் உடையாளே, அரும்படர் உழத்தல் - அரிய துன்பத்தால் வருந்துதலை, சில்நாள் தாங்கல் வேண்டும் என்று - சிலகாலம் பொறுத்துக் கோடல் வேண்டும் என்று கூறி, நின் நல்மாண் எல்வளை திருத்தினராயின் - நினது நல்ல மாண்புற்ற ஒளி பொருந்திய வளையினைத் திருத்தித் தலையளி செய்தனராதலால், வருவர் - விரைவில் வந்துறுவர்.

(முடிபு) **தோழி! வாழி! செய்வினை புரிந்த நெஞ்சினராய், மலையிறந்தோராகிய நம் தலைவர், அரும்படர் உழத்தல் சின்னாள் தாங்கல் வேண்டும் என்று நின் எல்வளை திருத்தினராதலின், (விரைவில்) வருவர்.**

(வி-ரை.) நறுநுதல், ஓதி என்பவற்றிற்கு, நுதலை நீவுதலும் ஓதியைக் கோதுதலும் செய்தனர் எனக் குறிப்பிற் பொருள் கொள்ளலுமாம்; [1]'வலிமுன்பின்' என்ற பாலைக்கலியில், தாழ் கதுப் பணிகுவர் காதலர், ஒள்ளிழை திருத்துவர் காதலர், ஒண்ணுதல் நீவுவர் காதலர் என வருதல் காண்க. திருத்தினராயின் - திருத்தினராதலின் என்க. சின்னாட் டாங்கல் வேண்டுமென்று கூறி இங்ஙனம் தலையளி செய்து அகன்றாராதலின், அவர் நின்னை நினைந்து விரைவில் வாராதிருப்பாரல்லர், நீ வருந்தாதேகொள் என்று, தலைவியைத் தோழி வற்புறுத்தினாள் என்க. உமண் - உமணர்; ஆகுபெயர். கோடை தின என்பது, [2]'உண்டற்குரிய வல்லாப்பொருளை யுண்டன போலக் கூறலு மரபே' என்னுஞ் சூத்திரத்து, உம்மையால் அமைக்கப்பெறும். முத்தம் தாஅம் கவான் என இயையும். கழங்கு உறழ் தோன்றல என்றது முத்தின் பருமை குறித்தபடி.

---

1. பாலைக். ௪. 2. தொல். பொருளி. ௧௧.

## 174. முல்லை

[பாசறைக்கண் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.]

இருபெரு வேந்தர் மாறுகொள் வியன்களத்
தொருபடை கொண்டு வருபடை பெயர்க்குஞ்
செல்வ முடையோர்க்கு நின்றன்று விறலெனப்
பூக்கோள் ஏய தண்ணுமை விலக்கிச்
௫ செல்வே மாதல் அறியாள் முல்லை
நேர்கால் முதுகொடி குழைப்ப நீர்சொரிந்து
காலை வானத்துக் கடுங்குரற் கொண்மூ
முழங்குதொறுங் [1]கையற் றொடுங்கிநப் புலந்து
பழங்கண் கொண்ட பசலை மேனியள்
௧௦ யாங்கா குவள்கொல் தானே வேங்கை
[2]ஊழுறு நறுவீ கடுப்பக் கேழ்கொள
ஆகத் தரும்பிய மாசறு சுணங்கினள்
நன்மணல் வியலிடை நடந்த
சின்மெல் லொதுக்கின் மாஅ யோளே.

—மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார்.

(சொ - ள்.) ௧—௫. இரு பெரு வேந்தர் மாறு கொள் வியன் களத்து - பேரரசர் இருவர் மாறுபாடு கொண்டு பொரும் பெரிய போர்க்களத்தே, ஒரு படை கொண்டு வருபடை பெயர்க்கும் - தமது ஒப்பற்ற படைக்கலத்தைக் கொண்டு எதிர் வரும் படைகளைப் பிறக்கிடச் செய்யும், செல்வம் உடையோர்க்கு விறல் நின்றன்று என - வெற்றியாகிய செல்வம் உடையோர்க்கு இப்பெருமை நிலைபெற்றது என்றுகூறி, பூக்கோள் ஏய தண்ணுமை விலக்கி - தண்ணுமை முழக்குடன் பொருந்த அரசன் அளிக்கும் பூக்கோளினையும் ஏலாது தவிர்த்து, செல்வேம் ஆதல் அறியாள் - நாம் தன்பால் விரைந்து செல்லுதலை அறியாளாய்,

௧௦—௪. வேங்கை ஊழ் உறு நறுவீ கடுப்பக் கேழ் கொள - வேங்கையின் மலர்தலுற்ற நறிய மலரை ஒப்ப நன்னிறம் கொள்ள, ஆகத்து அரும்பிய மாசு அறு சுணங்கினள் - மேனியிற் றோன்றிய குற்றமற்ற தேமலையுடையளாய, நல் மணல் வியலிடை நடந்த - நல்ல மணலையுடைய அகன்றவிடத்தே நடந்த, சில்மெல் ஒதுக்கின் மாஅயோள் - சிலவாய மெல்லிய நடையினையுடைய மாமை நிறத்தினையுடைய நம் தலைவி,

௫—௧௦. நேர் கால் முல்லை முதுகொடி குழைப்ப - நிரம்பிய கால்களிற் படர்ந்த முதிய முல்லைக்கொடி தளிர்க்க, காலை வானத்துக் கடுங் குரற் கொண்மூ - கிழ்த்திசையில் வானத்தெழுந்த கடிய குரலையுடைய மேகம், நீர் சொரிந்து முழங்குதொறும் - நீரைப்

(பாடம்) 1. கையற்றிரங்கி; 2. யூழுறு கிளர்வீ.

பெய்து முழங்குந்தோறும், நப்புலந்து கையற்று ஒடுங்கி - நம்மை வெறுத்துச் செயலற்று ஒடுங்கி, பழங்கண் கொண்ட பசலை மேனியள் - துன்பினை எய்திய பசலை பாய்ந்த மேனியளாய், யாங்கு ஆகுவள் கொல் - எந்நிலையினை அடைவாளோ.

(முடிபு) நெஞ்சே! நாம் பூக்கோள் ஏய தண்ணுமை விலக்கிச் செல்வேமாதலை அறியாளாய மாயோள், கொண்மூ நீர் சொரிந்து முழங்குதொறும் கையற்றொடுங்கி நம்மைப் புலந்து பசலை மேனியளாகி யாங்காகுவள் கொல்லோ!

(வி - ரை.) வருபடை பெயர்க்கும் செல்வம் என்றமையால், செல்வமென்பது வெற்றியை உணர்த்திற்று. விறல் - மேன்மை. மாற்றாரை வென்ற வெற்றிவீரர்க்கு அரசன் பொற்பூ அளித்துச் சிறப்புச் செய்வன்; அப்பூவினைப் பெறுதல் பூக்கோளாகும். தண்ணுமை ஏய பூக்கோள் என மாறுக. பகையை வென்று அரசன் அளிக்கும் சிறப்பினைப் பெறுதற்கும் தாழ்த்து நில்லாது நாம் செல்வேமாயினும் குறித்த பருவம் வந்தமையின் தலைவி எங்ஙனம் ஆகுவளோ என்று தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லிச் செலவு விதுப்புறுகின்றான் என்க. காலை வானம் - ஞாயிறு தோன்றும் கீழ்த்திசை வானம் என்க. தான் அவளைப் பிரியும் ஞான்று மணற் பரப்பிலே அவள் குறுக அடியிட்டு நடந்த மென்னடை அவன் நெஞ்சம் விட்டகன்றில தாகலின், 'நன்மணல் வியலிடை நடந்த, சின்மெல்லொதுக்கின் மாஅயோள்' என்றான்.

(மே - ள்.) [1]'ஏவன் மரபின்' என்னுஞ் சூத்திரத்து இச் செய்யுள், மீள்வான் தன் நெஞ்சிற்கு உரைத்தது என்றும், இதனுள் பூக்கோளேய தண்ணுமை விலக்கிச் செல்வேம் என்றலின், அரசனாற் சிறப்புப்பெற்ற தலைவனாயிற்று என்றும், [2]'ஒன்றாத் தமரினும்' என்னுஞ் சூத்திரத்து, ஆகித் தோன்றும் பாங்கோர் பாங்கினும் என்னுந் துறைக்கு, தனக்கு ஆக்கம் சிறந்த நட்புடையோராகித் தோன்றும் நட்புடையோர்க்கு உற்றுழியுதவச் சேறற் கண்ணும் என்று பொருள் கூறி, இச் செய்யுள் அதற்கு உதாரணமாகும் என்றும் கூறினர் நச்.

---

## 175. பாலை

[பிரிவின்கண் வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது. பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொற்றதூஉ மாம்.]

வீங்குவிசிம் புரீஇய விசையமை நோன்சிலை
வாங்குதொடை பிழையா வன்கண் ஆடவர்
விடுதொறும் விளிக்கும் வெவ்வாய் வாளி
ஆறுசெல் வம்பலர் உயிர்செலப் பெயர்ப்பிற்
ரு பாறுகிளை பயிர்ந்து படுமுடை கவரும்
வெஞ்சுரம் இறந்த காதலர் நெஞ்சுணர
அரிய வஞ்சினஞ் சொல்லியும் பன்மாண்

---

1. தொல். அகத். உச. 2. தொல். அகத். சக.

தெரிவளை முன்கை பற்றியும் வினைமுடித்து
வருது மென்றனர் அன்றே தோழி
௧௦ காலியல் நெடுந்தேர்க் கைவண் செழியன்
ஆலங் கானத் தமர்கடந் துயர்த்த
வேலினும் பல்லூழ் மின்னி முரசென
மாயிரு விசும்பிற் கடியிடி பயிற்றி
௧௫ நேர்கதிர் [1]நிரைத்த நேமியஞ் செல்வன்
போரடங் ககலம் பொருந்திய தார்போல்
திருவில் தேஎத்துக் குலைஇ உருகெழு
மண்பயம் பூப்பப் பாஅய்த்
தண்பெயல் எழிலி தாழ்ந்த போழ்தே.

—ஆலம்பேரி சாத்தனார்.

(சொ - ள்.) ௧. தோழி -,

௧—அ. வீங்கு விளிம்பு உரீஇய - தமது தடித்த தோளின் விளிம பினை உரசிய, விசை அமை நோன் சிலை - வேகம் அமைந்த வலிய வில்லில் வைத்து, வாங்கு தொடை பிழையா வன்கண் ஆடவர் - இழுத்து விடும் அம்பு குறி தப்புதல் இல்லாத தறுகண்மையை யுடைய மறவர், விடுதொறும் விளிக்கும் வெவ்வாய் வாளி - எய்யுந் தோறும் ஒலித்துச் செல்லும் கொடிய வாயினையுடைய அம்பு, ஆறு செல் வம்பலர் உயிர் செலப் பெயர்ப்பின் - வழிச் செல்லும் புதிய ரது உயிர்கெடப் போக்குதலால், பாறு கிளை பயிர்ந்து படு முடை கவரும் - பருந்து தன் கிளையினை அழைத்து மிக்க புலாலை உண்ணும், வெம் சுரம் இறந்த காதலர் - கொடிய சுர நெறியைக் கடந்து சென்ற நம் காதலர், நெஞ்சு உணர - தமது நெஞ்சு உணர, அரிய வஞ்சினம் சொல்லியும் - கடிய சூள் உரைத்தும், பல்மாண் தெரிவளை முன்கை பற்றியும் - பன்முறை ஆராய்ந்த வளையினையுடைய எனது முன் கையினைப் பற்றித் தலையளி செய்தும்,

௧௦—அ. தண் பெயல் எழிலி - தண்ணிய மழையைப் பெய்யும் மேகம், கால் இயல் நெடு தேர் கைவண் செழியன் - காற்றுப் போல இயலும் நெடிய தேரினையும் கை வண்மையினையுமுடைய பாண்டி யன் நெடுஞ்செழியன், ஆலங்கானத்து அமர் கடந்து உயர்த்த - தலை யாலங் கானத்துப் போரை வென்று உயர்த்த, வேலினும் பல் ஊழ் மின்னி - வேற்படைகளைக் காட்டில் பன்முறை மின்னி, முரசு என மாஇரு விசும்பில் கடிஇடி பயிற்றி - கரிய பெரிய வானின்கண் (அவனது வென்று எறி) முரசம் எனக் கடிய இடியினைப் பலகாலும் தோற்றுவித்து, நேர் கதிர் நிரைத்த நேமி அம் செல்வன் - நிரம்பிய கதிர்களின் ஒழுங்கினைக் கொண்ட ஆழியையுடைய திருமாலின், போர் அடங்கு அகலம் பொருந்திய தார்போல் - பகைவர் போர் ஒழிதற்குக் காரணமாய மார்பினிடத்தே தங்கிய மாலைபோல, உரு கெழு திருவில் தேஎத்துக் குலைஇ - பன்னிறம் வாய்ந்த அழகிய

(பாடம்) 1. நிரைந்த.

வில்லே அவ்விசும்பினிடத்தே வளைத்து, மண் பயம் பூப்பப் பாஅய் - நிலம் பயனைத் தரப் பரவி, தாழ்ந்த போழ்து - இறங்கிப் பெய்யுங் காலத்து,

அ—௯. வினை முடித்து வருதும் என்றனர் அன்றே - தாம் செல்லும் வினையை முடித்துக்கொண்டு மீண்டு வருவேம் என்றாரன்றோ? (அங்ஙனம் வந்திலரே; என் செய்வல்!)

(முடிபு) வெஞ்சுரம் இறந்த காதலர், வஞ்சினம் சொல்லியும், முன்கை பற்றியும், தண்பெயல் எழிலி தாழ்ந்த போழ்து வருதும் என்றனரே? (அங்ஙனம் வந்திலரே; என் செய்வல்).

(வி - ரை.) விளிம்பு - தோளின் மேற்புறம். பெயர்ப்பின் - பெயர்த்தலால். அவர் கூறிய வஞ்சினத்திற்கு அவர் நெஞ்சே சான்றாக அமையும் என்பாள் 'நெஞ்சுணர' என்றாள்; [1]'நெஞ்சத்துக் குறுகிய கரியில்லை' எனப் பிறசான்றோர் கூறுதலுங் காண்க. முன்கைப் பற்றி யென்பதனை வேறு பிரித்து வஞ்சினம் சொல்லி என்பதனோடு கூட்டி யுரைத்தலுமாம். முன்கை பற்றி வஞ்சினம் கூறும் வழக்குண்மை, [2]'நேரிறை முன்கை பற்றிச், சூரர மகளிரொ டுற்ற சூளே' என்பதனால் அறியப்படும். கரிய வானுக்கு நேமியஞ் செல்வனது அகலமும், அவ்வானிற் றோன்றிய வில்லுக்கு அவ்வகலத்திற் பொருந்திய தாரும் உவமம். தேஎம்-இடம், வானின் இடம். கார்ப் பருவத் தொடக்கத்து வருதும் என்றவர் வாராமையால், யான் என் செய்வேன் எனத் தோழிக்குத் தலைமகள் கூறினாள்.

---

## 176. மருதம்

[தோழி தலைமகனை வாயின் மறுத்தது.]

கடல்கண் டன்ன கண்ணகன் பரப்பின்
நிலம்பக வீழ்ந்த வேர்முதிர் கிழங்கின்
கழைகண் டன்ன தூம்புடைத் திரள்கால்
களிற்றுச்செவி யன்ன பாசடை மருங்கிற்
௫ கழுநிவந் தன்ன கொழுமுகை யிடையிடை
முறுவல் முகத்திற் பன்மலர் தயங்கப்
பூத்த தாமரைப் புள்ளிமிழ் பழனத்து
வேப்புநனை யன்ன நெடுங்க ணீர்ஞெண்டு
இரைதேர் வெண்குரு கஞ்சி அயலது
௧௦ ஒலித்த பகன்றை யிருஞ்சேற் றள்ளல்
திதலையின் வரிப்ப வோடி விரைந்துதன்
ஈர்மலி மண்ணளைச் செறியும் ஊர
[3]மனைநகு வயலை மரனிவர் கொழுங்கொடி
அரிமல ராம்பலொ டார்தழை தைஇ
௧௫ விழவாடு மகளிரொடு தழூஉவணிப் பொலிந்து

1. கலி. நெய். அ. 2. குறுந். ௫௩. (பாடம்) 3. மனைநடு.

மலரே ருண்கண் மாணிழை முன்கைக்
குறுந்தொடி துடக்கிய நெடுந்தொடர் விடுத்தது
உடன்றனள் போலுநின் காதலி யெம்போற்
புல்லுளைக் குடுமிப் புதல்வற் பயந்து
உ௦ நெல்லுடை நெடுநகர் நின்னின் றுறைய
என்ன கடத்தளோ மற்றே தன்முகத்து
எழுதெழில் சிதைய அழுதன ளேங்கி
வடித்தென வுருத்த தித்திப் பல்லூழ்
நொடித்தெனச் சிவந்த மெல்விரற் றிருகுபு
உரு கூர்நுனை மழுகிய எயிற்றள்
ஊர்முழுது நுவலுநிற் காணிய சென்மே.

—மருதம்பாடிய இளங்கடுங்கோ.

(சொ - ள்.) க—கஉ. கடல் கண்டன்ன கண் அகன் பரப்பின் - கடலைக் கண்டாற் போன்ற இடமகன்ற நீர்ப்பரப்பில், நிலம்பக வீழ்ந்த வேர்முதிர் கிழங்கின் - நிலம் பிளக்குமாறு இறங்கிய வேரில் முதிர்ந்த கிழங்கினையும், கழை கண்டன்ன தூம்பு உடை திரள் கால் - மூங்கிலைக் கண்டாலொத்த துளையுடைய திரண்ட தண்டினையும், களிற்றுச் செவிஅன்ன பாசடை மருங்கில் - களிற்றின் செவிபோன்ற பசிய இலையிடத்தே, கழு நிவந்தன்ன கொழுமுகை இடைஇடை - கழு உயர்ந்து தோன்றலை யொத்த செழித்த மொட்டுக்களின் இடையிடையே, முறுவல் முகத்தில் நயங்கப் பூத்த பன்மலர் - புன்சிரிப்பினையுடைய முகம்போல விளங்கப் பூத்த பல மலர்களையுமுடைய, தாமரை புள் இமிழ் பழனத்து - தாமரையினையுடைய புட்கள் ஒலிக்கும் வயலில் உள்ள, வேப்பு நனை அன்ன நெடு கண் நீர் ஞெண்டு - வேம்பின் அரும்பினை யொத்த நீண்ட கண்ணினையுடைய நீர் ஞெண்டானது (பரத்தமைக்குப் பிரிந்து போயது), இரை தேர் வெண் குருகு அஞ்சி - இரையினை ஆய்ந்து பார்த்திருந்த வெள்ளிய நாரையினைக் கண்டு அஞ்சி, அயலது ஒலித்த பகன்றை இரு சேற்று அள்ளல் - அயலிலுள்ள தழைத்த சிவதையினையுடைய கரிய சேற்றுப் பிழம்பில், திதலையின் வரிப்ப ஓடி - தேமல்போல வரியுண்டாக ஓடிச்சென்று, விரைந்து தன் ஈர் மலி மண் அளைச் செறியும் ஊர - விரைந்து தனது ஈரம் மிக்க மண் அளையுட் பதுங்கும் ஊரனே!

கங—அ. மனைநகு மரன் இவர் வயலை கொழுங்கொடி - மனையின்கண் விளங்கும் மாத்திற் படரும் வயலையாகிய கொழுவிய கொடியினை, அரிமலர் ஆம்பலொடு ஆர்தழை தைஇ - விளங்கும் மலர்களையுடைய ஆம்பலோடு சேர்த்துக் கட்டிய தழையுடையை உடுத்து, விழவு ஆடு மகளிரொடு தழூஉ அணி பொலிந்து - விழாவின்கண் ஆடும் மகளிரொடு தழுவி ஆடும் அணியாற் பொலிவுற்று, மலர் ஏர் உண்கண் மாண் இழை குறுந் தொடி முன்கை துடக்கிய - மலரை யொத்த மையுண்ட கண்ணினையும் மாண்புற்ற அணியினையும் உடைய நின் பரத்தை தனது குறிய வளையணிந்த முன் கையினால்

பிணித்த, நெடு தொடர் விடுத்தது - நெடிய பிணிப்பினை விடுத்துச் சென்ற அளவிற்கே, உடன்றனள் - வெகுண்டனளாய்,

உக—கூ. தன் முகத்து எழுது எழில் சிதைய - தன் முகத்தினது எழுதுவதற்கு ஏதுவாகிய அழகு கெட, அழுதனள் ஏங்கி - அழுது ஏக்கமுற்று, வடித்துஉளன உருத்த தித்தி - பொன்னை உருக்கி வார்த்தா லொப்ப உருக்கொண்ட தேமலையும், பல் ஊழ் நொடித்தென சிவந்த மெல் விரல் - பன்முறை முறித்துக்கொள்ளலின் சிவந்த மெல்லிய விரலினையும், திருகுபு கூர் நுனை மழுகிய எயிற்றள் - திருகிக் கடித்தலான் கூரிய முனை மழுங்கிய எயிற்றையு முடையளாய், ஊர் முழுதும் நுவலும் நின் காணிய சென்மே - ஊர் எங்கும் அலர் கூறப்படும் நின்னைக் காண்டற்குத் தேடிச் செல்வாள் (ஆகலின்),

கஅ—உக. நின் காதலி - நினது காதலியாகிய அவள், எம்போல் புல் உளைக் குடுமிப் புதல்வன் பயந்து - எம்மைப்போலப் புல்லிய உளைபோலும் குடுமியையுடைய புதல்வனைப்பெற்று, நெல் உடை நெடுநகர் நின் இன்று உறைய - நெல்லுடைய நீண்ட மனையில் நின்னைப் பிரிந்து தங்க, என்ன கடத்தளோ - என்ன கடப்பாடு உடையவளோ.

(முடிபு) ஊர! மாணிழை தன் முன்கை தொடக்கிய நெடுந்தொடர் விடுத்தது உடன்றனளாய் அழுதனள் ஏங்கி, ஊர் முழுதும் நுவலும் நின்னைக் காணிய சென்மே; ஆகலின் நின் காதலியாய அவள் எம்போற் புதல்வற் பயந்து நெடுநகர் நின்இன்று உறைய என்ன கடத்தளோ.

(வி - ரை.) கடல் கண்டன்ன என்பதனாலும், தாமரையின் கிழங்கு, தண்டு, இலை, முகை, மலர் என்ற இவற்றிற்குக் கூறிய உவமைகளாலும் மருத நிலத்தின் கொழுமையும் நீர் மிகுதியும் குறிக்கப்பட்டன. நெடுங்கண் - நெடிதாய் நிவந்து தோன்றும் கண். வயலைக் கொடி மனையின் கண் வைத்து வளர்க்கப் படுதலால், மனைநகு வயலை எனப்பட்டது. உன் கண்ணினையும் மாணிழையினையு முடைய நின் காதலியெனக் கூட்டியுரைத்தலுமாம். போலும் : ஒப்பில் போலி. மற்று, வினைமாற்று. எழுது எழில் - ஓவியர் பார்த்து எழுதுதற்கு ஏதுவாகிய அழகு. விரல்களைப் பலமுறை நொடித்தலும், எயிற்றினைத் திருகுதலும் சினத்தினால் நிகழ்ந்தன. அவள் கைப் பிணிப்பினைச் சிறிது விடுத்த அளவிற்கே உடன்று நின்னைத் தேடித் திரிவாள் என்றமையின், அவளது பொறுமை யின்மையையும், யாம் மனையின்கண் நின்னை யின்றியே உறைகின்றேம் என்றதனால், தமது பொறுமையையும் தலைவி புலப்படுத்தினாள் என்க. நெல்லுடை நெடுநகர் என விருந்தோம்பற்கு இன்றியமையாத நெல்லுடைமை கூறியதனானே யாம் புதல்வற் பயந்தும் விருந்தோம்பியும் நினக்கு இருமைக்கும் ஏதுவாகிய மனையறத்தின் வழுவா தொழுகுகின்றேம் என்று தலைவி குறித்தாளாம். புதல்வற் பயந்து என்றது முதுமையை எள்ளிப் பரத்தையிற் பிரிந்தான் எனப் புலப்படுத்தபடியுமாம். ஊர் முழுதும் நுவலும் என்றமையால், பிறர் கூறும் பழி கருதி இப்பொழுது ஈண்டு வருகின்றாயன்றி அன்பினால் வருகின்றாயல்லை என்று

கூறித் தோழி வாயில் மறுத்தாளாம். சென்மே - செல்லும்; ஈற்று மிசையுகரம் மெய்யொடுங் கெட்டது.

தலைவிக்கும் தனக்கும் உள்ள ஒருமைப்பாட்டினால், தோழி, எம் போல் எனத் தலைவியைக் கூறினாள். இதனைத் தலைவி கூற்றாகவே கொள்வது நச்சினார்க்கினியர்க்கும் பேராசிரியர்க்கும் கருத்தாதல் தொல்காப்பிய உரையால் அறியப்படும்.

(உ - றை.) புள்இமிழ் பழனத்து ஞெண்டு குருகஞ்சி இருஞ்சேற்றள்ளல் திதலையின் வரிப்ப ஓடி மண்ணளைச் செறியும் என்றது, பரத்தையர் சேரிக்கண் அவர் நலத்தினை நுகர்ந்திருந்த தலைவன் அலர் எழுதலை அஞ்சி அப் பரத்தையர் செய்த குறி தன் மார்பிலே கிடப்பத் தன் மனைக்கண் விரைந்து வரலாயினன் என்றபடி.

(மே - ள்.) [1]'அவனறி வாற்ற அறியு மாகலின்' என்னும் சூத்திரத்து, 'புகன்ற உள்ளமொடு . . . ஈரத்து மருங்கினும்' என்னும் துறைக்கண், இச் செய்யுளை உதாரணமாகக்காட்டி, மறுப்பாள்போல நயந்தாளாயிற்று என்று கூறினர் நச்.

[2]'இளிவே யிழவே . . . அழுகை நான்கே' என்னுஞ் சூத்திரத்து 'எழுதெழில் சிதைய அழுதனள் ஏங்கி . . . சிற்சாணிய சென்மே' என்பது, தன்கட்டோன்றிய இளிவரல் பொருளாக அவலச் சுவை பிறந்தது என்றும், [3]'தெய்வம் அஞ்சல்' என்னும் சூத்திரத்து, 'வேப்பு நனையன்ன . . . செறியும் ஊர' என்பது, தலைமகன் வாயில் வேண்டச் சென்றுழிப் பிறர் கூறும் பழிக்கு வந்தாய் என்றமையின் இஃது உள்ள துவர்த்தல் (எனும் மெய்ப்பாடு) ஆயிற்று என்றும் கூறினர் பேரா.

---

## 177. பாலை

[பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.]

தொன்னலஞ் சிதையச் சாஅய் அல்கலும்
இன்னும் வாரார் இனியெவன் செய்கெனப்
பெரும்புலம் புறுதல் ஓம்புமதி சிறுகண்
இரும்பிடித் தடக்கை மான நெய்யருந்து
௫ ஒருங்குபிணித் தியன்ற வெறிகொ ளைம்பால்
தேங்கமழ் வெறிமலர் பெய்ம்மார் காண்பின்
கழையமல் சிலம்பின் வழைதலை வாடக்
கதிர்கதங் கற்ற ஏகல் நெறியிடைப்
பைங்கொடிப் பாகற் செங்கனி நசைஇக்
௧0 கான மஞ்ஞைக் கமஞ்சூல் மாப்பெடை
அயிரியாற் றடைகரை வயிரின் நரலுங்
காடிறந் தகன்றோர் நீடின ராயினும்
வல்லே வருவர் போலும் வென்வேல்

1. தொல். கற். ௬. 2. தொல் மெய். ௫. 3. தொல். மெய். ௨௪.

இலைநிறம் பெயர ஓச்சி மாற்றோர்
௧௫ மலைமருள் யானை மண்டமர் ஒழித்த
கழற்காற் பண்ணன் காவிரி வடவயின்
நிழற்கயம் தழீஇய நெடுங்கால் மாவின்
தளிரேர் ஆகம் தகைபெற முகைந்த
அணங்குடை வனமுலைத் தாஅயநின்
௨0 [1]சுணங்கிடை வரித்தல் தொய்யிலை நினைந்தே.

[2]செயலூர் இளம்போன் சாத்தன் கொற்றனார்.

(சொ - ள்.) ௫—௧௨. தோழி, காண்பு இன் கழை அமல் சிலம்பின் வழை தலைவாட - காண்டற்கு இனிய மூங்கில் நிறைந்த பக்கமலையிலுள்ள சுரபுன்னையின் உச்சி வாடும்படி, கதிர் கதம்கற்ற - ஞாயிற்றின் கதிர் சினத்தைப் பயின்ற, ஏ கல் நெறியிடை - பெருகிய கற்கள் பொருந்திய சுரநெறியில், பைங்கொடிப் பாகல் செங்கனி நசைஇ - பசிய பாகற்கொடியின் சிவந்த பழத்தினை விரும்பி, கான மஞ்ஞை கமம் சூல் மா பெடை - காட்டிலுள்ள மயிலின் நிறைந்த கருவினைக் கொண்ட கரியபெடை, அயிரி யாற்று அடைகரை வயின் நரலும் - அயிரியாற்றினது அடைகரையின்கண் ஊதுகொம்பென ஒலிக்கும், காடு இறந்து அகன்றோர் நீடினர் ஆயினும் - காட்டினைத் தாண்டிச் சென்ற தலைவர் (குறித்த பருவங் கடந்து) தாழ்த்துவாராதிருப்பினும்,

௧—௫. சிறுகண் இரு பிடி தட கை மான - சிறிய கண்ணினையுடைய பெரிய பெண் யானையின் பெரிய கையினை ஒப்ப, ஒருங்கு பிணித்து இயன்ற நெய் அருந்து வெறிகொள் ஐம்பால் - சேரக் கட்டிவிட்ட நெய் பூசப்பெறும் நறு நாற்றமுடைய கூந்தற்கண்ணே, தேம் கமழ் வெறிமலர் பெய்ம்மார் - தேன் மணக்கும் நறிய மலரைப் பெய்தலையும்,

௧௩—௨0. வென்வேல் இலைநிறம் பெயர ஓச்சி - வென்றி வேலை இலைமுனை நிறம் மாறிச் செந்நிறமடையச் செலுத்தி, மாற்றோர் மலை மருள் யானை மண்டு அமர் ஒழித்த - பகைவருடைய மலைபோலும் யானைகளை மிக்க போரின்கண் அழித்த, கழல்கால் பண்ணன் - வீரக் கழல் தரித்த காலினையுடைய பண்ணனது, காவிரி வடவயின் - காவிரியின் வடபாலுள்ள, நிழல் கயம் தழீஇய நெடுகால் மாவின் - குளிர்ந்த குளத்தினை யடுத்துள நெடிய அடிமரத்தினையுடைய மாமரத்தின், தளிர் ஏர் ஆகம் தகைபெற முகைந்த - தளிரை யொத்த ஆகத்தில் அழகுபெற அரும்பிய, அணங்கு உடை நின் வனமுலை தாய - வருத்தும் இயல்புடைய நின் அழகிய முலையிற் பரந்த, சுணங்கிடை தொய்யிலை வரித்தல் நினைந்தே - சுணங்கினிடையே தொய்யில் எழுதுதலையும் நினைந்து,

வல்லே வருவர் - விரைந்து வந்தருள்வர் ஆதலின்,

---

(பாடம்) 1. சுணங்கடை. 2. செல்லூர் இளம்பொன் சாத்தன் கொற்றன்; உறையூர் இளம்பொன் வாணிகன் சாத்தன் கொற்றன்.

க—ரு. தொல்நலம் சிதையச் சாஅய் - பழைய அழகு சிதைந்திட வருந்தி, அல்கலும் - நாடோறும், இன்னும் வாரார் - இன்னும் வந்திலர், இனி எவன் செய்குஎன - இனி என்ன செய்வேன் என்று, பெரும் புலம்பு உறுதல் ஓம்புமதி - மிக்க வருத்தம் அடைதலைப் பரிகரிப்பாயாக.

(முடிபு) தோழி! காடிறந்தகன்றோர் நீடினர் ஆயினும், நினது ஐம்பால் வெறிமலர் பெய்தலையும், நின் வனமுலைத் தாஅய சுணங்கிடைத் தொய்யில் எழுதுதலையும் நினைந்து வல்லே வருவர்; ஆதலின், நலம் சிதையச் சாஅய், அல்கலும் பெரும் புலம்பு உறுதல் ஓம்பு மதி.

(வி - ரை.) தடக்கை மானப் பிணித்தியன்ற ஐம்பால் என்க. அருந்தி என்பது அருந்து எனத் திரிந்ததெனக் கொண்டு, அருந்தி வெறிகொள் என்றலுமாம். கதம் கற்ற - வெம்மை முறுகிய என்றபடி. ஏ கல் நெறி: ஏ - பெருக்க மாதலை, [1]'ஏ பெற்றாகும்' என்பதன் உரையால் அறிக; ஏகல் நெறி - உயர்ச்சியையுடைய நெறியென்றுமாம்; [2]ஏகல் வெற்பன் என்பது காண்க. பெடை வயிரின் நரலுங் காடு என்க. அயிரியாறு தமிழ்நாட்டின் வடக்கண் ணுள்ளதோர் யாறு என்பது [3]'வடுகர் பெருமகன், பேரிசை யெருமை நன்னாட் டுள்ளதை, அயிரியா றிறந்தனர் ஆயினும்' என்பதனால் அறியப்படும். போலும்: ஒப்பில் போலி. மலைமருள்: மருள், உவமச்சொல். காவிரி வடவயின் சிறுகுடி என்னும் ஊரிலுள்ள மாவின் தளிர்என விரித்துரைக்க. பண்ணனது ஊர் சிறுகுடி என்பது, [4]' தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன், பண்ணன் சிறுகுடிப் படப்பை' என்பதனால் அறியப்படும்.

---

## 178. குறிஞ்சி

[தோழி வரைவு மலிந்து சொல்லியது.]

வயிரத் தன்ன வையேந்து மருப்பின்
வெதிர்வேர் அன்ன பரூஉமயிர்ப் பன்றி
பறைக்கண் அன்ன நிறைச்சுனை பருகி
நீலத் தன்ன அகலிலைச் சேம்பின்
ரு பிண்டம் அன்ன கொழுங்கிழங்கு மாந்திப்
பிடிமடிந் தன்ன கன்மிசை ஊழிழிபு
யாறுசேர்ந் தன்ன ஊறுநீர்ப் படாஅர்ப்
பைம்புதல் நளிசினைக் குருகிருந் தன்ன
வண்பிணி அவிழ்ந்த வெண்கூ தாளத்து
கo அலங்குகுலை யலரி தீண்டித் தாதுகப்
பொன்னுரை கட்டளை கடுப்பக் காண்வரக்
கிளையமல் சிறுதினை விளைகுரல் மேய்ந்து
கண்ணினிது படுக்கும் நன்மலை நாடனொடு

1. தொல், சொல், உரி. 2. குறுந். உகூரு. 3, அகம். உருஙு. 4. அகம் ருச.

உணர்ந்தனை புணர்ந்த நீயும் நின்றோட்
௧௫ பணைக்கவின் அழியாது துணைப்புணர்ந் தென்றும்
தவலில் உலகத் துறைஇயரோ தோழி
எல்லையும் இரவும் என்னாது கல்லெனக்
கொண்டல் வான்மழை பொழிந்த வைகறைத்
தண்பனி அற்சிரம் தமியோர்க் கரிதெனக்
௨௰ கனவினும் [1]பிரிவரி யலனே அதன்றலை
முற்றான் கண்ட ஞான்றினும்
பிற்பெரி தளிக்குந்தன் பண்பி னானே.

—பரணர்.

(சொ - ள்.) ௧௬ - தோழி -,

௧—௧௩. வயிரத்து அன்ன வை ஏந்து மருப்பின் - வயிரத்தை ஒத்த கூரிய மேனோக்கிய கோட்டினையும், வெதிர்வேர் அன்ன பரூஉ மயிர்ப் பன்றி - மூங்கில் வேரினை ஒத்த பருத்த மயிரினையுமுடைய பன்றியானது, பறைக்கண் அன்ன நிறைச் சுனை பருகி - பறையின் கண்ணினை ஒத்த நிறைந்த சுனை நீரைக் குடித்து, நீலத்து அன்ன அகல் இலைச் சேம்பின் - நீலமணியை யொத்த நிறத்தினையுடைய அகன்ற இலையினையுடைய சேம்பின், பிண்டம் அன்ன கொழு கிழங்கு மாந்தி - பிண்டித்து வைத்தாற்போன்ற வளவிய கிழங்கினை நிறையத் தின்று, பிடி மடிந்தன்ன கல்மிசை - பெண் யானை கிடந்தாலொத்த கல்லின்மீது, ஊழ் இழிபு - வருத்தமின்றி முறையாக இறங்கிவந்து, யாறு சேர்ந்தன்ன ஊறுநீர் படாஅர் - யாற்றினை அடுத்திருப்பதுபோன்ற நீர் ஊறும் இடத்திலுள்ள சிறுதூறாகிய, பைம் புதல் நளிசினை குருகு இருந்தன்ன - பசிய புதரிலுள்ள செறிந்த கிளைகளில் வெண்ணாரை யிருந்தாலொத்த, வண்பிணி அவிழ்ந்த வெண்கூதாளத்து அலங்கு குலை அலரி தீண்டி - வெள்ளிய கூதளஞ் செடியின் அசையும் கொத்திலுள்ள வளம்பொருந்திய முகை விரிந்த மலரினைப் பொருந்தி, தாது உக - அதன் பூம்பொடி மேலே உதிர்தலால், பொன் உரை கட்டளை கடுப்பக் காண்வர - பொன் உரைத்து மாற்று அறியும் கட்டளைக் கல்லினை ஒப்ப அழகு பெறத் தோன்றி, கிளை அமல் சிறுதினை விளைகுரல் மேய்ந்து - கிளைத்தல் மிக்க சிறிய தினையின் விளைந்த கதிரினை மேய்ந்து, கண் இனிது படுக்கும் நல் மலை நாடனொடு - இனிது கண்ணுறங்கும் இடமாகிய நல்லமலை நாட்டை யுடையானொடு,

௧௪—௧௫. உணர்ந்தனை புணர்ந்த நீயும் - ஊடிப்பின் அவ்வூடலை நீங்கிப் புணர்ந்திடும் நீயும், நின்தோள் பணைக்கவின் அழியாது - நினது தோளின் மூங்கில்போலும் அழகு ஒழியாது, என்றும் துணை புணர்ந்து - நின் தலைவனுடன் என்றும் சேர்ந்து வாழ்ந்து பின், தவல் இல் உலகத்து உறைஇயர் - என்றுங்கெடாத மறுமை யுலகத்துத் தங்கி வாழ்வீராக;

(பாடம்) 1. பிரிபறி யலரே.

கஎ—உ0. எல்லையும் இரவும் என்னாது - பகலும் இரவும் என்றில்லாது, கல் என கொண்டல் வான் மழை பொழிந்த வைகறை - கல்லெனும் ஒலியுடன் மேகம் பெரிய மழையைச் சொரிந்த விடியற்காலத்தே, தண்பனி அற்சிரம் - குளிர்ந்த பனியையுடைய அற்சிரக்காலம், தமியோர்க்கு அரிது என - தனித்திருப்போர்க்குத் தாங்கற்கரிதாகுமென வுணர்ந்து, கனவினும் பிரிவு அறியலன் - கனவின்கண்ணும் பிரிதலை அறியான்;

உ0—உ. அதன் தலை - அதன்மேலும், தன் பண்பினுன் - தனது நற்குணத்தினுல், முன் தான்கண்ட ஞான்றினும் - முதன்முதல் தான் கண்ட நாளினும், பின் பெரிது அளிக்கும் - பின் எந்தநாளினும் மிகவும் அருள் செய்வானுவன்.

(முடிபு) தோழி! பன்றி கண் இனிது படுக்கும் நன்மலை நாடனெடு, என்றும் புணர்ந்து உறைஇயரோ; அற்சிரம் தமியோர்க்கு அரிதெனக் கனவினும் பிரிவு அறியலன்; அதன்றலை தன் பண்பினுலே, முற்கண்ட ஞான்றினும் பிற்பெரிது அளிக்கும்.

(வி-ரை.) வயிரத்தன்ன மருப்பு, வை மருப்பு, ஏந்து மருப்பு எனத் தனித்தனி இயையும். குழிந்து வட்டமாயிருத்தல் பற்றிச் சுனைக்குப் பறைக்கண் உவமை கூறப்பட்டது. படாஅர் - சிறு தூறு; படுகர் என்றுமாம். படுகர் - நீர்நிலை. கருநிறமுடைய பன்றியின் உடம்பில் கூதளத்தின் பொன்னிறப் பூம்பொடி படிந்திருத்தல், பொன்னின் மாற்றறியும் கரிய கட்டளைக் கல்லிற் பொன் உரைத்தாற்போலும் என உவமமும் பொருளும் ஒத்து விளங்குதல் காண்க. தலைவன்மாட்டுத் தவறில்லை யாயினும் அவன்பால் இருப்பதாக ஏறட்டுக்கொண்டு, களவுக் காலத்தும் சிறுபான்மை ஊடுதலும், பின்னர் அவ்வூடல் நீங்கிக் கூடுதலும் தலைவிமாட்டுண்மையின், 'உணர்ந்தனை புணர்ந்த' என்ருள். உணர்தல் - ஊடல் நீங்குதல். இனி, இயற்கைப் புணர்ச்சி முதலிய கூட்டங்களால், தலைவனுடைய பண்பினை இனிதுணர்ந்த நீயும் என்றுரைத்தலுமாம். நீயும் என்ற உம்மையால் தலைவனும் என்பது பெறப்படும். தவல்இல் உலகம் - கெடுதலில்லாத இன்பத்தையுடைய மறுமை யுலகம். இவ்வுலகிலே தணவாக் காதலுடன் கூடி இல்லறம் இனிது நடாத்தி, நன்மகப் பெற்று வாழ்ந்தோர், மறுமையிலும் பிரிவின்றி இன்பம் துய்ப்பர் என்னுங் கருத்தினளாதலின் என்றும் தவலிலுலகத்து உறைஇயர் என்று கூறினுளென்க; [1]'இம்மை மாறி மறுமை யாயினும், நீயா கியரென் கணவனை, யானு கியர்நின் னெஞ்சுநேர் பவளே' [2]'இம்மை யுலகத் திசையொடும் விளங்கி, மறுமை யுலகமும் மறுவின் றெய்துப, செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச், சிறுவர்ப் பயந்த செம்மலோரென' என்பன காண்க. இவ்வாற்ருல், தலைவன் வரைய வருதலையுணர்ந்து தோழி வரைவு மலிந்து கூறினுள் என்பது பெற்ரும். அங்ஙனம் தலைவன் வரைதல் ஒருதலைஎன வற்புறுத்துதற்குக் கனவினும் பிரிவு அறியலன் என்றும், முற்ருன் கண்ட ஞான்றினும் பிற்பெரி

1. குறுந். சக. 2. அகம். சுசு.

தளிக்கும் என்றும் கூறினள். இயற்கைப் புணர்ச்சி தொடங்கி ஒரு காலைக் கொருகால் தலைவி மாட்டு அன்பு பெருகித் தலையளி செய்து வருதலைக் கண்டுளாள் ஆகலின், தன் பண்பினானே அளிக்கும் என்றனள்.

(உ - றை.) பன்றி சுனை பருகிக் கிழங்கு மாந்தித் தினை விளை குரல் மேய்ந்து இனிது கண்படுக்கும் நாடன் என்றது, தலைவன் தான் கருதிய பொருளெலாம் பெற்றுத் தலைவியை மணந்து இன்பந்துய்த்து இனிது வாழ்வான் என்றபடியாம்.

---

## 179. பாலை

[பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழி செலவு அழுங்கச் சொல்லியது.]

விண்டோய் சிமைய விறல்வரைக் கவாஅன்
வெண்டே ரோடுங் கடங்காய் மருங்கில்
துனையெரி பரந்த துன்னரும் வியன்காட்டுச்
சிறுகண் யானை நெடுங்கை நீட்டி
௫ [1]வான்வாய் திறந்தும் வண்புனல் பெறுஅது
கான்புலந்து கழியுங் கண்ணகன் பரப்பின்
விடுவாய்ச் செங்கணைக் கொடுவில் ஆடவர்
நன்னிலை பொறித்த கன்னிலை அதர
[2]அரம்புகொள் பூசல் களையுநர்க் காணாச்
௧௦ சுரஞ்செல விரும்பினி ராயின் இன்னகை
முருந்தெனத் திரண்ட முள்ளெயிற்றுத் துவர்வாய்க்
குவளை நாண்மலர் புரையும் உண்கணிம்
மதியேர் [3]வாணுதல் புலம்பப்
பதிபெயர்ந் துறைதல் ஒல்லுமோ நுமக்கே.

—கோடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனார்.

(சொ - ள்.) ௧—௧௦. தலைவ, விண்தோய் சிமைய விறல் வரைக் கவான் - வானை அளாவிய உச்சியினையுடைய பெருமை தங்கிய மலையினது பக்கமலைக் கண்ணே, வெண்தேர் ஓடும் காய் கட மருங்கில் - பேய்த்தேர் ஓடா நிற்கும் காய்ந்த கற்காட்டின் பக்கத்தே, துனை எரி பரந்த துன் அரும் வியன்காட்டுச் சிறுகண் யானை - விரைந்த நெருப்புப் பரவிய கிட்டுதற்கரிய பெரிய காட்டிலுள்ள சிறிய கண்ணினையுடைய யானை, நெடு கை நீட்டி வான்வாய் திறந்தும் - அப் பேய்த் தேரின்பால் தன் நெடிய கையினை நீட்டியும் பெரிய வாயினைத் திறந்தும், வண்புனல் பெறுஅது கான் புலந்து கழியும் கண் அகன் பரப்பின் - வளவிய நீரினைப் பெறுமல் காட்டை வெறுத்துக் கழிந்துபோம் இடம் அகன்ற பாலை நிலத்தின்கண், விடுவாய்ச் செங்கணைக் கொடுவில் ஆடவர் - விடுதல் வாய்ந்த சிவந்த அம்பினையுடைய

(பாடம்) 1. வறள்வாய். 2. இரும்புகொள். 3. வாண்முகம்.

வளைந்த வில்லைக்கொண்ட மறவரது, நல்நிலை பொறித்த கல் நிலை அதர - நல்ல வெற்றி நிலையை எழுதிய நடுகற்கள் நிலைகொண்ட வழிகளையுடையவாய, அரம்பு கொள் பூசல் களையுநர் காணாச் சுரம்செல விரும்பினிர் ஆயின் - குறும்பர்கள்செய்யும் பூசலை நீக்கு நரைக் காணாத சுரநெறியைக் கடந்து செல்ல விரும்பினீர் ஆயின்,

௧௦—௪. இன்நகை முருந்துஎனத் திரண்ட முள் எயிற்றுத் துவர்வாய் - இனிய நகையினையும் மயிலிறகின் அடியெனத் திரண்ட முட்போலும் கூரிய பற்களையும் சிவந்த வாயினையும், குவளை நாள் மலர் புரையும் உண்கண் - குவளையின் புதிய மலரை யொக்கும் மை யுண்ட கண்ணினையும் உடைய, இ மதி ஏர் வாள் நுதல் புலம்ப - இந்த மதியினை யொத்த ஒளி பொருந்திய நெற்றியினை யுடையாள் வருந்த, பதி பெயர்ந்து உறைதல் நுமக்கு ஒல்லுமோ - இப் பதியை நீங்கிப் போய்த் தங்குதல் உமக்குப் பொருந்துவதாமோ?

(முடிபு) **தலைவ! சுரம்செல விரும்பினிராயின், வாணுதல் புலம்பப் பதி பெயர்ந்து உறைதல் நுமக்கு ஒல்லுமோ.**

**வெண்தேர் ஓடும் வியன் காட்டில், யானை, கைந் நீட்டியும் வாய் திறந்தும் புனல் பெறுது புலந்து கழிவதும், கொடுவில்லாடவர் நடுகல் நிலைபெற்ற அதர் களையுடையதும் அரம்புகொள் பூசல் களையுநர் இல்லாததும் ஆகிய சுரம் என்க.**

(வி - ரை.) கொடுவில் ஆடவர், கரந்தை மறவர் என்க. அரம்பு- குறும்பர், காட்டுத் தலைவர். 'இன்னகை......வாணுதல் புலம்ப' என்றது தலைவியின் இனிய நகையும் கூரிய பல்லும் துவர் வாயும் உண்கண்ணும் வாணுதலும் ஆய இவை நும்முன் தோன்றி நும்மை அழுங்குவிப்பனவாகலின் நீர் பிரிந்துறைதல் ஒல்லாதென்றாள் என்றபடி.

---

## 180. நெய்தல்

[இரந்து பின்னின்ற தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகளைக் குறைநயப்பக் கூறியது. தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியதூஉமாம்.]

நகைநனி யுடைத்தால் தோழி தகைமிகக்
கோதை ஆயமொடு குவவுமணல் ஏறி
வீததை கானல் வண்டல் அயரக்
கதழ்பரித் திண்டேர் கடைஇ வந்து
௫ தண்கயத் தமன்ற ஒண்பூங் குவளை
அரும்பலைத் தியற்றிய சுரும்பார் கண்ணி
பின்னுப்புறந் தாழக் கொன்னே சூட்டி
நல்வரல் இளமுலை நோக்கி நெடிதுநினைந்து
நில்லாது பெயர்ந்தனன் ஒருவன் அதற்கே
௧௦ புலவுநா றிருங்கழி துழைஇப் பலவுடன்

புள்ளிறை கொண்ட முள்ளுடை நெடுந்தோட்டுத்
தாழை மணந்து ஞாழலொடு கெழீஇப்
படப்பை நின்ற முடத்தாட் புன்னைப்
பொன்னேர் நுண்டாது நோக்கி
கடு என்னும் நோக்குமிவ் வழுங்கல் ஊரே.

—[1]கருவூர்க் கண்ணம்பாளனார்.

(சொ - ள்.) க—க. தோழி—, தகை மிக கோதை ஆயமொடு குவவு மணல் ஏறி - அழகு மிக மாலையையுடைய ஆயத்தாருடன் (நான்) திரண்ட மணல் மேட்டில் ஏறி, வீ ததை கானல் வண்டல் அயர - மலர் நெருங்கிய சோலையில் விளையாடல் செய்யா நிற்க, ஒருவன் - ஒரு தலைவன், கதழ் பரி திண்தேர் கடைஇ வந்து - விரைந்த குதிரையையுடைய வலிய தேரினைச் செலுத்தி வந்து, தண் கயத்து அமன்ற ஒள்பூ குவளை - தண்ணிய குளத்தே நிறைந்த ஒள்ளிய பூக்களையுடைய குவளையின், அரும்பு அலைத்து இயற்றிய சுரும்பு ஆர் கண்ணி - அரும்பினை விரித்துக் கட்டிய வண்டுகள் மொய்க்கும் கண்ணியினை, பின்னுப்புறம் தாழக் கொன்னே சூட்டி - எனது பின்னலைக் கொண்ட முதுகின்பால் தாழ்ந்திட யான் வேண்டாதே தலையிற் சூட்டி, நல்வரல் இளமுலை நோக்கி - நல்ல வளர்ச்சியையுடைய இளைய முலையைப் பார்த்து, நெடிது நினைந்து நில்லாது பெயர்ந்தனன் - ஏதோ நீள நினைந்து பின் தாழ்க்காது போயினன் ;

கக—கடு. அதற்கே - அவ்வளவிற்கே, இ அழுங்கல் ஊர் - இந்த ஆரவாரமிக்க ஊர், புலவு நாறு இருகழி துழைஇ பல உடன் புள் இறைகொண்ட - புலால் வீசும் பெரிய கழியினைத் துழாவிப் பல வகைப் புட்களும் ஒருங்கே தங்கியிருக்கும், முள் உடை நெடு தோட்டுத் தாழை மணந்து - முள்ளுடைய நீண்ட இதழையுடைய தாழையைச் சார்ந்து, ஞாழலொடு கெழீஇ - புலிநகக் கொன்றையொடு பொருந்தி, படப்பை நின்ற முடத்தாள் புன்னைப் பொன் நேர் நுண் தாது நோக்கி - தோட்டத்தில் நிற்கும் வளைந்த தாளினையுடைய புன்னையது பொன்னையொத்த நுண்ணிய தாதினைப் பார்த்து, என்னும் நோக்கும் - என்னையும் நோக்கா நிற்கும் ;

க. நகை நனி உடைத்து - இது மிகவும் நகையினைத் தருவதொன்றாகும்.

(முடிபு) தோழி ! நான் ஆயமொடு வண்டல் அயர, ஒருவன் தேர்கடைஇ வந்து, கண்ணியினைப் பின்னுப்புறம் தாழக் கொன்னே சூட்டி, இளமுலை நோக்கி, நெடிது நினைந்து பெயர்ந்தனன்; அதற்கே இந்த அழுங்கலூர் புன்னைத் தாது நோக்கி என்னும் நோக்கும்; இது நகை நனியுடைத்து.

(வி - ரை.) யான் விரும்பாதிருக்கச் செய்தே சூட்டினான் என்பாள் கொன்னே சூட்டி யென்றாள். பின் அவனோடு தனக்கு யாதொரு தொடர்பும் இன்றென்பாள் நில்லாது பெயர்ந்தனன் என்றாள். இவ்வூர் புன்னையின் தாது நோக்கி என்னையும் நோக்கும்

(பாடம்) 1. கருவூர்க் கண்ணம்பாணனார் ; கண்ணன் பரணனார்.

என்றது, என்மேனி புன்னையின் தாது போலும் பசலை படர்ந்த தெனக் கருதுகின்றது என்றபடி; இது குறிப்பு நுட்பமாம். தோழி யானவள் தலைவி குறை நயப்பக் கருதி, இங்ஙனம் படைத்து மொழி யாற் கூறவே, இக் கானலின்கண் இங்ஙனம் வந்து செல்வான் தலை வனே யாவான் என்னுங் கருத்தினளாய்க் குறை நேர்வாளாம் என்க. இரண்டாவது துறையின் கருத்து தலைவியானவள் தலைவன் வரை யாது பிரிந்திருத்தலால், தன்மேனி பசலை பூத்தலையும் அதனால் ஊரின்கண் அலர் எழுதலையும் தலைமகன் கேட்பத் தோழிக்குச் சொல்லினளாம் என்பது.

---

## 181. பாலை

[இடைச் சுரத்து ஒழியக் கருதிய நெஞ்சிற்குச் சொல்லியது.]

துன்னருங் கானமுந் துணித லாற்றாய்
பின்னின்று பெயரச் சூழ்ந்தனை யாயின்
என்னிலை யுரைமோ நெஞ்சே ஒன்னார்
ஓம்பரண் கடந்த வீங்குபெருந் தானை
௫ அடுபோர் மிஞிலி செருவிற் குடைஇ
முருகுறழ் முன்பொடு பொருதுகளஞ் சிவப்ப
ஆஅய் [1]எயினன் வீழ்ந்தென ஞாயிற்
றொண்கதி ருருப்பம் புதைய ஓராங்கு
வம்பப் புள்ளின் கம்பலைப் பெருந்தோடு
௧௦ விசும்பிடை தூர ஆடி மொசிந்துடன்
பூவிரி அகன்றுறைக் கணைவிசைக் கடுநீர்க்
காவிரிப் பேரியாற் [2]றயிர்கொண் டீண்டி
எக்க ரிட்ட குப்பை வெண்மணல்
வைப்பின் யாணர் வளங்கெழு வேந்தர்
௧௫ ஞாலம் நாறும் நலங்கெழு நல்லிசை
நான்மறை முதுநூல் முக்கட் செல்வன்
ஆல முற்றம் கவின்பெறத் [3]தைஇய
பொய்கை சூழ்ந்த [4]பொழின்மனை மகளிர்
கைசெய் பாவைத் துறைக்கண் இறுக்கும்
௨௦ மகர நெற்றி வான்றோய் புரிசைச்
சிகரந் தோன்றாச் சேணுயர் நல்லிற்
[5]புகாஅர் நன்னாட் டதுவே பகாஅர்
பண்டம் நாறும் [6]வண்டடர் ஐம்பாற்
பணைத்தகைத் தடைஇய காண்பின் மென்றோள்
௨௫ அணங்குசால் அரிவை இருந்த
மணங்கமழ் மறுகின் மணற்பெருங் குன்றே.

—பரணர்.

---

(பாடம்) 1. வண்மை யெயினன். 2. அயிர்கொடீண்டி. 3. தைஇப். 4. பொழின் மணமகளிர். 5. பகர்வர். 6. வண்டாடைம்பாற்.

(சொ - ள்.) ௩. நெஞ்சே -,

௨உ—௬. பகாஅர் பண்டம் நாறும் வண்டு அடர் ஐம்பால் - விற்பாரது நறுமணப் பண்டங்கள் நாறுகின்ற வண்டுகள் மொய்க்கும் ஐம்பகுதியாய கூந்தலினையும், பணைத்தகை தடைஇய காண்பு இன்மெல் தோள் - மூங்கிலின் தகுதியையுடையதாய் வளைந்த காண்டற்கு இனிய மெல்லிய தோளினையுமுடைய, அணங்குசால் அரிவை இருந்த - அழகு மிக்க நம் தலைவியிருந்த, மணம் கமழ் மறுகின் மணல் பெரும் குன்று - மணம் நாறும் தெருக்களையுடைய பெரிய குன்றம்,

௩—௭. ஆஅய் எயினன் - ஆய் எயினன் என்பான், முருகு உறழ் முன்பொடு - முருகனை ஒத்த வலிமையொடு நின்று, ஒன்னார் ஓம்பு அரண் கடந்த வீங்கு பெரும் தானை - பகைவர் பாதுகாக்கும் அரண்களை வென்று கடந்த மிக்க பெரிய சேனைகளையுடைய, அடுபோர் மிஞிலி செருவிற்கு - போர் அடுதல்வல்ல மிஞிலி என்பான் செருவின்கண், களம் சிவப்பப் பொருது - குருதியால் களம் சிவப்புறப் பொருது பின், உடைஇ வீழ்ந்தென - தோற்று வீழ்ந்தனனாக,

௭—௧0. ஞாயிற்று ஒள்கதிர் உருப்பம் புதைய - ஞாயிற்றின் ஒள்ளிய கதிர்களின் வெப்பம் (அவன் உடலிற்படாது) மறைய, ஓராங்கு - ஒருபெற்றியே, வம்பப் புள்ளின் கம்பலைப் பெருந்தோடு - புதிய புட்களின் ஒலி பொருந்திய பெரிய கூட்டம், விசும்பிடை தூர ஆடி - விசும்பிடம் மறைய வட்டமிட்டுப் பின்பு, உடன் மொசிந்து - ஒருங்குகூடி,

௧௧—௯. பூ விரி அகல் துறை - பூக்கள் விரிந்த அகன்ற துறையினையுடைய, காவிரிப் பேர் யாற்று - காவிரியாய பெரிய ஆற்றின், கனைவிசைக் கடுநீர் - மிக்க விசையுடன் கடுகிவரும் நீரானது, அயிர் கொண்டு ஈண்டி - நுண்மணலைக்கொண்டு திரளும்படி, எக்கர் இட்ட குப்பை வெண்மணல் - மேடாக்கிய வெள்ளிய மணற் குவியலையும், யாணர் வைப்பின் - புது வருவாயையுமுடைய ஊர்களையுடைய, வளம்கெழு வேந்தர் - செல்வம் மிக்க சோழவேந்தராற் புரக்கப்படும், ஞாலம் நாறும் நலம்கெழு நல்இசை - உலகமெல்லாம் பரவும் நன்மை பொருந்திய நற்புகழையுடைய, நால்மறை முதுநூல் முக்கண் செல்வன் - நான்கு வேதங்களாய பழைய நூலை அருளிய முக்கண்ணையுடைய பரமனது, ஆலமுற்றம் - ஆலமுற்றம் என்னுமிடத்து, கவின்பெற தைஇய - அழகுபெற இயற்றப்பெற்ற, பொய்கை சூழ்ந்த பொழில் - பொய்கையைச் சூழ்ந்துள பொழிலின்கண்ணே, மனைமகளிர் - சிற்றிலிழைத்து விளையாடும் சிறுமிகளது, கைசெய் பாவைத் துறைக்கண் - அழகுறச் செய்யப்பெற்ற பாவைகளையுடைய துறையின் கண்ணே, இறுக்கும் - வந்து தங்குவதும்,

௨0—௨. மகர நெற்றி வான்தோய் புரிசை - மகரக் கொடியினை உச்சியிற்கொண்ட வானைத்தோயும் மதிலையும், சிகரம் தோன்றாச் சேண் உயர் நல்இல் - முடி அறியப்படாதவாறு சேணின்கண்

உயர்ந்த நல்ல மாடங்களையுடையதும் ஆகிய, புகாஅர் நல்நாட்டதுவே - காவிரிப்பூம்பட்டினத்தையுடைய நல்ல சோழநாட்டின் கண்ணதாகும்;

௧—௩. துன் அரும் கானமும் துணிதல் ஆற்ருய் - செல்லுதற்கு அரிய காட்டைக் கடக்கவும் துணிவுறல் செய்யாயாய், பின் நின்று பெயரச் சூழ்ந்தனை ஆயின் - பின்னே நின்று பெயர்ந்து மீண்டிடக் கருதினையாயின், என் நிலை உரைமோ - எனது இந்நிலையினை ஆண்டுச் சென்று அவட்கு உரைப்பாயாக.

(முடிபு) நெஞ்சே! அரிவையிருந்த மணற்பெருங் குன்று, புகாஅர் நன்ளுட்டது; நீ கானம் துணிதல் ஆற்ருய் பின் நின்று பெயரச் சூழ்ந்தனையாயின், என்நிலை (ஆண்டுச் சென்று) அவட்கு உரைப்பாயாக.

(வி - ரை.) கானமும் - காட்டினைக் கடக்கவும்; உம்மை எச்சப் பொருட்டு; அசை நிலையுமாம். ஒன்ஞர், ஓம்பரண் கடந்த வீங்கு பெருந்தானை என்பதனுல் மிஞிலியின் தானைப் பெருக்கமும், முருகுறழ் முன்பொடு பொருது என்பதனுல் எயினனது போர் வலியும் பெறப்பட்டன. களஞ் சிவப்பப் பொருது என்றமையால், பகைவர் தானையையெல்லாம் கொன்று பின் வீழ்ந்தமை பெற்ரும். களஞ் சிவப்ப வீழ்ந்தனன் எனக்கொண்டு, பகைவனது வேலால் தாக்குண்டு வீழ்ந்தான் என்றுரைத்தலுமாம். எயினன் புள்ளின் பாதுகாவலனுதலின், இவன் வீழ்ந்தபோழ்து பறவைகளெல்லாம் இவன்மேல் ஞாயிற்றின் கதிர்படாது மறைத்தன என்பது, [1]'புள்ளிற் கேம மாகிய பெரும்பெயர், வெள்ளத் தானை அதிகற் (எயினற்) கொன்று' என்பதனுலும், [2]'வெளியன் வேண்மான் ஆஅய் எயினன் . . . மிஞிலியொடு, நண்பக லுற்ற செருவிற் புண்கூர்ந், தொள் வாண் மயங்கமர் வீழ்ந்தெனப் புள்ளொருங், கங்கண் விசும்பின் விளங்கு ஞாயிற், ருெண்கதிர் தெருமைச் சிறகரிற் கோலி, நிழல் செய் துழறல்' என்பதனுலும் அறியப்படும். 'அகவுநர் வேண்டின் வெண்கோட், டண்ணல் யானை யீயும் வண்மகிழ், வெளியன் வேண்மான் ஆஅய் எயினன்' (௨0௮) என்று இவன் கூறப் பெறுதலின் ஈண்டு 'வண்மை எயினன்' என்று காணப்படும் பாடமும் பொருத்தமுடைத்தே.

எயினன் வீழ்ந்தென, உருப்பம் புதைய, புள்ளின் பெருந்தோடு ஆடி, மொசிந்து, துறைக்கண் இறுக்கும் புகார் நன்ளுடு என்க. முக்கட் செல்வனது ஆலமுற்றத்திடத்தே தைஇய பொய்கை சூழ்ந்த பொழிலில் மகளிர் கைசெய் பாவைகளையுடைய துறை யென்று இயையும். வளங்கெழு வேந்தரால் புரக்கப்படும் புகார் நன்ளுடு என்க; ஆலமுற்றம் எனலுமாம். ஈண்டி, ஈண்டவெனத் திரிக்க. இறைவன் புகழே மெய்யாய புகழ் ஆகலானும், அதுவே உலகெங்கும் பரத்தற்குரியதாகலானும் 'ஞாலம் நாறும் நலங்கெழு நல்லிசை முக்கட் செல்வன்' என்ருர். நான்மறை முக்கட் செல்வனது வாய்மொழியாம் என்பது, [3]'நன்ருய்ந்த நீணிமிர் சடை, முது

1. அகம். ௧௪௨. 2. அகம். ௨0௮. 3. புறம். ௧௬௬.

முதல்வன் வாய்போகா, தொன்று புரிந்த ஈரிரண்டின், ஆறுணர்ந்த ஒரு முதுநூல்' என்றதனுல் அறியப்படும். ஆலமுற்றம் சிவ பிரான் எழுந்தருளியுள்ளதோர் இடமாகும். இறக்கும் புகார் எனவும், புரிசையினையும் நல் இல்லினையுமுடைய புகார் எனவும் தனித் தனி கூட்டுக. பகர்வார் என்பது பகாஅர் எனத் திரிந்து நின்றது. பண்டம் - பூவும் சாந்தும் முதலாயின. அணங்குசால் அரிவை - வருத்துதலையுடைய அரிவை என்றுதல், தெய்வம்போலும் அரிவை என்றுதல் கூறுதலுமாம். குன்றம் நன்ருட்டது ; சூழ்ந்தனையாயின் ஆண்டுச் சென்று என்னில உரையென விரித்துரைக்க.

---

## 182. குறிஞ்சி

[தோழி இரா வருவானைப் பகல் வர என்றது.

பூங்கண் வேங்கைப் பொன்னிணர் [1]மிலைந்து
வாங்கமை நோன்சிலை எருத்தந் திரீஇத்
தீம்பழப் பலவின் சுளைவிளை தேறல்
விளை யம்பின் இளையரொடு மாந்தி
௫ ஓட்டியல் பிழையா வயநாய் பிற்பட
வேட்டம் போகிய குறவன் காட்ட
குளவித் தண்புதல் குருதியொடு துயல்வர
முளவுமாத் தொலைச்சும் குன்ற நாட
அரவெறி யுருமோ டொன்றிக் கால்வீழ்த்
௧௦ துரவுமழை பொழிந்த பானாட் கங்குல்
தனியை வந்த வாறுநினைந் தல்கலும்
பனியொடு கலுழுமிவள் கண்ணே அதனுல்
கடும்பகல் வருதல் வேண்டும் தெய்ய
அதிர்குரல் முதுகலை கறிமுறி முனைஇ
௧௫ உயர்சிமை நெடுங்கோட் டுகள உக்க
கமழ்தழ் அலரி தாஅய் வேலன்
வெறியயர் வியன்களம் கடுக்கும்
பெருவரை நண்ணிய சாரலானே.

—கபிலர்.

(சொ - ள்.) க—அ. பூ கண் வேங்கை பொன் இணர் மிலைந்து - அழகிய இடத்தினையுடைய வேங்கை மரத்தின் பொன்போலும் பூங் கொத்துக்களைச் சூடி, வாங்கு அமை நோன்சிலை எருத்தத்து இரீஇ - வளைந்த மூங்கிலாலாய வலிய வில்லைத் தோளில் இருத்தி, தீம் பழ பலவின் சுளைவிளை தேறல் - இனிய பலாப்பழத்தின் சுளையினின்றும் விளைந்த தேனை, விளை அம்பின் இளையரொடு மாந்தி - சீழ்க்கை யொலியுடன் செல்லும் அம்பினையுடைய ஏவலிளையருடன் நிறயக்

(பாடம்) 1. மலைந்து.

குடித்து, ஓட்டு இயல் பிழையா வயநாய் பிற்பட - விலங்குகளைத் துரத்திப்பற்றும் இயல்பு தப்புதலில்லாத வலிய நாய் பின்னேவர, வேட்டம் போகிய குறவன் - வேட்டைக்குச் சென்ற குறவன், காட்ட குளவித் தண்புதல் குருதியொடு துயல்வர - காட்டிலுள்ள மல்லிகையாய தண்ணிய புதர் உதிரத்தொடு அசைந்திட, முளவு மா தொலைச்சும் குன்ற நாட -- முள்ளம் பன்றியைக் கொன்று வீழ்த்தும் குன்றுகளையுடைய நாட்டின் தலைவனே!

கூ---கஉ. உரவு மழை அரவு எறி உருமோடு ஒன்றி கால் வீழ்த்து - வலிய மேகம் அரவினை எறிந்து கொல்லும் இடியுடன் கூடிக் காலிறக்கங் கொண்டு, பொழிந்த பால் நாள் கங்குல் - நீரினைச் சொரிந்த அரைநாளாகிய இரவில், தனியை வந்த ஆறு நினைந்து - நீ தனியையாகி வந்த வழியேதத்தினை நினைந்து, அல்கலும் பனியொடு கலுழும் இவள் கண்ணே - இவள் கண் எப்பொழுதும் நீர் கொண்டு அழாநிற்கும்;

கஉ---அ. அதனால் -, அதிர் குரல் முதுகலை கறிமுறி முனைஇ - அதிரும் குரலினையுடைய முதிய முசுக்கலை மிளகின் தளிரை உண்டு வெறுத்து, உயர் சிமை நெடு கோட்டு உகள - உயர்ந்த உச்சியினையுடைய நீண்ட சிகரங்களிலே தாவுதலால், உக்க - உதிர்ந்த, கமழ் இதழ் அலரி தாஅய் - மணம் நாறும் இதழினையுடைய பூக்கள் பரந்து, வேலன் வெறி அயர் வியன் களம் கடுக்கும் - வேலன் வெறியாடும் பெரிய களத்தினை ஒக்கும், பெருவரை நண்ணிய சாரலான் - பெரிய மலையை அடுத்துள்ள சாரற்கண்ணே, கடும் பகல் வருதல் வேண்டும் - கடிய பகற்கண்ணே நீ வருதல் வேண்டும்.

(முடிபு) நாட! பானாட் கங்குல் தனியை வந்தவாறு நினைந்து, இவள்கண் அல்கலும் பனியொடு கலுழும்; அதனால் பெருவரை நண்ணிய சாரற்கண்ணே நீ கடும்பகல் வருதல் வேண்டும்.

(வி - ரை.) புதரிடத்தே பதுங்கியிருந்த முளவுமாவைக் கொல்லுதலின் புதல் குருதியொடு துயல்வருத லாயிற்று. இடியொலி கேட்டு அரவு உட்குமென்னும் வழக்குப்பற்றி அரவெறியுரும் எனப்பட்டது. உருமின் கடுமை கூறியபடியுமாம். உருமோடொன்றி என்றதனால் ஆற்றினது ஏதம் குறித்தாள். துணையொடும் வருதற்கரிய ஏதப்பாடுடைய வழியில் நள்ளிருளில் தனியையாய்த் தன்பொருட்டு வருகின்றாய் என்பதுணர்ந்து, இவள் ஆற்றாமை பெரிதுடையளாகின்றாள் என்பாள், 'தனியை வந்த ஆறு நினைந்தல் கலும் பனியொடு கலுழு மிவள்கண்ணே' என்றாள். கடும் பகல் - நண் பகல் என்றபடி. தெய்ய, அசை.

(உ - றை.) குறவன் முளவுமாவைக் கொல்ல அதற்கு இடமாகிய புதல் குருதியொடு அசைந்து தோன்றியதென்பது, தலைவன் தலைவியொடு களவொழுக்கத்தில் ஒழுக, அவ்வொழுக்கம் தலைவியின் மேனி வேறுபாட்டால் தாய் முதலியோர்க்குப் புலனாயிற்று என்றவாறும்.

## 183. பாலை

[தலைமகன் குறித்த பருவ வரவு கண்டு, தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

குவளை யுண்கண் கலுழவுந் திருந்திழைத்
திதலை அல்குல் அவ்வரி வாடவும்
அத்தமா ரழுவம் நத்துறந் தருளார்
சென்றுசே ணிடையர் ஆயினும் நன்றும்
௫ நீடலர் என்றி தோழி பாடான்று
பனித்துறைப் பெருங்கடல் [1]இறந்துநீர் பருகிக்
குவவுத்திரை அருந்து கொள்ளைய குடக்கேர்பு
வயவுப்பிடி யினத்தின் வயின்வயிற் றோன்றி
இருங்கிளைக் கொண்மூ ஒருங்குடன் துவன்றிக்
௧௦ காலை வந்தன்றாற் காரே மாலைக்
குளிர்கொள் பிடவின் கூர்முகை அலரி
வண்டுவாய் திறக்கும் தண்டா நாற்றம்
கூதிர் அற்சிரத் தூதை தூற்றப்
பனியலைக் கலங்கிய நெஞ்சமொடு
௧௫ வருந்துவம் அல்லமோ பிரிந்திசினோர் திறத்தே.

—கருவூர்க் கலிங்கத்தார்.

(சொ - ள்.) ௧—௫. தோழி -, குவளை உண்கண் கலுழவும் - எனது குவளை மலர் போன்ற மையுண்ட கண்கள் அழவும், திருந்து இழை திதலை அல்குல் அவ்வரி வாடவும் - திருந்திய அணியையும் தேமலையுமுடைய அல்குலின் அழகிய வரி வாட்டமுறவும், அருளார் நத்துறந்து - அருள் செய்யாராய் நம்மைப் பிரிந்து, அத்தம் ஆர் அழுவம் சென்று - அருநெறிகளையுடைய பரந்த பாலையைக் கடந்து சென்று, சேணிடையர் ஆயினும் - சேய்மைக்கண் உள்ளார் ஆயினும், நன்றும் நீடலர் என்றி - மிகவும் தாழ்க்காது வருவர் என்கின்றாய்;

௫—௧௦. இருங் கிளைக் கொண்மூ - பெரிய கூட்டமாய மேகங்கள், குவவு திரை - வளைந்த அலைகளையும், பனித்துறை - குளிர்ந்த துறையினையுமுடைய, பெருங்கடல் இறந்து - பெரிய கடலிலே மிக்குச்சென்று, நீர் பருகி அருந்து கொள்ளைய - நீரினைப் பருகியுண்ட மிகுதியை யுடையனவாய், குடக்கு ஏர்பு - மேற்கே எழுந்து, வயவு பிடி இனத்தின் - சூலுற்ற பெண் யானைக் கூட்டம்போல, வயின் வயின் தோன்றி - இடந்தோறும் தோன்றி, பாடு ஆன்று - ஒலிமிக்கு, ஒருங்கு உடன் துவன்றி - பெய்தற்கு ஒரு சேர நெருங்க, கார் காலை வந்தன்று - கார்காலம் காலையே வந்தது எனினும்,

௧௦—௫. மாலை - மாலைப் பொழுதில், குளிர்கொள் பிடவின் கூர் முகை அலரி - குளிர்ச்சி பொருந்திய பிடாவினது கூரிய அரும்பு அலர்தற்குரியதனை, வண்டு வாய் திறக்கும் தண்டா நாற்றம் - வண்டு வாயினை நெகிழ்த்தலால் எழும் அமையாத மணத்தினை, கூதிர்

(பாடம்) 1. விரைந்து நீர்.

அற்சிரத்து ஊதை தூற்ற - கூதிர் முன்பனிக் காலங்கட்கு உரிய வாடைக் காற்றுனது தூற்று நிற்க, பனி அலை கலங்கிய நெஞ்ச மொடு - பனி அலைத்தலால் கலங்கிய நெஞ்சமுடன், பிரிந்திசினோர் திறத்து - பிரிந்து சென்றுராய தலைவரின் பொருட்டு, வருந்துவம் அல்லமோ - நாம் வருந்தற்குரியோம் அல்லேமோ.

(முடிபு) தோழி! தலைவர் நத்துறந்து சேணிடையராயினும் நீடலர் என்றி; கார் காலை வந்தன்று; மாலை, பிடவினது அலரியின் நாற்றத்தை ஊதை தூற்ற பனி அலைக் கலங்கிய நெஞ்சமொடு நாம் வருந்துவம் அல்லமோ.

(வி - ரை.) இழை - மேகலை. நம் துறந்து - நத்துறந்து என விகாரமாயிற்று. துவன்றி - துவன்ற எனத் திரிக்க. கார்ப் பருவம் வந்ததாகலின், தலைவர் நீடாது வந்துவிடுவர் என்று கூறி ஆற்று வித்த தோழிக்கு, அவர் வருந்துணையும் நாம் எங்ஙனம் ஆற்றியிருக் கற்பாலம் என்பாள் கார்காலை வந்தது எனினும் மாலை கூதிர் அற் சிரத்து ஊதை தூற்றப் பனி அலைக் கலங்கிய நெஞ்சமொடு வருந்து வம் அல்லமோ என்று தலைவி கூறினுள். கார்காலை வந்ததெனினும் மாலை கூதிர் அற்சிரத்து ஊதை தூற்ற என்றது, அப் பருவங்கள் அடுத்தடுத்து விரைந்துவரும் என்பதை உணர்த்தியவாறு. கார்ப் பருவம் குறித்துச் சென்ற தலைவர் அப் பருவம் வந்தும் இன்னும் வந்திலாமையின், அடுத்துவரும் கூதிர் அற்சிரப் பருவங்களிற்றுன் அவர் வருதல் எங்ஙனம் தெளியப்படும் என்றுளுமாயிற்று.

---

## 184. முல்லை

[தலைமகன் வினைவயிற் பிரிந்து வந்து எய்தியவிடத்துத் தோழி புல்லு மகிழ்வு உரைத்தது.]

கடவுட் கற்பொடு குடிக்குவிளக் காகிய
புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின்
நன்ன ராட்டிக் கன்றியும் எனக்கும்
இனிதா கின்றுல் சிறக்கநின் ஆயுள்
௫ அருந்தொழின் முடித்த செம்மல் உள்ளமொடு
சுரும்பிமிர் மலர கானம் பிற்பட
வெண்பிட வவிழ்ந்த வீகமழ் புறவிற்
குண்டைக் கோட்ட குறுமுட் கள்ளிப்
புன்றலை புதைத்த கொழுங்கொடி முல்லை
௰ ஆர்கழல் புதுப்பூ உயிர்ப்பின் நீக்கித்
தெள்ளறல் பருகிய திரிமருப் பெழிற்கலை
புள்ளியம் பிணையொடு வதியும் ஆங்கண்
கோடுடைக் கையர் துளரெறி வினைஞர்
அரியல் ஆர்கையர் விளைமகிழ் தூங்கச்
௧௫ செல்கதிர் மழுகிய உருவ ஞாயிற்றுச்

(பாடம்) ௧௩. கோடுடைத்தலை.

செக்கர் வானஞ் சென்ற பொழுதில்
கற்பால் அருவியின் ஒலிக்கும் நற்றேர்த்
தார்மணி பலவுடன் இயம்பச்
சீர்மிகு குரிசினீ வந்துநின் றதுவே.

—மதுரை மருதன் இளநாகனார்.

(சொ - ள்.) ௧௧. சீர்மிகு குரிசில் - சிறப்பு மிக்க தலைவனே !

௫—௧௧. வெண்பிடவு அவிழ்ந்த வீ கமழ் புறவில் - வெள்ளிய பிடவ மரத்தின் விரிந்த மலர் மணக்கும் முல்லை நிலத்தே, குண்டைக்கோட்ட குறுமுள் கள்ளி - குறிய கிளைகளையும் குறிய முட்களையுமுடைய கள்ளியின், புன் தலை புதைத்த கொழு கொடி முல்லை - புல்லிய உச்சியினை மூடிய வளவிய முல்லைக் கொடியின், ஆர் கழல் புது பூ உயிர்ப்பின் நீக்கி - ஆர்க்குக் கழன்ற புதிய பூக்களை மூச்செறிதலால் ஒதுக்கி, தெள் அறல் பருகிய திரி மருப்பு எழில் கலை - தெளிந்த நீரைக் குடித்த முறுக்குண்ட கோட்டினையுடைய அழகிய மான்கலை, புள்ளி அம் பிணையொடு வதியும் அங்கண் - புள்ளிகளையுடைய அழகிய பிணையுடன் தங்கும் அவ்விடத்தே, கோடு உடைக் கையர் - கிளைக்கொட்டினையுடைய கையினராய், துளர் எறி வினைஞர் - களையினை வெட்டி எறியும் தொழிலையுடையவர்கள், அரியல் ஆர்கையர் விளைமகிழ் தூங்க - கள்ளினை நிறைய உண்டு அதனாலாய களிப்பு மிக்குற, செல்கதிர் மழுகிய உருவ ஞாயிற்று - செல்லும் கதிர் வெம்மை குறைந்த செந்நிறத்தினதாய ஞாயிற்றையுடைய, செக்கர் வானம் சென்ற பொழுதில் - செவ்வானம் பரவிய காலத்தே, கல்பால் அருவியின் ஒலிக்கும் நற்றேர் - மலையின்பால் வீழும் அருவியைப்போல ஒலிக்கும் நல்ல தேரிலுள்ள, தார்மணி பல உடன் இயம்ப - மாலையாகிய மணிகள் பலவும் ஒருங்கே ஒலிக்க, சுரும்பு இமிர் மலர கானம் பிற்பட - வண்டுகள் ஒலிக்கும் மலர்களையுடைய காடு பின்னே போக, அருந்தொழில் முடித்த செம்மல் உள்ளமொடு - அரிய வினையை முடித்த தலைமை மேவிய ஊக்கத்துடன், நீ வந்து நின்றது - நீ இங்கு வந்து நின்றது,

௧—௪. கடவுட் கற்பொடு - தெய்வக் கற்புடன், குடிக்கு விளக்கு ஆகிய - குடிக்கு விளக்கம் ஆகிய, புதல்வன் பயந்த புகழ்மிகு சிறப்பின் நன்னராட்டிக்கு அன்றியும் - மகனைப் பெற்ற புகழ் மிக்க சிறப்பினையுடைய நன்மையையுடைய தலைவிக்கே யல்லாமலும், எனக்கும் இனிது ஆகின்று - எனக்கும் இனிமையைத் தருவதாகின்றது ; நின் ஆயுள் சிறக்க - நின் ஆயுள் சிறந்திடுவதாக.

(முடிபு) சீர்மிகு குரிசில் ! செக்கர் வானம் சென்ற பொழுதில், நற்றேர் மணி இயம்ப, கானம் பிற்பட, செம்மல் உள்ளமொடு நீ வந்து நின்றது, நன்னராட்டிக்கு அன்றியும், எனக்கும் இனிதாகின்று ; நின் ஆயுள் சிறக்க.

(வி - ரை.) கடவுட் கற்பு - தெய்வத்தன்மையுடைய கற்பு ; கற்புடை மகளிர் வேண்டுங்கால் மழையும் பெய்விப்பராகலின் அவரது

கற்பு தெய்வத்தன்மை யுடையதாயிற்று. [1]'கற்புக் கடம்பூண்ட இத் தெய்வ மல்லது, பொற்புடைத் தெய்வம் யாம் கண்டிலமால், வானம் பொய்யாது வளம் பிழைப் பறியாது, நீணில வேந்தர் கொற் றம் சிதையாது, பத்தினிப் பெண்டி ரிருந்த நாடு' என்பதுங் காண்க. கடவுட் கற்பொடு புதல்வற் பயந்த சிறப்பினை யுடைய நன்னராட்டி என்று இயையும். புதல்வன் குடியை விளங்கச் செய் பவன் ஆகலின் குடிக்கு விளக்காகிய புதல்வன் என்றுள். மனை வாழ்க்கை மகளிர்க்குக் கற்பொழுக்கமும், நன்மக்கட் பேறும் இன் றியமையாதன என்பது [2]'மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன் - நன்கலம் நன்மக்கட் பேறு' என்னும் பொய்யா மொழியானும் அறி யப்படும். [3]'மனைக்கு விளக்கம் மடவாள்' என்பதுபற்றிக் குடிக்கு விளக்காகிய என்பதனைத் தலைவிக்கு ஏற்றியுரைத்தலுமாம். நன்ன ராட்டி - மனைமாட்சியாய நன்மையெல்லாம் உடையவள். கணவன் கூறிய சொற்பிழையாது ஆற்றியிருந்த அருமைப்பாடு தோன்றத் தலைவி இங்ஙனம் சிறப்பித்துக் கூறப்பெற்றுள். பிரிவாற்றுது தலைவி வருந்துந்தோறும் தானும் உடன் வருந்தி, அரிதின் ஆற்று வித்துக் கொண்டிருந்தவள் ஆகலின், நீ வந்து நின்றது எனக்கும் இனிதாகின்றது என்று தோழி கூறினுள். பிரிந்த தலைவன் மீண்டு வந்ததேயன்றி அவன் அரிய வினையை முடித்த பெருமிதத்துடன் தேரின் மணி ஒலிக்க வந்து நின்ற தோற்றம், தலைவனது ஆக்கத்தை விரும்பும் தலைவிக்குக் கழிபேரின்பம் பயப்பதாகலின், செம்மலுள்ள மொடு மணி இயம்ப நீ வந்து நின்றது இனிதாகின்று என்றுள். தலைவன் தேர்வந்த விரைவு தோன்றக் கானம் பிற்பட என்றுள். செல் கதிர் - மேற்றிசைக்கட் சென்று மறையும் கதிர். துளர் - களை. தார்மணி - மாலையாகக் கோத்த மணிகள்.

தலைவன் போந்த காட்டின்கண் முல்லை கள்ளியின் புன்றலையை மறைத்திருப்பது, தலைவி தன் பிரிவாலுளதாகிய வருத்தம் புறந் தோன்றுமல் கற்பினுல் ஆற்றி யிருந்தலையும், மறைத்த பூவை உயிர்ப்பினுல் நீக்கி நீரினைப் பருகிய கலை பிணையொடு வதிதல், தான் தலைவியின் மெலிவினை நீக்கி அவளுடன் இன்புற்று வதியப் போவதையும் அவனுக்குப் புலப்படுத்தி மனவெழுச்சி தருவன என்க.

---

## 185. பாலை

[பிரிவிடை வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

எல்வளை ஞெகிழச் சாஅய் ஆயிழை
நல்லெழிற் பணைத்தோள் இருங்கவின் அழியப்
பெருங்கை அற்ற நெஞ்சமொடு நத்துறந்து
இரும்பின் இன்னுயிர் உடையோர் போல

---

1. சிலப். கடு, ௧௪௩ - ௧௭. 2. குறள், ௬0. 3. நான்மணிக். ௧0௩.

௫ வலித்து வல்லினர் காதலர் வாடல்
ஒலிகழை நிவந்த நெல்லுடை நெடுவெதிர்
கலிகொள் மள்ளர்வில் விசையின் உடையப்
பைதற வெம்பிய கல்பொரு பரப்பின்
வேனில் அத்தத் தாங்கண் வானுலந்
௧௦ தருவி யான்ற உயர்சிமை மருங்கிற்
பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்
இலையில மலர்ந்த இலவமொடு
நிலையுயர் பிறங்கல் மலையிறந் தோரே.

—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

(சொ - ள்.) ௫—௧௩. வாடல் ஒலி கழை நிவந்த நெல் உடை நெடு வெதிர் - வாடுதலுற்ற ஒலிக்கின்ற மேல்நோக்கி எழுந்த தண்டினையும் நெற்களையுமுடைய நீண்ட மூங்கில், கலிகொள் மள்ளர் வில் விசையின் உடைய - ஆரவாரம் கொண்ட மறவரது வில்லினின் றெழும் அம்பின் விசையாற் பிளந்திட, பைதுஅற வெம்பிய கல் பொரு பரப்பின் - பசுமை அறக் காய்ந்த பருக்கைகள் பொருகின்ற இடத்தினையுடைய, வேனில் அத்தத்து ஆங்கண் - வேனிலான் உழந்த காட்டிடத்தே, வான் உலந்து அருவி ஆன்ற உயர் சிமை மருங்கின் - மேகம் பெய்யா தொழிதலின் அருவிகள் இல்லையாகிய உயர்ந்த சிகரங்களில், பெருவிழா விளக்கம்போல - பெரிய கார்த்திகை விழாவிற்கு இடும் விளக்குகளைப்போல, பல உடன் இலை இல மலர்ந்த இலவமொடு - இலையே இல்லனவாய்ப் பலவும் ஒருங்கே மலர்ந்த இலவ மரங்களைக் கொண்டு, நிலை உயர் பிறங்கல் மலை இறந்தோர் - உயர்ந்த நிலையையுடைய பக்க மலையினையுடைய பெருமலையினைத் தாண்டிச் சென்றோராய நம் தலைவர்,

௧—௫. ஆய் இழை நல் எழில் பணைத்தோள் - ஆய்ந்தெடுத்த அணிகளையும் நல்ல அழகினையுமுடைய மூங்கில்போலும் நமது தோள், எல்வளை ஞெகிழச் சாஅய் - ஒளிபொருந்திய வளை நெகிழும் படி மெலிந்து, இருங் கவின் அழிய - பெரிய அழகு கெடுமாறு, பெரு கை அற்ற நெஞ்சமொடு நம் துறந்து - பெரிய செயலற்ற நெஞ்சமோடிருக்கும் நம்மைக் கைவிட்டு, இரும்பின் இன் உயிர் உடையோர்போல - இரும்பினால் இயன்ற இனிய உயிரை உடையார்போல, வலித்து வல்லினர் - வலித்திருக்க வன்மையுடையோராயினர்.

(முடிபு) மலையிறந்தோர் ஆய நம் காதலர், நம் பணைத்தோள் சாஅய்க் கவின் அழிய நத்துறந்து, இரும்பின் இன்னுயிர் உடையோர்போல வலித்து வல்லினர்.

(வி - ரை.) நெஞ்சமொடு இருக்க என ஒரு சொல் விரித்துரைக்க. தாம் எய்தும் துன்பம் கருதி இரங்கித் தலைவர் வாரா திருத்தலின் இரும்பின் இன்னுயிர் உடையோர்போல வலித்து

(பாடம்) ௫. வலிது.

வல்வினர் என்ருள். நம்மை இரும்பாலியன்ற உயிருடையார் போலக் கருதி வாராதிருக்கின்ருர் என்றுரைத்தலுமாம்.

---

## 186. மருதம்

[தலைமகட்குப் பாங்காயினுர் கேட்ப இல்விடைப் பரத்தை சொல்லி நெருங்கியது.]

வானம் வேண்டா வறனில் வாழ்க்கை
நோன்ஞாண் வினைஞர் கோளறிந் தீர்க்கும்
மீன்முதிர் இலஞ்சிக் கலித்த தாமரை
நீர்மிசை நிவந்த நெடுந்தாள் அகலிலை
௫ [1]இருங்கயம் துளங்கக் காலுறு தோறும்
பெருங்களிற்றுச் செவியின் அலைக்கும் ஊரனொ
டெழுந்த கௌவையோ பெரிதே நட்பே
கொழுங்கோல் வேழத்துப் புணை துணை யாகப்
புனலாடு கேண்மை அனைத்தே அவனே
௧௦ ஒண்டொடி மகளிர் [2]பண்டையாழ் பாட
ஈர்ந்தண் முழவின் எறிகுணில் விதிர்ப்பத்
தண்ணறுஞ் சாந்தம் கமழும் தோள்மணந்து
இன்னும் பிறள்வயி னனே மனையோள்
எம்மொடு புலக்கு மென்ப [3]வென்வேல்
௧௫ மாரி அம்பின் மழைத்தோற் பழையன்
காவிரி வைப்பிற் போஒர் அன்னவென்
செறிவளை யுடைத்தலோ இலனே [4]உரிதினின்
யாந்தன் பகையேம் அல்லேம் சேர்ந்தோர்
திருநுதல் பசப்ப நீங்கும்
௨௦ கொழுநனுஞ் சாலுந்தன் உடனுறை பகையே.

—பரணர்.

(சொ - ள்.) ௧—௭. வானம் வேண்டா வறன் இல் வாழ்க்கை - மழை பெய்தலை வேண்டாத வறுமையுறுத லில்லாத வாழ்க்கையினை யுடைய, நோன் ஞாண் வினைஞர் - வலிய தூண்டிற் கயிற்றினை யுடைய மீன் பிடிப்போர், கோள் அறிந்து ஈர்க்கும் - (மீன் இரை கோத்த முள்ளினைப்) பற்றியது உணர்ந்து இழுக்கும், மீன் முதிர் இலஞ்சி - மீன் மிக்க நீர்நிலையில், கலித்த தாமரை நீர் மிசை நிவந்த நெடு தாள் அகல் இலை - தழைத்த தாமரையின் நீர்மீது உயர்ந்த நெடிய காம்பினையுடைய அகன்ற இலையை, இரு கயம் துளங்க கால் உறுதோறும் - பெரிய குளம் அலையக் காற்று அடிக்குந் தோறும், பெரு களிற்றுச் செவியின் அலைக்கும் ஊரனொடு - பெரிய

---

(பாடம்) 1. இருங்கயந் தயங்க. 2. மண்டை பாழ்பட. 3. வெல்பரி. 4. யுரிதினினயர்ந்த; யுரிதினினுர்ந்த.

களிற்றி யானையின் காதுபோல அசைவிக்கும் ஊரனொடு, எழுந்த கௌவையோ பெரிதே - எனக்கு உண்டாய அலரோ பெரிதாகும் ஆயினும்,

௭—௯. நட்பு - அவன் நட்போ, கொழு கோல் வேழத்துப் புணை துணை ஆக - செழித்த கொறுக்கங்கழியாலாய புணையினைத் துணையாகக் கொண்டு, புனல் ஆடு கேண்மை அனைத்தே - புனல் விளையாடும் நட்பின் அளவினதே;

௯—௧௩. அவனே - அத் தலைவன்றான், ஒள் தொடி மகளிர் பண்டை யாழ் பாட - ஒள்ளிய தொடியினையுடைய மகளிர் பழைய யாழினைப் பாடவும், ஈர் தண் முழவின் எறி குணில் விதிர்ப்ப - மிக்க தண்மை வாய்ந்த முழவினைக் குறுந்தடியால் அடிக்கவும், தண் நறுஞ் சாந்தம் கமழும் தோள் மணந்து - தண்ணிய நறிய சந்தனம் நாறும் தோளைக் கூடி, இன்னும் பிறள் வயினான் - இன்னும் பிறளிடத்தே யுள்ளான் ஆவன்; அங்ஙனமாகவும்,

௧௩—௪. மனையோள் எம்மொடு புலக்கும் என்ப - அவன் மனைவி எம்முடன் வெறுக்கின்றாள் என்பர்;

௧௪—௭. வென் வேல் மாரி அம்பின் மழைத் தோல் பழையன் - வெற்றி பொருந்திய வேலையும் மழைத்துளி போன்ற மிக்க அம்பினையும் மேகம்போலும் கரிய கேடகத்தினையும் உடைய பழையன் என்பானது, காவிரி வைப்பின் போஒர் அன்ன - காவிரி நாட்டிலுள்ள போர் என்னும் ஊரினை ஒத்த, என் செறி வளை உரிதினின் உடைத்தலோ இலன் - எனது நெருங்கிய வளைகளை உரிமையால் உடைத்த லொன்றுஞ் செய்திலேன்; எனவே,

௧௮—௨0. யாம் தன் பகையேம் அல்லேம் - யாம் அவளுக்குப் பகையாவேம் அல்லேம், சேர்ந்தோர் திருநுதல் பசப்ப நீங்கும் - தன்னைச் சேர்ந்தோரது அழகிய நெற்றி பசந்திட அவர்களை ஒழித்து நீங்கும், கொழுநனும் - அவள் கணவன், தன் உடன் உறை பகை சாலும் - தன்னுடன் கூடியுறையும் பகைவனாதற்குப் பொருந்துவானவன்.

(முடிபு) **ஊரனொடு எனக்கு எழுந்த கௌவையோ பெரிதே; நட்பே வேழத்துப் புணை துணையாகப் புனலாடு கேண்மை அனைத்தே; அவனே இன்னும் பிறள்வயினானே; மனையோள் எம்மொடு புலக்கும் என்ப; செறிவளை உடைத்தலோ இலேன்: யாம் தன் பகையேம் அல்லேம்; கொழுநன் தன் உடனுறை பகைசாலும்.**

(வி - ரை.) மீன் பிடிக்கும் வினைஞர் உழவினால் நெல் முதலியன விளைத்தல் இலராகலின் அவரது வாழ்க்கை வானம் வேண்டா வாழ்க்கை எனவும், அன்னராயினும் அவர் பிடிக்கும் மீனே அவருக்குப் பெரியதொரு வருவாயாகலின் வறனில் வாழ்க்கை எனவும், கூறப்பட்டது. நோன் ஞாண் - தூண்டிலின் வலிய கயிறு; அது கொண்டு வினை செய்தலின் அவர் நோன்ஞாண் வினைஞர் எனப்பட்டார். கோள் - இரும்பிற்கோத்த இரையைப் பற்றுகை. இனி,

வலிய கயிற்றையுடைய வலையெனக் கொண்டு, அஃது அகப்படுத் தமை அறிந்து ஈர்க்கும் என்றுரைத்தலுமாம். புணை துணையாக நீராடுவார் நீராட்டு முடிந்தவுடன் அப் புணையை விடுத்து அகறல் போல, தலைவன் என்பால் வந்து அகன்றனன் என்பாள் நட்பு கேண்மை அனைத்து என்றாள். கேண்மை - புணையினிடத்துளதாய கேண்மை; குறிப்பு மொழி. இனி, நட்பு ஒருநாள் புணைதுணையா கப் புனலாடிய அவ்வளவிற்றே என்றுரைத்தலுமாம்; [1]"நீ வெய் யோளொடு வேழ வெண்புணை தழீஇ . . . நெருந லாடினை புனலே" என முன் வந்தமையுங் காண்க. ஒண்டொடி மகளிர் - விறலியர்; பரத்தையருமாம். தலைவன் சேரிப்பரத்தையொடு கூடி யொழுகு தலைப் பரத்தையர் சேரியினின்றெழும் யாழொலியும் முழவோசை யுமே யாவருமறியப் புலப்படுத்தும்; அங்ஙனமாகவும் தலைவி எம் மொடு புலத்தல் பொருந்தா தென்பது தோன்ற, பாட விதிர்ப்பத் தோள் மணந்து பிறள்வயினான் எனவும், எம்மொடு புலக்குமென்ப எனவும் இற்பரத்தை கூறினாளென்க. மற்றும், தலைவன் தலைவியை யும் என்னையும் கையகன்று சேரிப்பரத்தையர்மாட்டு மருவியொழு குதலால் எனக்குளதாய வெறுப்பினை என் வளையை உடைத்துக் காட்டிற்றிலேன்; அது கொண்டே அவன் என்னுடன் உளனாகத் தலைவி கருதினாள்போலு மென்பாள் "செறிவளை யுடைத்தலோ இலனே" என்றாள்; குலமகளிரல்லாத அலவற் பெண்டிர் முதலாயி னார் வெறுப்பினால் வளையுடைத்தல் செய்வரென்பது [2]"என்னொடு திரி யேனாயின், . . . உடைகவென், நேரிறை முன்கை வீங்கிய வளையே" என்பதனாலறிக. இலன்: அன் விகுதி தன்மைக்கண் வந்தது. கொழு நனும்: உம் அசைநிலை. இனி, சேரிப்பரத்தையரையும் விடுத்துத் தலைவியுடன் சென்று உறைவானென்பது தோன்றத் 'தன் உட னுறை பகை' என்றாள்; உடனுறைந்த கொழுநன் பகையாதல் சாலும் எனக் கூட்டியுரைத்தலுமாம்.

---

## 187. பாலை

[பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது. தலைமகன் பிரி வின்கண் தலைமகட்குத் தோழி சொல்லியதூஉமாம்.]

தோள்புலம் பகலத் துஞ்சி நம்மொடு
நாள்பல நீடிய கரந்துறை புணர்ச்சி
நாணுடை மையின் நீங்கிச் சேய்நாட்
டரும்பொருள் வலித்த நெஞ்சமொ டேகி
௫ நம்முயர் வுள்ளினர் காதலர் கறுத்தோர்
தெம்முனை சிதைத்த கடும்பரிப் புரவி
வார்கழற் பொலிந்த வன்கண் மழவர்
பூந்தொடை விழவின் தலைநாள் அன்ன

---

1. அகம். கசு. 2. அகம். ௧௮௬.

தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றம்
௧௦ புலம்புறுங் கொல்லோ தோழி [1]சேணோங்கு
அலந்தலை ஞெமையத் தாளில் ஆங்கண்
[2]கல்சேர் பிருந்த சில்குடிப் பாக்கத்து
எல்விருந் தயர ஏமத் தல்கி
மனையுறை கோழி அணற்றாழ் பன்ன
௧௫ கவையொண் டளிர கருங்கால் யாஅத்து
[3]வேனில் வெற்பிற் கானங் காய
முனையெழுந் தோடிய [4]கெடுநாட் டாரிடைப்
பனைவெளி றருந்து பைங்கண் யானை
ஒண்சுடர் முதிரா [5]இளங்கதிர் அமையத்துக்
௨௦ கண்படு பாயற் கையொடுங் கசைநிலை
வாள்வாய்ச் சுறவின் பனித்துறை நீந்தி
நாள்வேட் டெழுந்த நயனில் பரதவர்
வைகுகடல் அம்பியிற் றோன்றும்
மைபடு மாமலை விலங்கிய சுரனே.

—மாமூலனார்.

(சொ - ள்.) ௧௦. தோழி—,

௫. காதலர் - நமது காதலர்,

௧—௪. தோள் புலம்பு அகல நம்மொடு துஞ்சி - நமது தோள் தனிமை யகல நம்முடன் துயின்று, நாள் பல நீடிய கரந்து உறை புணர்ச்சி - பலநாள் நீட்டித்த களவுப் புணர்ச்சியை, நாண் உடைமையின் நீங்கி - வினையின்றி யிருத்தற்கு நாணுதல் உடைமையானே நீங்கி, சேய் நாட்டு அரும் பொருள் வலித்த நெஞ்சமொடு - தூர நாட்டிலே அரிய பொருளை ஈட்டத் துணிந்த நெஞ்சத்துடன்,

௧௪—௨௪. மனை உறை கோழி - மனையில் வதியுங் கோழியின், அணல் தாழ்பு அன்ன - தொங்குகின்ற தாடியை யொத்த, கவை ஒண் தளிர கருங்கால் யாஅத்து - கவர்த்த ஒள்ளிய தளிரினையும் கரிய அடியினையும் உடைய யா மரங்களையுடைய, வேனில் வெற்பில் கானம் காய - வேனில் வெப்பம் வாய்ந்த மலையை யடுத்த காடு காய்ந்திட, முனை எழுந்து ஓடிய கெடுநாட்டு ஆர் இடை - காட்டரணிலுள்ளார் குடியெழுந்தோடிய பாழ் நாட்டின் அரிய இடத்தே, பனை வெளிறு அருந்து பைங்கண் யானை - பனங்குருத்தைத் தின்னும் பசிய கண்ணினையுடைய யானை, ஒள் சுடர் முதிரா இளம் கதிர் அமையத்து - ஒள்ளிய சுடர் முதிராத இளைய ஞாயிற்றையுடைய காலையிலே, கண்படு பாயல் கை ஒடுங்கு அசைநிலை - துயிலுமிடத்தே செயலொடுங்கி அசைந்துகொண்டிருக்கும் நிலையானது, வாள் வாய்ச் சுறவின் பனி துறை நீந்தி - வாள்போலும் வாயினையுடைய சுறா மீன்களுள்ள குளிர்ந்த துறைகளை நீந்திச் சென்று, நாள் வேட்டு

(பாடம்) 1. சேய்நாட் டலந்தலை. 2. கலைசேர் பிருந்த. 3. வேனில் வைப்பிற் கானிலங் காய. 4. நெடுநாட்டாரிடை. 5. விலங்கு கதிர்.

எழுந்த நயன் இல் பரதவர் - நாட்காலத்தே மீன் வேட்டை குறித்து எழுந்த நயமற்ற பரதவருடைய, வைகு கடல் அம்பியில் தோன்றும் - கடலிடத்தே பொருந்திய தோணி போலத் தோன்றாநிற்கும், மை படு மா மலை விலங்கிய சுரன் - மேகம் பொருந்திய பெரிய மலை குறுக்கிட்ட பாலையின்கண்ணே,

கo—ந. சேண் ஓங்கு அலந்தலை ஞெமையத்து - நெடுந்தூரம் உயர்ந்த காய்ந்த உச்சியினையுடைய ஞெமை மரங்களையுடைய, ஆள் இல் ஆங்கண் - ஆள் வழக்கற்ற இடங்களில், கல் சேர்பு இருந்த சில் குடி பாக்கத்து - மலையைச் சார்ந்திருந்த சில குடிகளையுடைய பாக்கத்தே, எல் விருந்து அயர - இரவில் விருந்து செய்ய, ஏமத்து அல்கி - பாதுகாவலாகத் தங்கி,

ச—ரு. ஏகி - தொடர்ந்து சென்று, நம் உயர்வு உள்ளினர் - நமது உயர்ச்சியைக் கருதினர்; (அதனால்),

ரு—கo. கறுத்தோர் - சினந்தெழுந்த பகைவரது, தெவ்முனை சிதைத்த கடும்பரிப் புரவி - பகைப்புலம் தொலைத்த கடிய செலவினையுடைய குதிரைகளையுடைய, வார்கழல் பொலிந்த - நீண்ட கழலாற் பொலிவுற்ற, வன்கண் மழவர் - தறுகண்மையினையுடைய மழவர் செய்யும், பூந்தொடை விழவின் தலைநாள் அன்ன - பூந்தொடை விழா என்னும் விழாவின் முதல்நாளை யொத்த பொலிவினையுடைய, தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றம் - கொணர்ந்திட்ட மணல் பரந்த அழகிய மனையின் முற்றம், புலம்புறும் கொல்லோ - தனிமை யுறுமோ.

(முடிபு) தோழி! காதலர், நம்மொடு நீடிய காந்துறை புணர்ச்சியை நாணுடைமையின் நீங்கி, அரும் பொருள் வலித்த நெஞ்சமொடு, மலைவிலங்கிய சுரத்தின்கண்ணே, பாக்கத்தே எல்விருந்து அயர ஏமத்து அல்கி, ஏகி, நம் உயர்வு உள்ளினர்; அதனால் திருநகர் முற்றம் புலம்புறுங் கொல்லோ.

(வி - ரை.) தோள் புலம்பு அகலத் துஞ்சி என்றது, தோளிலே துயின்று என்றபடி. நாணுடைமை - போகம் வேண்டி ஆடவர்க்கு உயிராகிய வினையை யொழிந்திருத்தற்கு நாணுதலுடைமை. சேய் நாட்டு அரும் பொருள் - சேய்நாட்டிற் சென்று தேடும் அரிய பொருள். நம் உயர்வு - வறியோர்க்கு அளித்தல், விருந்து புறந்தருதல் முதலிய இல்லறம் புரிந்து நாம் மேம்படுதல்; அதற்குப்பொருள் இன்றியமையா தாகலின் பொருள்வயிற் பிரிந்தாரை நம் உயர்வு உள்ளினர் என்றாள். ஏகி உள்ளினர் என்பதனை உள்ளி ஏகினர் என மாறுக. பூந்தொடை விழவு — படைக்கலம் பயின்ற இளைய வீரரை அரங்கேற்றுவிக்கும் விழா. தொடை - அம்பு தொடுத்தல். தலை நாளன்ன பொலிவினையுடைய முற்றமென விரித்துரைக்க. தலைவர் பிரிவிற்குளதாம் வருத்தத்தை முற்றம் தனிமை யுறுதலால் வருந்துவாள் போற் கூறினாள். அலந்தலை - அலந்த தலை; விகாரம். ஞெமையத்து: அத்து, சாரியை. சுரத்தைக் கடந்து ஏகுங்கால், பாக்கத்து எல்விருந்தயர ஏமத்து அல்கி ஏகுவார் என்றாள். கானங் கோழியின் வேறுபடுக்க, மனையுறை கோழி எனப்பட்டது. முனை -

காட்டரண்; வேட்டுவர் ஊர். கெடு நாடு - வாழ்வாரொழிந்து பாழ்பட்ட நாடு. வாள்வாய்ச் சுறவின் பனித்துறை நீந்தி என்றது பரதவரின் அஞ்சாமையைப் புலப்படுத்தியவாறும். பனைவெளிறு அருந்து என்றது, வேறு உணவின்மை குறித்தபடியாம். யானை அசைநிலை கடல் அம்பியிற் றோன்றும் சுரம் எனவும், மலை விலங்கிய சுரம் எனவும் தனித்தனி இயையும்.

## 188. குறிஞ்சி

[இரவில் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.]

பெருங்கடல் முகந்த இருங்கிளைக் கொண்மூ
இருண்டுயர் விசும்பின் வலனேர்பு வளைஇப்
போர்ப்புறு முரசின் இரங்கி முறைபுரிந்
தறனெறி பிழையாத் திறனறி மன்னர்
௫ அருஞ்சமத் தெதிர்ந்த பெருஞ்செய் ஆடவர்
கழித்தெறி வாளின் நளிப்பன விளங்கும்
மின்னுடைக் கருவியை ஆகி நாளும்
கொன்னே செய்தியோ அரவம் பொன்னென
மலர்ந்த வேங்கை மலிதொடர் அடைச்சிப்
௧௦ பொலிந்த ஆயமொடு காண்டக இயலித்
தழலை வாங்கியும் தட்டை [1]யோப்பியும்
அழலேர் செயலை அந்தழை [2]அசைஇயும்
குறமகள் காக்கும் ஏனற்
புறமும் தருதியோ வாழிய மழையே.

—வீரை வெளியன் தித்தனார்.

(சொ - ள்.) க. பெருங் கடல் முகந்த இரு கிளை கொண்மூ - பெரிய கடல் நீரை முகந்துகொண்ட பெரிய கூட்டமாகிய மேகமே, நீதான்,

உ---அ. இருண்டு - இருட்சியுற்று, உயர் விசும்பின் வலன் ஏர்பு வளைஇ - உயர்ந்த வானில் வலமாக எழுந்து சுற்றி, போர்ப்பு உறு முரசின் இரங்கி - தோற் போர்வையுற்ற முரசுபோல முழங்கி, முறை புரிந்து அறன் நெறி பிழையாத் திறன் அறி மன்னர் - செங்கோன்மை மேற்கொண்டு அறநெறி வழுவாத செய்யுங் கூறுபாட்டினை அறிந்த மன்னரது, அரும் சமத்து எதிர்ந்த பெரும் செய் ஆடவர் - அரிய போரில் மாற்றாருடன் எதிர்த்துப் போர் செய்யும் பேராண்மைச் செய்கையையுடைய வீரர்கள், கழித்து எறி வாளின் நளிப்பன விளங்கும் - உறையினின்றும் உருவி வீசும் வாளைப் போலச் செறிவனவாய் விளங்கும், மின் உடைக் கருவியை ஆகி - மின்னின்தொகுதியை உடையை ஆகி, நாளும் அரவம் கொன்னே

(பாடம்) 1. யோச்சியும். 2. தைஇயும்.

செய்தியோ - நாடோறும் பயனின்றி ஆரவாரம் செய்து ஒழிதியோ; அன்றி,

அ—௧௪. பொன் என மலர்ந்த வேங்கை மலி தொடர் அடைச்சி - பொன்போல மலர்ந்த வேங்கைப் பூக்களாலாய நிறைந்த மாலையைத் தரித்து, பொலிந்த ஆயமொடு காண்தக இயலி - பொலிவுற்ற ஆயத்தாருடன் அழகு பொருந்த நடந்து, தழலை வாங்கியும் தட்டை ஓப்பியும் - தழலினைச் சுற்றியும் தட்டையினைத் தட்டியும், அழல் ஏர் செயலை அம்தழை அசைஇயும் - தீயின் கொழுந்தினை ஒத்த அசோகினது அழகிய தழையாலாய உடையினை யுடுத்தும், குறமகள் காக்கும் - குறமகளாய எம் தலைவி காக்கும், ஏனற்புறமும் மழை தருதியோ - தினையினிடத்து மழையும் பொழிவையோ! வாழிய -.

(முடிபு) கொண்மூவே! நீதான் இருண்டு ஏர்பு வளைஇ இரங்கி விளங்கும் மின்னுடைக் கருவியை ஆகி, அரவம் கொன்னே செய்தியோ; குறமகள் காக்கும் ஏனற்புறம் மழையும் தருதியோ; வாழிய!

(வி - ரை.) முறை புரிந்து பிழையா மன்னர் எனவும், திறன் அறி மன்னர் எனவும் தனித்தனி கூட்டுக. இறை மாட்சி யாவும் அடங்கத் திறன் அறி மன்னர் என்றனள். சமம் - அம் மன்னர் தம் மாற்றாருடன் செய்யும் போர். பெருஞ் செய் ஆடவர் - வஞ்சினங் கூறிப் போர் செய்யும் பேராண்மைச் செய்கை யுடைய வீரர். மலர்ந்த வேங்கை மலிதொடர் அடைச்சி என்றதனால் தினை விளையுங் காலம் பெறப்பட்டது. தழல் - பிரம்பு போல்வனவற்றாற் பின்னிச் சுற்றி ஒலியுண்டாக்கிக் கிளியை ஓட்டுவதோர் கருவி. தட்டை - மூங்கிற் றுண்டைப் பிளந்து தட்டி ஒலியுண்டாக்கிக் கிளி கடிவதோர் கருவி. இவற்றைத் [1]'தழலும் தட்டையுங் குளிரும் பிறவும், கிளிகடி மரபின ஊழூழ் வாங்கி' என்பதன் உரையால் அறிக. தழை - தழை உடை. ஏனற்புறம் மழையுந் தருதியோ என உம்மையை மாறுக.

உம்மையை அசையாக்கியும் மழையை விளியாக்கியும் ஏனலைப் புறந்தருதியோ என்றுரைத்தலுமாம். இதற்குக் கொண்மூ ஆகிய மழையே என்க. இரவிற் சிறைப்புறமாகவுள்ள தலைவனைத் தோழி இங்ஙனம் மழையாகக்கொண்டு குறிப்பினாலே நீ இங்ஙனம் வந்து ஒழுகுதலாற் பயனின்றி அலர் விளைக்கின்றாயோ அன்றி வரைந்து கொள்வையோ எனக் கூறி வரைவு கடாயினாள் என்க.

(மே - ள்.) '[2]உடனுறை யுவமஞ் சுட்டுநகை சிறப்பெனக் கெடலரு மரபின் உள்ளுறை ஐந்தே' என்னுஞ் சூத்திரத்துச் சுட்டு என்னும் உள்ளுறைக்கு இச் செய்யுளை எடுத்துக் காட்டி, 'இதனுள், கொன்னே செய்தியோ அரவம் என்பதனால், பயனின்றி அலர் விளைத்தியோ எனவும் கூறி, ஏனற்புறமும் தருதியோ என்பதனால், வரைந்து கொள்வையோ எனவும் கூறித் தலைமகனை மழைமேல் வைத்துக் கூறலின் சுட்டாயிற்று'.

1. குறிஞ்சிப். ௪௩ - ௪௪. 2. தொல். பொருளியல். ௪௮.

கொன்னே செய்தியோ என்றதனால் வழுவாயினும் வரைதல் வேட்கை யாற் கூறினமையின் அமைந்தது' என்பர் நச்.

---

## 189. பாலை

[மகட் போக்கிய செவிலி சொல்லியது.]

பசும்பழப் பலவின் கானம் வெம்பி
விசும்புகண் அழிய வேனில் நீடிக்
கயங்கண் அற்ற கல்லோங்கு வைப்பின்
நாறுயிர் மடப்பிடி தழீஇ வேறுநாட்டு
௫ விழவுப்படர் மள்ளரின் முழவெடுத் துயரிக்
களிறதர்ப் படுத்த கல்லுயர் கவாஅன்
வெவ்வரை அத்தஞ் சுட்டிப் பையென
வயலையம் பிணையல் வார்ந்த கவாஅன்
திதலை அல்குற் குறுமகள் அவனொடு
௧0 சென்று பிறளாகிய அளவை என்றும்
படர்மலி [1]எவ்வமொடு மாதிரம் துழைஇ
மனைமருண் டிருந்த என்னினும் நனைமகிழ்
நன்ன ராளர் கூடுகொள் இன்னியம்
தேரூர் தெருவில் ததும்பும்
௧௫ ஊரிழந் தன்றுதன் வீழ்வுறு பொருளே.

—கயமனார்.

(சொ - ள்.) ௧—எ. பசு பழம் பலவின் கானம் வெம்பி - செவ்வி வாய்ந்த பழத்தினைக்கொண்ட பலாமரங்களையுடைய காடு வெதும்ப, விசும்பு கண் அழிய வேனில் நீடி - மேகம் வானிடத்தினின் றொழி தலின் வேனில் வெப்பம் மிக, கயம் கண் அற்ற கல் ஓங்கு வைப் பின் - குளங்கள் தம்மிடத்தே நீரற்றிருக்கும் கற்கள் உயர்ந்த இடங் களில், நாறு உயிர் மட பிடி தழீஇ - பெருமூச்சுத் தோன்றும் இளைய பிடியைத் தழுவி, களிறு - களிறுகள், முழவு எடுத்து உயரி வேறு நாட்டு விழவுப் படர் மள்ளரின் - தங்கள் முழவுகளை எடுத்து உயர்த்துக்கொண்டு வேற்று நாட்டில் நிகழும் விழாவினை நினைத்துச் செல்லும் மள்ளர்களைப் போல, அதர்ப்படுத்த - நெறிப்படுத்திச் சென்ற, கல் உயர் - கற்கள் உயர்ந்த, வெவ்வரை கவாஅன் அத்தம் சுட்டி - கொடிய பக்க மலையைச் சார்ந்த சுரத்தினைச் செல்லத் துணிந்து,

எ—௧0. வயலை அம்பிணையல் வார்ந்த கவாஅன் - வயலைக் கொடியாலாகிய அழகிய தழையுடைதாழ்ந்த துடையினையும், திதலை அல்குல் - தேமல் படர்ந்த அல்குலினையும் உடைய, குறு மகள் - இளையளாய என் மகள், பை யென அவனொடு சென்று - மெல்லெனத் தன் தலைவனொடு சென்று, பிறள் ஆகிய அளவை - எங்கட்கு பிறள்

---

(பாடம்) 1. யுள்ளமொடு.

ஒருத்தி ஆகியபோது, என்றும் படர் மலி எவ்வமொடு - எக்காலத்தும் நினைவு மிக்க துன்பமொடு, மாதிரம் துழைஇ - திசையெல்லாம் தேடிவந்து, மனை மருண்டு இருந்த என்னினும் - மனையின்கண் மயங்கியிருந்த என்னைக்காட்டிலும், நனை மகிழ் நன்னராளர் கூடுகொள் இன்னியம் - கள்ளின் களிப்பினையுடைய நல்ல பாணர்களது ஒன்று கூடி யொலிக்கும் வாச்சியங்கள், தேர் ஊர் தெருவில் ததும்பும் - தேர் ஓடும் பெருந் தெருக்களில் அறாது ஒலிக்கும், ஊர் - இவ்வூரானது, தன் வீழ்வு உறு பொருள் - தனது விருப்பம் மிக்கதொரு பொருளை, இழந்தன்று - இழந்ததாயிற்று.

(முடிபு) கவாஅன் அத்தம் கூட்டி, குறுமகள், அவனொடு சென்று எமக்குப் பிறளாகிய அளவை, என்னினும், ஊர் தன் வீழ்வுறு பொருள் இழந்தன்று.

(வி - ரை.) வெம்பி, நீடி என்பனவற்றை வெம்ப, நீட எனத் திரிக்க. கயம் - சுனையுமாம். மள்ளர் என்றது ஈண்டுக் கூத்தரை. முழவெடுத் துயரி வேறு நாட்டு விழவுப்படர் மள்ளர் என மாறுக. பொருளின் கண் மடப்பிடி தழுவி என்பதனை உவமையுடன் கூட்டி விறலியருடன் செல்லும் கூத்தர் எனவும், உவமையின் கண் முழவெடுத் துயரி என்பதனைப் பொருளுடன் கூட்டி முழவு போலும் பலாப் பழத்தினை ஏந்திச் செல்லுங் களிறு எனவும் உரைக்க. பிறந்த நாட்டொட்டுப் பேணி வளர்த்த எம்மைக் கையகன்று ஏதிலானொடு சென்றாள் என்பாள், அவனொடு சென்று பிறள் ஆகிய அளவை என்றாள். அவள் அன்னள் ஆயினும் அவள் பிரிவால் யான் எய்தும் துன்பம் இறப்பவும் பெரிது என்பாள், 'என்றும் படர்மலி எவ்வமொடு, மாதிரந் துழைஇ மனை மருண்டிருந்த என்னினும்' என்றும், தான் எய்துந் துன்பத்தினும் நற்றாயும் ஆயத்தாரும் முதலியோர் அவளை இழந்து எய்தும் துன்பம் பெரிதென்பாள், 'என்னினும், ஊரிழந் தன்றுதன் வீழ்வுறு பொருளே' என்றும் கூறினாள். ஊர் என்றது ஈண்டு, நற்றாய் ஆயத்தார் முதலியோரைக் குறித்து நின்றது.

---

## 190. நெய்தல்

[தோழி செவிலித் தாய்க்கு அறத்தொடு நின்றது.]

திரையுழந் தசைஇய நிரைவளை ஆயமொடு
உப்பின் குப்பை ஏறி எற்பட
வருதிமில் எண்ணும் துறைவனொ டூரே
ஒருதன் கொடுமையின் அலர்பா டும்மே
௫ அலமரல் மழைக்கண் அமர்ந்து நோக்காள்
அலையல் வாழிவேண் டன்னை உயர்சிமைப்
பொதும்பிற் புன்னைச் சினைசேர் பிருந்த
வம்ப நாரை இரிய ஒருநாள்

பொங்குவரல் ஊதையொடு புணரி அலைப்பவும்
௧௦ உழைக்கடல் வழங்கலும் உரியன் அதன்றலை
இருங்கழிப் புகாஅர் பொருந்தத் தாக்கி
வயச்சுறு எறிந்தென வலவன் அழிப்ப
எழில்பயங் குன்றிய சிறையழி தொழில
நிரைமணிப் புரவி விரைநடை தவிர
௧௫ இழுமென் கானல் விழுமணல் அசைஇ
ஆய்ந்த பரியன் வந்திவண்
மான்ற மாலைச் சேர்ந்தன்றோ இலனே.

—உலோச்சனார்.

(சொ - ள்.) ௯. அன்னை - தாயே, வாழி -, வேண்டு - நான் கூறுவதனை விரும்பிக் கேட்பாயாக;

௯—௧௦. உயர் சிமை பொதும்பில் - உயர்ந்த உச்சியையுடைய சோலையில், புன்னை சினை சேர்பு இருந்த - புன்னை மரத்தின் கிளையைச் சேர்ந்திருந்த, வம்ப நாரை இரிய - புதிய நாரை ஒழிந்திட, ஒரு நாள் - முன்பு ஒரு நாள், பொங்கு வரல் ஊதையொடு புணரி அலைப்பவும் - பொங்குதலுடன் வரும் வடகாற்றுடன் அலைகள் அலைத்துக் கொண்டிருக்கவும், உழை கடல் வழங்கலும் உரியன் - ஒரு தலைவன் கடலோரத்தே தேரில் வருதற்கும் உரியன் ஆயினன்;

௧௦—௭. அதன் தலை - அதன்மேலும், இரு கழிப் புகாஅர் - பெரிய கழியினையுடைய துறைமுகத்தே, வயச்சுறு பொருந்தத் தாக்கி எறிந்தென - வலிய சுறுமீன் தம் உடம்பிற்பொருந்தத் தாக்கி எறிந்ததாக, வலவன் அழிப்ப - தேர்ப்பாகன் செலவினை நிறுத்தலால், எழில் பயம் குன்றிய - எழுச்சியும் பயனும் குன்றியனவும், சிறை அழி தொழில - பூட்டு அழிந்த செய்கையை யுடையனவுமாகிய, நிரைமணிப் புரவி - நிரைத்த மணிமாலை பூண்ட குதிரைகள், விரை நடை தவிர - விரைந்து செல்லும் செலவு ஒழிந்து தங்கினவாக, இழும் என் கானல் - இழுமென்னும் ஒலியையுடைய கானலிடத்தே, விழுமணல் அசைஇ - சிறந்த மணலில் தங்கி, ஆய்ந்த பரியன் இவண் வந்து - வேறு சிறந்த புரவியுடன் இங்கு வந்து, மான்ற மாலை சேர்ந்தன்று இலன் - மயங்கிய மாலைப் பொழுதில் தங்கியதும் இலன்.

௫. அலமரல் மழைக்கண் அமர்ந்தும் நோக்காள் - அவனைச் சுழல்கின்ற குளிர்ந்த கண்களையுடைய நின்மகள் நோக்கினாளும் அல்லள்; அங்ஙனமாகவும்,

௧—௪. திரை உழந்து அசைஇய - திரையின் விளையாடி உழந்தமையால் தளர்ச்சியுற்ற, நிரைவளை ஆய்மொடு - நிரைத்த வளையினையுடைய மகளிர் கூட்டத்துடன், (மைந்தர்கள்) உப்பின் குப்பை ஏறி - உப்பு மேட்டில் ஏறி நின்று, எல்பட - இருள்வர, வரு திமில் எண்ணும் துறைவனொடு - கரைக்கு மீண்டு வரும் படகுகளை எண்ணும் துறையையுடைய அத் தலைவனொடு நின் மகளைச் சார்த்தி, ஊர்-

இந்த ஊரானது, ஒரு தன் கொடுமையின் - ஒப்பற்ற தனது கொடுமையால், அலர் பாடும் - அலர் கூறா நிற்கும்;

௬. அலேயல் - ஆதலால் நீ அவளை வருத்தாதேகொள்.

(முடிபு) அன்னை! வாழி! வேண்டு; ஒரு தலைவன், ஒரு நாள், ஊதையொடு புணரி அலைப்பவும் உழைக்கடல் வழங்கலும் உரியன்; அதன்றலை வயச்சுறு எறிந்தென, வலவன் அழிப்ப, புரவிகள் விரைநடை தவிர, அசைஇ ஆய்ந்த பரியினன், மாலை இவண் சேர்ந்தன்றோ இலன்; மழைக்கண் நின்மகள் அவனை அமர்ந்து நோக்கினாளல்லள்; அங்ஙனமாகவும் நின்மகளை அத் துறைவனொடு சார்த்தி, இவ்வூர் தன் கொடுமையின் அலர்பாடும்; ஆதலின் நீ இவளை அலேயல்.

(வி - ரை.) ஆயமொடு என்றமையால், மைந்தர் என்பது வருவிக்கப்பட்டது. எண்ணும் என்னும் பெயரெச்சம், துறை என்னும் இடப் பெயர் கொண்டது. துறையையுடைய தலைவனொடு சார்த்தி என விரித்துரைக்க. ஊர் - என்பது கௌவைப் பெண்டிரை. மழைக்கண்: ஆகு பெயர். வழங்கலும் என்ற உம்மை வருதலருமையை விளக்கி நின்றது. அதன்றலை என்றது, ஊதையொடு புணரி யலைத்தலே யன்றி அதன்மேலும் என்றபடி. வயச் சுறு எறிந்தென வலவன் அழிப்ப என்றதனால், குதிரை புண்பட்டமை பெற்றாம். புண்பட்டமையால் வலவன் பூட்டவிழ்த்துவிட்ட குதிரை நடை தவிர்ந்திருக்க, அவன் மணலின் ஓரிடத்தே தங்கி யிருந்ததன்றி வேறு குதிரை பூண்ட தேருடன் யாங்கள் இருக்குமிடத்திற்கு வந்து இருண்ட மாலைப்பொழுதில் தங்கினானல்லன் என்றும், தலைவியும் அவனை விரும்பி நோக்கினாளல்லள் என்றும் கூறி அங்ஙனமாகவின் ஊர் வாளாது அலர் கூறுவதுபற்றி நீ தலைவியை வருத்தாதே என்று கூறுவாள்போல், தலைவன் எதிர்ப்பாட்டைக் குறிப்பிற் புலப்படுத்தித் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றாள் என்க.

---

## 191. பாலை

[தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது.]

அத்தப் பாதிரித் துய்த்தலைப் புதுவீ
எரியிதழ் அலரியொ டிடைபட விரைஇ
[1]வெண்டோட்டுத் தொடுத்த வண்டுபடு கண்ணித்
தோல்புதை சிரற்றடிக் கோலுடை யுமணர்
௫ ஊர்கண் டன்ன வாரம் வாங்கி
அருஞ்சுரம் இவர்ந்த அசைவில் நோன்றாட்
டிருந்துபகட் டியம்புங் கொடுமணி புரிந்தவர்
மடிவிடு வீளையொடு கடிதெதி ரோடி
ஓமையம் பெருங்காட்டு வரூஉம் வம்பலர்க்
௧௦ கேமஞ் செப்பும் என்றூழ் நீளிடை

---

(பாடம்) 1. வண்டோட்டு.

அரும்பொருள் நசைஇப் பிரிந்துறை [1]வல்லி
சென்றுவினை எண்ணுதி யாயின் நன்றும்
[2]உரைத்திசின் வாழியென் நெஞ்சே நிரைமுகை
முல்லை யருந்தும் மெல்லிய வாகி
௧௫ அறலென விரிந்த உறலின் சாயல்
ஒலியிருங் கூந்தல் தேறுமென
வலிய கூறவும் வல்லையோ மற்றே.

—[3]ஒரோடோகத்துக் கந்தரத்தனார்.

(சொ - ள்.) ௧௩. என் நெஞ்சே வாழி—,

௧—௧௨. அத்தம் பாதிரி துய் தலை புது வீ - பாலையிலுள்ள துய்யினை உச்சியிற் கொண்ட புதிய பாதிரிப் பூவை, எரி இதழ் அலரியொடு இடைபட விரைஇ - நெருப்புப் போன்ற இதழினையுடைய அலரிப்பூவுடன் இடையிடையே கலந்து, வெண்தோட்டுத் தொடுத்த வண்டுபடு கண்ணி - வெண்மை பொருந்திய தாழம்பூவின் தோட்டில் வைத்துக் கட்டிய வண்டு பொருந்தும் கண்ணியினைத் தரித்த, தோல் புதை சிரற்று அடி - பொதிந்த செருப்பு ஒலிக்கும் அடியினையும், கோல் - கோலினையுமுடைய, உமணர் - உப்பு வாணிகருடைய, ஊர் கண்டன்ன - ஊர் திரண்டு வந்தாலொத்த, ஆரம் வாங்கி - வண்டிகளை இழுத்து, அரும் சுரம் இவர்ந்த - ஏறுதற்கு அரிய மேடுகளையுடைய காட்டில் ஏறி வந்த, அசைவு இல் நோன் தாள் திருந்து பகட்டு இயம்பும் கொடுமணி - தளர்வில்லாத வலிய தாளினையுடைய செவ்விய எருதுகளின் ஒலிக்கும் வளைந்த மணிகளின் ஒலி, புரிந்து அவர் மடி விடு வீளையொடு - அவர்கள் விரும்பி வாயினை மடித்து எழுப்பும் சீழ்க்கை யொலியொடு, கடிது எதிர் ஓடி - விரைந்து எதிரே சென்று, ஓமை அம் பெருங்காட்டு வரூஉம் வம்பலர்க்கு - ஓமை மரங்களையுடைய பெரிய காட்டில் வரும் புதியராய வழிச்செல்வார்க்கு, ஏமம் செப்பும் - பாதுகாவலைக் கூறும், என்றாழ் நீள் இடை - வெப்பம் மிக்க நெடிய காட்டிலே, அரும்பொருள் நசைஇ - அரிது ஈட்டும் பொருளை விரும்பி, பிரிந்து உறை வல்லி - நம் தலைவியைப் பிரிந்து உறையும் வன்மை யுடையையாய், சென்று வினை எண்ணுதியாயின் - சென்று பொருள் ஈட்டும் வினையை எண்ணுவையாணல்,

௧௩—௭. உறல் இன் சாயல் - உறுதற்கினிய மென்மைத் தன்மையையும், நிரை முகை முல்லை அருந்து - முல்லையின் நிரைத்த அரும்புகளை நிறையச் சூடி, மெல்லியவாகி - மென்மைத் தன்மையையுடையவாகி, அறல் என விரிந்த ஒலி இரும் கூந்தல் – கருமணல் போல விரிந்த தழைத்த கரிய கூந்தலையுமுடைய நம் தலைவி, தேறும் என - தெளிந்திருப்பாள் என்று, வலிய கூறவும் வல்லையோ - பிரிவுணர்த்தும் வலிய சொற்களைக் கூறவும் வன்மை யுடையையோ? வல்லையாயின்,

(பாடம்) 1. வவ்வி. 2. உரையினி. 3. உரோடோகக் கவுணியன் சேந்தன்.

௧௨—௩. நன்றும் உரைத்திசின் - அவளிடத்தே சென்று பெரிதும் கூறி அவளைத் தேற்றுவாயாக.

(முடிபு) உமணரது ஊர்கண்டன்ன ஆரம் வாங்கிச் சுரம் இவர்ந்த பகட்டு இயம்பும் கொடுமணி, அவர் விளையொடு எதிர் ஓடி வம்பலர்க்கு ஏமம் செப்பும் என்றூழ் நீளிடைப் பொருள் நசைஇச் சென்று வினை எண்ணுதியாயின், இன்சாயலும் கூந்தலுமுடைய இவள் தேறும் என வலிய கூறவும் வல்லையோ? வல்லையாயின் நன்றும் உரைத்திசின்.

(வி - ரை.) தோடு - தாழம்பூவின் இதழ். சிரற்று தோல் எனக் கொண்டு சிதறிய செருப்பு என்றலுமாம். கோல் - பகடு ஓட்டுங் கோல். ஆரம் - வண்டியின் உறுப்பு; வண்டிக்கு ஆகுபெயர். மிகப் பலவாகிய வண்டிகளுடன் உமணர் திரண்டு செல்லுந் தோற்றம் ஊர் எழுந்து செல்லுவது போலுமாகலின், உமணர் ஊர்கண்டன்ன ஆரம் என்றார். பகட்டின் மணி யோசையையும் உமணர் விளையொலியையும் செவியேற்ற வம்பலர் இக்காட்டில் ஏதம் இல்லையென்று உணர்வராகலின், அவ்வொலிகள் வம்பலர்க்கு ஏமம் செப்பும் எனப்பட்டன. வல்லி - வலியையாய் என்னும் பொருட்டு; வவ்வி என்பது பாடமாயின், பிரிந்துறைதலை மனத்திற் கொண்டு என்க. பொருள் நசைஇ நீளிடைச் சென்று வினை எண்ணுதியாயின் எனக் கூட்டுக. அருந்து - ஆர்ந்து என்பதன் விகாரம். தேறுமென என்றதனால், வலிய என்றது, பொருளீட்டி விரைந்து வருவேம் என்னுஞ் சொற்களாதல் வேண்டும். கூறவும் வல்லையோ என்றது கூறுதற்கு அருமையை விளக்கி நின்றது. மற்று: வல்லையல்லை என்னும் பொருள் தருதலின் வினைமாற்று; அசையுமாம்.

## 192. குறிஞ்சி

[தோழி தலைமகனைச் [1]செறிப்பு அறிவுறீஇ இரவுக்குறி மறுத்தது.]

[2]மதியரும் பன்ன மாசறு சுடர்நுதல்
பொன்னேர் வண்ணம் கொண்டன் றன்றே
யாங்கா குவள்கொல் தானே விசும்பின்
எய்யா வரிவில் அன்ன பைந்தார்ச்
௫ செவ்வாய்ச் சிறுகிளி சிதைய வாங்கிப்
பொறைமெலிந் திட்ட புன்புறப் பெருங்குரல்
வளைசிறை வாரணங் கிளையொடு கவர
ஏனலும் [3]இறங்குபொறை யுயிர்த்தன பானாள்
நீவந் தளிக்குவை யெனினே மால்வரை
௧௦ மைபடு [4]விடரகந் துழைஇ ஒய்யென
அருவி தந்த அரவுமிழ் திருமணி

(பாடம்) 1. செறிப்பு அறிவுறீஇ வரைவு கடாயது. 2. மதியிருப்பன்ன. 3. இறங்கு குரலிறுத்தன; இறங்கு பொறையிறுத்தன. 4. வியலகம்.

பெருவரைச் சிறுகுடி மறுகுவிளக் குறுத்தலின்
இரவும் இழந்தனள் அளியள் உரவுப்பெயல்
உருமிறை கொண்ட உயர்சிமைப்
௧௫ பெருமலை நாட நின் மலர்ந்த மார்பே.

—[1]போதும்பில் கிழான் வெண்கண்ணனார்.

(சொ - ள்.) ௧௩—௫. உரவுப் பெயல் உரும் இறைகொண்ட - வலிய மழையுடன் இடி தங்குதல் கொண்ட, உயர்சிமை பெருமலை நாட - உயர்ந்த உச்சியையுடைய பெரிய மலை நாட்டையுடைய தலைவனே,

௩—அ. விசும்பின் எய்யா வரிவில் அன்ன பைந்தார் செவ்வாய் சிறு கிளி - வானிலுள்ள எய்யப்பெறாத அழகிய வில்லை ஒத்த பசிய மாலையினையும் சிவந்த வாயினையும் உடைய சிறிய கிளி, சிதைய வாங்கி - தினை சிதையும்படி கொய்து, பொறை மெலிந்திட்ட புல் புறப் பெரு குரல் - சுமக்கலாற்றாது போகட்ட புல்லிய புறத்தினையுடைய பெரிய கதிரினை, வளை சிறை வாரணம் கிளையொடு கவர - வளைந்த சிறகுகளை யுடைய கானங்கோழி தன் இனத்துடன் கவர்ந்துண்ணுமாறு, ஏனலும் இறங்கு பொறை உயிர்த்தன - தினையும் வளைந்த கதிர்களை ஈன்றன (ஆகலின் எம் தலைவி இனி இற்செறிக்கப் படுவள்);

அ—௧௨. பானாள் நீ வந்து அளிக்குவை எனினே - பாதி இரவில் நீ வந்து அளிப்பாய் என்று கூறின், மால் வரை மை படு விடரகம் துழைஇ - பெரிய மலையின் இருள் பொருந்திய குகையின் இடங்களைத் துழாவி, ஒய் என அருவி தந்த அரவு உமிழ் திருமணி - விரைய அருவி கொண்டுவந்த பாம்பு உமிழ்ந்த அழகிய மணி, பெருவரை சிறு குடி மறுகு விளக்குறுத்தலின் - பெரிய மலையிலுள்ள எமது சீறூரின் தெருவினை இருளகற்றி விளங்கச் செய்தலாலே,

௧௫. நின் மலர்ந்த மார்பு - நின் அகன்ற மார்பின் கூட்டத்தினை,

௧௩. இரவும் இழந்தனள் - இரவினும் இழந்தாள் ஆவள் ;

௧—௩. மதி அரும்பு அன்ன - இளைய மதியினை யொத்த, மாசு அறு சுடர் நுதல் - இவளது குற்றமற்ற ஒள்ளிய நெற்றி, பொன் நேர் வண்ணம் கொண்டன்று - பொன்னை யொத்த நிறத்தினைக் கொண்டது; அன்னோ - அந்தோ, யாங்கு ஆகுவள் கொல் - எங்ஙனம் ஆகுவளோ;

௧௩. அளியள் - இரங்கத் தக்காள்.

(முடிபு) பெருமலை நாட! ஏனல் பொறை உயிர்த்தன; (ஆகலின் எம் தலைவி இனி இற்செறிக்கப்படுவாள்;) நீ பானாள் வந்து அளிக்குவை எனினே, அரவுமிழ் திருமணி மறுகு விளக்குறுத்தலின் நின் மார்பினை இரவும் இழந்தனள்; சுடர்நுதல் பொன் நேர் வண்ணம் கொண்டன்று ; அன்னோ யாங்காகுவள்கொல் ; அளியள்.

---

(பாடம்) 1. வெங்கண்ணனர்.

(வி - ரை.) நுதல் பொன்னேர் வண்ணம் கொண்டன்று என்றது பசலை பூத்தது என்றபடி. விசும்பின் வில் என்க. எய்யா வில் என்றது வான வில்லிற்கு வெளிப்படை. வரி - அழகு. ஏனல்பொறை உயிர்த்தன என்றது, தினை யறுக்குங் காலமாகலின் தலைவி இற்செறிக்கப்படுவள் என்பது கூறி, அதனால் பகற்குறி அரிதென்று உணர்த்தியவாறும். திருமணி மறுகு விளக்குறுத்தலின் என்பதனால் இரவுக் குறி யிடையீடு உணர்த்தி, அதனால் அஃதும் அரிதென உணர்த்துவாள் நின் மார்பினை இரவும் இழந்தனள் என்றாள். இரவும் என்னும் உம்மை எச்சப் பொருட்டு. தானே என்பது கட்டுரைச் சுவை பட நின்றது.

---

## 193. பாலை

[பொருள் வலித்த நெஞ்சிற்குச் சொல்லித் தலைமகன் செலவு அழுங்கியது.]

கானுயர் மருங்கிற் கவலை யல்லது
வானம் வேண்டா வில்லேர் உழவர்
பெருநாள் வேட்டங் கிளையெழ வாய்த்த
பொருகளத் தொழிந்த குருதிச் செவ்வாய்ப்
௫ பொறித்த போலும் வானிற எருத்தின்
அணிந்த போலுஞ் செஞ்செவி எருவை
குறும்பொறை எழுந்த நெடுந்தாள் யாஅத்
தருங்கவட் டுயர்சினைப் பிள்ளை யூட்ட
விரைந்துவாய் வழுக்கிய கொழுங்கண் ஊன்றடி
௧௦ தொல்பசி முதுநரி வல்சி யாகும்
சுரனமக் கெளிய மன்னே நன்மனைப்
பன்மாண் தங்கிய சாயல் இன்மொழி
முருந்தேர் முறுவல் இளையோள்
பெருந்தோள் இன்றுயில் கைவிடு கலனே.

—மதுரை மருதனிள நாகனார்.

(சொ - ள்.) ௧—௧௪. நெஞ்சே, கான்உயர் மருங்கில் கவலை அல்லது - உயர்ந்த காட்டினிடத்தேயுள்ள கவர்த்த நெறிகளை யன்றி, வானம் வேண்டா வில் ஏர் உழவர் - மழையை வேண்டுதலில்லாத வில்லாகிய ஏரால் உழுதலைச் செய்யும் ஆறலைப்போர், கிளை எழ வாய்த்த - தம் கிளைஞருடன் எழாநிற்கக் கிடைத்த, பெருநாள் வேட்டம் - நன்னாள் வேட்டத்தில், பொரு களத்து ஒழிந்த - அவர்கள் பொருத களத்தில் ஆறு செல்வார் உடம்பினின்றும் உக்க, குருதி செவ்வாய் - குருதியினை உண்டமையால் சிவந்த வாயினையும், பொறித்த போலும் வால்நிற எருத்தின் - பொறித்து வைத்தாற் போலும் வெண்ணிறம் வாய்ந்த கழுத்தினையும், அணிந்த போலும் செஞ்செவி எருவை - செய்து சூட்டியது போலும் சிவந்த செவியினையுமுடைய பருந்து, குறும்பொறை எழுந்த நெடுந்தாள்

யாஅத்து - குறிய மலையிடத்தே வளர்ந்த நெடிய அடியினையுடைய யா மரத்தின், அருங் கவட்டு உயர்சினைப் பிள்ளை ஊட்ட - அரிய கவட்டினின்றெழுந்த உயர்ந்த கிளைகளிலுள்ள தன் குஞ்சினை உண்பிக்க, விரைந்து வாய் வழுக்கிய கொழு கண் ஊன் தடி - விரைதலினாலே அக் குஞ்சின் வாயினின்றும் தவறி வீழ்ந்த கொழுமையுற்ற கண்ணாகிய ஊனின் துண்டு, 'தொல்பசி முதுநரி வல்சி ஆகும் சுரன் - பழைய பசியினையுடைய முதிய நரிக்கு உணவாகும் காடுகள், நமக்கு எளிய மன் - நாம் செல்லுதற்கு மிகவும் எளியனவே, ஆயினும்,

௧௧—௪. நல் மனை - நமது நல்ல மனையின் கண்ணுள்ள, பல் மாண் தங்கிய - பல மாண்பும் உற்ற, சாயல் - மென்மைத் தன்மையினையும், இன்மொழி - இனிய மொழியினையும், முருந்து ஏர் முறுவல் - மயிலிறகின் அடியினை யொத்த பற்களையுமுடைய, இளையோள் - இளையோளாய நம் தலைவியின், பெருந்தோள் இன்துயில் - பெரிய தோளின்பா லெய்தும் இனிய துயிலினை, கைவிடுகலன் - கைவிடுதலை ஆற்றேன்.

(முடிபு) நெஞ்சே! சுரன் நமக்கு எளியமன்; ஆயினும், இளையோள் பெருந்தோள் இன்றுயில் கைவிடுகலன்.

(வி - ரை.) உழு தொழில் செய்வார்க்கு மழை துணைக் காரணமாம் என்பது, '[1]ஏரி னுழாஅர் உழவர் புயலென்னும், வாரி வளங் குன்றிக் கால்' என்பதனாற் பெற்றாம்; ஆயின், ஆறலைப்பாராகிய வில்லேர் உழவர்க்குக் காட்டின் கவர் நெறி யல்லது மழை துணையாதல் இல்லையாகலின், 'கவலை யல்லது வானம் வேண்டா வில்லேர் உழவர்' என்றார். அவர்க்கு வேட்டை பெரிதும் வாய்த்த நாள் சிறந்த நாள் ஆகலின் அது பெருநாள் எனப்பட்டது. கிளையெழ என்பதற்கு ஆறு செல்வார் கிளையுடன் புறப்பட்டு வர என்றுரைத்தலுமாம். குருதிச் செவ்வாய் - குருதியை யுண்டமையாற் சிவந்த வாய் என விரித்துரைக்க. அணிந்த போலும் செஞ்செவி என்ற கருத்து, '[2]ஊன் பதித்தன்ன வெருவரு செஞ்செவி எருவைச் சேவல்' என முன்னர்ப் போந்தமையுங் காண்க.

யாமரத்தின் உயர்ச்சி மிகுதி கூறுவார் நெடுந்தாள் யாஅத்து என்றும், அருங்கவட்டு உயர் சினை என்றும் கூறினார். விரைந்து ஊட்ட என்று கூட்டி யுரைத்தலுமாம்.

எருவை குஞ்சிற்குக் கண்ணினைக் கொணர்ந்து உணவாகக் கொடுப்பது, '[3]கண்ணுமிழ் கழுகின் கானம்' என்பதனாலும் அறியப்படும். தொல் பசி - பன்னாள் உணவின்மையால் எய்திய பசி. கொல் பசி என்னும் பாடத்திற்கு வருத்தும் பசி யென்றுரைக்க. தலைவன் சுரத்திற் செல்லுதற்கு அஞ்சுகின்றிலேன் என்பான் 'சுரன் நமக்கு எளிய மன்' என்றும், எனினும் தலைவியின் தோளிற் பெறும் இனிய துயிலைக் கைவிட்டுப்போதல் இயலாதென்பான் 'இளையோள்

1. குறள். வான். ௪. 2. அகம். ௫௧. 3. அகம். ௩௧.

பெருந் தோள் இன்துயில் கைவிடுகலனே' என்றும் கூறினான். அவள் கைவிடற்கு அரியாள் என்பதனைப் பன் மாண் தங்கிய சாயல் இன்மொழி முருந்தேர் முறுவல் இளையோள் என்பதனாற் கூறினான்.

## 194. முல்லை

[பருவங் கண்டு ஆற்றாமை மீதூரத் தலைமகள் சொல்லியது.]

பேருறை தலைஇய பெரும்புலர் வைகறை
ஏரிடம் படுத்த இருமறுப் பூழிப்
புறமாறு பெற்ற பூவல் ஈரத்து
ஊன்கிழித் தன்ன செஞ்சுவல் நெடுஞ்சால்
௫ வித்திய மருங்கின் விதைபல நாறி
இரலை நன்மான் இனம்பரந் தவைபோற்
கோடுடைத் தலைக்குடை சூடிய வினைஞர்
கறங்குபறைச் சீரின் [1]இறங்க வாங்கிக்
களைகால் கழீஇய பெரும்புன வரகின்
௰ கவைக்கதிர் இரும்புறங் கதூஉ உண்ட
குடுமி நெற்றி நெடுமாத் தோகை
காமர் கலவம் பரப்பி ஏமுறக்
கொல்லை யுழவர் [2]கூழ்நிழல் ஒழித்த
வல்லிலைக் குருந்தின் வாங்குசினை யிருந்து
௰௫ கிளிகடி மகளிரின் விளிபடப் பயிரும்
[3]கார்மன் இதுவாற் றோழி போர்மிகக்
கொடுஞ்சி நெடுந்தேர் பூண்ட கடும்பரி
விரியுளை நன்மான் கடைஇ
வருதும் என்றவர் தெளித்த போழ்தே.

—இடைக்காடனார்.

(சொ - ள்.) ௰௬—௰௯. தோழி-, போர்மிக - போர்மிக்கு மூண்டதாக, கொடுஞ்சி நெடுதேர் பூண்ட - கொடுஞ்சியென்னும் உறுப்பினையுடைய நெடிய தேரிற் பூட்டப்பெற்ற, கடும்பரி விரி உளை நல்மான் கடைஇ - விரைந்த செலவினையும் விரிந்த பிடரி மயிரினையும் உடைய நல்ல குதிரையைச் செலுத்தி, வருதும் என்று அவர் தெளித்த போழ்து - இன்ன போழ்தில் வருவேம் என்று நம் தலைவர் தெளிவித்த காலம்,

௧—௰௧. பேர் உறை தலைஇய - பெரிய மழை பெய்த, பெரும் புலர் வைகறை - இருள் பெரிதும் புலர்ந்த காலைப் பொழுதிலே, ஏர் இடம் படுத்த இருமறு - ஏர்களால் இடமுண்டாக உழப்பெற்ற பெரிய வடுவினையுடைய, பூழிபுறம் மாறுபெற்ற - கீழ் மேலாகப் புரண்ட புழுதியையுடைய, பூவல் ஈரத்து - செம்மண் நிலத்தின்

(பாடம்) 1. இரங்க. 2. காடுழவொழித்த. 3. கார்மனிதுவே தோழி.

ஈரம்பட்ட செவ் வியில், ஊன் கிழித்தன்ன செம் சுவல் நெடுசால் -
ஊனைக் கிழித்தாலொத்த செவ்விய மேட்டுநிலத்தைப் பிளந்து சென்ற
நெடிய படைச்சாலி னிடத்து, வித்திய மருங்கில் - விதைத்த இடங்
களில், விதை பல நாறி - விதைகள் பலவும் முளைத்து வளர, இரலை
நல்மான் இனம் பரந்தவைபோல் - நல்ல கலைமானின் கூட்டம் பரந்
தனபோல, கோடு உடை தலைக் குடை சூடிய வினைஞர் - கோட்டினை
யுடைய ஓலைக் குடையைத் தலையிற் சூடிய கொல்லை உழவர், கறங்கு
பறைச் சீரின் - ஒலிக்கும் பறையின் ஒலியோடு, இறங்க வாங்கி களை
கால் கழீஇய - பயிர்கள் வளையும்படி ஒதுக்கிக் களையைப் பறித்துத்
தூய்மை செய்த, பெரும் புன வரகின் - பெரிய கொல்லையில் விளைந்த
வரகின், கவை கதிர் இருபுறம் கதூஉ உண்ட - கவைத்த கதிர்
களின் கரிய புறத்தினைப் பற்றி யுண்ட, குடுமி நெற்றி நெடு மா
தோகை - குடுமி பொருந்திய தலையினையுடைய நீண்ட கரிய மயில்,
காமர் கலவம் பரப்பி - அழகிய தோகையினை விரித்து, ஏம் உற -
இன்பம் உற, கொல்லை உழவர் கூழ் நிழல் ஒழித்த - கொல்லையை
உழும் வினைஞர்கள் கூழ் உண்டற்கு நிழலாக விட்டுவைத்த, வல்
இலைக் குருந்தின் வாங்குசினை இருந்து - வலிய இலையினையுடைய
குருந்த மரத்தின் வளைந்த கிளையிலிருந்து, கிளிகடி மகளிரின் விளி
பட பயிரும் - கிளிகளை ஓட்டும் மகளிர்போல ஒலியுண்டாக அகவும்,
கார் இது - கார் காலம் ஆகிய இதுவேயாகும்; மன் - அங்ஙனமாக
வும் அவர் இன்னும் வந்திலரே.

(முடிபு) தோழி! நம் தலைவர் வருதும் என்று தெளித்தபோழ்து கார் இது
மன்; வரகின் கதிர் உண்ட தோகை கலவம் பரப்பிக் குருந்தின் சினையிருந்து
கிளிகடி மகளிரின் விளிபடப் பயிரும் கார் என்க.

(வி - ரை.) ஏரிடம் படுத்த இருமறுப் பூழிப் புறமாறு பெற்ற
பூவல் என்றது, புழுதி கீழ்மேலாகப் புரண்டு நன்கு புலருமாறு
பன்முறை உழுத செம்மண்நிலம் என்றபடி; [1]'தொடிப்புழுதி கஃசா
வுணக்கிற் பிடித்தெருவும் - வேண்டாது சாலப் படும்' என வள்ளு
வர் கூறுவதுங் காண்க. அங்ஙனம் உணக்கிய புழுதியில் மழை
பெய்து ஈரம்பட்ட செவ்வி பார்த்து மீட்டும் உழுது விதை தெளிப்
பர் என்பது, 'பூவல் ஈரத்து, ஊன்கிழித் தன்ன செஞ்சுவல் நெடுஞ்
சால், வித்திய' என்பதனாற் பெற்றாம். ஈரமுடைய செம்மண்
நிலத்தே உழுபடை கிழித்த வடுவின் தோற்றம், ஊனினைக் கிழித்து
வைத்தாற்போலும் என்றார். நாறி - நாற எனத் திரிக்க; நாற -
முளைத்து வளர என்க. மழைக்குத் தடையாக வினைஞர் தலையிற்
சூடிய ஓலைக் குடையின் இருமுனையும் நீண்டு உயர்ந்திருக்குமாகலின்
அதனையுடைய வினைஞர்கள் இரலையினம் போல்வாராயினர் என்க.
கறங்கு பறைச் சீரின் என்றதனால், அவர்கள் களைபறிக்குங்கால்,
பறையை ஒலிப்பிப்பர் என்பது பெற்றாம். களைகால் கழீஇய -
களையை அடியுடன் கழித்த என்றுமாம். தோகை - மயில். காரினைக்
கண்ட மயில் களிப்புற்று அகவுதல் இயல்பாகலின், தோகை கலவம்

1. குறள் ௧௦௩௭.

பரப்பி ஏமுறப் பயிரும் என்றார். மயில் குருந்தின் சினையிலிருந்து அகவுவது கிளிகடியும் மகளிர், மரத்தின் கிளைமீதிருந்து ஒலிப்பது போலும் என்க. அவர் தெளித்த போழ்து இதுவாகவும் இன்னும் வந்திலரே என்பதுபட நின்றமையின், மன் ஒழியிசையாகும்.

---

## 195. பாலை

[மகட் போக்கிய நற்றாய் சொல்லியது.]

அருஞ்சுரம் இறந்தவென் பெருந்தோட் குறுமகள்
திருந்துவேல் விடலையொடு வருமெனத் தாயே
புனைமாண் இஞ்சி பூவல் ஊட்டி
மனைமணல் அடுத்து மாலை நாற்றி
௫ உவந்தினி தயரும் என்ப யானும்
மான்பிணை நோக்கின் மடநல் லாளை
ஈன்ற நட்பிற் கருளான் ஆயினும்
இன்னகை முறுவல் ஏழையைப் பன்னாட்
கூந்தல் வாரி நுசுப்பிவர்ந் தோம்பிய
௧௦ [1]நலம்புனை யுதவியும் உடையன் மன்னே
[2]அஃதறி கிற்பினோ நன்றுமற் றில்ல
அறுவை தோயும் ஒருபெருங் குடுமிச்
சிறுபை நாற்றிய பஃறலைக் கொடுங்கோல்
ஆகுவ தறியும் முதுவாய் வேல
௧௫ கூறுக மாதோநின் கழங்கின் திட்பம்
மாறா வருபனி கலுழுங் கங்குலின்
ஆனாது துயருமெங் கண்ணினிது படீஇயர்
எம்மனை முந்துறத் தருமோ
தன்மனை உய்க்குமோ யாதவன் குறிப்பே.

—கயமனார்.

(சொ - ள்.) ௧—௫. அரும் சுரம் இறந்த என் பெரும் தோள் குறுமகள் - அரிய சுரநெறியைக் கடந்து சென்ற என் பெரிய தோளினையுடைய இளையளாய மகள், திருந்து வேல் விடலையொடு வரும் என - திருந்திய வேலினையுடைய தலைவனுடன் வரும் என்று, தாய் - அவன் தாய், புனைமாண் இஞ்சி பூவல் ஊட்டி - புனைதல் மாட்சிமைப்பட்ட மாண்புற்ற புறச்சுவரில் செம்மண் பூசி, மனை மணல் அடுத்து - மனையின் முற்றத்தே மணலைப் பெய்து, மாலை நாற்றி - மாலைகளைத் தொங்கவிட்டு, உவந்து இனிது அயரும் என்ப - மகிழ்ந்து இனிதே (மனையின்கண் கோலம்) செய்யும் என்ப ;

௫—௧௦. யானும் -, மான் பிணை நோக்கின் மட நல்லாளை - பெண் மான் போலும் பார்வையையுடைய மடப்பம் வாய்ந்த அவளை,

---

(பாடம்) 1. நலம்புனை யுதவியோவுடையன். 2. அஃதறி கற்பினன்று.

ஈன்ற நட்பிற்கு அருளான் ஆயினும் - ஈன்றுள் என்னும் அன்பு பற்றி என்பால் அருள் செய்யானாயினும், இன் நகை முறுவல் ஏழையை - இனிய நகையுடன் கூடிய பற்களையுடைய அவளை, பல் நாள் கூந்தல் வாரி நுசுப்பு இவர்ந்து ஓம்பிய - பலநாளும் கூந்தலை வாரிமுடித்து மருங்கிலே ஏற்றிப் பாதுகாத்த, நலம்புனை உதவியும் மன் உடையன் - நன்மை பொருந்திய உதவியும் பெரிதும் உடையள் ஆவேன் ;

௧௧. அஃது அறிகிற்பினோ நன்று - அவன் அதனை அறியின் நன்றாம் ;

௧௨—௪. அறுவை தோயும் ஒரு பெருங்குடுமி - ஆடை சூழ்ந்த ஒரு பெரிய உச்சியினையும், சிறு பை நாற்றிய பல் தலை கொடு கோல் - சிறிய பை தொங்கவிடப்பெற்ற பல தலையையுடைய வளைந்த கோலினையும் உடையனாய், ஆகுவது அறியும் முதுவாய் வேல - மேல் நிகழ்வதனை அறிந்து கூறும் அறிவு வாய்ந்த வேலனே !

௧௫—௯. கங்குலின் ஆனாது துயரும் - இரவில் அமையாது துயருறும், எம் - எம்முடைய, மாரு வருபனி கலுழும் கண் - இடையறாது வரும் நீருடன் கலங்கி அழும் கண்கள், இனிது படீஇயர் - இனிது துயிலும் பொருட்டு, எம் மனை முந்துறத் தருமோ - எமது மனையின் கண் முற்படக் கொணர்ந்து தருமோ அன்றி, தன் மனை உய்க்குமோ - தன் மனையின்கண் முற்படக் கொண்டு செல்வானோ, யாது அவன் குறிப்பு - அத் தலைமகன் உட்கோள் யாதோ, கழங்கின் திட்பம் - கழங்கின் திண்ணிய குறியை, கூறுக - கூறுவாயாக.

(முடிபு) குறுமகள் விடலையொடு வருமெனத் தாய், ஊட்டி, அடுத்து, நாற்றி அயரும் என்ப ; யானும் ஓம்பிய உதவியும் உடையன் ; அஃதறிகிற்பினோ நன்று ; வேல ! எம்மனை முந்துறத் தருமோ, தன்மனை முந்துற உய்க்குமோ, அவன் குறிப்பு யாது ? நின் கழங்கின் திட்பம் கூறுக.

(வி - ரை.) இஞ்சி - மனையை அடுத்துப் புறத்தே சூழ்ந்த மதில்போலும் சுவர். அயர்தல் - கொண்டாடுதலுமாம். யானும் என்ற உம்மை, தாய் என்றதனைக் கருதி நிற்றலின் எச்சவும்மை யாகும். உதவியும் என்ற உம்மையும், எச்ச வும்மையே. அஃது அறிகிற்பின் - உதவியாகிய அதனை அறியின். ஈன்ற நட்பிற் கருளானாயினும் அஃதறிகிற்பினோ நன்று என்க. அறிகிற்பினோ நன்று என்றது, அறிந்து என் மனைக்கட் கொண்டுவரின் நன்று என்றபடி. அறுவை தோயும் ஒரு பெருங்குடுமி என்றது, தலையிலே மயிர்க் கட்டாகச் சுற்றி ஒரு புறத்தே தொங்கவிட்ட ஆடை தோய்ந்த குடுமி என்றவாறு. குடுமியினையும் கோலினையும் உடைய வேல என்க. திட்பம் என்றது பிழையாத குறி என்னும் பொருட்டு. மன், இல்ல, மாது, ஓ : அசைகள்.

(மே - ள்) [1]'தன்னு மவனு மவளுஞ் சுட்டி' என்னுஞ் சூத்திரத்து, இப்பாட்டினைக் கூறி இது தெய்வத்தொடு படுத்துப் புலம்பியது என்றும்,

1. தொல். அகத். ௩௯.

[1]'களவல ராயினும் நாமமெய்ப் படுப்பினும்' என்னுஞ் சூத்திரத்து, போக்குடன் அறிந்தபின் தோழியொடு கெழீஇக் கற்பின் ஆக்கத்து நிற்றற்கண்ணும் என்னும் துறைக்கு 'எம்மனை முந்துறத் தருமோ, தன்மனை யுய்க்குமோ யாதவன் குறிப்பே' என்ற பகுதியை உதாரணமாகக் காட்டி, (இது) 'கற்பினுக்கத்துக் கருத்து நிகழ்தல்' என்றும், [2]'வெளிப்பட வரைதல் படாமை வரைதல்' என்னுஞ் சூத்திரத்து, 'எம்மனை.........யாதவன் குறிப்பே' (இது) 'போல்வன வெளிப்படுவதன் முன்னர்க் கொண்டு தலைக்கழிந்துழிக் கொடுப்போர் இன்றியும் கரணம் நிகழ்ந்தமையின் அதுவும் வெளிப்படாமல் வரைந்ததாம்' என்றும், [3]'கொடுப்போ ரின்றியுங் கரணமுண்டே' என்னுஞ் சூத்திரத்து, இச் செய்யுள் கொடுப்போ ரின்றிக் கரணம் நிகழ்ந்தது என்றும் கூறுவர். நச்.

[4]'மறைவெளிப் படுதலும்' என்னுஞ் சூத்திரத்து 'எம்மனை.........யாதவன் குறிப்பே' என்பது மறை வெளிப்பாடு என்றனர் பேரா.

---

## 196. மருதம்

[பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகற்குக் கிழத்தி சொல்லியது.]

நெடுங்கொடி நுடங்கும் நறவுமலி பாக்கத்து
நாட்டுறைப் பட்ட மோட்டிரு வராஅல்
துடிக்கட் கொழுங்குறை நொடுத்துண் டாடி
வேட்டமறந்து துஞ்சுங் கொழுநர்க்குப் பாட்டி
௫ ஆம்பல் அகலிலை அமலைவெஞ் சோறு
தீம்புளிப் பிரம்பின் திரள்கனி பெய்து
விடியல் வைகறை இடூஉம் ஊர
தொடுகலம் குறுக வாரல் தந்தை
கண்கவின் அழித்ததன் தப்பற் றெறுவர
௧௦ ஒன்றுமொழிக் கோசர்க் கொன்றுமுரண் போகிய
கடுந்தேர்த் திதியன் அழுந்தைக் கொடுங்குழை
அன்னி மிஞிலியின் இயலும்
நின்னலத் தகுவியை முயங்கிய மார்பே.

—பரணர்.

(சொ-ள்.) க—எ. நெடு கொடி நுடங்கும் நறவு மலி பாக்கத்து - நெடிய கொடிகள் அசையும் கள் மலிந்த பாக்கத்திலே, நாள் துறைப் பட்ட மோட்டு இரு வராஅல் - விடியற்காலை வேட்டத்துத் துறைக்கண் அகப்பட்ட பெரிய அகட்டினையுடைய வரால் மீனின், துடி கண் கொழு குறை நொடுத்து - துடியின் கண்போன்று அகன்ற வளவிய துண்டத்தினை விற்று, உண்டு ஆடி - கள்ளுண்டு ஆடி, வேட்டம் மறந்து - மீண்டும் வேட்டம் போதலை மறந்து, துஞ்சும் கொழு

---

1. தொல். கள. உ௪. 2. தொல். கள. ௪௯. 3. தொல். கற். உ. 4. தொல். செய். ௧௯௭.

நர்க்கு - உறங்கிக் கிடக்கும் கணவன்மார்க்கு, பாட்டி - (அவரவர் மனைவியராய) பாண் மகளிர், ஆம்பல் அகல் இலை - ஆம்பலது அகன்ற இலையில், அமலை வெம் சோறு - திரண்ட விருப்பந் தரும் சோற்றை, தீம்புளி பிரம்பின் திரள் கனி பெய்து - பிரம்பின் இனிப் புடன் கூடிய புளிப்பினையுடைய திரண்ட பழத்தினைப் பெய்து, விடியல் வைகறை இடூஉம், ஊர - இருள் புலரும் விடியற் காலத்தே இடும் ஊரனே!

அ—கங. தந்தை கண்கவின் அழித்ததன் தப்பல் - தன் தந்தையின் கண்ணின் எழிலைக் கெடுத்ததாகிய தவற்றிற்காக, ஒன்று மொழிக் கோசர் - நெடுமொழியினையுடைய கோசர்களை, கடு தேர் திதியன் - விரைந்த தேரினையுடைய திதியனது, அழுந்தை - அழுந்தூர் என்னுமிடத்து, தெறுவரக் கொன்று முரண் போகிய - அச்சம் உண்டாகக் கொல்வித்து மாறுபாடு தீர்ந்த, கொடுங்குழை அன்னி மிஞிலியின் - வளைந்த குழையினை அணிந்த அன்னி மிஞிலி என்பாளைப் போல, இயலும் - களிப்புற்று நடக்கும், நின் நல தகுவியை - நின் நலத்திற்குத் தக்காளாய பரத்தையை, முயங்கிய மார்பு - தழுவிய மார்பினை, தொடுகலம் - தீண்டேம், குறுக வாரல் - எம்மை அணுக வாரற்க.

(முடிபு) ஊர! அன்னி மிஞிலியின் இயலும் நின்நலத் தகுவியை முயங்கிய மார்பினைத் தொடுகலம்; குறுகவாரல்;

வேட்டம் மறந்து துஞ்சும்கொழுநர்க்குப் பாட்டி அமலை வெஞ்சோறு பிரம்பின் கனிபெய்து வைகறை இடூஉம் ஊர என்க.

(வி - ரை.) நொடுத்து - விற்று. பாட்டி - பாண்மகள்; பாணன் மனைவி. பாட்டியர் எனப் பன்மையாகக் கொள்க. விடியல் வைகறை - விடியற்கு முன்னர்த்தாகிய வைகறை என்பர். நச்.[1] தப்பல் - தப்பற்கு என நான்கனுருபு விரிக்க. கோசர் என்பார், தன் தந்தையை அருளின்றிக் கண்களைந்தமையின், அன்னி மிஞிலி என்பாள் சினம் கொண்டு, குறும்பியன் திதியன் என்பவர்களால், அக் கோசரைக் கொல்வித்து மாறுபாடு தீர்ந்து களிப்புற்றாள் என்பது, [2]'வாய்மொழித் தந்தையைக் கண்களைந் தருளாது, ஊர்முது கோசர் நவைத்த சிறுமையிற், கலத்து முண்ணாள் வாலிதும் உடாஅள், சினத்திற் கொண்ட படிவம் மாறாள், மறங்கெழு தானைக் கொற்றக் குறும்பியன், செருவியல் நன்மான் திதியற் குரைத்தவர், இன்னுயிர் செகுப்பக் கண்டுசின மாறிய, அன்னி மிஞிலி' என்பதனாற் போதரும். கொன்று - கொல்வித்து எனப் பிறவினையாகக் கொள்க. இங்ஙனம் நிகழ்ந்தது அழுந்தூரில் என்பது, திதியன் அழுந்தை என்பதனாற் பெறும். நின் பிரிவால் யானும் இற்பரத்தை முதலாயினாரும் வருந்தும்படி செய்து, சேரிப் பரத்தையானவள் பெருமிதங் கொண்டிருக்கின்றாள் என்பாள், அன்னி மிஞிலியின் இயலும் நின்னலத் தகுவியை எனத் தலைமகள் கூறினாள். நின் நலத்தை நுகர்வதற்குத் தக்கவளாகிய அப் பரத்தையை முயங்கிய மார்பை யாம் தீண்டுதலும்

1. தொல், அகத். அ. 2, அகம். உகஉ.

தகாதென்பாள் தொடுகலம் என்றும், குறுக வாரல் என்றும் கூறி னள்.

(உ-றை.) வராஅற் கொழுங்குறை நொடுத்து உண்டு ஆடி வேட் டம் மறந்து துஞ்சும் கொழுநர்க்குப் பாட்டியர் அமலை வெஞ்சோறு வைகறை இடூஉம் ஊர என்றது, தலைவன் இரவெல்லாம் பரத்தைக்குத் தன் மார்பினை நல்கி அவள் தரும் இன்பத்தை நுகர்ந்து, தலைவியை மறந்தொழுகி, விடியலில் தலைவியை நினைந்து வருகின்றான் என்றபடி.

---

## 197. பாலை

[பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.]

மாமலர் வண்ணம் இழந்த கண்ணும்
பூநெகிழ் அணையிற் சாஅய தோளும்
நன்னர் மாக்கள் விழைவனர் ஆய்ந்த
தொன்னலம் இழந்த துயரமொ டென்னதூஉம்
௫ இனையல் வாழி தோழி முனையெழ
[1]முன்னுவர் ஓட்டிய முரண்மிகு திருவின்
[2]மறமிகு தானைக் கண்ணன் எழினி
[3]தேமுது குன்றம் இறந்தன ராயினும்
நீடலர் யாழநின் நிரைவளை நெகிழத்
௧0 தோடாழ் பிருளிய குவையிருங் கூந்தல்
மடவோட் டழீஇய விறலோன் மார்பிற்
புன்றலைப் புதல்வன் ஊர்பிழிந் தாங்குக்
கடுஞ்சூல் மடப்பிடி தழீஇய வெண்கோட்
டினஞ்சால் வேழங் கன்றூர் பிழிதரப்
௧௫ பள்ளி கொள்ளும் பனிச்சுரம் நீந்தி
ஒள்ளிணர்க் கொன்றை ஓங்குமலை யத்தம்
வினைவலி யுறூஉம் நெஞ்சமொ
டினைய ராகிநப் பிரிந்திசி னோரே.

—மாமூலனார்.

(சொ - ள்.) ௧—௫. தோழி—, வாழி—, மாமலர் வண்ணம் இழந்த கண்ணும் - கரிய குவளை மலரின் அழகினை இழந்த கண் களும், பூ நெகிழ் அணையில் சாஅய தோளும் - அழகு நெகிழ்ந்து திரைந்த அணைபோன்ற மெலிந்த தோள்களும் (கொண்டு), நன்னர் மாக்கள் விழைவனர் ஆய்ந்த தொல் நலம் இழந்த துயரமொடு, நன்மையுடைய ஆய மக்கள் விரும்பி ஆராயும் பழைய நலத்தினை இழந்ததனாலாய துயரத்துடன், என்னதூஉம் இனையல் - சிறிதும் வருந்தாதே ;

---

(பாடம்) 1. முன்னூநர். 2. மாமிகு. 3. தேமுதிர் குன்ற.

௧0—௭. தோள் தாழ்பு இருளிய குவை இரு கூந்தல் - தோள்களில் தாழ்ந்து இருண்ட திரண்ட பெரிய கூந்தலையுடைய, மடவோள் தழீஇய விறலோன் மார்பில் - மடப்பத்தையுடைய மனைவியைத் தழுவியுள்ள மேம்பட்ட தலைவன் மார்பில், புன்தலைப் புதல்வன் ஊர்பு இழிந்தாங்கு - புல்லிய தலையினையுடைய புதல்வன் ஏறி இறங்குவது போன்று, கடு சூல் மடப்பிடி தழீஇய வெண்கோட்டு இனம் சால் வேழம் - நிறைந்த சூலினையுடைய இளைய பிடியினைத் தழுவிக்கிடந்த வெள்ளிய கோட்டினையுடைய இனத்துடன் கூடிய களிறு, கன்று ஊர்பு இழிதர - கன்று தம்மீது ஏறி இறங்க, பள்ளி கொள்ளும் பனிச்சுரம் நீந்தி - படுத்திருக்கும் நடுக்கத்தினைத்தரும் சுரநெறியைக் கடந்து, ஒள் இணர்க் கொன்றை ஓங்கு மலை அத்தம்- ஒள்ளிய பூங்கொத்துக்களையுடைய கொன்றை மரங்களையுடைய ஓங்கிய மலையையடுத்த நெறியில், வினை வலி யுறாஉம் நெஞ்சமொடு - பொருளீட்டும் வினையை வற்புறுக்கும் நெஞ்சத்தால்,

௧. நின் நிரைவளை நெகிழ - நினது நிரைத்த வளைகள் நெகிழும்படி,

௧௮. இனையர் ஆகி நப் பிரிந்திசினோர் - இங்ஙனம் அருளிலராகி நம்மைப் பிரிந்து சென்ற தலைவர்,

௫—௧. முனைஎழ முன்னுவர் ஓட்டிய - போர் செய்ய முற்பட்டோரை ஓட்டிய, முரண்மிகு திருவின் - வலிமிக்க வீரச் செல்வத்தினையும், மறமிகு தானை - வீரமிக்க படையினையுமுடைய, கண்ணன் எழினி - கண்ணன் எழினி என்பானது, தேம் முதுகுன்றம் இறந்தனராயினும் - தேன்மிக்க முதுகுன்றத்தினைக் கடந்துளாராயினும், நீடலர் - நீட்டித்திராது வல்லே வந்துறுவர்.

(முடிபு) தோழி ! வாழி ! தொன்னலமிழந்த துயரமொடு இனையல்; பனிச்சுரம் நீந்தி, ஓங்குமலை யத்தம் வினை வலியுறாஉம் நெஞ்சமொடு, நின் நிரைவளை நெகிழ இனையராகி நப் பிரிந்திசினோர், கண்ணன் எழினி முதுகுன்றம் இறந்தனராயினும் நீடலர்.

(வி - ரை.) பூநெகிழ் அணை - நெகிழ்ச்சியுற்ற மலரணை என்றுமாம். அணை - தலையணை. கண்ணும் தோளும் கொண்டு என ஒரு சொல் வருவித்துரைக்க. விழைவனர் ஆய்ந்த என்றது, தலைவியின் நலத்தை ஆராய்தல் அவர்க்கு ஓர் விளையாட்டு என்றபடி. யாழ, அசை. மடப்பிடிக்கு மடவோளும் அதனைத் தழுவிய வேழத்திற்கு விறலோனும் அதன்மீது ஏறி இறங்கும் கன்றுக்குப் புதல்வனும் உவமம். கடுஞ்சூல் மடப்பிடி என்றமையால் சூலுற்ற மடவோள் என்று கொள்க. கடுஞ்சூல் முதற் சூலுமாம்.

---

## 198. குறிஞ்சி

[புணர்ந்து நீங்கிய தலைமகளது போக்கு நோக்கிய தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]

கூறுவங் கொல்லோ கூறலங் கொல்லெனக்
கரந்த காமங் கைந்நிறுக் கல்லாது
நயந்துநாம் விட்ட நன்மொழி நம்பி
அரைநாள் யாமத்து விழுமழை கரந்து
௫ [1]கார்விரை கமழுங் கூந்தற் றூவினை
நுண்ணூல் ஆகம் பொருந்தினள் வெற்பின்
[2]இளமழை சூழ்ந்த மடமயில் போல
வண்டுவழிப் படரத் தண்மலர் வேய்ந்து
வில்வகுப் புற்ற நல்வாங்கு குடச்சூல்
௧0 அஞ்சிலம் பொடுக்கி அஞ்சினள் வந்து
துஞ்சூர் யாமத்து முயங்கினள் பெயர்வோள்
ஆன்ற கற்பிற் சான்ற [3]பெரிய
அம்மா அரிவையோ அல்லள் தெறுஅது
ஆஅய் நன்னாட் டணங்குடைச் சிலம்பிற்
௧௫ கவிரம் பெயரிய உருகெழு கவாஅன்
நேர்மலர் நிறைசுனை யுறையுஞ்
சூர்மகள் மாதோ என்னுமென் னெஞ்சே.

—பரணர்.

(சொ - ள்.) ௧எ. என் நெஞ்சே-,

௧—௧௧. கரந்த காமம் - நம்முள் மறைந்துறையும் காமத்தினை, கூறுவம் கொல்லோ கூறலம் கொல் என - இவட்குக் கூறுவேமோ அன்றிக் கூறாது விடுவேமோ என்று இங்ஙனம் எண்ணி எண்ணி, கை நிறுக்கல்லாது - (முடிவில்) அடக்க இயலாது, நயந்து நாம் விட்ட நன்மொழி நம்பி - விரும்பி நாம் வெளியிட்டிரந்த இனிய மொழியை விரும்பி, அரை நாள் யாமத்து - பாதியிரவில், விழுமழை கரந்து - பெய்யும் மிக்க மழையில் மறைந்து, கார் விரை கமழும் கூந்தல் - கார்காலத்து மணம் கமழும் கூந்தலுடன், தூவினை நுண் நூல் ஆகம் பொருந்தினள் - தூய தொழிற்பாடமைந்த நுண்ணிய நூலாலாகிய ஆடை தன் உடம்பின்கண்ணே பொருந்தப் பெற்றவளாய், வெற்பின் இளமழை சூழ்ந்த மடமயில்போல - மலையிடத்துள்ள இள முகில் சூழ்ந்த மடப்பத்தையுடைய மயில்போல, வண்டுவழிப் படர தண் மலர் வேய்ந்து - வண்டுகள் பின்னே தொடரக் குளிர்ந்த மலர்களைச் சூடி, வில் வகுப்பு உற்ற நல்வாங்கு குடச்சூல் - வில்லினைப்போலும் வகையமைந்த நன்மைபொருந்திய குடச்சூல் ஆகிய, அம் சிலம்பு ஒடுக்கி - அழகிய சிலம்பினை ஒலியாது அடக்கி, அஞ்சினள் வந்து - அச்சத்துடன் வந்து, ஊர் துஞ்சு யாமத்து - ஊர்

(பாடம்) 1. கார்மலா கமழும். 2. இளமழை. 3. பெரியள் அம்மா.

முழுதும் துயிலும் யாமத்திலே, முயங்கினள் பெயர்வோள் - நம்மைத் தழுவி மீள்வோள்,

கஉ—ரு. ஆன்ற கற்பில் சான்ற பெரிய அம் மா அரிவையோ அல்லள் - நிறைந்த கற்பினால் உயர்ந்த பெருமையுற்ற அழகிய மாமை நிறமுடைய பெண்ணோ அல்லள்;

க௬—எ. தெனாஅது ஆஅய் நல்நாட்டு அணங்கு உடை சிலம்பில் - தெற்கின்கண் உள்ளதாகிய ஆய் என்பானது நல்ல நாட்டில் தெய்வத்தையுடைய மலையில், கவிரம் பெயரிய உருகெழு கவான் - கவிரம் எனும் பெயரையுடைய அச்சம் பொருந்திய பக்கமலையில், நேர் மலர் நிறை சுனை உறையும் - மெல்லிய மலர்களையுடைய நிறைந்த சுனையில் உறையும், சூர் மகள் என்னும் - சூரரமகளோ யாவள் என்பேம்.

(முடிபு) என் நெஞ்சே! நாம் விட்ட நன்மொழி நம்பி, தண் மலர் வேய்ந்து அஞ்சிலம் பொடுக்கி, மடமயில்போல அஞ்சினள் வந்து யாமத்து முயங்கினள் பெயர்வோள் அரிவையோ அல்லள்; சுனையுறையும் சூர்மகள் என்னும்.

(வி - ரை.) கூந்தலும் நுண்ணூலாடையும், உடம்பின் பின்னும் முன்னும் பொருந்தியுள்ள தலைவியின் தோற்றம் இளமேகம் சூழ்ந்த மயில்போல்வதாயிற் றென்க. குடச்சூல் - குலுற்றதுபோல் புடைபட்டிருக்கும் சிலம்பு. குடச்சூல் ஆகிய சிலம்பு என இருபெயரொட்டாகக் கொள்க. குடைச்சூல் எனப் பாடங் கொள்ளலுமாம்; [1]'பசும் பொற் குடைச்சூற் சித்திரச் சிலம்பு' என்பது காண்க. வெளிப்பாட்டிற்கு அஞ்சிக் கரந்து சிலம்பொடுக்கி ஊர் துஞ்சு யாமத்து வந்து முயங்கிப் பெயர்வாள் ஆயினள்; அங்ஙனம் வந்து செல்வோளை ஓர் அரிவையென்று கூறுதற்கு எளியள் அல்லள்; ஆகலின் அவளைச் சுனையுறையும் தெய்வம் என்பேம்; என்று தலைவன் தன் நெஞ்சிற்கு வியந்து கூறினான் என்க. துஞ்சு ஊர் யாமம் என்பதனை ஊர்துஞ்சு யாமம் என மாறுக. ஏர் மலர் எனக்கொண்டு அழகிய மலர் என்றலுமாம். என்னும் - என்பேம் என்னும் பொருட்டு.

(மே - ள்) [2]'பண்பிற் பெயர்ப்பினும்' என்னுஞ் சூத்திரத்து இச் செய்யுளைக் காட்டி, இது இரவுக் குறிக்கண் அலட்பெற்று மலிந்தது என்றும், [3]'இரவுக்குறியே யில்லகத்துள்ளும், மனையோர் கிளவி கேட்கும் வழியதுவே' என்னுஞ் சூத்திரத்து, 'அஞ்சிலம்பொடுக்கி யஞ்சினள் வந்து, துஞ்சூர் யாமத்து முயங்கினள் பெயர்வோள்' என வருவது 'மனையோர் கிளவி கேட்கும் வழியது' என்றும் கூறினர் நச்.

---

1. சிலப. க௬ : கக௮—ககக. 2. தொல். கள. கஉ. 3. தொல். கள. ௪0.

## 199. பாலை

[பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.]

கரைபாய் வெண்டிரை கடுப்பப் பலவுடன்
நிரைகால் ஒற்றலிற் கல்சேர் புதிரும்
வரைசேர் மராஅத் தூழ்மலர் பெயல்செத்து
உயங்கல் யானை நீர்நசைக் கலமரச்
௫ சிலம்பி வலந்த வறுஞ்சினை வற்றல்
அலங்கல் உலவை அரிநிழல் அசைஇத்
திரங்குமரற் கவ்விய கையறு [1]தொகுநிலை
அரந்தின் ஊசித் திரணுதி யன்ன
இன்னிலை எயிற்ற செந்நா யெடுத்தலின்
௧௦ வளிமுனைப் பூளையின் [2]ஒய்யென் றலறிய
கெடுமான் இனநிரை [3]தரீஇய கலையே
கதிர்மாய் மாலை ஆண்குரல் விளிக்குங்
கடல்போற் கானம் பிற்படப் பிறர்போற்
செல்வேம் ஆயினெஞ் செலவுநன் றென்னும்
௧௫ ஆசை யுள்ளம் அசைவின்று துரப்ப
நீசெலற் குரியை நெஞ்சே வேய்போல்
நடையின மன்னுந் தண்ணிய திரண்ட
பெருந்தோள் அரிவை ஒழியக் குடாஅ
திரும்பொன் வாகைப் பெருந்துறைச் செருவிற்
௨௦ பொலம்பூண் நன்னன் [4]பொருதுகளத் தொழிய
வலம்படு கொற்றந் தந்த வாய்வாட்
களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்
இழந்த நாடுதந் தன்ன
வளம்பெரிது பெறினும் வாரலெ னியானே.

—கல்லாடனார்

(சொ - ள்.) ௧௬. நெஞ்சே-,

௧—௧௩. கரைபாய் வெண்திரை கடுப்ப - கரைக்கண்ணே பாயும் வெள்ளிய அலையை ஒப்ப, நிரை கால் ஒற்றலின் - வரிசையாக வரும் காற்று மோதுதலின், பல உடன் சேர்பு கல் உதிரும் - பலவும் ஒருங்கே சேர்ந்து பாறையில் உதிர்கின்ற, வரை சேர் மராஅத்து ஊழ்மலர் - மலையின்கண் பொருந்திய வெண்கடம்பின் முற்றிய மலரை, பெயல் செத்து - மழையென்று கருதி, உயங்கல் யானை நீர் நசைக்கு அலமர - நீர் வேட்கையால் வருந்துதலையுடைய யானை அதனைத் தணித்தற்குச் சென்று சுழல, சிலம்பி வலந்த வறுசினை வற்றல் - சிலம்பி நூல் பின்னப்பெற்ற வறிய சினையினையுடைய வற்றல் ஆகிய, அலங்கல் உலவை அரி நிழல் அசைஇ - அசைகின்ற மரங்

---

(பாடம்) 1. தொகை நிலை. 2. ஒய்யென வலறிய. 3. தேரிய. 4. பொரு களத் தொழிய.

களின் அறல்பட்ட நிழலில் தங்கி, திரங்கு மரல் கவ்விய கையறு தொகுநிலை - வாடிய மரலைக் கவ்விய செயலற்ற கூட்டத்தில் (புகுந்து), அரம் தின் ஊசி திரள் நுதி அன்ன - அரத்தால் அராவப் பட்ட ஊசியின் திரண்ட முனையையொத்த, திண் நிலை எயிற்ற செந் நாய் எடுத்தலின் - உறுதி பொருந்திய பற்களையுடைய செந்நாய் தாக்குதலின், வளி முனைப் பூளையின் ஓய் என்று அலறிய - காற்றின் முன் பூளைப் பூவென விரைந்து அலறியோடிய, கெடுமான் இன நிரை தரீஇய - காணுதொழிந்த தன் இனமாய மான் கூட்டத்தைக் கூட்டற்கு, கலை - கலைமான், கதிர் மாய் மாலை - ஞாயிறு மறைந்த மாலைப்போழ்தில், ஆண் குரல் விளிக்கும் - தனது ஆண் குரல் தோன்ற அழைக்கும், கடல்போல் கானம் பிற்பட - கடல்போல் அகன்ற காடு பின்னே போக,

கஙு—கஸ. பிறர்போல் - ஏதிலரைப்போல, செல்வேம் ஆயின் எம் செலவு நன்று என்னும் - நம் தலைவியைப் பிரிந்து போவே மாயின் எமது போக்கு நன்றாகும் என்றெண்ணும், ஆசை உள்ளம் அசைவு இன்று துரப்ப - பொருளாசையுற்ற நின் உள்ளம் தளர்த லின்றிச் செலுத்த, நீ செலற்கு உரியை - நீ செல்லுதற்கு உரியை ஆவாய்;

கசு—உச. யானே - யானோ, வேய்போல் தடையின மண்ணும் - மூங்கிலைப்போல வளைந்தனவாகிப் பொருந்தும், தண்ணிய திரண்ட பெருதோள் அரிவை ஒழிய - குளிர்ந்த திரண்ட பெரிய தோளினை யுடைய நம் தலைவி (இவண் தனித்து) ஒழிய, வலம்படு கொற்றம் தந்த வாய்வாள் - வென்ற வெற்றியினைத் தந்த வாய்த்த வாளினை யுடைய, களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் - களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் என்னும் சேர மன்னன், குடாஅது இரும் பொன் வாகைப் பெருந்துறைச் செருவில் - மேற்கின் கண்ணதாகிய பெரிய பொன்னினையுடைய வாகை மரம் நிற்கும் பெருந்துறை என்னுமிடத்து நிகழ்ந்த போரில், பொலம்பூண் நன்னன் - பொற் பூண் அணிந்த நன்னன் என்பவன், பொருது களத்து ஒழிய - போர் செய்து களத்தில் மடிய, இழந்த நாடு தந்தன்ன — தான் முன்பு இழந்த நாட்டைப் பெற்றாலொத்த, வளம் பெரிது பெறினும் - பெரிய செல்வத்தைப் பெறுவதாயினும், வாரலென் - வருவேன் அல்லேன்.

(முடிபு) நெஞ்சே! பிறர்போல் (தலைவியைப் பிரிந்து) செல்வேமாயின் எம் செலவு நன்றென்னும் ஆசையுள்ளம் துரப்ப, கடல்போற் கானம் பிற்பட நீ செலற்குரியை; யான் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் வாகைப் பெருந் துறைச் செருவில் நன்னனுனவன் பொருது களத்து ஒழிந்தமையால், தான் இழந்த நாடு தந்தன்ன வளம் பெரிது பெறினும் பெருந்தோள் அரிவை ஒழிய வாரலென்.

(வி - ரை.) நிரை நிரையாக மராமரத்தின் மேற்பாய்ந்து கலக் கும் காற்றிற்கு முறை முறையாகக் கரையிற் பாயும் திரை உவமை யாகும். மராஅத்து உதிரும் மலர் எனக் கூட்டுக. நீர் நசைக்கு - நீர்

நசையால். வறுஞ்சினை - தழையற்ற கிளை. வற்றல் - வற்றிய மரங்கள். உலவை - மரச்செறிவு. காட்டின் விரிவு தோன்றக் கடல் போற் கானம் என்றார். அன்புடையார் பிரியக் கருதாராகலின் பிறர்போற் செல்வேமாயின் என்றான். பிறர்போல் நீ செலற்கு உரியை என்று இயைத்துரைத்தலுமாம். வாகை மரம் நிற்றலின் பெருந்துறையானது வாகைப் பறந்தலை எனவும் படும்; இவ்வாகை யானது நன்னன் காவல் மரம் என்பதும், அதனை நார்முடிச்சேரல் தடிந்தான் என்பதும், [1]'பொன்னங் கண்ணிப் பொலந்தேர் நன்னன், சுடர்வீ வாகைக் கடிமுதல் தடிந்த, தார்மிகு மைந்தின் நார்முடிச் சேரல்' என்பதனால் அறியப்படும். [2]'உருள்பூங் கடம்பின் பெரு வாயில் நன்னனை, நிலைச்செருவி னாற்றலை யறுத்தவன், பொன்படு வாகை முழுமுத றடிந்து' என்பதனால் கடம்பின் பெருவாயில் என் பதும் வாகைப் பெருந்துறை என்பதும் ஓரிடத்தையே குறிப்பன போலும். கடம்பின் பெருவாயில் நன்னன் ஊர் என்பர் பதிற்றுப் பத்து உரையாசிரியர். களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் என் னும் பெயர்க்குக் காரணம் கூறுவாராய்ப் பதிற்றுப்பத்து உரையா சிரியர் [3]'களங்காய்க்கண்ணி நார்முடி என்றது, களங்காயாற் செய்த கண்ணியும் நாராற் செய்த முடியும் என்றவாறு' எனவும், 'தான் முடி சூடுகின்ற காலத்து ஒரு காரணத்தால் முடித்தற்குத் தக்க கண்ணியும் முடியும் உதவாமையிற் களங்காயாற் கண்ணியும் நாரால் முடியும் செய்துகொள்ளப்பட்டன என்றவாறு' எனவும் உரைத் தார். இழந்தநாடு தந்தன்ன என்றதனால், முன் நன்னன்பால் இழந்த நாட்டை மீளப் பெற்றனன் என்பது போதரும். நாடு தந்தன்ன வளம் என்றிருப்பினும் தந்த நாடு போலும் வளம் என்பது கருத் தாகக் கொள்க.

(மே - ள்.) [4]'செலவிடை யழுங்கல் செல்லாமை யன்றே' என்னுஞ் சூத்திரத்து, 'களங்காய்க்கண்ணி . . . வாரலெ னியானே' என்னும் அடி களைக் காட்டி, இவை வன்புறை குறித்துச் செலவழுங்குதலின் பாலையா யிற்று என்றார் நச்.

---

## 200. நெய்தல்

[தலைமகள் குறிப்பறிந்த தோழி தலைமகற்குக் குறை நயப்பக் கூறியது.]

நிலாவின் இலங்கு மணன்மலி மறுகிற்
புலாலஞ் சேரிப் புல்வேய் குரம்பை
ஊரென வுணராச் சிறுமையொடு நீருடுத்
தின்னா வுறையுட் டாயினும் இன்பம்
௫ ஒருநா ளுறைந்திசி னோர்க்கும் வழிநாள்
தம்பதி மறக்கும் பண்பின் எம்பதி

---

1. பதிற்று. ௪0: கச—கூ. 2. பதிற்று. ௪-ஆம் பத்து, பதிகம்: எ—௯.
3. பதிற்று. ௩அ: ௪. 4. தொல். கற். ௪௪.

வந்தனை சென்மோ வளைமேய் பரப்ப
பொம்மற் படுதிரை கம்மென உடைதரும்
மரனோங் கொருசிறைப் பலபா ராட்டி
கூ எல்லை யெம்மொடு கழிப்பி எல்லுற
நற்றேர் பூட்டலும் உரியிர் அற்றன்று
சேர்ந்தனிர் செல்குவி ராயின் யாமும்
எம்வரை அளவையிற் பெட்குவம்
நும்மொப் பதுவோ உரைத்திசின் எமக்கே.

—[1]உலோச்சனார்.

(சொ - ள்.) எ. வளைமேய் பரப்ப - சங்குகள் மேயும் கடற்பரப்பினையுடைய தலைவனே!

க—எ. நிலாவின் இலங்கு மணல் மலி மறுகின் - நிலாவைப் போல விளங்கும் மணல் மிக்க தெருவிலுள்ள, புல்வேய் குரம்பை - புல்லால் வேயப்பெற்ற குடிசைகளையுடைய, புலால் அம் சேரி - புலால் நாறும் சேரியாய எம்பதி, ஊர் என உணராச் சிறுமையொடு - ஓர் ஊர் என்று உணரலாகாத சிறுமையினதாய், நீர் உடுத்து - நீர் சூழப்பெற்று, இன்னா உறையுட்டு ஆயினும் - பொலிவற்ற உறையுளையுடையதாயினும், இன்பம் - இன்பம் தருமாற்றால், ஒரு நாள் உறைந்திசினோர்க்கும் - ஒருநாள் தங்கியிருந்தார்க்கும், வழி நாள் - பிற்றை நாள், தம் பதி மறக்கும் பண்பின் - தம்முடைய பதியினையே மறந்திடச் செய்யும் பண்பினையுடைமையால், எம் பதி - எமது அப்பதிக்கு, வந்தனை சென்மோ - வந்து செல்வாயாக;

அ—கக. பொம்மல் படுதிரை கம் என உடைதரும் - பொலிவுற்ற ஒலிக்கும் அலை விரைந்து சிதர்ந்திடும், மரன் ஓங்கு ஒரு சிறை - மரம் ஓங்கிய ஒரு பக்கத்தே, பல பாராட்டி - பலவாய நின் குணங்களை யாங்கள் பாராட்ட, எல்லை எம்மொடு கழிப்பி - பகற்பொழுதினை எம்முடனிருந்து கழித்து, எல் உற - இரவு உறுங்கால், நல்தேர் பூட்டலும் உரியிர் - நுமது நல்ல தேரினைப் பூட்டிச் செல்லுதற்கும் உரியிராவிர்; அற்றன்று - அதுவேயுமன்றி, சேர்ந்தனிர் செல்குவிர் ஆயின் - இரவில் எம் பதியிற் றங்கிச் செல்லுவீராயின், யாமும் எம்வரை அளவையில் பெட்குவம் - யாங்களும் எங்களுக்கு இயன்ற அளவில் பேணுதல் செய்வேம்; நும் ஒப்பதுவோ - (இது) நும் கருத்திற்கிசைவதாமோ, எமக்கு உரைத்திசின் - எமக்குக் கூறுவீராக.

(முடிபு) எம் சேரி இன்னா உறையுட்டாயினும் இன்பம் ஒருநாள் உறைந்திசினோர்க்கும் வழிநாள் தம்பதி மறக்கும் பண்பினையுடைமையால், எம் பதி வந்தனை சென்மோ; எல்லை எம்மொடு கழிப்பி எல்லுற நற்றேர் பூட்டலு முரியிர்; அற்றன்று, சேர்ந்தனிர் செல்குவிர் ஆயின் யாமும் எம் வரை அளவையிற் பெட்குவம்; நும் ஒப்பதுவோ எமக்கு உரைத்திசின்.

(பாடம்) 1. நக்கீரர்.

(வி - ரை.) புல்வேய் குரம்பை : புல் - பனைமட்டை முதலியன. புலால் நாறுதலானும், புல்வேய் குரம்பை யுடைமையானும், நீர் உடுத்தலானும், சேரி இன்ன உறையுட்டாயிற்று. அன்னதாயினும் அன்புடையாருடன் கூடி நுகரும் இன்பம் பெரிதுடையது என்பாள், 'இன்பம், ஒருநாள் உறைந்திசினோர்க்கும் வழிநாள், தம் பதி மறக்கும் பண்பின் எம் பதி' என்றாள். ஒருநாள் உறைந்திசினோர்க்கும் என்பதனால், பல நாள் உறைவார் பெறும் இன்பம் கூறவேண்டாதாயிற்று. பாராட்டி - பாராட்ட எனத் திரிக்க. நற்றேர் பூட்டலும் என்றது அதன் காரியமாகிய செல்கையை உணர்த்திற்று. அற்றன்று - அஃதன்றி. வந்து செல்லுதல் என்னும் பொதுமை கருதி, இரண்டினையும் ஒப்பதுவோ என ஒருமையாற் கூறினாள்.

---

## 201. பாலை

[பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.]

அம்ம வாழி தோழி பொன்னின்
அவிரெழில் நுடங்கும் அணிகிள ரோடை
வினைநவில் யானை விறற்போர்ப் பாண்டியன்
புகழ்மலி சிறப்பிற் கொற்கை முன்றுறை
௫ அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து
தழையணிப் பொலிந்த கோடேந் தல்குற்
பழையர் மகளிர் பனித்துறை பரவப்
பகலோன் மறைந்த அந்தி யாரிடை
உருகெழு பெருங்கடல் உவவுக் கிளர்ந்தாங்
௧௦ கலரும் மன்றுபட் டன்றே அன்னையும்
பொருந்தாக் கண்ணள் வெய்ய வுயிர்க்குமென்
றெவன்கை யற்றனை இகுளை சோழர்
வெண்ணெல் வைப்பின் நன்னாடு பெறினும்
ஆண்டமைந் துறைநர் அல்லர் முனாஅது
௧௫ வான்புகு தலைய குன்றத்துக் கவாஅன்
பெருங்கை எண்கின் பேழ்வாய் ஏற்றை
இருள்துணிந் தன்ன குவவுமயிர்க் குருளை
தோன்முலைப் பிணவொடு திளைக்கும்
வேனில் நீடிய சுரனிறந் தோரே.

—மாமூலனார்.

(சொ - ள்.) ௧—௧௨. தோழி—, வாழி—, அம்ம - நான் கூறுவதனைக் கேட்பாயாக; பொன்னின் அவிர் எழில் நுடங்கும் - பொன்னினாலாகிய விட்டு விளங்கும் அழகிய ஒளி அசையும், அணி கிளர் ஓடை - அழகுமிக்க நெற்றிப் பட்டத்தினையுடைய, வினை நவில் யானை - போர்ச் செயலிற் பயின்ற யானைகளையுடைய, விறல்

போர்ப் பாண்டியன் - போரில் வெற்றிகொள்ளும் பாண்டியனது, புகழ்மலி சிறப்பின் கொற்கை முன் துறை - புகழ்மிக்க சிறப்பினை யுடைய கொற்கைப் பதியின் கடற்றுறையிலே, அவிர் கதிர் முத்த மொடு வலம்புரி சொரிந்து - விளங்கும் ஒளியினையுடைய முத்துக்க ளுடன் வலம்புரிச் சங்கினையும் சொரிந்து, தழை அணிப் பொலிந்த கோடு ஏந்து அல்குல் பழையர் மகளிர் - தழையுடை அணிதலாற் பொலிவுற்ற பக்கம் உயர்ந்த அல்குலினையுடைய பழையரது பெண் டிர், பனித்துறை பரவ - குளிர்ந்த துறைக்கண் தெய்வத்தினைப் பரவா நிற்க, பகலோன் மறைந்த அந்தி ஆர் இடை - ஞாயிறு மறைந்த அந்தியாகிய அரிய போழ்திலே, உருகெழு பெருங்கடல் உவவுக் கிளர்ந்தாங்கு - அச்சம் பொருந்திய பெரிய கடலானது நிறை மதிநாளில் ஆரவாரித்தெழுந்தாற்போல, அலரும் மன்று பட்டன்று - (ஊரார் கூறும்) அலரும் மன்றின்கண் பரவியது, அன்னையும் பொருந் தாக் கண்ணள் வெய்ய உயிர்க்கும் - தாயும் கண் துயிலாளாய் வெம்மை யுடையனவாக மூச்செறியும், என்று - என்று இங்ஙனம் கூறி, எவன் கையற்றனை - ஏன் செயலற்றனை ?

கஉ. இகுளை - தோழியே !

கச—கூ. முனைஅது - பழையதாகிய, வான் புகு தலைய குன்றத் துக் கவாஅன் - வானில் ஓங்கிய உச்சியினையுடைய மலையின் சாரற் கண்ணே, பெருங்கை எண்கின் பேழ்வாய் ஏற்றை - பெரிய கையினை யும் பிளந்த வாயினையுமுடைய ஆண் கரடி, இருள் துணிந்தன்ன குவவு மயிர்க் குருளை - இருளைத் துணித்து வைத்தாற் போன்ற திரண்ட மயிரினையுடைய குட்டியுடனும், தோல் முலைப் பிணவொடு - திரங்கிய முலையினையுடைய பெண் கரடியுடனும், திளைக்கும் - மகிழ்ந்திருக்கும், வேனில் நீடிய சுரன் இறந்தோர் - வெம்மை மிக்க பாலை நிலத்தைக் கடந்து சென்ற நம் தலைவர்,

கஉ—௪. சோழர் வெண்நெல் வைப்பின் நல்நாடு பெறினும் - சோழ மன்னரது வெண்ணெல் விளையும் ஊர்களையுடைய நல்ல நாட்டினையே பெறுவதாயினும், ஆண்டு அமைந்து உறைநர் அல்லர் - அங்கே மனமுவந்து தங்கிவிடுவா ரல்லர்.

(முடிபு) தோழி ! வாழி ! அம்ம ; 'பெருங்கடல் உவவுக் கிளர்ந்தாங்கு அலரும் மன்று பட்டன்று ; அன்னையும் வெய்ய உயிர்க்கும்' என்று எவன் கையற் றனை ; இகுளை ! சுரனிறந்தோர், சோழர் நன்னாடு பெறினும், ஆண்டு அமைந்து உறைநர் அல்லர்.

(வி - ரை.) முத்தமொடு வலம்புரி சொரிந்து என்றமையால், அவற்றைப் பெறுதற்கிடனாகிய கொற்கைத் துறையின் சிறப்புக் கூறியவாறாயிற்று. பழையர் - நெய்தல் நில மாக்கள்; கள் விற்ப வர். பழையர் மகளிர் உவாநாளிலே முத்தையும் வலம்புரியையுஞ் சொரிந்து கடற் றெய்வத்தைப் பரவுவாரென்க. உவா நாளிற் கடல் பொங்கி எழுமாகலின் பெருங்கடல் உவவுக் கிளர்ந்தாங்கு என்றார். உவவு : குறியதன் இறுதிச் சினை கெட்டு உகரம் பெற்று முடிந்தது. அலரும், அன்னையும் எச்சவும்மைகள். சோழரது நன்னாடுபோலும்

பொருளை ஆண்டுப் பெறுவதாயினும் என்பது கருத்தாகக்கொள்க. எண்கின் ஏற்றை குருளையொடும் பிணவொடும் திளைக்கும் என்றது, அன்புறு தகுநவாகிய அவற்றைக் கண்டு, தலைவர் விரைவில் மீள்வர் என்று குறித்தவாறுகும்.

---

## 202. குறிஞ்சி

[இரவுக் குறிக்கண் வந்து நீங்கும் தலைமகற்குத் தோழி சொல்லி வரைவு கடாயது.]

வயங்குவெள் ளருவிய குன்றத்துக் கவாஅன்
கயந்தலை மடப்பிடி இனனே மார்ப்பப்
புலிப்பகை வென்ற புண்கூர் யானை
கல்லகச் சிலம்பிற் கையெடுத் துயிர்ப்பின்
௫ நல்லிணர் வேங்கை நறுவீ, கொல்லன்
குருகூது மிதியுலைப் பிதிர்விற் பொங்கிச்
சிறுபன் மின்மினி போலப் பலவுடன்
மணிநிற இரும்புதற் றூவு நாட
யாமே யன்றியும் உளர்கொல் பானாள்
௧0 உத்தி யரவின் பைத்தலை துமிய
உரவுரு முரறும் உட்குவரு நனந்தலைத்
தவிர்வி லுள்ளமொ டெஃகு துணையாகக்
கனையிருள் பரந்த கல்லதர்ச் சிறுநெறி
தேராது வரூஉம் நின்வயின்
௧௫ ஆரஞர் அரும்படர் நீந்து வோரே.

—[1]ஆவூர் கிழார் மகனார் கண்ணனார்.

(சொ - ள்.) ௧—அ. வயங்கு வெள் அருவிய குன்றத்து கவான் - விளங்கும் வெள்ளிய அருவியினையுடைய மலையின் சாரற்கண்ணே, கயம் தலை மடப்பிடி இனன் ஏம் ஆர்ப்ப - மெல்லிய தலையினையுடைய இளைய பிடி இனத்துடன் இன்பமடைய, புலி பகை வென்ற புண் கூர் யானை - புலியாகிய பகையைவென்ற புண் மிக்க ஆண் யானை, கல் அகச் சிலம்பில் கை எடுத்து உயிர்ப்பின் - கற்களை இடத்தே கொண்ட பக்க மலையில் கையை யுயர்த்திப் பெருமூச் செறிதலால், நல் இணர் வேங்கை நறுவீ - வேங்கை மரத்தினது நல்ல கொத்துக்களிலுள்ள நறுமணமுடைய பூக்கள், கொல்லன் குருகு ஊது மிதி உலைப் பிதிர்வில் பொங்கி—கொல்லன் துருத்தியை மிதித்து ஊதும் உலையிற் பிதிர்ந்து எழும் தீப்பொறி போலப் பொங்கி எழுந்து, சிறு பல் மின்மினி போல - சிறிய பலவாய மின்மினிப் பூச்சிகளைப்போல, பலவுடன் மணி நிற இரும் புதல் தாவும் - பலவும் ஒருங்கே நீல மணி

---

(பாடம்) 1 ஆவூர் கிழார் மள்ளனுகனார்.

யின் நிறத்தினை ஒத்த பெரிய புதரில் பரவி விழும், நாட - நாட்டை யுடைய தலைவனே !

கூ—கரு. பானாள் - நடு இரவில், அரவின் உத்தி பை தலை துமிய - பாம்பினது புள்ளிகளையுடைய படம் பொருந்திய தலை துணிபட, உரவு உரும் உரறும் உட்குவரு நனந்தலை - வலிய இடியானது முழங்கும் அச்சம் வரும் அகன்ற இடத்தே, தவிர்வு இல் உள்ளமொடு எஃகு துணையாக - ஊக்கம் குன்றுதலில்லாத உள்ளத்துடன் வேலே துணையாக, கனை இருள் பரந்த கல்அதர் சிறுநெறி - செறிந்த இருள் பரவிய கற்களையுடைய வழியாகிய ஒடுங்கிய நெறியில், தேராது வருஉம் நின்வயின் - ஏதத்தை ஆராயாது வரும் நின்னிடத்து, ஆர் அஞர் அரும்படர் நீந்துவோர் - பொறுத்தற்கரிய துன்பமாகிய அரிய நினைவினை நீந்துவோர், யாமே அன்றியும் உளர்கொல் - எம்மை யன்றிப் பிறரும் உளரோ.

(முடிபு) நாட ! சிறுநெறி தேராது வரும் நின்வயின், ஆர் அஞர் அரும்படர் நீந்துவோர் யாமே அன்றியும் உளரோ ?

யானை உயிர்ப்பின் வேங்கை நறுவீ பொங்கி மின்மினிபோலப் புதல் தாவும் நாட என்க.

(வி - ரை.) உயிர்ப்பின் - உயிர்த்தலால். பிதிர்வு - பிதிர்கின்ற இப்பொறி. படர் - துயர் நினைவு. நீந்துவோர் என்றதனால் நினைவாகிய வெள்ளம் என்பது பெற்றும். நீ இரவுக்குறிக்கண் வருதலால் யாம் துன்புறுதல்போலத் துன்புறுவார் பிறர் இலர் என்பாள், நீந்துவோர் யாமே யன்றியும் உளர்கொல் என்றாள் ; அதனால், எமது துன்பம் நீங்க விரைவில் வரைந்து கொள்க என வரைவு கடாயினாளாம்.

(உ - றை.) புலிப்பகை வென்ற யானை யுயிர்ப்பின் வேங்கைவீ மின்மினிபோலப் புதல் தாவும் என்றது, தலைவன் இடையீட்டினைக் கடந்து இரவுக் குறிக்கண் வருதலால் ஊரெங்கும் அலர் எழுகின்றது என்றபடி.

---

## 203. பாலை

[மகட் போக்கிய [1]தாய் சொல்லியது.]

உவக்குந ளாயினும் உடலுந ளாயினும்
யாயறிந் துணர வென்னார் தீவாய்
அலர்வினை மேவல் அம்பற் பெண்டிர்
இன்னள் இனையளின் மகளெனப் பன்னாள்
ரு எனக்குவந் துரைப்பவுந் தனக்குரைப் பறியேன்
நாணுவள் இவளென நனிகரந் துறையும்
யானிவ் வறுமனை யொழியத் தானே
அன்னை யறியி னிவணுறை வாழ்க்கை
எனக்கெளி தாகல் இல்லெனக் கழற்கால்

(பாடம்) 1. செவிலி.

௧௦ மின்னொளிர் நெடுவேல் இளையோன் முன்னுறப்
பன்மலை யருஞ்சுரம் போகிய தனக்கியான்
அன்னேன் அன்மை நன்வா யாக
மானதர் மயங்கிய மலைமுதற் சிறுநெறி
வெய்திடை யுறாஅ தெய்தி முன்னர்ப்
௧௫ புல்லென் மாமலைப் புலம்புகொள் சீறூர்ச்
செல்விருந் தாற்றித் துச்சி லிருத்த
நுனைகுழைத் தலமரு நொச்சி
மனைகெழு பெண்டியா னாகுக மன்னே.

—கபிலர்.

(சொ - ள்) ௧—௫. உவக்குநள் ஆயினும் உடலுநள் ஆயினும் - உவப்பு அடைவாள் ஆயினும் மாறுபடுவாள் ஆயினும், யாய்அறிந்து உணர என்னார் - தாய் ஆய்ந்து உணர்க என்று கருதாராய், அலர் வினை மேவல் அம்பல் பெண்டிர் - கொடிய வாயால் அலர் கூறுந் தொழிலையே விரும்புதலுடைய புறங்கூறும் பெண்டிர்கள், நின்மகள் இன்னள் இனையள் என - நின் மகள் இன்ன தன்மையள் இனைய தன்மையள் என்று, பல் நாள் எனக்கு வந்து உரைப்பவும் - பல நாளும் என்பால் வந்து கூறவும்,

௫—எ. நாணுவள் இவள் என - இவள் நாணுவாள் என்று எண்ணி, தனக்கு உரைப்பு அறியேன் - அவளுக்கு உரைத்தல் செய்யேனாய், நனி கரந்து உறையும் - மிகவும் மறைத்து ஒழுகும், யான் இவ் வறுமனை ஒழிய - யான் இந்த வறிய மனையில் ஒழிந்திட,

எ—௧௧. தான் - என் மகள், அன்னை அறியின் இவண் உறை வாழ்க்கை - என் அன்னை அறியின் இங்கு தலைவனுடன் களவிற் கூடி யுறையும் வாழ்க்கை, எனக்கு எளிதாகல் இல்என - எனக்கு எளிய தொன்றாதல் இல்லை என்று எண்ணினமையால், கழல்கால் மின் ஒளிர் நெடுவேல் இளையோன் முன் உற - கழலினைத் தரித்த காலையும் மின் போல ஒளிவிடும் நீண்ட வேலையுமுடைய இளமைப்பருவமுமுடைய தன் தலைவன் முன்னே ஏக, பல் மலை அரு சுரம் போகிய தனக்கு - பல மலைகளையுடைய அரிய காட்டினைக் கடந்து சென்ற அவளுக்கு,

௧௧—௱. யான் அன்னேன் அன்மை நன் வாயாக - யான் அத் தன்மையினேன் அல்லாமை மிக்க உண்மையாதல் தோன்ற, மான் அதர் மயங்கிய மலைமுதல் சிறுநெறி - விலங்குகள் செல்லும் நெறிகள் பின்னிக் கிடக்கும் மலையடியிற் சிறிய நெறிகளில், வெய்து இடையுறாது முன்னர் எய்தி - இடையே தீங்கு உண்டாகாதவாறு அவர்கட்கு முன்னரே சென்று சேர்ந்து, புல் என் மா மலை புலம்பு கொள் சீறூர் - பொலிவற்றிருக்கும் பெரிய மலையைச் சார்ந்த தனிமை கொண்ட சிறிய ஊரில், செல் விருந்து ஆற்றி - வரும் விருந்தாக ஏற்று அவர்களை உண்பித்து, துச்சில் இருத்த - தங்குமிடத்தில் இருக்கச் செய்ய,

கஎ—அ. நுனை குழைத்து அலமரும் நொச்சி - முனைகள் தளிர்க் கப்பெற்று அசைந்திடும் நொச்சி சூழ்ந்த, மனைகெழு பெண்டு யான் ஆகுக - மனைக்குரிய பெண்டாக யான் ஆவேனாக.

(முடிபு) அம்பற் பெண்டிர் இன்னள் நின் மகளெனப் பன்னுள் எனக்கு வந்து உரைப்பவும் (அவள்) தனக்கு உரைப்பறியேன் கரந்துறையும் யான் வறுமனை ஒழிய, இளையோன் முன்னுற அருஞ்சுரம் போகிய தனக்கு, யான் அன்னேன் அன்மை வாயாக, சிறுநெறி எய்திச் சீறூர்ச் செல் விருந்தாற்றித் துச்சிலிருந்த, மனைகெழு பெண்டு யானாகுக.

(வி - ரை.) இன்னள் இனையள் : ஒரு பொருள் குறித்த சொன் னடை. அம்பற் பெண்டிரது கொடுமை கூறுவாள், அவர் புறத்தே உரைத்தலன்றிப் பன்னுள் என்பால் வந்து, நின்மகள் இனையளென உரைத்தார் என்றும், அதனைக் கேட்டும் தன் மகள் நாணுல் வருந் தாதபடி, அவளுக்கு உரையாமையே யன்றி எவ்வாற்றானும் அது புலப்படாமல் தான் மறைத்தலும் செய்த அருமை தோன்றத், 'தனக் குரைப்பறியேன் நாணுவள் இவளென நனிகரந் துறையும் யான்' என்றும் கூறினாள். தன் மகள் நீங்கிய மனை சிறிதும் பொலிவின்றி வறுவிய மனையாகத் தோன்றலின், யான் இவ் வறுமனை யொழிய என்றாள். அருஞ்சுரம் போயினாள், அங்ஙனம் போகிய தனக்கு என வேறு அறுத்து உரைக்க. அவள் தலைவனொடு நுகரும் இன் பத்தை உணர்ந்த நான் வெறாமையே யன்றி உவத்தலும் செய்தல் முழு உண்மையாதலை, இவ்வாறன்றி வெளிப்படுத்தல் அரிதென் பாள், 'யான் அன்னேனன்மை நன்வாயாகச், சீறூர்ச் செல்விருந்தாற் றித் துச்சிலிருந்த, மனைகெழு பெண்டிர் யானாகுக' என்றாள். மன் : அசைநிலை ; ஒழியிசையுமாம்.

---

## 204. முல்லை

[வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.]

உலகுடன் நிழற்றிய தொலையா வெண்குடைக்
கடல்போற் றானைக் கலிமா வழுதி
வென்றம ருழந்த வியன்பெரும் பாசறைச்
சென்றுவினை முடித்தன மாயின் இன்றே
ரு. கார்ப்பெயற் கெதிரிய கான்டகு புறவிற்
கணங்கொள் வண்டின் அஞ்சிறைத் தொழுதி
மணங்கமழ் முல்லை மாலை யார்ப்ப
உதுக்காண் வந்தன்று பொழுதே வல்விரைந்து
செல்க பாகநின் நல்வினை நெடுந்தேர்
க0 வெண்ணெ லரிநர் மடிவாய்த் தண்ணுமை
பன்மலர்ப் பொய்கைப் படுபுள் ளோப்பும்
காய்நெற் படப்பை [1]வாணன் சிறுகுடித்

---

(பாடம்) 1. பண்ணன் சிறுகுடி.

தண்டலை கமழுங் கூந்தல்
ஒண்டொடி மடந்தை தோளிணை பெறவே.
—மதுரைக் காமக்கணி நப்பாலத்தனார்.

(சொ - ள்.) க. பாக - பாகனே,

க—ச. உலகு உடன் நிழற்றிய தொலையா வெண்குடை - உலக முழுவதும் நிழல் செய்த கெடாத வெண்கொற்றக் குடையினையும், கடல்போல் தானை - கடல் போன்ற சேனையினையும், கலிமா - செருக்கிய குதிரையினையுமுடைய, வழுதி - பாண்டியன், வென்று அமர் உழந்த வியன் பெரு பாசறைச் சென்று - போரில் முயன்று வென்ற அகன்ற பெரிய பாசறைக்கண்ணே சென்று, வினை முடித்தனம் ஆயின் - வினையை வெற்றிபெற முடித்தோம் ஆதலானும்,

ரு—அ. கார் பெயற்கு எதிரிய காண் தகு புறவில் - கார்காலத்தின் மழையை ஏற்றுக்கொண்டு (தழைத்த) காண்டற்கு இனிய காட்டில், கணம் கொள் வண்டின் அம் சிறைத் தொழுதி - கூட்டம் கூட்டமாக வரும் அழகிய சிறையினையுடைய வண்டின் தொகுதி, மணம் கமழ் முல்லை மாலை ஆர்ப்ப - மணம் வீசும் முல்லை மலரில் மாலைக் காலத்தே ஆரவாரிக்க, பொழுது உதுக்காண் வந்தன்று - உதோ கார் காலம் வந்துவிட்டது (ஆதலானும்),

கo—ச. வெண்ணெல் அரிநர் - வெண்ணெல்லை அரிவோர் (அடிக்கும்),மடிவாய் தண்ணுமை - தோல் மடங்கிய வாயினையுடைய கிணையின் ஒலி, பல் மலர்ப் பொய்கை படுபுள் ஓப்பும் - பல மலர்களையுடைய பொய்கையில் பொருந்திய பறவைகளை ஓட்டும், காய் நெல் படப்பை - விளைந்த நெற்களையுடைய வயல்களையுடைய, வாணன் சிறுகுடித் தண்டலை கமழும் கூந்தல் - வாணனது சிறுகுடியிலுள்ள சோலை என மணக்கும் கூந்தலையும், ஒள்தொடி - ஒளி பொருந்திய வளையலையும் உடைய, மடந்தை தோள் இணை பெற - நம் தலைவியின் தோளிணையை முயங்குதற்கு,

ச. இன்றே - இப்பொழுதே,

அ—க. நின் நல் வினை நெடு தேர் - நினது நல்ல தொழிற் றிறம் அமைந்த நீண்ட தேர், வல் விரைந்து செல்க - மிக விரைந்து செல்லுவதாக.

(முடிபு) பாக! வழுதி பாசறை வினை முடித்தனம் ஆதலானும், உதோ பொழுது வந்தன்று (ஆதலானும்), மடந்தை தோளிணைபெற, நெடுந்தேர் விரைந்து செல்க.

(வி - ரை.) அரசனது வெற்றியைக் குடைக்கு ஏற்றி, கொற்றக் குடை என்பவாகலின் தொலையா வெண்குடை என்றார். வென்று அமர் உழந்த - அமர் உழந்து வென்ற என மாறுக. முடித்தனம் ஆயின் - முடித்தனம் ஆதலால் என்க. ஆதலால் என்பதனைப் பின்னுங்கூட்டி, முடித்தனம் ஆதலானும், பொழுது வந்தன்று ஆதலானும் என உரைத்துக் கொள்க. வண்டாகிய தொழுதி என்க. உதுக்காண் - உதோ. தேர் வல் விரைந்து செல்க என்றது செல்லுமாறு செலுத்துக என்றபடி.

---

## 205. பாலை

[தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைவி வற்புறுக்கும் தோழிக்குச் சொல்லியது.]

உயிர்கலந் தொன்றிய தொன்றுபடு நட்பிற்
செயிர்தீர் நெஞ்சமொடு செறிந்தோர் போலத்
தையல் நின்வயிற் பிரியலம் யாமெனப்
பொய்வல் உள்ளமொடு புரிவுணக் கூறித்
ரு துணிவில் கொள்கைய ராகி யினியே
நோய்மலி வருத்தமொடு நுதல்பசப் பூர
நாமழத் துறந்தன ராயினுந் நாமே
வாய்மொழி நிலைஇய சேண்விளங்கு நல்லிசை
வளங்கெழு கோசர் விளங்குபடை நூறி
க0 நிலங்கொள வெஃகிய பொலம்பூட் கிள்ளி
பூவிரி நெடுங்கழி நாப்பண் பெரும்பெயர்க்
காவிரிப் படப்பைப் பட்டினத் தன்ன
செழுநகர் நல்விருந் தயர்மா ரேமுற
விழுநிதி யெளிதினின் எய்துக தில்ல
கரு மழைகா லற்சிரத்து மாவிருள் நீங்கி
நீடமை நிவந்த நிழல்படு சிலம்பிற்
கடாஅ யானைக் கவுண்மருங் குறழ
ஆமூர் பிழிதரு காமர் சென்னிப்
புலியுரி வரியதள் கடுப்பக் கலிசிறந்து
உ0 நாட்பூ வேங்கை நறுமலர் உதிர
மேக்கெழு பெருஞ்சினை யேறிக் கணக்கலை
கூப்பிடூஉ உகளுங் குன்றகச் சிறுநெறிக்
கற்பிறங் காரிடை விலங்கிய
சொற்பெயர் தேஎத்த சுரனிறந் தோரே.

—நக்கீரர்.

(சொ - ள்.) க—எ. (தோழி!), தாம் - நம் தலைவர், உயிர் கலந்து ஒன்றிய தொன்றுபடு நட்பில் - உயிருடன் கலந்து பொருந்திய பல பிறவிகளினும் தொடர்ந்து வரும் நட்பினால், செயிர்தீர் நெஞ்சமொடு செறிந்தோர்போல - குற்றமற்ற நெஞ்சத்தால் கலந்தோர்போல, தையல் - பெண்ணே, நின்வயின் பிரியலம் யாம்என - நின்னிடத்தினின்றும் யாம் என்றும் பிரியேம் என்று, பொய் வல் உள்ளமொடு புரிவுணக்கூறி - பொய் மிக்க உள்ளத்தால் யாம் விரும்புமாறு கூறி, துணிவு இல் கொள்கையராகி - உறுதியில்லாத கொள்கையினராகி, இனி - இப்பொழுது, நோய்மலி வருத்தமொடு நுதல் பசப்பு ஊர - துன்பம் மிக்க வருத்தத்தால் நமது நெற்றியிற் பசலை பரக்கவும், நாம் அழ - நாம் அழவும், துறந்தனராயினும் - நம்மைப் பிரிந்து சென்றாராயினும்,

கரு—உச. மழை கால் அற்சிரத்து மால் இருள் நீங்கி - மழை யென்னப் பெய்யும் முன்பனிப் பருவத்து மயக்கத்தினைத் தரும் இருள் நீங்க, நீடு அமை நிவந்த நிழல்படு சிலம்பில் - நீண்ட மூங்கில் உயர்ந்த நிழல் பொருந்திய பக்க மலையில், கடாஅ யானைக் கவுள் மருங்கு உறழ - மதக்களிற்றினது கவுளின் பக்கத்தினை யொப்ப, ஆம் ஊர்பு இழிதரு காமர் சென்னி - நீர் ஊர்ந்து இறங்கும் அழகிய உச்சிமலையில், புலி உரி வரிஅதள் கடுப்ப - புலியின் உரியாகிய வரிகளையுடைய தோலையொப்ப, நாள்பூ வேங்கை நறுமலர் உதிர - மண நாளைக் காட்டும் பூக்களாய வேங்கையின் நறிய பூக்கள் உதிர்ந்திட, கலிசிறந்து மேக்கு எழு பெரு சினை ஏறி - செருக்கு மிக்கு அவ்வேங் கையின் மேனோக்கி யெழுந்த பெரிய கிளையில் ஏறி, கண கலை - கூட்டமாய ஆண் குரங்குகள், கூப்பிடூஉ உகளும் - தம் இனங்களைக் கூப் பிட்டுத் தாவும், குன்றகச் சிறுநெறி - குன்றிடையே செல்லும் சிறிய நெறியாகிய, கல் பிறங்கு ஆர் இடை விலங்கிய - கற்கள் விளங்கிய அரிய இடங்கள் குறுக்கிட்ட, சொல்பெயர் தேஎத்த சுரன் இறந் தோர் - மொழி வேறுபட்ட தேயங்களிலுள்ள பாலையைக் கடந்து சென்ற அவர்,

அ—கஅ. வாய்மொழி நிலைஇய சேண் விளங்கு நல்இசை - உண்மை நிலைபெற்ற நெடுந்தூரத்து விளங்கும் நல்ல புகழினையுடைய, வளம்கெழு கோசர் - செல்வம் மிக்க கோசர்களது, விளங்கு படை நூறி - விளக்கமுற்ற படையினை அழித்து, நிலம்கொள வெஃகிய பொலம்பூட் கிள்ளி - அவர்கள் நிலத்தைக் கைக்கொள்ள விரும்பிய பொற்பூணையுடைய சோழனது, பூவிரி நெடுங்கழி நாப்பண் - பூக்கள் விரிந்த நீண்ட கழியின் நடுவே, படப்பை - தோட்டங்களையுடைய, பெரும்பெயர்க் காவிரிப் பட்டினத்து அன்ன - பெரிய புகழையுடைய காவிரிப்பூம்பட்டினத்தை யொத்த, செழுநகர் - வளவிய நம் இல்லில், நல்விருந்து அயர்மார் - நல்ல விருந்தாற்றுதற்கு, ஏம் உற - இன்பம் உண்டாக, விழுநிதி எளிதினின் எய்துக - சிறந்த பொருளை எளிதி னில் அடைவாராக.

(முடிபு) தோழி! நம் தலைவர், 'தையல்! நின் வயிற் பிரியலம் யாம்' எனக் கூறி, நுதல் பசப்பூர நாம் அழத் துறந்தனராயினும், சொற்பெயர் தேஎத்த சுரன் இறந்தோராய அவர், காவிரிப் பட்டினத்தன்ன செழுநகர் நல்விருந் தயர் மார் ஏமுற விழுநிதி எளிதினின் எய்துக;

சிலம்பில் ஆமூர் பிழிதரு சென்னியில் வேங்கை மலர் உதிர, பெருஞ்சினை ஏறிக் கணக்கலை உகளும் குன்றகச் சிறுநெறியாய ஆரிடை விலங்கிய சுரன் என்க.

(வி - ரை.) தொன்றுபடு நட்பு - பழமை பொருந்திய நட்பு; பல பிறவிகளினும் தொடர்ந்து வரும் நட்பு என்றபடி. கழிநாப்பண் படப்பையையுடைய காவிரிப்பட்டினம் என்க. தில்ல - விழைவுப் பொருட்டு. அற்சிரத்து மாவிருள் நீங்கி எனவே பின்பனியும் வேனி லும் போந்தமை பெற்றும். நீங்கி - நீங்க எனத் திரிக்க. அருவி நீரொழுகும் மலையின் சென்னிக்கு மதஞ் சிந்தும் யானையின் கவுள் உவமையாகக் கூறப்பட்டது; [1]'மலைபடு கடாஅம் மாதிரத் தியம்ப'

1. மலைபடு. கசக.

என்னும் தொடரும், அதன் சிறப்பால் கூத்தராற்றுப்படை மலைபடு கடாம் எனப் பெயர் எய்தியதும் ஈண்டு அறியற்பாலன. நாட்பூ - புதியபூ என்றுமாம்.

---

## 206. மருதம்

[வாயில் வேண்டிச் சென்ற விறலிக்குத் தலைமகள் வாயில் மறுத்தது.]

என்னெனப் படுங்கொல் தோழி நன்மகிழ்ப்
பேடிப் பெண்கொண் டாடுகை கடுப்ப
[1]நகுவரப் பணைத்த திரிமருப் பெருமை
மயிர்க்கவின் கொண்ட மாத்தோ லிரும்புறம்
ரு சிறுதொழில் மகாஅர் ஏறிச் சேஏணோர்க்குத்
துறுகல் மந்தியிற் றோன்று மூரன்
மாரி யீங்கை மாத்தளி ரன்ன
அம்மா மேனி ஆயிழை மகளிர்
ஆரந் தாங்கிய அலர்முலை யாகத்
கல தாராக் காதலொடு தாரிடைக் குழைய
முழவுமுகம் புலரா விழவுடை வியனகர்
வதுவை மேவல னாகலின் அதுபுலந்
தடுபோர் வேளிர் வீரை முன்றுறை
நெடுவெள் ளுப்பின் நிரம்பாக் குப்பை
கரு பெரும்பெயற் குருகி யாஅங்குத்
திருந்திழை நெகிழ்ந்தன தடமென் றோளே.

—மதுரை மருதனிள நாகனார்.

(சொ - ள்.) க—ரு. தோழி -, நல்மகிழ் - நல்ல களிப்புடன், பேடிப்பெண் கொண்டு - பேடியாகிய பெண்ணின் உருவம் பூண்டு, ஆடுகை கடுப்ப - ஆடுவானது பின்சென்று மேல்வளைந்த கையை யொப்ப, நகுவரப் பணைத்த திரி மருப்பு எருமை - விளங்குதலுறப் பெருத்த முறுக்குண்ட கொம்பினையுடைய எருமையின், மயிர்க் கவின் கொண்ட மா தோல் இரு புறம் - மயிரால் அழகுபெற்ற கரிய தோலினையுடைய பெரிய முதுகில், சிறுதொழில் மகாஅர் ஏறி - குறுந்தொழில்களைச் செய்யும் சிறுவர்கள் ஏறி, சேஏணோர்க்கு துறு கல் மந்தியில் தோன்றும் ஊரன் - சேய்மையிலுள்ளார்க்கு உருண்டைக் கல்லின் மீதுள்ள மந்திபோலக் காணப்படும் ஊரனாகிய நம் தலைவன்,

எ—கஉ. மாரி ஈங்கை மா தளிர் அன்ன - மாரிக் காலத்து ஈங்கைச் செடியிற் றோன்றும் சிறந்த தளிரினை ஒத்த, அம் மா மேனி ஆய் இழை மகளிர் - அழகிய மாமை நிறத்தினையுடைய மேனியினையும்

---

(பாடம்) 1. நகுவரப் படைத்த.

ஆய்ந்த அணியினையுமுடைய பரத்தையரது, ஆரம் தாங்கிய அலர் முலை ஆகத்து - முத்து மாலையை ஏந்திய பரந்த முலையினையுடைய மார்பகத்தே, ஆராக் காதலொடு தார் இடை குழைய - அமையாத காதலுடன் பூமாலை இடைப்பட்டுக் குழைய, முழவு முகம் புலரா விழவு உடை வியன் நகர் - முழவின் ஒலி ஓய்தலில்லாத விழாவினையுடைய பெரிய மனையில், வதுவை மேவலன் ஆகலின் - மணத்தினைப் பொருந்துதலுடைய னாதலின்,

கஉ—சுா. அது புலந்து - அச் செயலினை வெறுத்து, அடுபோர் வேளிர் வீரை முன்துறை - வெல்லும் போரினை வல்ல வேளிர்கட்கு உரிய வீரை என்னும் இடத்திலுள்ள துறையின் முன்னிடத்தே, நெடுவெள் உப்பின் நிரம்பாக் குப்பை - நீண்டு கிடக்கும் வெள்ளையுப்பின் அளவிலடங்காத குவியல், பெரும் பெயற்கு உருகியாங்கு - மிக்க மழையால் உருகினாற்போல, தட மெல் தோள் - எனதுபெரிய மெல்லிய தோள்கள் மெலிந்து, திருந்து இழை நெகிழ்ந்தன - திருந்திய வளைகள் நெகிழப் பெற்றன;

க. என் எனப்படும் சொல் - இவ்வாறாகவும் இவ் விறலியின் கூற்று யாதெனப்படும்.

(முடிபு) தோழி! ஊரன் வதுவை மேவலன் ஆகலின், மென்தோள் இழை நெகிழ்ந்தன; (இவ்வாறாகவும் இவ்விறலியின் கூற்று) என் எனப்படும்!

(வி - ரை.) பேடிப்பெண் - பேடியாகிய பெண்ணென இருபெயரொட்டு. பெண் கொண்டு - பெண்ணினது உருவு கொண்டு. ஆடு கைகடுப்ப என்றமையாற் பின்சென்று மேல் வளைந்த மருப்பு என்க. எருமையின் புறத்திற்குத் துறுகல்லும் மகாஅருக்கு மந்தியும்உவமம். தார் இடை குழைய மேவலன் எனவும், அது புலந்து தோள் இழை நெகிழ்ந்தன எனவும் கூட்டுக. முழவு முகம் புலரா விழவுடை வியனகர் வதுவை மேவலன் என்றமையால், அவன் பரத்தையர் இல்லில் வதுவை அயர்தலை அவ் வாரவாரமே புலப்படுத்தும் என்றாளாயிற்று. உப்பின் குப்பை பெயற்கு உருகியாங்கு என்ற கருத்து, [1]'கடல்விளையமுதம் பெயற்கேற்றாஅங் குருகி யுகுதல்' [2]'உப்பியல் பாவையுறை யுற்றதுபோல, உக்குவிடு மென்னுயிர்' [3]'உப்பொய் சகடம், பெரும் பெய றலையவீந்தாங்கு' எனப் பலவிடத்தும் வருதல் காண்க.

---

## 207. பாலை

[மகட் போக்கிய [4]தாய் சொல்லியது.]

அணங்குடை முந்நீர் பரந்த செறுவின்
உணங்குதிறம் பெயர்ந்த வெண்கல் லமிழ்தம்
குடபுல மருங்கி னுய்ம்மார் புள்ளோர்ந்துப்
படையமைந் தெழுந்த பெருஞ்செ யாடவர்

1. நற். அஅ. 2. கலி. கஉஅ. 3. குறுங். கசுரு. (பாடம்) 4. செவிலி.

௫ நிரைப்பரப் பொறைய நரைப்புறக் கழுதைக்
குறைக்குளம் புதைத்த கற்பிற ழியவின்
வெஞ்சுரம் போழ்ந்த துஞ்சுவரு கவலை
மிஞிறுார் கடாஅங் கரந்துவிடு கவுள
வெயில்தின வருந்திய நீடுமருப் பொருத்தல்
௧௦ பிணரழி பெருங்கை புரண்ட கூவல்
தெண்க ணுவரிக் குறைக்குட முகவை
அறனி லாளன் றோண்ட வெய்துயிர்த்துப்
பிறைநுதல் வெயர்ப்ப உண்டனள் கொல்லோ
தேங்கலந் தளைஇய தீம்பா லேந்திக்
௧௫ கூழை யுளர்ந்து [1]மோழைமை கூறவும்
மறுத்த சொல்ல ளாகி
வெறுத்த வுள்ளமொ டுண்ணு தோளே.

—மதுரை எழுத்தாளன் சேந்தம் பூதனார்.

(சொ - ள்.) ௧—௪. அணங்கு உடை முந்நீர் பரந்த செறுவின் - தெய்வத்தையுடைய கடலின்நீர் பரவிய உப்பு விளையும் வயலில், உணங்கு திறம் பெயர்ந்த வெண்கல் அமிழ்தம் - நீர் காய்ந்த தன்மையால் வேறாகிய வெள்ளிய உப்பாகிய அமிழ்தினை, குடபுல மருங்கின் உய்ம்மார் - மேற்குத் திசையிலுள்ள இடங்களுக்குச் செலுத்தும் பொருட்டு, புள் ஓர்த்து - நிமித்தம் பார்த்து, படை அமைத்து எழுந்த பெருஞ்செய் ஆடவர் - படைக்கலங்களை அமைத்துக் கொண்டெழுந்த பெரிய வீரச் செயல்களைப் புரியும் ஆடவர், நிரை பரப் பொறைய நரை புறக் கழுதை - அடுக்கிய உப்புப் பொதியாய சுமையினையுடைய வெள்ளிய புறத்தினையுடைய கழுதைகளின், குறைக் குளம்பு உதைத்த கல் பிறழ் இயவின் - தேய்ந்த குளம்பு உதைத்தலால் பரற்கற்கள் பிறழ்ந்துகிடக்கும் வழியாய, வெம்சுரம் போழ்ந்த அஞ்சுவரு கவலை - கொடிய பாலையினை ஊடறுத்துச் செல்லும் அச்சந்தோன்றும் கவர்த்த நெறிகளில்,

௮—௧௨. மிஞிறு ஆர் கடாஅம் கரந்துவிடு கவுள - வண்டுகள் பொருந்தும் மதம் கரந்தொழிந்த கன்னத்தினையுடைய, வெயில் தின வருந்திய நீடு மருப்பு ஒருத்தல் - வெயில் நலிதலால் வருந்திய நீண்ட கொம்பினையுடைய களிற்றின், பிணர் அழி பெருங்கை புரண்ட கூவல் - சருச்சரை அழிந்த பெரிய கை நீர்வேண்டித் துழாவிப் பார்த்த கிணற்றினை, அறன் இலாளன் தோண்ட - அறம் இல்லானாகிய தன் தலைவன் தோண்டுதலால் ஊறிய, தெள் உவரி குறைக் குட முகவை - தெளிந்த உவரையுடையதாகிய குறைக்குடமாக முகக்கப்பட்ட நீரை,

௧௪—௭. தேம் கலந்து அளைஇய தீம்பால் ஏந்தி - தேனைப்பெய்து நன்கு கலந்த இனிய பாலை ஏந்திக்கொண்டு, கூழை உளர்ந்து மோழைமை கூறவும் - கூந்தலைக் கோதி நயமொழிகளைக் கூறவும்,

(பாடம்) 1. மொழிமை.

மறுத்த சொல்லள் ஆகி - மறுத்துரைப்பாள் ஆகி, வெறுத்த உள்ள மொடு உண்ணுதோள் - வெறுப்புற்ற உள்ளத்துடன் அதனை உண்ணு தோளாகிய என்மகள்,

௧௨—௩. வெய்து உயிர்த்து - வெப்பத்துடன் மூச்செறிந்து, பிறைநுதல் வியர்ப்ப உண்டனள் கொல் - பிறைமதி போன்ற நெற்றி வியர்த்திடப் பருகினளோ !

(முடிபு) அஞ்சுவரு கவலையில், கூவலை அறனிலாளன் தோண்ட, குறைக் குட முகவை நீரை, தேம்கலந்து அளைஇய தீம்பாலை ஏந்தி உளர்ந்து மோழைமை கூறவும் உண்ணுதோள், வெய்துயிர்த்து நுதல் வியர்ப்ப உண்டனள்கொல்.

(வி - ரை.) குடபுல மருங்கின் உய்ம்மார் என்றமையால், உப்பு விளைந்தது குணகடற் செறுவில் என்பது போதரும். படை - சேனையு மாம். செய் - வீரச்செய்கை; முதனிலைத் தொழிற் பெயர். கவுள வாகிய ஒருத்தல் எனவும், உவரியாகிய முகவை எனவும் இயையும். முகவை - முகந்த நீர். தெண்கண் : கண் அசை. [1]'மீன்கண் அற்றதன் சுனையே' என்புழிப்போல. தலைவிபால் மிக்க அன்புடையனுயி னும் தமரிற் பிரித்துக்கொண்டு சென்றமையின் அறனிலாளன் என் ருள். மோழைமை - தாழ்ந்த மொழி.

---

## 208. குறிஞ்சி

[புணர்ந்து நீங்கும் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]

யாம விரவின் நெடுங்கடை நின்று
தேமுதிர் சிமையக் குன்றம் பாடும்
நுண்கோ லகவுநர் வேண்டின் வெண்கோட்
டண்ணல் யானை யீயும் வண்மகிழ்
௫ வெளியன் வேண்மா ளுஅ யெயினன்
அளியியல் வாழ்க்கைப் பாழிப் பறந்தலை
இழையணி யானை யியறேர் மிஞிலியொடு
நண்பக லுற்ற செருவிற் புண்கூர்ந்
தொள்வாண் மயங்கமர் வீழ்ந்தெனப் புள்ளொருங்
௧௦ கங்கண் விசும்பின் விளங்கு ஞாயிற்
றொண்கதிர் தெறுமைச் சிறகரிற் கோலி
நிழல்செய் துழறல் காணேன் யானெனப்
படுகளங் காண்டல் செல்லான் சினஞ்சிறந்
துருவினை நன்னன் அருளான் கரப்பப்
௧௫ பெருவிதுப் புற்ற பல்வேண் மகளிர்
குரூஉப்பூம் பைந்தார் அருக்கிய பூசல்
வசைவிடக் கடக்கும் வயங்குபெருந் தானை
அகுதை களைதந் தாங்கு மிகுபெயல்

1. புறம். ௬0௯.

உப்புச்சிறை நில்லா வெள்ளம் போல
உ0 நாணுவரை நில்லாக் காம நண்ணி
நல்கினள் வாழியர் வந்தே யோரி
பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லிக்
கார்மலர் கடுப்ப நாறும்
ஏர்நுண் ணோதி மாஅ யோளே.

—பரணர்.

(சொ - ள்.) க—கூ. (நெஞ்சே) யாம இரவின் நெடுகடை நின்று - இரவின் கடையாமத்தே நீண்ட கடை வாயிலில் நின்று, தேம் முதிர் சிமையக் குன்றம் பாடும் - தேன் நிறைந்த உச்சியினையுடைய தனது குன்றினைப் பாடுகின்ற, நுண்கோல் அகவுநர் வேணடின் - சிறிய பிரப்பங் கோலைக் கொண்ட பாடுநர் விரும்பின், வெண் கோட்டு அண்ணல் யானை ஈயும் - வெள்ளிய கொம்பினையும் தலைமை யையுமுடைய யானையை வழங்கும், வண்மகிழ் - வண்மையாலாகிய மகிழ்ச்சியினையும், அளி இயல் வாழ்க்கை - அருள் பொருந்தும் வாழ்க்கையினையுமுடைய, வெளியன் வேண்மான் ஆஅய் எயினன் - வெளியன் வேண்மான் ஆஅய் எயினன் என்பான், பாழி பறந்தலை - பாழி என்னும் ஊரின் கண்ணதாகிய போர்க்களத்தே, இழை அணி யானை இயல் தேர் மிஞிலியொடு — ஓடையை அணிந்த யானையினையும் இயன்ற தேரினையும் உடைய மிஞிலி என்பானொடு, நண்பகல் உற்ற செருவில் - நண்பகற் பொழுதிலே செய்த போரின்கண், ஒள்வாள் மயங்கு அமர் புண் கூர்ந்து வீழ்ந்தென - ஒள்ளிய வாட்படை மயங் கிய போரினுலே புண்மிக்கு வீழ்ந்தனனாக,

கூ—கச. அம் கண் விசும்பின் விளங்கு ஞாயிற்று - அழகிய இடத்தையுடைய வானில் விளங்கிய ஞாயிற்றினது, ஒள் கதிர் தெறுமை - ஒள்ளிய கதிர் அவன் உடலைக் காய்தல் செய்யாது, புள் ஒருங்கு சிறகரிற் கோலி - புட்கள் பலவும் கூடித் தமது சிறகுகளால் பந்தரிட்டு, நிழல் செய்து உழறல் காணேன் யானென - நிழலைச் செய்து சுழன்று கொண்டிருத்தலை யான் காணேனென்று, படுகளம் காண்டல் செல்லான் - அவன் பட்ட களத்தைக் காண்டற்குச் செல்லா னய், சினம் சிறந்து - கோபம் மிக்கு, உருவினை நன்னன் அருளான் கரப்ப - அச்சம் தரும் போர்ச் செயலினைக் கொண்ட நன்னன் அரு ளின்றி மறைந்துகொள்ள,

கரு—அ. பெரு விதுப்புற்ற பல்வேள் மகளிர் - மிக்க விரைவு கொண்டு வந்த பல வேளிர் மகளிர், குரூஉ பூ பைந்தார் அருக்கிய பூசல் - விளங்கும் பூக்களாலாய அழகிய மாலைகளை அழித்து விட்டுச் செய்த அழுகை ஆரவாரத்தினை, வசைவிடக் கடக்கும் வயங்கு பெரு தானை - பழிநீங்க மாற்றூர் படையினை வெல்லும் விளங்குகின்ற பெரிய சேனையினையுடைய, அகுதை களைதந் தாங்கு - அகுதை என் பான் நீக்கினற்போல,

கஅ—உச. ஓரி - ஓரி என்பானது, பல் பழப் பலவின் பயம் கெழு கொல்லி - பல பழங்களையுடைய பலாமரங்களையுடைய பயன்

மிக்க கொல்லி மலையின், கார் மலர் கடுப்ப நாறும் - கார்காலத்துப் பூக்கும் மலரினை யொப்ப நாறும், ஏர் நுண் ஓதி - அழகும் மென்மையும் பொருந்திய கூந்தலையுடைய, மாயோள் - மாமை நிறத்தினளாய நம் தலைவி, உப்புச் சிறை நில்லா மிகுபெயல் வெள்ளம்போல - உப்பினாலாகிய அணையில் தடைப்பட்டு நில்லாத மிக்க மழையால் எழுந்த வெள்ளத்தைப்போல, நாணு வரை நில்லாக் காமம் நண்ணி - நாணத்தின் எல்லையில் அடங்காத காமம் பொருந்தப்பெற்று, வந்து நல்கினள் - வந்து நம் துன்பினை நீக்கி அருள் செய்தனள், வாழியர் - வாழ்வாளாக.

(முடிபு) (நெஞ்சே) ஆஅய் எயினன் மிஞிலியொடு உற்ற செருவில் வீழ்ந்தெனப் புள் ஒருங்கு ஞாயிற்று ஒண்கதிர் தெறுமைச் சிறகரிற் கோலி நிழல் செய்துழறல் காணேன் யானெனப் படுகளங் காண்டல் செல்லான் நன்னன் அருளான் கரப்ப, மகளிர் பூசல் அதனை களைநந்தாய்ந்த, மாயோள் காமம் நண்ணி வந்து நல்கினள் ; வாழியர் !

(வி-ரை.) யாம இரவு நள்ளிரவென்றே கொண்டு, நெடுங்கடை நின்று குன்றம் பாடும் அகவுநர் யாமஇரவின் வேண்டினும் யானை ஈயும் எயினன் என்றலுமாம். வெளியன் வேண்மான் ஆஅய் எயினன் எனவும், பல்வேள் மகளிர் எனவும் கூறப்பட்டிருத்தலின் ஆய் எயினன் என்பான் வேளிர் குடியினன் என்பது பெறப்படும். வெளியன் வேண்மானுக்கு மகனாகிய ஆய் எயினன் என்றுதல் வெளியன் வேண்மான் ஆகிய ஆய் எயினன் என்றுதல் கொள்க. முன்னதற்கு வெளியன் என்பது தந்தையின் பெயரும், பின்னதற்கு எயினனது மற்றொரு பெயரும் ஆகும். அளியியல் வாழ்க்கை எயினன் எனக் கூட்டுக. மிஞிலி யென்பான் நன்னனுக்குத் துணையாயவன். நன்னன் புன்னாடு என்னும் நாட்டினைக் கடிந்த காலத்து, ஆய் எயினன் அஞ்சலிர் என்று கூறி அந்நாட்டினரைப் பாதுகாத்தலின் அவனுக்கும் நன்னனுக்கும் பகைமை விளைந்ததென்பதும், பாழிப் பறந்தலையில் நன்னனுக்குத் துணையாக வந்தெதிர்த்த மிஞிலியொடு பொருது எயினன் தான் கூறிய சொற் பிழையாது உயிர் கொடுத்தனன் என்பதும், [1]'பொலம்பூ ணன்னன் புன்னாடு கடிந்தென, யாழிசை மறுகிற் பாழி யாங்கண், அஞ்சல் என்ற ஆஅய் எயினன், இகலடு கற்பின் மிஞிலியொடு தாக்கித், தன்னுயிர் கொடுத்தனன் சொல்லிய தமையாது' என்பதனால் அறியப்படும். எயினன் புள்ளின் பாதுகாவலன் ஆகலின் பறவைகள் ஒருங்குகூடி நிழல் செய்தனவென்க. அவன் அன்னனாதலை அகம் ௧௪௨, ௧௮௧ ஆகிய பாட்டுக்களானும் அறிக. புள் ஒருங்குகூடி என ஒரு சொல் வருவித்துரைக்க. தனக்குத் துணையாகிய மிஞிலி பகைவனைக் கொன்ற களத்தினைத் தான் சென்று காண்டலும், தன் பகைவனது அருள் மேம்பாட்டை அஃறிணையாகிய பறவைகள்தாமும் வெளிப்படுத்தலைக் கண்டு சினந்தவிர்ந்து இரங்கலும் முறையாகவும், நாணினாலும் அழுக்காற்றினாலும் அங்ஙனம் நன்னன் செய்திலன் என்பார், 'புள்ளொருங்கு . . . நிழல் செய்துழறல் காணேன் யானெனப், படுகளங் காண்டல்

1. அகம். ௩௯௬.

செல்லான் சினஞ்சிறந்து, உருவினை நன்னன் அருளான் கரப்ப' என்றார். மகளிர் பூசலை அகுதை களைந்தாற்போல மாயோள் வந்து என் துயர் களைந்து நல்கினள் என்றான் என்க. 'உப்புச் சிறை நில்லா வெள்ளம் போல' என்னும் கருத்துப் பலவிடத்து வந்திருத்தலை [1]'என்னெனப் படுங்கொல் தோழி' என்னுஞ் செய்யுளுரையிற் காண்க.

---

## 209. பாலை

[பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.]

தோளுந் தொல்கவின் றொலைந்தன நாளும்
அன்னையு மருந்துய ருற்றனள் அலரே
பொன்னணி நெடுந்தேர்த் தென்னர் கோமான்
எழுவுறழ் திணிதோள் இயல்தேர்ச் செழியன்
ரு நேரா வெழுவ ரடிப்படக் கடந்த
ஆலங் கானத் தார்ப்பினும் பெரிதெனை
ஆழல் வாழி தோழி அவரே
மாஅல் யானை மறப்போர்ப் புல்லி
காம்புடை நெடுவரை வேங்கடத் தும்பர்
கம அறையிறந் தகன்றன ராயினும் நிறையிறந்
துள்ளா ராதலோ வரிதே செவ்வேல்
முள்ளூர் மன்னன் கழறொடிக் காரி
செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்
ஓரிக் கொன்று [2]சேரலர்க் கீத்த
கரு செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி
நிலைபெறு கடவு ளாக்கிய
பலர்புகழ் பாவை யன்னநின் னலனே.

—கல்லாடனார்.

(சொ - ள்.) க—எ. தோழி—, வாழி—, தோளும் தொல்கவின் தொலைந்தன - எனது தோள்களும் பழைய அழகு கெட்டன, நாளும் அன்னையும் அரு துயர் உற்றனள் - நாடோறும் அன்னையும் அரிய துயரினை மேவினள், அலரே - ஊரில் எழும் அலர்தான், பொன் அணி நெடு தேர் தென்னர் கோமான் - பொன்னால் அணியப்பெற்ற நீண்ட தேரினையுடைய பாண்டியர் பெருமானாகிய, எழு உறழ் திணி தோள் இயல்தேர் செழியன் - கணையமரத்தை மாறுபடும் திண்ணிய தோளினையும் நன்கு இயன்ற தேரினையுமுடைய பாண்டியன் நெடுஞ்செழியன், நேரா எழுவர் அடிப்படக் கடந்த - பகைத்த எழுவரையும் முற்ற வென்ற, ஆலங்கானத்து ஆர்ப்பினும் பெரிது என - தலையாலங்கானத்து எழுந்த வெற்றி யாரவாரத்தினும் பெரிது என்று கூறி, ஆழல் - துயரில் அழுந்தாதே;

1. அகம். உ0௬. (பாடம்) 2. சேரலற்கு.

எ—கூO. அவர் - நம் தலைவர், மால் யானை மறப் போர்ப் புல்லி - பெரிய யானையையும் வீரத்துடன் புரியும் போரினையுமுடைய புல்லி என்பானது, காம்பு உடை நெடு வரை வேங்கடத்து உம்பர் - மூங்கில்களையுடைய நீண்ட சாரல் பொருந்திய வேங்கட மலையின் அப்பாலுள்ள, அறை இறந்து அகன்றனர் ஆயினும் - குன்றுகளைக் கடந்து சென்றுளாராயினும்,

கூO—எ. முள்ளூர் மன்னன் செவ்வேல் கழல் தொடி காரி - சிவந்த வேலினையும் கழல இடப்பட்ட தொடியினையுமுடைய முள்ளூர்க்குத் தலைவனாகிய காரி என்பான், செல்லா நல் இசை நிறுத்த வல்வில் ஓரிக் கொன்று - கெடாத நல்ல புகழினை நிலைநாட்டிய வல்வில் ஓரியைக் கொன்று, சேரலர்க்கு ஈத்த - சேர மன்னர்க்கு உரிமையாக்கிய, செவ்வேர்ப் பலவின் பயம்கெழு கொல்லி - சிவந்த வேர்ப் பலாமரத்தின் பழம் மிக்க கொல்லி மலையில், நிலைபெறு - நிலைபெற்ற, கடவுள் ஆக்கிய - தெய்வத்தச்சனு வியற்றப்பட்ட, பலர் புகழ் பாவை அன்ன நின் நலன் - பலரும் புகழும் கொல்லிப் பாவையை யொத்த நினது அழகை, நிறையிறந்து - நெஞ்சை நிறுத்துந் தன்மை மிக்கு, உள்ளார் ஆதல் அரிது - நினையாராதல் இல்லை.

(முடிபு) தோழி! வாழி! அலர் ஆர்ப்பினும் பெரிதென ஆழல்; அவர் வேங்கடத்தும்பர் அறையிறந் தகன்றன ராயினும், கொல்லி நிலைபெறு பாவை யன்ன நின் நலன் நிறையிறந்து உள்ளாராதல் அரிது.

(வி - ரை.) செழியனால் வெல்லப்பட்ட பகைவர் எழுவர் இவர் என்பதனை [1] 'செழியன், ஆலங்கானத் தகன்றலை சிவப்பச், சேரல் செம்பியன் சினங்கெழு திதியன், போர்வல் யானைப் பொலம்பூண் எழினி, நாரரி நறவின் எருமையூரன், தேங்கம ழகலத்துப் புலர்ந்த சாந்தின், இருங்கோ வேண்மான் இயறேர்ப் பொருநனென், றெழுவர்' என்பதனால் அறிக. நிறை - நிறுத்தல்; நெஞ்சை நிறுத்துந் தன்மை. இறத்தல் - மிகுதல். கழறொடி - கழலும் தொடியுமாம். காரி - கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய மலையமான் திருமுடிக் காரி. செல்லா நல்லிசை நிறுத்த - தன் வள்ளன்மையால் அழியாத நல்ல புகழை நிலைநிறுத்திய என்க. ஓரி என்பானும் கடையெழு வள்ளல்களில் ஒருவனே. இவன் வல்வில்லோரி என்று வழங்கப் படுதலின், சிறந்த படையாண்மையும் உடையன் என்பது போதரும். ஓரிக்கொன்று : இரண்டனுருபு உயர்திணை மருங்கின் ஒழிந்து வந்தது, உடம்பொடு புணர்த்தலாற் கொள்ளப்படும். கொல்லி நிலைபெறு பாவை எனக் கூட்டுக.

(மே - ள்.) [2] 'நாற்றமும் தோற்றமும்' என்னுஞ் சூத்திரத்து, 'என்புநெகப் பிரிந்தோள் வழிச்சென்று கடைஇ, அன்பு தலையெடுத்த வன்புறைக் கண்ணும்' என்னும் பகுதிக்கண் இயற்பட மொழிந்து வற்புறுத்தற்கு இச் செய்யுளைக் காட்டினர் நச்.

---

1. அகம். ந௩. 2. தொல். களவு. உ௩.

## 210. நெய்தல்

[தோழி, தலைமகன் சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.]

குறியிறைக் குரம்பைக் கொலைவெம் பரதவர்
எறியுளி பொருத ஏமுறு பெருமீன்
புண்ணுமிழ் குருதி புலவுக்கடல் மறுப்பட
விசும்பணி வில்லிற் போகிப் பசும்பிசிர்த்
ரு திரைபயி லழுவ முழக்கி யுரனழிந்து
நிரைதிமில் மருங்கிற் [1]படர்தருந் துறைவன்
பானா ளிரவினம் பணைத்தோ ளுள்ளித்
தானிவண் வந்த காலை நம்மூர்க்
கானலம் பெருந்துறைக் கவின்பா ராட்டி
கo ஆனாது புகழ்ந்திசி னோனே யினித்தன்
சாயன் மார்பிற் பாயல் மாற்றிக்
கைதையம் படுசினை கடுந்தேர் விலங்கச்
செலவரி தென்னு மென்பது
பலகேட் டனமாற் றோழி நாமே.

—உலோச்சனார்.

(சொ - ள்.) கச. தோழி—,

க—சு. குறி இறைக் குரம்பை கொலைவெம் பரதவர் - குறிய இறப்பினையுடைய குடிசையில் வாழும் கொலைத் தொழிலையுடைய கொடிய பரதவரால், எறி உளி பொருத ஏம் உறு பெருமீன் - எறியப்பட்ட உளி தாக்கிய களிப்புப் பொருந்திய பெரிய மீன், விசும்பு அணி வில்லில் போகி - விசும்பினை அணிசெயும் வில்லைப்போலத் தாவிச் சென்று, புண் உமிழ் குருதி புலவுக் கடல் மறுப்பட - தன் புண்ணினின்றும் ஒழுகிய உதிரத்தால் புலால் நாறும் கடல் நீரின் நிறம் மாறுபட, பசும் பிசிர் திரை பயில் அழுவம் உழக்கி - பசிய திவலைகளையுடைய அலை நெருங்கிய கடற் பரப்பைக் கலக்கி, உரன் அழிந்து - வலி குன்றி, நிரை திமில் மருங்கில் படர் தரும் துறைவன் - வரிசையாகவுள்ள படகின் பக்கலில் வந்து சேரும் துறையினையுடைய நம் தலைவன்,

எ—கo. பால் நாள் இரவில் நம் பணைத்தோள் உள்ளி - நடு இரவில் நம் மூங்கிலையொத்த தோளினை நினைத்து, இவண் வந்தகாலை - இங்கு வந்தபோது, நம் ஊர்க் கானல் பெருந்துறைக் கவின் பாராட்டி - நம்மூரின்கண்ணே சோலையையுடைய பெரிய துறையின் அழகினைப் பாராட்டி, ஆனாது புகழ்ந்திசினோன் - அமையாது புகழ்ந்தனன் ;

கo—ச. இனி - இப்பொழுதோ, தன் சாயல் மார்பில் பாயல் மாற்றி - தனது மென்மை வாய்ந்த மார்பில் யாம் கண் துயிலலை

(பாடம்) 1. படரூஉந் துறைவன்.

யகற்றி, கைதை படு சினைக் கடுந்தேர் விலங்க - தாழையின் தாழ்ந்த கிளைகளால் தனது கடிய தேர் தடைப்படுதலால், செலவு அரிது என்னும் என்பது - செல்லுதல் அரிது என்று கூறுவன் என்பதனை, நாம் பல கேட்டனம் - நாம் பல முறையும் கேட்டேம் அல்லேமோ.

(முடிபு) தோழி! துறைவன் நம் பணைத்தோள் உள்ளி வந்த காலை, நம் ஊர்க் கானலம் பெருந்துறைக் கவின் பாராட்டிப் புகழ்ந்திசினோன்; இனி, தன் ஊர்பிற்பாயல் மாற்றிக் கடுந்தேர் விலங்கச் செலவரிது என்னும் என்பது நாம் பல கேட்டனம்.

(வி - ரை.) வேட்டம் சென்று மீன்களைக் கொல்பவராதலின் கொலை வெம்பரதவர் எனப்பட்டார். எறி உளி - பெருமீன்களை வெட்டுவதொரு வாள். விசும்பு அணி வில் - விசும்பாலாது அணிந்த வில் என்றுமாம். வில்லிற்போகி - விற்போலப் பன்னிறமுடையதாய் வளைந்து தோன்றுமாறு சென்று என்க. கானலம் பெருந்துறைக் கவின் பாராட்டி, ஆனது புகழ்ந்திசினோன் என்பதனால், முன்பு இத் துறையை விடுத்துச் செல்லுதற்கு விருப்பின்றி யிருந்தான் என்பதும், 'கடுந்தேர் விலங்கச் செலவரி தென்னும்' என்பதனால், இப்போது அதன்கண் வருவதற்கும் விருப்பின்றி யுள்ளான் என்பதும் பெறப்படும்.

(உ - றை.) உளி பொருத பெருமீன் கடல் மறுப்படப் போகி ஒழுகவும் உழக்கி உரனழிந்து திமில் மருங்கிற் படூஉம் என்றது, அவனால் நலன் நுகரப்பட்டு வேறுபாடுற்ற நாம் இற்பழியாக்கி, ஊர் அலர் தூற்ற வலியழிந்து இறந்துபடுவதே பயனாயிற்று என்றவாறு.

---

## 211. பாலை

[பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு தோழி சொல்லியது.]

கேளாய் எல்ல தோழி வாலிய
சுதைவிரிந் தன்ன பல்பூ மராஅம்
பறைகண் டன்ன பாவடி நோன்றாட்
டிண்ணிலை மருப்பின் வயக்களி றுரிஞுதொறும்
ரு தண்மழை ஆலியிற் றூஉம் உறுவர்
வெண்ணெல் வித்தின் அறைமிசை யுணங்கும்
பனிபடு சோலை வேங்கடத் தும்பர்
மொழிபெயர் தேஎத்த ராயினும் நல்குவர்
குழியிடைக் கொண்ட கன்றுடைப் பெருநிரை
க0 பிடிபடு பூசலின் எய்தா தொழியக்
கடுஞ்சின வேந்தன் ஏவலின் எய்தி
நெடுஞ்சே ணாட்டிற் றலைத்தார்ப் பட்ட
கல்லா எழினி பல்லெறிந் தழுத்திய

[1]வன்கட் கதவின் வெண்மணி வாயின்
கரு மத்தி நாட்டிய கல்கெழு பனித்துறை
நீரொலித் தன்ன பேஎர்
அலர்நமக் கொழிய அழப்பிரிந் தோரே.

—மாமூலனார்.

(சொ - ள்.) க. எல்ல தோழி கேளாய் - ஏடி, தோழி! நான் கூறுவதனைக் கேட்பாயாக ;

கூ - கஎ. குழியிடைக் கொண்ட - பள்ளத்தில் அகப்படுத்திய, கன்று உடை பெரு நிரை பிடி படு பூசலின் - கன்றுகளையும் பிடிகளையு முடைய பெரிய யானை யினங்களை அகப்படுத்தும் பூசற் கண்ணே, எய்தாது ஒழிய - (எழினி என்பான்) வாராது ஒழிய, கடு சின வேந்தன் ஏவலின் எய்தி - அதனால் மிக்க சினங்கொண்ட சோழ மன்னனது ஏவலாற் சென்று, மத்தி - மத்தி என்பான், நெடு சேண் நாட்டில் - நெடுஞ் சேய்மைக் கண்ணதாகிய நாட்டில், தலைத் தார்ப் பட்ட - முதற் படையில் அகப்பட்டுக்கொண்ட, கல்லா எழினி - கல்லாத அவ்வெழினியின், பல் எறிந்து அழுத்திய - பல்லைப் பறித்து வந்து பதித்த, வன்கண் கதவின் - வன்மை பொருந்திய கதவினை யுடைய, வெண்மணி வாயில் - வெண்மணி என்னும் ஊரின் வாயி லிடத்தே, நாட்டிய - அம் மத்தி என்பவனால் நாட்டப்பட்ட, கல் கெழு - கல் பொருந்திய, பனித்துறை - குளிர்ந்த துறைமுகத்தே, நீர் ஒலித் தன்ன - நீர் மோதி ஒலிப்பது போன்ற, பேஎர் அலர் நமக்கு ஒழிய - பெரிய அலர் நம்பால் எஞ்சியிருக்கவும், அழப் பிரிந்தோர் - நாம் அழவும் பிரிந்த நம் தலைவர்,

க - அ. மராஅம் - வெண் கடப்ப மரத்தை, பறை கண்டன்ன பாவு அடி நோன் தாள் - பறையினையொத்த வட்டமாகிய பரந்த அடியினையுடைய வலிய தாளினையும், திண் நிலை மருப்பின் - திண்ணிய நிலை வாய்ந்த கோட்டினையுமுடைய, வய களிறு உரிஞுதொறும் - வலிய களிறு உரிஞ்சுதொறும், வாலிய சுதை விரிந்தன்ன பல்பூ - வெள்ளிய சுண்ணும்பு பரந்திருந்தாலொத்த அதன் பலவாய பூக்கள், தண் மழை ஆலியில் தாஅய் - தண்ணிய மழையொடு விழும் பனிக் கட்டிபோல உதிர்ந்து பரவி, உழவர் வெண் நெல் வித்தின் அறை மிசை உணங்கும் - உழவரது வெண்ணெல்லின் விதைபோலப் பாறை யின்மீது காய்ந்து கிடக்கும், பனிபடு சோலை வேங்கடத்து உம்பர் - குளிர்ச்சி பொருந்திய சோலைகளையுடைய வேங்கட மலையின் அப்பா லுள்ள, மொழிபெயர் தேஎத்தர் ஆயினும் - வேற்று மொழி வழங்கும் நாட்டின் கண்ணராயினும், நல்குவர் - விரைந்து வந்து அருள் செய்வர்.

(முடிபு) தோழி கேளாய், அலர் நமக்கொழிய, (நாம்) அழப் பிரிந்தோர், வேங்கடத்தும்பர் மொழி பெயர் தேஎத்த ராயினும், நல்குவர்.

---

(பாடம்) 1. அகன்கட் கதவின்.

(வி - ரை.) கன்று பிடியுடைப் பெருநிரை என மாறுக. பூசல் - வேட்டம். யானைகளை அகப்படுத்தும் வேட்டைக்கு எழினி என்பான் வாராமையால், சினங்கொண்ட சோழ மன்னன், மத்தி என்னும் படைத்தலைவனை ஏவ, அவன் சென்று அவ் வெழினியைப் போரிலே அகப்படுத்து, அவன் பல்லைப் பறித்து வந்து வெண்மணி யென்னும் ஊரினது வாயிற் கதவிலே பதித்தனன் என்பதும், அவ் வெற்றிக்கு அடையாளமாக ஆங்குள்ள நீர்த்துறையில் கல் நாட்டினுன் என்பதும் இச் செய்யுளில் அறியப்படும் வரலாறுகளாகும். மத்தி என்பான் பரதவக் குடியினன் என்பதும், கழாஅர் என்னும் ஊருக்கு உரியன் என்பதும், 'பரதவர் கோமான் பல்வேல் மத்தி, கழாஅர் முன்றுறை' (அகம். கஉசு) என்பதனுல் அறியப்படும். இனிப் பூசலின் எய்தா தொழிய என்பதற்கு, வேட்டையிற் சென்றிருந்தாருகலின் தன் ஆணையின்படி வாராதொழிய என்றுரைத்தலுமாம்.

## 212. குறிஞ்சி

[அல்லகுறிப்பட்டு நீங்குந் தலைமகன் தன் நெஞ்சினை [1]நெருங்கிச் சொல்லியது.]

தாவில் நன்பொன் றைஇய பாவை
விண்டவழ் இளவெயிற் கொண்டுநின் றன்ன
மிகுகவி னெய்திய தொகுகுர லைம்பாற்
கிளையரி ணைற் கிழங்குமணற் கின்ற
ரு முளையோ ரன்ன முள்ளெயிற் றுத் துவர்வாய்
நயவன் றைவருஞ் செவ்வழி நல்யாழ்
இசையோர்த் தன்ன இன்றீங் கிளவி
அணங்குசா லரிவையை நசைஇப் பெருங்களிற்
றினம்படி நீரிற் கலங்கிய பொழுதிற்
கo பெறலருங் குரைய ளென்னுய் வைகலும்
இன்னு அருஞ்சுரம் நீந்தி நீயே
என்னை யின்னற் படுத்தனை மின்னுவசிபு
உரவுக்கார் கடுப்ப மறலி மைந்துற்று
[2]விரவுமொழிக் கட்டூர் வேண்டுவழிக் கொளீஇப்
கரு படைநிலா இலங்குங் கடல்மருள் தானை
மட்டவிழ் தெரியல் மறப்போர்க் குட்டுவன்
பொருமுரண் பெருஅது விலங்குசினஞ் சிறந்து
செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி
ஓங்குதிரைப் பௌவம் நீங்க வோட்டிய
உo நீர்மா ணெஃகம் நிறத்துச்சென் றழுந்தக்
கூர்மத னழியரோ நெஞ்சே யானு

(பாடம்) 1. நோக்கிச் சொல்லியது. 2. விரவு மொழித் தகட்டூர்,

தெளிய லல்லோட் கருதி
விளியா எவ்வந் தலைத்தந் தோயே.

—பரணர்.

(சொ - ள்.) உக. நெஞ்சே -,

க—கஉ. தா இல் நன் பொன் தைஇய பாவை - வலியற்ற மாற் றுயர்ந்த பொன்னாற் செய்யப்பெற்ற பாவை, விண் தவழ் இள வெயில் கொண்டு நின்றன்ன - வானில் பரவும் இளவெயிலைத் தன் மேற் கொண்டு ஒளிதிகழ நின்றாலொத்த, மிகு கவின் எய்திய - மிக்க அழகு பொருந்தியவளும், தொகுகுரல் ஐம்பால் - திரண்ட கொத் தாகிய கூந்தலையும், கிளை அரில் நாணல் கிழங்கு மணற்கு ஈன்ற - கிளைத்த தூறாகிய நாணற் கிழங்கு மணலிடத்தே ஈன்ற, முளை ஓரன்ன முள் எயிற்றுத் துவர் வாய் - முளையை ஒத்த (வெள்ளிய) கூரிய பற் களையுடைய சிவந்த வாயினையும், நயவன் தைவரும் நல்யாழ் செவ் வழி இசை ஓர்த்தன்ன இன் தீம் கிளவி - யாழ் வல்லோன் இயக்கும் நல்ல யாழின் செவ்வழிப் பண்ணின் இசையைக் கேட்டாற்போலும் மிக இனிய சொல்லினையும் உடையவளுமாகிய, அணங்கு சால் அரிவையை நசைஇ - தெய்வத்தின் இயல்பினையுடைய மகளை விரும்பி, பெரு களிற்று இனம் படி நீரில் கலங்கிய பொழுதில் - பெரிய களிற்றியானைக் கூட்டம் படிந்து கலக்கிய நீரைப்போல நீ கலக்கமுற்றபொழுது, பெறல் அருங்குரையள் என்னாய் - இவள் பெறுதற்கு அரியள் என்று எண்ணாயாகி, வைகலும் இன்னா அருஞ் சுரம் நீந்தி - நாடோறும் இன்னாமையுடைய அரிய சுரநெறியைக் கடந்து, நீ என்னை இன்னல் படுத்தனை - நீ என்னைத் துன்பத்தின் கண் செலுத்தினை ;

உக - ங. ஆனாது எளியள் அல்லோள் கருதி - எளியள் அல்ல ளாய அவளை அமையாது எண்ணி, விளியா எவ்வம் தலைத் தந்தோய் - நீங்காத துன்பத்தினை என்பாற் சேர்த்தியுள்ள நீதான்,

கஉ - உக. படை நிலா இலங்கும் கடல் மருள் தானை - படைக்கலன்களின் ஒளி வீசும் கடலையொத்த தானையினையுடைய, மட்டு அவிழ் தெரியல் மறப் போர்க் குட்டுவன் - தேன் ஒழுகும் மாலையினையுடைய தறுகண்மையுடன் போர் செய்தல் வல்ல குட்டு வன், மின்னு வசிபு உரவுக்கார் கடுப்ப மறலி மைந்து உற்று - மின்ன லால் வானைப் பிளந்து வலிமை கொண்டெழும் மேகத்தை யொப்பப் பகைத்து வலிமைகொண்டு, விரவு மொழிக் கட்டூர் வேண்டுவழிக் கொளீஇ - பல மொழியும் கலந்த பாசறையைத் தான் வேண்டுமிடங் களில் அமைத்து, பொரு முரண் பெறாது - தன்னுடன் பொரும் பகையை நில எல்லைக்குள் காணாமையின், விலங்கு சினம் சிறந்து - பொங்கி எழும் சினம் மிக்கு, செரு செய் முன்பொடு முந்நீர் முற்றி - போர் புரியும் வலியால் கடலைவளைந்து, ஓங்குதிரைப் பௌவம் நீங்க ஓட்டிய - உயர்ந்த அலைகளையுடைய கடலைப் பிறக்கிடும்படி ஓட்டிய, நீர் மாண் எஃகம் - மாண்புற்ற நீர்மையுடைய வேல், நிறத்துச்

சென்று அழுந்த - நின் மார்பிலே தைத்து அழுந்திட, கூர் மதன் அழியரோ - நினது மிக்க செருக்கு அழியப் பெறுவாயாக.

(முடிபு) நெஞ்சே! என்னை இன்னற்படுத்தனை; வினியாா எவ்வம் தலைத் தந்த நீதான் குட்டுவன் அகலம் நிறத்துச் சென்றழுந்த மதன் அழியரோ.

(வி - ரை.) தா - வலி; போக்கற்ற பொன் நெகிழ்ச்சி யுடைய தாயிருத்தலின் தாவில் நன் பொன் எனப்பட்டது. கவின் எய்திய அரிவை எனவும், ஐம்பாலையும் முள்ளெயிற்றுத் துவர் வாயினையும், திங்களவியினையுமுடைய அரிவை எனவும் கூட்டுக. மணற்கு ஈன்ற, வேற்றுமை மயக்கம். நயவன் - இசை நயம் தெரிந்து பாடு பவன். அணங்கு - தெய்வத்தன்மை. பெறுதற்கரியள் என்பது தோன்ற அணங்கு சால் அரிவை என்றான். கலங்கிய நெஞ்சிற்குச் செய்வதும் தவிர்வதும் தோன்றாவாகலின், 'கலங்கிய பொழுதில்...... என்னை யின்னற் படுத்தனை' என்றான். மறலுதல் - மாறுபடுதல், பகைத்தல். படைஞருள்ளே பலமொழி பேசுவாரும் உளராதலின், விரவு மொழிக் கட்டூர் என்றார்.

முந்நீர் முற்றி, ஓங்கு திரைப் பௌவம் நீங்க ஓட்டிய என்றது, கடல் நாப்பண் பகைவர் உறையும் தீவைச் சூழ்ந்து, அவர்க்கு அரணாகவுள்ள கடல்வலி கெடப் போக்கிய என்றவாறு. [1]பதிற்றுப் பத்தில், 'உடைதிரைப் பரப்பிற் படுகடலோட்டிய' (௪௬) என்புழி, கடலோட்டிய என்றது, 'தன்னுள் வாழ்வார்க்கு அரணாகிய கடல் வலியை அழித்த என்றவாறு' என அதன் பழைய உரைகாரர் கூறியிருப்பது காண்க; அதனாலே கடல் பிறக்கோட்டிய செங்குட்டு வன், எனக் குட்டுவன் கூறப்படுவான் ஆயினன்.

இனி, ஓட்டிய என்பதற்குப் பகைவரை ஓட்டிய என்றலுமாம். நிறம் - மார்பு; நிறத்துச் சென்றழுந்த என, நெஞ்சை உறுப்புடையது போல் கூறியது. [2]'உறுப்புடையது போல்.........நெஞ்சொடு புணர்த்து' என்பதனால் அமையும்.

## 213. பாலை

[பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.]

வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்
இனமழை தவழும் ஏற்றரு நெடுங்கோட்
டோங்குவெள் ளருவி வேங்கடத் தும்பர்க்
கொய்குழை யதிரல் வைகுபுல ரலரி
௫ சுரியிரும் பித்தை சுரும்புபடச் சூடி
இகன்முனைத் தரீஇய ஏறுடைப் பெருநிரை
நனைமுதிர் நறவின் நாட்பலி கொடுக்கும்

1. பதிற்று. ௬-ம் பத்து, பதிகம். 2. தொல். பொருளியல். ௨.

வானிணப் புகவின் வடுகர் தேஎத்து
நிழற்கவி னிழந்த நீரில் நீளிடை
க0 அழலவி ரருஞ்சுரம் நெடிய வென்று
நகற லாய்ந்தன ராயினும் பகல்செலப்
பல்கதிர் வாங்கிய படுசுட ரமையத்துப்
பெருமரங் கொன்ற கால்புகு வியன்புனத்
[1]தெரிமருள் கதிர திருமணி யிமைக்கும்
கரு வெல்போர் வானவன் கொல்லிக் குடவரை
வேயொழுக் கன்ன சாயிறைப் பணைத்தோட்
பெருங்கவின் சிதைய நீங்கி ஆன்றோர்
அரும்பெற லுலகம் அமிழ்தொடு பெறினுஞ்
சென்றுதாம் நீடலோ இலரே யென்றுங்
உ0 கலம்பெயக் கவிழ்ந்த கழறொடித் தடக்கை
வலம்படு வென்றி வாய்வாட் சோழர்
இலங்குநீர்க் காவிரி யிழிபுனல் வரித்த
அறலென நெறிந்த கூந்தல்
உறலின் சாயலொ டொன்றுதல் மறந்தே.

—[2]தாயங் கண்ணனார்.

(சொ—ள்.) க - கக. (தோழி! நம் தலைவர்,) வினை நவில் யானை விறல் போர் தொண்டையர் - போர்த்தொழில் பயின்ற யானைகளையுடைய வலிய போர் வல்ல தொண்டையரது, இனம் மழை தவழும் ஏற்று அரு நெடு கோட்டு - கூட்டமாய மேகங்கள் தவழும் ஏறுதற்கு அரிய நெடிய உச்சியினின்று இழியும், ஓங்கு வெள் அருவி - உயர்ந்து தோன்றும் வெள்ளிய அருவிகளையுடைய, வேங்கடத்து உம்பர் - வேங்கட மலைக்கு அப்பாலுள்ளதும், கொய் குழை அதிரல் வைகு புலர் அலரி - கொய்யப் பெற்ற தழைகளையுடைய காட்டு மல்லிகையின் வைகறையில் அலரும் பூவினை, சுரி இரு பித்தை சுரும்பு பட சூடி - சுருண்ட கரிய மயிரில் வண்டு மொய்க்கச் சூடி, இகல் முனை தரீஇய ஏறு உடை பெரு நிரை - பகைவர் போர்முனையில் வென்று கொண்ட ஏறுகளையுடைய பெரிய ஆனிரைக்காக, நனை முதிர் நறவின் நாள் பலி கொடுக்கும் - முதிர்ந்த கள்ளாகிய நறவினை விடியற்காலத்தே பலியாகச் செலுத்தும், வால் நிண புகவின் வடுகர் தேஎத்து - வெள்ளிய நிணச் சோற்றினையுடைய வடுகரது தேயத்தேயுள்ள, நிழல் கவின் இழந்த நீர் இல் நீள் இடை - நிழலின் அழகை இழந்த நீர் இல்லாத நீண்ட இடத்தினையுடைய, அழல் அவிர் அரு சுரம் நெடிய என்னாது - தீயின் வெப்பம் விளங்கும் அரிய காடுகள் நீண்டன என்று கருதாமல், அகறல் ஆய்ந்தனர் ஆயினும் - நம்மைப் பிரிந்து போதலைத் துணிந்தனராயினும்,

கஅ - உச. என்றும் கலம் பெயக் கவிழ்ந்த கழல் தொடித் தடக்கை - எஞ்ஞான்றும் அணிகளைப் பெய்தற்குக் கவிழ்ந்துள கழலும்

(பாடம்) 1. எரிமருள் கதிர்மணி யிமைக்கும் அத்தம். 2. தையங் கண்ணனார், இதையங் கண்ணனார்.

தொடியினை அணிந்த பெரிய கையின்கண், வலம் படு வென்றி வாய் வாட் சோழர் - வலிமையான் எய்திய வென்றி பொருந்திய தப்பாத வாளினைக் கொண்ட சோழரது, இலங்கு நீர்க் காவிரி இழிபுனல் வரித்த - விளங்கும் நீரினையுடைய காவிரியினது வடிந்த நீர் வரி வரியாகச் செய்திட்ட, அறல் என நெறிந்த கூந்தல் - கருமணல் போல வளைந்த கூந்தலையும், உறல் இன் சாயலொடு ஒன்றுதல் மறந்து - உறுதற்கு இனிய மென்மையையும் பொருந்துதலை மறந்து,

கக - எ. பகல் செல பல் கதிர் வாங்கிய படுசுடர் அமையத்து - பகற்பொழுது நீங்க ஞாயிறு தனது பல கதிர்களையும் சுருக்கிய ஒளி மழுங்கும் நேரத்தே, பெரு மரம் கொன்ற கால் புகு வியன் புனத்து - பெரிய மரத்தினை வெட்டித் தள்ளியதால் காற்றுப் புகலாகும் பெரிய கொல்லையில், எரி மருள் கதிர திருமணி இமைக்கும் - தீப்போன்ற கதிர்களையுடைய அழகிய மணி மிளிரும், வெல் போர் வானவன் கொல்லிக் குடவரை - வெல்லும் போரினையுடைய சேரனது கொல்லி மலையின் மேற்குப்பக்கத்தேயுள்ள, வேய் ஒழுக்கு அன்ன சாய் இறைப் பணைத் தோள் - மூங்கிலின் நேரிய பகுதியை ஒத்த வளைந்த முன்கையுடன் கூடிய பருத்த தோளின், பெரு கவின் சிதைய நீங்கிச் சென்று - பெரிய அழகு சிதைந்திட நீங்கிப்போய்,

ஆன்றோர் அரும் பெறல் உலகம் அமிழ்தொடு பெறினும் - தேவரது பெறலரும் விண்ணுலகை ஆண்டுள்ள அமிழ்தத்துடன் பெறுவாராயினும், தாம் நீடலோ இலர் - அவர் தாழ்ந்திருத்தல் இலராவர்.

(முடிபு) தோழி! நம் நலைவர், வேங்கடத்தும்பர் வடுகர் தேத்து அருஞ்சுரம் அகறல் ஆய்ந்தனராயினும், நின் கூந்தல் உறலின் சாயலொடு ஒன்றுதல் மறந்து பெருங் கவின் சிதைய நீங்கிச் சென்று அரும்பெறல் உலகம் அமிழ்தொடு பெறினும் நீடலோ இலர்.

(வி - ரை.) தொண்டையர் வேங்கடம் என்க. தொண்டையர் - தொண்டை நாட்டிலுள்ள பழங் குடியினர். நிரையினையும் நறவினையும் பலி கொடுக்கும் என்றலுமாம். ஆய்ந்தனராயினும் - ஆய்ந்து துணிந்தனரரயினும். ஆன்றோர் உலகம் - தேவருலகம்.

---

## 214. முல்லை

[பாசறைக்கண் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]

அகலிரு விசும்பகம் புதையப் பாஅய்ப்
பகலுடன் கரந்த பல்கதிர் வானம்
இருங்களிற் றினநிரை குளிர்ப்ப வீசிப்
பெரும்பெய லழிதுளி பொழித லானுது
ரு வேந்தனும் வெம்பகை முரணி யேந்திலை

விடுகதிர் நெடுவேல் இமைக்கும் பாசறை
அடுபுகழ் மேவலொடு கண்படை யிலனே
அமரும் நம்வயி னதுவே நமரென
நம்மறிவு [1]தெளிந்த பொம்மல் ஓதி
௧௦ யாங்கா குவள்கொல் தானே யோங்குவிடைப்
படுசுவற் கொண்ட பகுவாய்த் தெண்மணி
ஆபெயர் கோவல ராம்பலொ டளைஇப்
பையுள் நல்யாழ் செவ்வழி வகுப்ப
ஆருயி ரணங்குந் தெள்ளிசை
௧௫ மாரி மாலையுந் தமியள் கேட்டே.

—வடமவண்ணக்கன் பேரி சாத்தனார்.

(சொ - ள்.) ௧—௪. (நெஞ்சே,) அகல் இரு விசும்பு அகம் புதைய பாஅய் - அகன்ற பெரிய வானிடமெல்லாம் மறையப் பரந்து, பல் கதிர் பகல் உடன் கரந்த வானம் - பல கதிர்களையுடைய ஞாயிற்றை முழுவதும் மறைத்த மேகம், இரு களிற்று இன நிரை குளிர்ப்ப - பெரிய களிற்றின் பிடியுடன் கூடிய தொகுதி குளிர்ந்திட, பெரும் பெயல் அழிதுளி வீசி பொழிதல் ஆனாது - பெரும் பெயலாகிய மிக்க துளிகளை வீசிச் சொரிதலை அமையாது;

௫—௭. வேந்தனும் வெம்பகை முரணி - அரசனும் மிக்க பகையொடு மாறுபட்டு, ஏந்து இலை விடுகதிர் நெடுவேல் இமைக்கும் பாசறை - நிமிர்ந்த இலையினையுடைய ஒளிவிடுகின்ற நீண்ட வேல் மின்னும் பாசறைக்கண் உளனாயிருந்து, அடுபுகழ் மேவலொடு கண் படை இலனே - பகையை வெல்லுதலால் எய்தும் புகழினை விரும்பித் துயிலுதல் செய்திலன்;

௮. அமரும் நம்வயினதுவே - போரின் பொறை நம்மைச் சார்ந்துளது;

௮—௯. நமர் என - நம் கேளிர் என்று, நம் - நம்மை, அறிவு தெளிந்த - தன் அறிவினால் தெருண்ட, பொம்மல் ஓதி - பொலிவுற்ற கூந்தலையுடைய நம் தலைவி,

௧௦—௫. ஓங்கு விடை படுசுவல் கொண்ட பகுவாய்த் தெள் மணி - உயர்ந்த ஏற்றின் பொருந்திய பிடரிற் கட்டிய பெரிய வாயினையுடைய தெளிந்த ஒலியினதாகிய மணியின் ஓசையையும், ஆபெயர் கோவலர் ஆம்பலொடு அளைஇ - ஆக்களை மீட்டுவரும் கோவலர் புல்லாங்குழலுடன் பொருந்த, பையுள் நல்யாழ் செவ்வழி வகுப்ப - பிரிந்தார்க்குத் துன்பினைத் தரும் நல்ல யாழின்கண்ணே செவ்வழிப் பண்ணைப் பாட, ஆர் உயிர் அணங்கும் தெள் இசை - அரிய உயிர்களை வருத்தும் அத் தெள்ளிய ஓசையையும், மாரி மாலையும் தமியள் கேட்டு - மாரிக்காலத்து மாலையிலும் தனியளாயிருந்து கேட்டலின், யாங்கு ஆகுவள் கொல்லோ - எந்நிலையினை அடைவாளோ.

---

(பாடம்) 1. தெளிர்ந்த.

(முடிபு) நெஞ்சே! வானம் பெரும்பெயல் வீசி அழிதுளி பொழிதல் ஆனது; வேந்தனும் பாசறை புகழ் மேவலொடு கண்படையிலன்; நமரென நம்மைத் தெளிந்த பொம்மல் ஓதி, மணியின் ஓசையையும் தெள்ளிசையையும் மாரி மாலையிலும் தமியள் கேட்டு யாங்காகுவள் கொல்லோ.

(வி - ரை.) வேந்தனும் வெம்பகை முரணி புகழ் மேவலொடு கண்படையிலன் என்றமையால், மாற்றார் பணிந்து திறை கொடுக்கவும், புகழ் விருப்பினால் அரசன் மேலும் போர் புரியக் கருதியுள்ளான் என்பதும், அமரும் நம்வயினது என்றமையால், அப்போரினை நடத்தும் கடப்பாடு தனக்கு உளதென்பதும் கூறினான். நாம் இங்கே இவ்வாறிருக்க, அவட்கு வருவேம் எனக் குறித்த கார் வந்து விட்டமையாலும், ஏற்றின் கழுத்திற் கட்டிய மணியோசையும் குழலுடன் கூடிய யாழிசையும் மாலைப்பொழுதிலே தமியளாய்க் கேட்டலாலும் நம் காதலி எத்தகைய துன்பமுறுவளோ எனத் தலைமகன் தன் நெஞ்சிற்கு இரங்கிக் கூறினானென்க. அமரும் நம்வயினது என்றமையால், தலைவன் அரசனுக்குப் படைத் தலைவனோ அன்றி நட்பாளனோ ஆதல் வேண்டும். நமர் எனத் தெளிந்த ஓதி என்க. அறிவு - தன் அறிவினாலே; நாம் கூறித் தெளிவித்த உரைகளால் என்றுமாம். ஆம்பல் என்றது குழல்.

(மே - ள்.) [1]'ஏவன் மரபின் ஏனோரு முரியர்' என்னுஞ் சூத்திரத்து, இவ்வகப்பாட்டும் பொருணோக்கினால் தூது கண்டு வருந்திக் கூறியது என்பர் நச்.

---

## 215. பாலை

[செலவுணர்த்திய தோழி தலைமகள் குறிப்பறிந்து தலைமகனைச் செலவழுங்குவித்தது.]

விலங்கிருஞ் சிமையக் குன்றத் தும்பர்
வேறுபன் மொழிய தேஎம் முன்னி
வினைநசை இப் பரிக்கும் உரன்மிகு நெஞ்சமொடு
புனைமாண் எஃகம் வலவயின் ஏந்திச்
௫ செலன்மாண் புற்ற நும்வயின் வல்லே
வலனா கென்றலும் நன்றுமற் றில்ல
கடுத்தது பிழைக்குவ தாயிற் றொடுத்த
கைவிரற் கவ்வுங் கல்லாக் காட்சிக்
கொடுமரம் பிடித்த கோடா வன்கண்
௧௦ வடிநவில் அம்பின் ஏவ லாடவர்
ஆளறுத் துயர்த்த அஞ்சுவரு பதுக்கைக்
கூர்நுதிச் செவ்வா யெருவைச் சேவல்
படுபிணப் பைந்தலை தொடுவன குழீஇ
மல்லன் மொசிவிர லொற்றி மணிகொண்டு

1. தொல். அகத். உச.

௧௫ வல்வாய்ப் பேடைக்குச் சொரியு மாங்கட்
கழிந்தோர்க் கிரங்கு நெஞ்சமொ
டொழிந்திவ ணுறைத லாற்று வோர்க்கே.

—இறங்குகுடிக் குன்ற நாடன்.

(சொ - ள்.) ௭—௧௭. கடுத்தது பிழைக்குவதாயின் - குறித்த இலக்குத் தப்புவதாயின், தொடுத்த கைவிரல் கவ்வும் - அம்பினைத் தொடுத்த கைவிரலை வாயாற் கவ்விக்கொள்ளும், கல்லாக் காட்சி - கல்லாத அறிவினையும், கொடுமரம் பிடித்த கோடா வண்கண் - வில்லை ஏந்திய மாறுத கொடுமையையும், வடிநவில் அம்பின் ஏவல் ஆடவர் - வடித்தல் செய்த அம்பினையுமுடைய ஏவலராய மறவர்கள், ஆள் அழித்து உயர்த்த அஞ்சுவரு பதுக்கை - வழிப்போகும் ஆட்களைக் கொன்று அவர்களை யிட்டு மூடிய கண்டார்க்கு அச்சம் வரும் கற் குவியல்களில், கூர்நுதிச் செவ்வாய் எருவைச் சேவல் - கூரிய அல கினைக் கொண்ட சிவந்த வாயினையுடைய ஆண் பருந்துகள், படு பிணப் பைந்தலை தொடுவன குழீஇ - இறந்துபட்ட பிணங்களின் பசிய தலையினைத் தோண்டுவனவாகிக் கூடி, மல்லல் மொசிவிரல் ஒற்றி - வலிய நெருங்கிய விரலால் தோண்டி, மணி கொண்டு - கண்மணியைப் பெயர்த்துக்கொண்டு, வல்வாய்ப் பேடைக்குச் சொரியும் ஆங்கண் - வலிய வாயினையுடைய தம் பேடைகட்குச் சொரியும் அவ்விடத்தே, கழிந்தோர்க்கு இரங்கும் நெஞ்சமொடு - பிரிந்து சென்றார்க்கு இரங்கியொழியும் நெஞ்சத்துடன், ஒழிந்து இவண் உறைதல் ஆற்றுவோர்க்கு - அவர் தம்மைப் பிரிந்து இங்கே தங்குதல் வல்லார்க்கு,

௧—௫. (தலைவ), விலங்கு இருசிமையக் குன்றத்து உம்பர் - குறுக் காகவுள்ள பெரிய உச்சியினையுடைய மலைக்கு அப்பாலுள்ள, வேறுபல் மொழிய தேஎம் முன்னி - வேறுபட்ட பல மொழிகள் வழங்கும் தேயத்தைக் கொள்ளக் கருதி, வினை நசைஇப் பரிக்கும் உரன்மிகு நெஞ்சமொடு - போர்த் தொழிலை விரும்பிச் செலுத்தும் துணிவுமிக்க உள்ளத்துடன், புனைமாண் எஃகம் வலவயின் ஏந்தி - அழகிய மாண்புற்ற வேலை வலக்கையின் ஏந்தி, செலல்மாண்பு உற்ற நும்வயின் - செல்லுதல் மாட்சியுற்ற நும்மிடத்தே,

௫—௬. வல்லே வலன் ஆக என்றலும் நன்று - விரைந்து வெற்றி மேவுக என்று கூறி விடுத்தலும் நன்றாகும்; மன் - யாம் அங்ஙனம் பிரிந்துறைதல் ஆற்றுவேம் அல்லேம்; என் செய்வேம்.

(முடிபு) (தலைவ), எருவைச் சேவல் மணிகொண்டு பேடைக்குச் சொரியும் ஆங்கண் கழிந்தோர்க்கு இரங்கும் நெஞ்சமொடு இவண் உறைதல் ஆற்று வோர்க்கு, குன்றத்து உம்பர் தேஎம் முன்னி வினை நசைஇப் பரிக்கும் நெஞ்சமொடு செலன் மாண்புற்ற நும்வயின், வலனாகென்றலும் நன்று; யாம் அங்ஙனம் பிரிந்து றைதல் ஆற்றுவேம் அல்லேம் ; என்செய்வேம்.

(வி - ரை.) தேஎம் முன்னி - தேயத்தைக் கொள்ளக் கருதி யென்க. பரிக்கும் - செலுத்தும். வலனாக என்றலும் - வெற்றி உண்டாக என்று கூறி விடுத்தலும் என விரித்துரைக்க. ஆக, ஈறு

தொக்கது. மன், ஒழியிசை. தில்ல, அசைச் சொல் ஈறு திரிந்தது. -டுத்தது - குறித்த இலக்கு ; வினைப்பெயர். மணி - விழி.

(மே - ள்.) [1]'வேந்து வினையியற்கை' என்னுஞ் சூத்திரத்து, முடியுடை வேந்தர்க்குரிய தொழிலாகிய இலக்கணங்கள்............குறுநில மன்னரிடத்தும் பொருந்தும் இடனுடையது என்றுரைத்து, அதற்கு உதாரணமாக 'விலங்கிருஞ் சிமயக் குன்றத்தும்பர்...........செலன் மாண்புற்ற' என்ற அடிகளைக் காட்டி, 'வேறுபன் மொழிய தேஎத்தைக் கொள்ளக் கருதிப் போர்த்தொழிலைச் செலுத்தும் உரன்மிக்க நெஞ்சமென்றலின், இது குறுநில மன்னன் தன் பகைவயின் நாடு கொள்ளச் சென்றதாம், வேந்தன் எனப் பெயர் கூறுமையின்' என்றார் நச்.

---

## 216. மருதம்

[தலைமகட்குப் பாங்காயினார் கேட்பத் தனக்குப் பாங்காயினார்க்குப் பரத்தை சொல்லியது.]

நாண்கொ ளுண் கோலின் மீன்கொள் பாண்மகள்
[2]தான்புன லடைகரைப் படுத்த வராஅல்
நாரரி நறவுண் டிருந்த தந்தைக்கு
வஞ்சி விறகிற் சுட்டுவா யுறுக்குந்
௫ தண்டுறை யூரன் பெண்டி ரெம்மைப்
பெட்டாங்கு மொழிப வென்ப அவ்வலர்ப்
பட்டன மாயின் இனியெவ னாகியர்
கடலாடு மகளிர் கொய்த ஞாழலுங்
கழனி யுழவர் குற்ற குவளையுங்
௧௦ கடிமிளைப் புறவிற் பூத்த முல்லையொடு
பல்லிளங் கோசர் கண்ணி யயரும்
மல்லல் யாணர்ச் செல்லிக் கோமான்
எறிவிடத் துலையாச் செறிசுரை வெள்வேல்
ஆத னெழினி யருநிறத் தழுத்திய
௧௫ பெருங்களிற் றெவ்வம் போல
வருந்துவர் மாதவர் சேரியாஞ் செலினே.

—ஐயூர் முடவனார்.

(சொ - ள்.) ௧—௪. நாண் கொள் நுண் கோலின் மீன்கொள் பாண்மகள் - கயிற்றினைக் கொண்ட நுண்ணிய தூண்டிற் கோலால் மீனைப் பிடிக்கும் பாணரது மகள், புனல் அடைகரைப் படுத்த வராஅல் - புனலை அடுத்த கரையில் அகப்படுத்திய வரால்மீனை, நார் அரி நறவு உண்டு இருந்த தந்தைக்கு - பன்னாடையால் அரிக்கப் பெற்ற கள்ளை யுண்டு களித்திருந்த தன் தந்தைக்கு, வஞ்சி விறகில்

---

1. தொல், அகத். ௬௨. (பாடம்) 2. தண்புனல்.

சுட்டு - வஞ்சி மரத்தின் விறகினுற் சுட்டு, வாய் உறுக்கும் - வாயில் உண்பிக்கும், தண் துறை ஊரன் பெண்டிர் - குளிர்ந்த துறையினை யுடைய ஊரனது பெண்டிர்கள், எம்மைப் பெட்டாங்கு மொழிப என்ப - எம்மைத் தம் மனம் விரும்பியபடி யெல்லாம் இகழ்ந்துரைப் பர் என்பார்கள் ;

௬—எ. அ அலர் பட்டனமாயின் - அந்த அலர் மேவப் பெற்றேமா யின், இனி எவன் ஆகியர் - இப்பொழுது யாதேனும் ஆக ;

அ—௧௬. அவர் சேரி யாம் செலினே - அவர்தம் சேரிக்கண் யாம் செல்வேமாயின், கடல் ஆடு மகளிர் கொய்த ஞாழலும் - கடலாடும் பெண்டிர் கொய்துவந்த புலிநகக் கொன்றைப் பூவினையும், கழனி உழவர் குற்ற குவளையும் - வயலில் உழுவோர் பறித்துவந்த குவளைப் பூவினையும், கடி மிளைப் புறவில் பூத்த முல்லையொடு - காவற் காட் டினையுடைய முல்லை நிலத்தே பூத்த முல்லைப் பூவுடன் சேர்த்து, பல் இளம் கோசர் கண்ணி அயரும் - பல இளைய கோசர்கள் கண்ணி யாகக் கட்டி விளையாடும், மல்லல் யாணர் செல்லிக் கோமான் - மிக்க வளம் பொருந்திய செல்லூர் மன்னனாகிய, ஆதன் எழினி - ஆதன்எழினி என்பான், எறிவிடத்து உலையா செறி சுரை வெள் வேல் - மாற்றார் மீது எறியுமிடத்துச் சிதையாத சுரை செறிந்த வெள்ளிய வேலை, அரு நிறத்து அழுத்திய பெரு களிற்று எவ்வம் போல - தனது அரிய மார்பில் பாய்ச்சப் பெற்ற பெரிய களிற்றின் துன்பம்போல, வருந்துவர் - வருந்தமுறுவர்.

(முடிபு) தண்டுறை யூரன் பெண்டிர் எம்மைப் பெட்டாங்கு மொழிப என்ப ; அவ்வலர் பட்டனமாயின் இனி யாதேனும் ஆக ; அவர் சேரி யாம் செலினே, ஆதன் எழினி வேல் நிறத்து அழுத்திய களிற்றின் எவ்வம்போல் வருந்துவர்.

(வி - ரை.) பெண்டிர் - தலைமகளும் அவள் தோழியரும். ஞாழ லும் குவளையும் முல்லையொடு கண்ணி அயரும் என நெய்தற்கும் முல்லைக்கும் உரிய பூக்கள் மருதத்திற்கண் வந்தமை [1]'எந்நில மருங் கிற் பூவும் புள்ளும், அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும், வந்த நிலத்தின் பயத்த வாகும்' என்பதனால் அமையும். செல்லிக் கோமா னாகிய ஆதன் எழினி வெள்வேல் அழுத்திய பெருங்களிற்று எவ்வம் என்க. தனக்குப் பாங்காயினாரை உளப்படுத்தி, யாம் செலின் என் றாள். தான், மாது என்பன அசைகள்.

---

## 217. பாலை

[பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் ஆற்றாமை மீதூரச் சொல்லியது.]

[2]பெய்துபுலந் திறந்த பொங்கல் வெண்மழை
எஃகுறு பஞ்சித் துய்ப்பட் டன்ன
துவலை தூவல் கழிய அகல்வயல்

---

1. தொல், அகத் - ௧௯. (பாடம்) 2. பெய்துபுறந்தந்த.

நீடுகழைக் கரும்பின் கணைக்கால் வான்பூக்
ரு கோடைப் பூளையின் வாடையொடு துயல்வரப்
பாசிலைப் பொதுளிய புதலொறும் பகன்றை
நீலுண் பச்சை நிறமறைத் தடைச்சிய
தோலெறி பாண்டிலின் வாலிய மலரக்
கோழிலை யவரைக் [1]கொழுமுகை யவிழ
க0 ஊழுறு தோன்றி யொண்பூத் தளைவிடப்
புலந்தொறுங் [2]குருகினம் நரலக் கல்லென
அகன்றுறை மகளி ரணிதுறந்து நடுங்க
அற்சிரம் வந்தன் றமைந்தன் றிதுவென
எப்பொருள் பெறினும் பிரியன்மி னோவெனச்
கரு செப்புவல் வாழியோ துணையுடை [3]யீர்க்கென
நல்காக் காதலர் நலனுண்டு துறந்த
பாழ்படு மேனி நோக்கி நோய்பொர
இணரிறு புடையு நெஞ்சமொடு புணர்வுவேட்
டெயிறுதீப் பிறப்பத் திருகி
உ0 நடுங்குதும் பிரியின்யாங் கடும்பனி யுழந்தே.

—கழார்க் கீரனெயிற்றியார்.

(சொ - ள்.) க—கங. (தோழி,) பெய்து புலம் திறந்த பொங்கல் வெண்மழை - பெய்து பின் திசைகளை வெளியாக்கிய பொங்கிய வெண்மேகம், எஃகுறு பஞ்சி துய் பட்டன்ன - கடையப் பெற்ற பஞ்சானது மென்மை யுற்றாற் போன்ற, துவலை தூவல் கழிய - சிறிய துளியைத் தூவுதலையும் ஒழிய, அகல் வயல் நீடு கழைக் கரும்பின் கணைக் கால் வான் பூ - அகன்ற வயலிலுள்ள நீண்ட தண்டினையுடைய கரும்பின் திரண்ட காம்புடைய பெரிய பூக்கள், கோடை பூளையின் வாடையொடு துயல்வர - கோடைக் காலத்துப் பூளைப் பூப்போல வாடைக் காற்றால் அசைந்திட, பசு இலை பொதுளிய புதல்தொறும் பகன்றை - பசிய இலை நெருங்கிய புதல்தோறும் பகன்றையானது, நீல் உண் பச்சை நிறம் மறைத்து அடைச்சிய - நீலம் ஊட்டப்பெற்ற தோலினது நிறம் மறையும்படி பதித்த, தோல் எறி பாண்டிலின் - கிடுகிற் பதித்த வட்டக் கண்ணுடிபோல, வாலிய மலர - வெள்ளியன வாக மலர, கோழ் இலை அவரை கொழுமுகை அவிழ - கொழுத்த இலையினையுடைய அவரையின் வளவிய அரும்புகள் விரிய, ஊழ் உறு தோன்றி ஒண் பூ தளைவிட - முறையாக முற்றிய தோன்றியின் ஒள்ளிய பூக்கள் பிணிப்பு விட, புலம்தொறும் குருகு இனம் கல் என நரல - புலங்கடோறும் பறவைகளின் கூட்டம் கல்லென்று ஒலிக்க, அகன்று உறை மகளிர் அணி துறந்து நடுங்க - தம் தலைவரைப் பிரிந்து தங்கிய மகளிர் அழகிழந்து நடுங்க, அற்சிரம் வந்தன்று - பனிப்பருவம் வந்து விட்டது (ஆதலால்),

கங—ரு. அமைந்தன்று இது என - இப் பருவம் பொருள் வயிற் பிரிவார்க்கு ஏற்ற தொன்றென எண்ணி, எப் பொருள் பெறினும்

(பாடம்) 1. கொழுமுகையுடைய. 2. குயினரல. 3. யீர்க்கே.

பிரியன்மின் என - எத்துணைச் சிறந்த பொருளைப் பெறுவதாயினும் பிரியாதிர் என்று, துணையுடையீர்க்குச் செப்புவல் - எங்கட்குத் துணையாகவுள்ள நுமக்குச் செப்புவேன், என - என்று நீ நம் தலைவர்க்குக் கூறவும்,

கக—உ0. நல்காக் காதலர் - அருள் செய்யாத காதலர், பிரியின் - நம்மைப் பிரிந்து செல்வரேல், யாம் - நாம், நலன் உண்டு துறந்த பாழ்படு மேனி நோக்கி - (அவர்) நமது நலத்தினை நுகர்ந்து கைவிட்ட பாழ்பட்ட மேனியைக் கண்டு, நோய் பொர - நோய் வருத்த, இணர் இறுபு உடையும் நெஞ்சமொடு - மதுகை இற்று உடையும் நெஞ்சத்துடன், புணர்வு வேட்டு - அவர் புணர்தலை விரும்பி, கடும்பனி உழந்து - கடிய பனியால் வருந்தி, எயிறு தீ பிறப்பத் திருகி - பற்களைத் தீயுண்டாகக் கடித்து, நடுங்குதும் - நடுங்குவேம்.

(முடிபு) (தோழி!) நீ, அற்சிரம் வந்தன்று; இது அமைந்தன்றென எப்பொருள் பெறினும் பிரியன்மினோ எனத் துணையுடையீர்க்குச் செப்புவல் என நல்காக் காதலர் பிரியின், யாம் மேனி நோக்கி உடையும் நெஞ்சமொடு புணர்வு வேட்டுக் கடும்பனி யுழந்து, திருகி, நடுங்குதும்.

தூவல் கழிய, வான் பூ வாடையொடு துயல்வர, பகன்றை வாலிய மலர, அவரை முகை யவிழ, தோன்றிப் பூ நனைவிட, குருகினம் நரல, மகளிர் நடுங்க, அற்சிரம் வந்தன்று என்க.

(வி - ரை.) பாசிலை பொதுளிய புதல்தொறும் பகன்றை இடையிடையே மலர்ந்திருப்பது, நீலநிறமுடைய தோற்கிடுகில் இடையிடை பதித்த கண்ணுடி போலும் என்க. பச்சை - தோல். பாண்டில் - கண்ணுடி. தோல் - தோலால் ஆகிய கிடுகு. [1]'பாண்டில் நிரை தோல்' என்பதன் உரை காண்க. அற்சிரம் என்றது ஈண்டுப் பின்பனிக் காலத்தை. துணை யுடையீர்க்குப் பிரியன்மினோ எனச் செப்புவல் எனவும் என்று இயையும். 'துணையுடையீர்க்கெனஎன்று பழைய பதிப்பிற்காணப்பட்ட பாடத்தினைக் கொண்டு, எனவும் என உம்மை விரித்து உரைக்கப்பட்டது; 'துணையுடையீர்க்கே' என்னும் பாடத்திற்குப் பிரியன்மின் என்று தலைவர்க்கு நீ சொல்லுமாறு எனக்குத் துணையாகவுள்ள நினக்கு யான் செப்புவல் என்று தலைவி தோழிக்குக் கூறினளாகக் கொள்க.

---

## 218. குறிஞ்சி

[தோழி தலைமகளை இடத்துய்த்து வந்து பகற்குறி நேர்ந்த வாய்பாட்டாற் றலைமகனை வரைவுகடாயது.]

> கிளைபா ராட்டுங் கடுநடை வயக்களிறு
> முளைதரு பூட்டி வேண்டு[2]குள கருந்த
> வாணிற வுருவின் ஒளிறுபு மின்னிப்
> பருஉவுறைப் பஃறுளி சிதறிவான் நவின்று

1. புறப்பொருள் வெண்பா மாலை. சு - கஉ. (பாடம்) 2. குளகருந்த.

௫ பெருவரை நளிர்சிமை அதிர வட்டித்துப்
புயலே றுரைஇய வியலிருள் நடுநாள்
விறலிழைப் பொலிந்த காண்பின் சாயற்
றடைஇத் திரண்டநின் றோள்சேர் பல்லதைப்
படாஅ வாகுமெங் கண்ணென நீயும்
௧0 இருண்மயங் கியாமத் தியவுக்கெட விலங்கி
வரிவயங் கிரும்புலி வழங்குநர்ப் பார்க்கும்
பெருமலை விடரகம் [1]வரலரி தென்றாய்
வரவெளி தாக வெண்ணுதி அதனான்
நுண்ணிதிற் கூட்டிய படுமா ணாரந்
௧௫ தண்ணிது கமழும் நின்மார் பொருநாள்
அடைய முயங்கே மாயின் யாமும்
விறலிழை நெகிழச் சாஅய்தும் அதுவே
அன்னை யறியினு மறிக அலர்வாய்
அம்பன் மூதூர் கேட்பினுங் கேட்க
௨0 வண்டிறை கொண்ட வெரிமருள் தோன்றியொடு
ஒண்பூ வேங்கை கமழுந்
தண்பெருஞ் சாரற் பகல்வந் தீமே.

—கபிலர்.

(சொ - ள்.) ௧ - ௬ கிளை பாராட்டும் கடு நடை வயக்களிறு - (தலைவ) தன் இனங்கள் பாராட்டும் கடிய செலவினையுடைய வலிய களிறு, முளை தருபு ஊட்டி வேண்டு குளகு அருத்த - மூங்கில் முளைகளை அவற்றிற்கு உண்பித்து வேண்டும் தழைகளையும் உண்பிக்க, வாள் நிற உருவின் ஒன்றுபு மின்னி - வாளின் நிறம்போலும் உருவுடன் ஒளிருமாறு மின்னி, பரூஉ உறைப் பல் துளி சிதறி - பரிய பலவாகிய மழைத் துளிகளைச் சிதறி, வான் நவின்று - வானிலே பயின்று, பெரு வரை நளிர் சிமை அதிர வட்டித்து - பெரிய மலையின் குளிர்ந்த உச்சி அதிரச் சூழ்ந்துகொண்டு, புயல் - மேகமானது, ஏறு உரைஇய வியல் இருள் நடுநாள் - இடியேற்றுடன் பரந்த மிக்க இருள் கொண்ட நடு இரவில்,

௭ — ௯. விறல் இழைப் பொலிந்த காண்பு இன் சாயல் - மேம்பட்ட அணிகளாற் பொலிவுற்ற காண்டற்கினிய மென்மைத் தன்மையினதாய், தடைஇ திரண்ட நின்தோள் சேர்பு அல்லதை - வளைந்து திரண்ட நின் தோளைச் சேர்ந்தாலல்லது, படாஅ ஆகும் எம் கண் என - எம் கண்கள் துயிலாவாகும் என்று கூறி,

௯ — ௧௩. நீயும் இருள் மயங்கு யாமத்து - நீயும் இருள் செறிந்த நடு யாமத்தே, இயவு கெட விலங்கி - நெறி தடுமாறலான் விலகி, வரி வயங்கு இரும் புலி வழங்குநர்ப் பார்க்கும் - வரிகள் விளங்கும் பெரிய புலி வழி வருவாரைப் பார்த்திருக்கும், பெருமலை விடர் அகம் வர அரிது என்றாய் - பெரிய மலையின் பிளப்பினையுடைய

(பாடம்) 1. வரவரிதென்றாய்.

இடத்தில் வருதல் அரிதென்று நினையாயாய், வர எளிதாக எண்ணுதி - வரற்கு எளிதென்று எண்ணுகின்றனை;

கச - எ. நுண்ணிதில் கூட்டிய படு மாண் ஆரம் - நுண்மையாக அறிந்து பல மணங்களைக் கலந்த மாண்பு பொருந்திய சந்தனம், தண்ணிது கமழும் நின் மார்பு - தண்ணெனக் கமழும் நின் மார்பினை, ஒரு நாள் - ஒரு நாளேனும், அடைய முயங்கேம் ஆயின் - பொருந்தத் தழுவேமாயின், யாமும் - யாங்களும், விறல் இழை நெகிழச் சாஅய்தும் - மேம்பட்ட அணி நெகிழ்ந்து விழ மெலிவேம்;

கூ—அதனால்—,

கஎ—உஉ. அதுவே - அதனை, அன்னை அறியினும் அறிக - எம் அன்னை அறிந்திடினும் அறிந்திடுக, அலர் வாய் அம்பல் மூதூர் கேட்பினும் கேட்க - அலர் கூறும் பெண்டிரது வாயினின்று வரும் பழிச்சொற்களை முதிய எம் மூர் கேட்பினும் கேட்பதாக, வண்டு இறை கொண்ட எரிமருள் தோன்றியொடு - வண்டுகள் தங்குதல் கொண்ட தீயினை ஒத்த தோன்றிப் பூவுடன், ஒண் பூ வேங்கை கமழும் - ஒள்ளிய வேங்கைப் பூ நாறும், தண் பெரும் சாரல் - தண்ணிய பெரிய மலைச் சாரலில், பகல் வந்தீமே - பகலில் வருவீராக.

(முடிபு) தலைவ! புயல் ஏறுடன் உரைஇய நடுநாள் நீயும் நின்தோள் சேர்பு அல்லதை எம்கண் படாஅவாகும் என விடரகம் வர எண்ணுதி; யாமும் நின் மார்பு ஒருநாள் முயங்கேம் ஆயின் இழை நெகிழச் சாய்தும்; அதனால், அதுவே அன்னை அறியினும் அறிக; மூதூர் கேட்பினும் கேட்க; தோன்றியொடு வேங்கை கமழும் சாரல் பகல்வந்தீமே.

(வி - ரை.) கிளைபாராட்டும் - கிளையினைப் பாராட்டும் என்றுமாம். ஒளிறுபு - ஒளிர என்க. தடைஇ - பருத்து என்றுமாம். சேர்பு - சேர்ந்தால் என்னும் பொருட்டு. நீயும் என்னும் எண்ணுதி என இயையும். அடைய - முற்றும் என்றுமாம். எண்ணுதி, சாய்தும் அதனால் பகல் வந்தீமே எனக் கொண்டுகூட்டி யுரைக்க. அதுவே என்றது, பகல் வருதலை. அன்னை அறியினும் அறிக, அம்பல் மூதூர் கேட்பினும் கேட்க என்றது, பகற் குறிக்கும் இடையீடு உளதாதல் புலப்படுத்தியவாறு.

(உ - றை.) "கிளைபா ராட்டும் கடுநடை வயக்களிறு, முளைதரு பூட்டி வேண்டுகுள கருத்த' என்றது, நீயும் தலைவியை வரைந்துகொண்டு இல்லறம் நிகழ்த்திச் சுற்றஞ் சூழ வாழவேண்டும் என்றவாறு.

(மே - ள்.) [1]'முதல்கரு உரிப்பொருள்' என்னுஞ் சூத்திரத்து, இச் செய்யுளை இத் துறைக்கே கொண்டு, இது குறிஞ்சிக்கு முதலும் கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது என்றார் நச்.

---

1. தொல். அகத். ந.

## 219. பாலை

[மகட் போக்கிய தாய் சொல்லியது.]

சீர்கெழு வியனகர்ச் சிலம்புநக வியலி
ஓரை யாயமொடு பந்துசிறி தெறியினும்
வாரா யோவென் றேத்திப் பேரிலைப்
பகன்றை வான்மலர் பனிநிறைந் ததுபோற்
௫ பால்பெய் வள்ளஞ் சால்கை பற்றி
என்பா டுண்டனை யாயி னொருகால்
நுந்தை பாடு முண்ணென் றூட்டிப்
[1]பிறந்ததற் கொண்டும் சிறந்தவை செய்தியான்
நலம்புனைந் தெடுத்தவென் பொலந்தொடிக் குறுமகள்
௧௦ அறனி லாளனொ டிறந்தனள் இனியென
மறந்தமைந் திராஅ நெஞ்சம் நோவேன்
பொன்வார்ந் தன்ன வைவா லெயிற்றுச்
செந்நாய் வெரீஇய புகருழை யொருத்தல்
பொறியரை விளவின் புன்புற விளைபுழல்
௧௫ அழலெறி கோடை தூக்கலிற் கோவலர்
குழலென நினையும் நீரில் நீளிடை
மடத்தகை மெலியச் சாஅய்
நடக்குங் கொல்லென நோவல் யானே.

—கயமனார்.

(சொ - ள்.) ௧—௯. சீர் கெழு வியன் நகர் சிலம்பு நக இயலி - சிறப்புப் பொருந்திய பெரிய மனையின்கண் தன் சிலம்பு ஒலித்து விளங்க நடந்து, ஓரை ஆயமொடு பந்து சிறிது எறியினும் - விளையாடும் ஆய மகளிருடன் பந்தினைச் சிறிது எறிந்தாலும், வாராயோ என்று ஏத்தி - இங்கு வருவாயாக என்று அழைத்துப் பாராட்டி, பேர் இலைப் பகன்றை வால் மலர் பனி நிறைந்தது போல் - பெரிய இலையினையுடைய பகன்றையின் வெள்ளிய பூ பனிநீர் நிறையப் பெற்றது போல, பால் பெய் வள்ளம் சால்கை பற்றி - பால் பெய்யப் பெற்ற கிண்ணம் நிறைந்ததனைப் பற்றிக்கொண்டு, என்பாடு உண்டனையாயின் - என் பகுதிக்கு இதனை உண்டாயானால் (இனி), ஒருகால் நுந்தை பாடும் உண் என்று ஊட்டி - ஒரு முறை உன் தந்தையின் பகுதிக்கும் உண்பாயாக என்று கூறி யான் உண்பித்து, பிறந்ததற் கொண்டும் சிறந்தவை செய்து - அவள் பிறந்தநாள் தொட்டும் சிறப்புக்களைச் செய்து, யான் நலம் புனைந்து எடுத்த என் பொலம் தொடிக் குறுமகள் - நான் இங்ஙனம் நலம்பாராட்டி வளர்த்த பொன் வளையல் அணிந்த எனது சிறிய மகள்,

௧௦—௧. அறன் இலாளனொடு இறந்தனள் இனி என - அறநெறியில்லாதவனொடு இப்பொழுது கடந்து சென்றுள் என்று, மறந்து

(பாடம்) 1. பிறந்ததற்கொன்றும்.

அமைந்து இரா நெஞ்சம் நோவேன் - சிறிதும் மறந்திருத்தலில்லாத நெஞ்சத்தால் வருந்துவேன் அல்லேன்;

கஉ—அ. பொன் வார்ந்தன்ன வை வால் எயிற்று - பொற் கம்பி யிழுத்தா லொத்த கூரிய வெள்ளிய பற்களையுடைய, செந்நாய் வெரீஇய புகர் உழை ஒருத்தல் - செந்நாயினை அஞ்சிய புள்ளிகளையுடைய கலைமான், பொறி அரை விளவின் புல் புற விளை புழல் - பொறிகள் பொருந்திய அரையினை யுடைய விளவின்கனியின் புல்லிய ஓட்டில் தோன்றிய துளையில், அழல் எறி கோடை தூக்கலின் - வெப்பத்தைக் கொண்டு வீசும் மேல்காற்று நுழைந்து இசைத்தலின், கோவலர் குழல் என நினையும் - கோவலரது குழலோசை என நினைந்து (பாதுகாவலாக) ஆங்குச் செல்லும், நீர் இல் நீள் இடை - நீர் இல்லாத நீண்ட நெறியில், மடத் தகை மெலியச் சாஅய் - தனது மடப்பத்தையுடைய அழகு கெட மெலிந்து, நடக்குங்கொல் என யான் நோவல் - நடப்பளோ எனவே யான் நோகின்றேன்.

(முடிபு) யான் நலம் புனைந்தெடுத்த குறுமகள், அறனில் வாளனொடு இனி இறந்தனள் என நெஞ்சம் நோவேன்; நீரில் நீளிடை மெலியச் சாஅய் நடக்கும் கொல்லென யான் நோவல்.

(வி - ரை.) மனையிலே இயலிப் பந்து சிறி தெறியினும் வாராயோ என்று அழைத்தாள் என்பது தலைவியின் மென்மைத் தன்மையினையும், பால் பெய் வள்ளம் பற்றி, என்பாடுண்டனையாயின் ஒருகால் நுந்தைபாடும் உண்ணென் றாட்டிஞெ ளென்பது, அவளது செல்வக் களிப்பையும் உணர்த்தியபடியாம். பாடு - கூறு, பங்கு. செல்வக் குடியிற் பிறந்து உணவு விருப்பின்றி யிருக்கும் சிறுவர் சிறுமியரைத் தாய்மார் இவ்வாறெல்லாம் கூறி உண்பித்தல் இயல்பு.

செந்நாய் வெரீஇய உழை ஒருத்தல், குழல் என நினைந்து பாதுகாவலாகச் செல்லும் என்க.

---

## 220. நெய்தல்

[இரவுக்குறி வந்து நீங்கும் தலைமகனை யெதிர்ப்பட்டுத் தோழி சொல்லியது.]

ஊருஞ் சேரியும் உடனியைந் தலரெழத்
தேரொடு மறுகியும் பணிமொழி பயிற்றியும்
கெடாஅத் தீயி னுருகெழு செல்லூர்க்
கடாஅ யானைக் [1]குழூஉச்சமந் ததைய
ரு மன்மருங் கறுத்த மழுவா ளெடியோன்
முன்முயன் றரிதினின் முடித்த வேள்விக்
கயிறரை யாத்த காண்டகு வனப்பின்
அருங்கடி நெடுந்தூண் போல யாவருங்
காண லாகா மாணெழி லாகம்
க0 உள்ளுதொறும் பனிக்கு நெஞ்சினை நீயே

(பாடம்) 1. குரூஉச்சமம்.

நெடும்புற [1]நிலையினை வருந்தினை யாயின்
முழங்குகட லோதங் காலைக் கொட்கும்
பழம்பல் நெல்லின் ஊணூ ராங்கண்
நோலா [2]விரும்புட் போல நெஞ்சமர்ந்து
௧௫ காதன் மாறாக் காமர் புணர்ச்சியின்
இருங்கழி முகந்த செங்கோ லவ்வலை
முடங்குபுற இறவோ டினமீன் செறிக்கும்
நெடுங்கதிர்க் கழனித் தண்சாய்க் கானத்து
யாணர்த் தண்பணை யுறுமெனக் கானல்
௨௦ ஆய மாய்ந்த சாயிறைப் பணைத்தோள்
நல்லெழில் சிதையா வேமஞ்
சொல்லினித் தெய்யயாந் தெளியு மாறே.

—மதுரை மருதனிளநாகனார்.

(சொ - ள்.) ௧—௨. ஊரும் சேரியும் உடன் இயைந்து அலர் எழ - ஊரின் கண்ணும் சேரியின் கண்ணும் ஒருங்கே சேர்ந்து அலர் எழாநிற்க, தேரொடு மறுகியும் பணிமொழி பயிற்றியும் - தேரொடு வந்து திரிந்தும் பணிந்த மொழிகளைப் பலகாற் கூறியும்,

௩—௧௧. கெடாத் தீயின் உருகெழு செல்லூர் - என்றும் நீங்காத வேள்வித் தீயினையுடைய அழகு விளங்கும் செல்லூரின் கண், கடாஅ யானைக் குழூஉச் சமம் ததைய - மதம்பொருந்திய யானையின் கூட்டம் போர்முனையில் அழிய, மன் மருங்கு அறுத்த மழுவாள் நெடியோன் - மன்னர் வழியை அழித்த பரசுராமன், முன் முயன்று அரிதினில் முடித்த வேள்வி - முன்பு அரிதினில் முயன்று முடித்த வேள்விக்கண், கயிறு அரை யாத்த காண்டகு வனப்பின் - கயிற்றினை அரையிற் சுற்றிய காணத்தக்க அழகினையுடைய, அரும் கடி நெடு தூண் போல - அரிய காவலைக் கொண்ட நீண்ட வேள்வித்தூண் போல, யாவரும் காணல் ஆகா மாண் எழில் ஆகம் - யாவரும் காணுதல் இயலாத மாண்புற்ற அழகினையுடைய எம் தலைவியின் மார்பினை, உள்ளு தொறும் பனிக்கும் நெஞ்சினையாகி - நினையுந்தொறும் நடுங்கும் நெஞ்சினையுடையை யாகி, நீயே நெடும்புற நிலையினை வருந்தினையா யின் - நீதான் புறத்திலே நெடிது நிற்றலை யுடையையாகி வருந்தினை யாதலின்,

௧௨—௫. முழங்கு கடல் ஓதம் காலை கொட்கும் - முழங்கும் கடலின் திரைகள் காலையில் அலையும், பழம் பல் நெல்லின் ஊணூர் ஆங்கண் - மிகுதியான பழைய நெல்லையுடைய ஊணூரிடத்து, நோலா இரும் புள் போல - ஒன்றை யொன்று பிரிந்திருத்தலைப் பொறுத பெரிய பறவையாய மகன்றிலைப்போல, நெஞ்சு அமர்ந்து - ஒருவர் நெஞ்சிலே ஒருவர் பொருந்தி, காதல் மாறா காமர் புணர்ச்சியின் - காதல் நீங்காத அழகிய புணர்ச்சியினாலே,

(பாடம்) 1. நிலையின் வருந்தினை. 2. இருபுள்.

கசா—உஉ. இரு கழி முகந்த செங்கோல் அவ்வலை - பெரிய கழியைத் துழவி முகந்த நேரிய கோல்களையுடைய அழகிய வலை, முடங்கு புற இறவோடு இன மீன் செறிக்கும் - வளைந்த புறத்தினை யுடைய இறாமீனுடன் ஏனை மீன் இனங்களையும் குவிக்கும், நெடு கதிர்க் கழனி தண் சாய்க்கானத்து - நீண்ட கதிர்களையுடைய வயல் களையுடைய தண்ணிய சாய்க்கானம் என்னும் ஊரிடத்துள்ள, யாணர் தண்பணை உறும் என - அழகிய குளிர்ந்த மூங்கிலை ஒக்கும் என்று, கானல் ஆயம் ஆய்ந்த - கடற்சோலையில் தோழிமார் ஆய்ந்து பாராட்டிய, சாய் இறைப் பணைத் தோள் - வளைந்த முன் கையினை யுடைய பருத்த இவள் தோள்கள், நல் எழில் சிதையா ஏமம் - நல்ல அழகு கெடாமைக்கு ஏதுவாய பாதுகாவலை, யாம் தெளியுமாறு இனிச் சொல் - யாம் தெளிய உணருமாறு இப்பொழுது நீ கூறுவா யாக.

(முடிபு) தலைவ! நீயே தேரொடு மறுகியும் பணிமொழி பயிற்றியும், நெடி யோன் முடித்த வேள்வி நெடுந்தூண் போலக் காணலாகா எழில் ஆகம் உள்ளு தொறும் பனிக்கும் நெஞ்சினையாகி, நெடும்புற நிலையினை வருந்தினையாதலான், நோலா இரும்புட் போலக் காமர் புணர்ச்சியின்றி, இவள் பணைத்தோள் எழில் சிதையா ஏமம் யாம் தெளியுமாறு சொல்.

(வி - ரை.) சேரி - ஊரின் ஒரு பகுதி; தெரு. [1]'ஓரூர் வாழினுஞ் சேரி வாரார்' என்பது காண்க. கெடாத்தீ - நீங்காத வேள்வித் தீ. உரு கெழு - உட்குப் பொருந்திய என்றுமாம். மருங்கு - வழி. மழுவாள் - மழுவாகிய வாளென இருபெயரொட்டு. மழு - பரசு. பரசிராமன் நெடுமாலின் தோற்றமாகலின் நெடி யோன் என்றார். செல்லூர்க்கண் நெடியோன் முடித்த வேள் வித் தூண்போலக் காணலாகா ஆகம் என்க. வருந்தினை யாயின் - வருந்தினை யாதலின் என்க. இரும் புள் - காதலிற் சிறந்த மகன்றில்; மகன்றிற் பறவைகள், ஆணும் பெண்ணும் சிறிதும் பிரிந்திருக்கப் பெறாதன என்பது [2]'பூவிடைப் படினும் யாண்டு கழிந் தன்ன, நீருறை மகன்றிற் புணர்ச்சி போலப், பிரிவரி தாகிய தண் டாக் காமம்' என்பதனால் அறிக. சாய்க்கானம் - திருச் சாய்க்காடு என்னும் பதி. தெய்ய, அசைச்சொல். நீ தேரொடு வந்து திரிந்தும் குறையிரந்தும் செல்லுதலால், ஊரும் சேரியும் அலர் உண்டாக, அதனால், தலைவி இற் செறிக்கப்பட்டு நின்னாற் காண்டற்கு அரிய ளாக இருத்தலின், நீ அவள் ஆகத்தை நினையுந்தொறும் நடுங்கும் நெஞ்சுடன் பலகாலும் வந்து புறத்தே நின்று வருந்தி வறிது மீள் கின்றனை; அதனால், தலைவியின் தோளும் எழில் சிதைகின்றது; இனி அவ்வாறு சிதையாமைக்கு ஏதுவாகிய ஏமம் இன்னதென யாம் தெளிந்திலேமாகலின் அதனைத் தெளியுமாறு நீ கூறுக என்பாள் போன்று, நீ தலைவியை வரைந்து கொள்ளுதலே பாதுகாவலாகும் எனக் குறிப்பிற் புலப்படுத்தித், தோழி தலைவனை வரைவு கடாயினாள் என்க.

---

1. குறுந். ௨௩௧. 2. குறுந். ௫௭.

## 221. பாலை

[தலைமகற்குப் போக்குடன்பட்ட தோழி, தலைமகட்குப் போக்குடன் படச் சொல்லியது.]

நனைவிளை நறவின் தேறல் மாந்திப்
புனைவினை நல்லிற் றருமணற் குவைஇப்
பொம்ம லோதி யெம்மகள் மணனென
வதுவை யயர்ந்தனர் நமரே அதனாற்
௫ புதுவது புனைந்த [1]சேயிலை வெள்வேல்
மதியுடம் பட்ட மையணற் காளை
[2]வாங்குசினை மலிந்த திரளரை மராஅத்துத்
தேம்பாய் மெல்லிணர் தளிரொடு கொண்டுநின்
தண்ணறு முச்சி புனைய அவனொடு
௧௦ கழைகவின் போகிய மழையுயர் நனந்தலைக்
களிற்றிரை பிழைத்தலிற் கயவாய் வேங்கை
காய்சினஞ் சிறந்து குழுமலின் வெரீஇ
இரும்பிடி யிரியுஞ் சோலை
அருஞ்சுரம் சேறல் அயர்ந்தனென் யானே.

—கயமனார்.

(சொ - ள்.) ௧—௪. நனை விளை நறவின் தேறல் மாந்தி - அரும்பினின்றும் உண்டாகிய கள்ளின் தெளிவைப் பருகி, புனைவினை நல் இல் தருமணல் குவைஇ - புனையப்பட்ட வினைத்திறம் அமைந்த நல்ல மனையிலே கொணர்ந்த மணலைக் குவித்துப் பரப்பி, பொம்மல் ஓதி எம் மகள் மணன்என - பொலிவுற்ற கூந்தலையுடைய எம் மகளுக்கு மணம் என்று கூறி, வதுவை அயர்ந்தனர் நமர் - நம் தாய் தந்தையர் மணத்திற்கு ஆவன செய்துளார்;

௪—௧௪. அதனால்—, புதுவது புனைந்த சேய் இலை வெள் வேல் - புதிதாகச்செய்யப்பட்ட செவ்விய இலைபொருந்திய வெள்ளிய வேலையுடைய, மதி உடம்பட்ட - உடன் போக்கிற்கு இயைந்த அறிவினையுடைய, மை அணல் காளை - கரிய தாடியினையுடைய காளைபோன்ற நம் தலைவன், வாங்கு சினை மலிந்த திரள் அரை மராஅத்து - வளைந்த கிளைகள் மிக்க திரண்ட அரையினையுடைய வெண் கடப்ப மரத்தின், தேம் பாய் மெல் இணர் தளிரொடு கொண்டு - தேன் பாயும் மெல்லிய பூங் கொத்துக்களைத் தளிருடன் கொண்டுவந்து, நின் தண் நறும் முச்சி புனைய - நினது தண்ணிய நல்ல மயிர் முடியிற்சூட, அவனொடு - அத்தலைவனுடன், கழை கவின் போகிய மழை உயர் நனந்தலை - மூங்கில்கள் அழகிழந்த மழை பெய்யாது மேலேசென்ற அகன்ற பாலையிடத்தே, களிறு இரை பிழைத்தலின் கயவாய் வேங்கை - களிறாகிய இரை தப்பிவிட்டமையின் பெரிய வாயினையுடைய வேங்கை, காய் சினம் சிறந்து குழுமலின் வெரீஇ -

(பாடம்.) 1. செயலை வெள்வேல். 2. வாங்கு சினை கொய்த.

கொதிக்கும் சினம் மிக்கு முழங்குதலின் அஞ்சி, இரும்பிடி இரியும் சோலை அரும் சுரம் சேறல் - கரிய பெண்யானைகள் நிலைகெட்டு ஓடும் காட்டினையுடைய அரிய சுரநெறியிற் செல்லுதலை, யான் அயர்ந்தனென் - யான் விரும்பி ஏற்றுக் கொண்டேன்.

(முடிபு) நமர் எம்மகள் மணன் என வதுவை அயர்ந்தனர்; அதனால், மதியுடம்பட்ட காளை மெல்லிணர் தளிரொடு கொண்டு நின் முச்சி புனைய அவனொடு நீ அரும் சுரம் சேறல், யான் அயர்ந்தனென்.

(வி - ரை.) வதுவை அயர்ந்தனர் நமர் என்றது, நமர் வேற்று வரைவினை உடன்பட்டார் என்றபடி. அருஞ்சுரம் சேறல் அயர்ந்தனென் என்றது தலைவனுடன் போக்குடன்பட்டேன் என்றவாறு. புதுவது புனைந்த சேயிலை வெள்வேற் காளை என்றமையால், அவன், காட்டிடையே எத்துணையும் ஏதமின்றிக் காக்கவல்லன் என்பதும், மெல்லிணர் தளிரொடு கொண்டு நின் முச்சி புனைய என்றமையால், சுரத்திலே நடந்து செல்லும் வருத்தம் தோன்றுவாறு அன்பினால் நின்னைப் பாராட்டி அழைத்தேகுவன் என்பதும் கூறியவாறும்.

## 222. குறிஞ்சி

[தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லியது.]

வானுற நிவந்த நீனிறப் பெருமலைக்
கான நாடன் உறீஇய [1]நோய்க்குன்
மேனி யாய்நலந் தொலைதலின் மொழிவென்
முழவுமுகம் புலராக் கலிகொ ளாங்கட்
௫ கழாஅர்ப் பெருந்துறை விழவி னாடும்
ஈட்டெழிற் பொலிந்த ஏந்துகுவவு மொய்ம்பின்
ஆட்ட னத்தி நலனயந் துரைஇத்
தாழிருங் கதுப்பிற் காவிரி வவ்வலின்
மாதிரந் துழைஇ மதிமருண் டலந்த
௧௦ ஆதி மந்தி காதலற் காட்டிப்
படுகடல் புக்க பாடல்சால் சிறப்பின்
மருதி யன்ன மாண்புகழ் பெறீஇயர்
சென்மோ வாழி தோழி பன்னாள்
உரவுரும் ஏறொடு மயங்கி
௧௫ இரவுப் பெயல் பொழிந்த ஈர்ந்த ணாறே.

—பரணர்.

(சொ - ள்.) ௧௩. தோழி—, வாழி—,

௧—௩. வான் உற நிவந்த நீல் நிறப் பெருமலைக்கான நாடன் - வானில் மிக உயர்ந்த நீல நிறம் பொருந்திய பெருமலையினை அடுத்துள்ள காட்டு நாட்டினையுடைய தலைவன், உறீஇய நோய்க்கு உன் மேனி ஆய் நலம் தொலைதலின் மொழிவென் - அடைவித்த நோயால்

(பாடம்.) 1. நோய்க்கன்.

நினது மேனியின் ஆய்ந்த அழகு ஒழிதலின் யான் இதனை கூறுவேன், கேட்பாயாக;

சா—அ. முழவு முகம் புலரா கலிகொள் ஆங்கண் - முழவின் ஒலி மாறுத ஆரவாரம் நிகழும் இடமாகிய, கழார்அர் பெரும் துறை விழவின் ஆடும் - கழார் என்னுமிடத்துள்ள பெரிய துறையிடத்து விழாவில் ஆடிய, ஈட்டு எழில் பொலிந்த ஏந்து குவவு மொய்ம்பின் - திரண்ட அழகாற் பொலிவுற்ற நிமிர்ந்த திரண்ட தோளினையுடைய, ஆட்டன் அத்தி நலன் நயந்து உரைஇ - ஆட்டனத்தி என்பான் அழகினை விரும்பிப் பரந்துவந்து, தாழ் இரு கதுப்பின் காவிரி வவ்வலின் - தாழ்ந்து தொங்கும் கரிய கூந்தலையுடைய காவிரி கவர்ந்து கொண்டமையின்,

கூ—கஉ. மாதிரம் துழைஇ மதி மருண்டு அலந்த ஆதி மந்தி - திசையெல்லாம் தன் கணவனைத் தேடி மதிமயங்கி வாடிய அவன் மனையாள் ஆகிய ஆதி மந்திக்கு, காதலன் காட்டி - அவள் காதலனைக் காட்டி, படு கடல் புக்க பாடல் சால் சிறப்பின் மருதி அன்ன - ஒலிக்கும் கடலிற் புக்கு மறைந்த பாடுதல் அமைந்த சிறப்பினையுடைய மருதியை யொத்த, மாண் புகழ் பெறீஇயர் - சிறந்த புகழைப் பெறும் பொருட்டு,

கங—ரு. பல் நாள் உரவு உரும் ஏறொடு மயங்கி - பல நாளும் வலிய இடி யேற்றுடன் கூடி, இரவு பெயல் பொழிந்த ஈர் தண் ஆறு - இரவெல்லாம் மழை சொரிதலின் ஈரம் மிக்க சேற்று நெறியில் (நம் தலைவனைத் தேடி), சென்மோ - செல்வோமாக.

(முடிபு) தோழி வாழி, நின் மேனி நலம் தொலைதலின், மொழிவென்; ஆட்டனத்தி நலம் நயந்து காவிரி வவ்வலின், அவனை ஆதிமந்திக்குக் காட்டிக் கடலிற் புக்க மருதி யன்ன புகழ் பெறீஇயர், ஈர்ந்தண் ஆறு சென்மோ.

(வி - ரை.) நோய்க்கென்மேனி என்பது பாடமாயின் [1]'தாயத்தினடையா' என்னுஞ் சூத்திர விதியால், தோழி தலைவி உறுப்பைத் தன்னுறுப்பாகக் கொண்டு கூறினளென்க. ஆதிமந்தி காதலற் கெடுத்து அலமந்த செய்தி இந்நூலுள் வேறு செய்யுட்களிலும் கூறப்பட்டுள்ளது; [2]'வாடல் உழிஞ்சில்' என்னும் செய்யுளின் உரையிற் காண்க. ஆட்டனத்தியைக் காவிரி வவ்விச் சென்றதனை அவனது நலம் நயந்து கவர்ந்து சென்றதாகத் தற்குறிப்பேற்ற வகையாற் கூறினார். காவிரியைப்பெண்ணாக உருவகித்தமைக்கேற்ப, தாழிருங் கதுப்பின் என அடை கொடுக்கப்பட்டது. காதலற் காட்டிப் படுகடல் புக்க மருதி என்றமையால், மருதி யென்பாள் தன்னுயிர்க்கு அஞ்சாது கடலிற் சென்று, ஆதிமந்திக்கு அவள் கணவனைக் காட்டித் தான் உயிர் விடுத்தாள் என்பது போதரும். அதனால் அவள் புகழ் மிகச் சிறந்த தாயினமையின், மருதி யன்ன 'மாண்புகழ்' எனப்பட்டது. மருதி யன்ன மாண்புகழ் பெறீஇயர் சென்மோ என்று தோழி கூறியது நாமும் தலைவனைத் தேடிச்

---

1. தொல். பொருளி. உஎ. 2. அகம் சுரு.

சென்று அவனைக் காணமாட்டாது உயிர் துறந்தே மாயினும் அதனால் விழுப்புகழ் எய்துவேம் என்பாள்போன்று தலைமகனை வரைவு கடாயினவாறென்க. செல்கம் என்பது சென்மோ என விகாரமாயிற்று.

---

## 223. பாலை

[பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.]

பிரிதல் வல்லியர் இதுநத் துறந்தோர்
மறந்தும் அமைகுவர் கொல்லென் றெண்ணி
ஆழல் வாழி தோழி கேழல்
வளைமருப் புறழு முளை[1] நெடும் பெருங்காய்
டு நனைமுதிர் முருக்கின் சினைசேர் பெருங்கல்
காய்சினக் கடுவளி எடுத்தலின் [2]வெங்காட்டு
அழல்பொழி யானையின் ஐயெனத் தோன்றும்
நிழலில் ஓமை நீரில் நீளிடை
இறந்தன ராயினுங் காதலர் நம்வயின்
கo மறந்துகண் படுதல் யாவது புறந்தாழ்பு
அம்பணை நெடுந்தோட் டங்கித் தும்பி
அரியினங் கடுக்குஞ் சுரிவணர் ஐம்பால்
[3]நுண்கே ழடங்க வாரிப் பையுள்கெட
நன்முகை அதிரற் போதொடு குவளைத்
கரு தண்ணறுங் கமழ்தொடை வேய்ந்தநின்
மண்ணார் கூந்தல் மரீஇய துயிலே.

—பாலை பாடிய பெருங்கடுங்கோ.

(சொ - ள்.) க—ங. தோழி—, வாழி—, பிரிதல் வல்லியர் நத் துறந்தோர் - நம்மைப்பிரிதற்கு மனவலி எய்தினாராகி அங்ஙனம் நம்மைப் பிரிந்து சென்றார், மறந்தும் அமைகுவர் கொல் என்று இது எண்ணி - நம்மை மறந்து தங்குதலும் செய்வரோ என்று இதனை எண்ணி, ஆழல் - துயரில் அழுந்தாதே ;

ங—கo. கேழல் வளை மருப்பு உறழும் உளை நெடு பெரும்காய் - பன்றியின் வளைந்த கொம்பினை ஒத்த ஆர்க்கினையுடைய நெடிய பெரிய காயினையுடைய, நனை முதிர் முருக்கின் சினைசேர் பெருங்கல்- அரும்பு முதிர்ந்த முருக்க மரத்தின் கிளை பொருந்திய பெரிய கல்லானது, காய் சின கடு வளி எடுத்தலின் - மிக்க வேகமுடைய கடிய காற்று மூட்டுதலின், வெம் காட்டு அழல் பொழி யானையின் ஐ எனத் தோன்றும் - வெம்மை மிக்க காட்டில் அழலால் மூடப்பெற்ற யானையைப்போன்று வியப்புறத் தோன்றும், நிழல் இல் ஓமை நீர் இல்

---

(பாடம்.) 1. நெடும் பொங்கர். 2. வெங்கட். 3. நுண்டுகளடங்க.

நீள் இடை - நிழலற்ற ஓமை மரத்தினையுடைய நீர் இல்லாத நீண்ட சுரத்தை, இறந்தனர் ஆயினும் - கடந்து சென்றனராயினும், காதலர் - நமது காதலர்,

௯—௧௬. புறம் தாழ்பு - புறத்தில் தாழ்ந்து, அம்பணை நெடு தோள் தங்கி - அழகிய மூங்கில் போன்ற நீண்ட தோளிற் படிந்து, தும்பி அரி இனம் கடுக்கும் - தும்பி வண்டின் கூட்டத்தை ஒக்கும், சுரி வணர் நுண் கேழ் ஐம்பால் - சுரிந்து வளைந்த நுண்ணிய கரு நிறம் வாய்ந்த கூந்தலை, பையுள் கெட அடங்க வாரி - வருத்தம் ஒழிய முழுவதும் வாரி, நல் முகை அதிரல் போதொடு - காட்டு மல்லிகையின் நல்ல அரும்புடன் கூடிய மலரொடு, தண் நறும் குவளைக் கமழ் தொடை வேய்ந்த - தண்ணிய நறிய குவளைமலரை வைத்துத் தொடுத்த நாறும் மாலையைச் சூட்டிய, நின் மண் ஆர் கூந்தல் மரீஇய துயில் - நினது மண்ணுதல் அமைந்த கூந்தலிற் பொருந்திய துயிலை, நம் வயின் — நம்மிடத்தே தங்கிப் பெறுதலை, மறந்து கண் படுதல் யாவது - மறந்து ஆங்குத் துயிலுதல் எங்ஙனம் இயல்வது?

(முடிபு) தோழி, வாழி, நத் துறந்தோர், மறந்தும் அமைகுவர்கொல் என்று இரு எண்ணி ஆழல்; நம் காதலர், நீரில் நீளிடை இறந்தனராயினும், நின் மண்ணார் கூந்தல் மரீஇய துயில் மறந்து கண்படுதல் யாவது?

(வி - ரை.) முருக்கின் செந்நிறப் பூக்களாற் சூழப் பெற்ற கல் காட்டிலே அழலாற் சூழப் பெற்ற யானைபோலத் தோன்று மென்றார். காய் சினக் கடு வளி எடுத்தலின் என்றது, காட்டிலே அழல் சூழ்தற்கு ஏதுக் கூறியபடியாம். அழல் பொதி யானை யெனப் பாடம் கொள்ளலுமாம். தோன்றும் நீளிடை எனவும், ஓமை நீள் இடை எனவும், நீரில் நீளிடை எனவும் தனித்தனி கூட்டுக. மண் - கழுவுதல்; முதனிலைத் தொழிற் பெயர். காதலர் கூந்தல் மரீஇய துயிலை மறந்து ஆண்டுக் கண்துயில் செய்யாராதலின், விரைந்து வருவர் எனக் கூறி, தோழி தலைமகளை ஆற்றுவித்தாளென்க.

---

## 224. முல்லை

[வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.]

செல்க பாக எல்லின்று பொழுதே
வல்லோ னடங்குகயி றமைப்பக் கொல்லன்
விசைத்து வாங்கு துருத்தியின் வெய்ய உயிராக்
கொடுநுகத் தியாத்த தலைய கடுநடைக்
௫ காற்கடுப் பன்ன கடுஞ்செலல் இவுளி
பால்கடை நுரையின் பரூஉமிதப் பன்ன
வால்வெண் டெவிட்டல் வழிவார் நுணக்கஞ்
சிலம்பி நூலி னுணங்குவன பாறிச்
சாந்துபுல ரகலம் மறுப்பக் காண்டகப்
௧௦ புதுநலம் பெற்ற வெய்துநீங்கு புறவில்

தெறிநடை மரைக்கணம் இரிய மனையோள்
ஐதுணங்கு வல்சி பெய்துமுறுக் குறுத்த
திரிமரக் குரலிசை கடுப்ப வரிமணல்
அலங்குகதிர்த் திகிரி ஆழி போழ
கரு வருங்கொல் தோழிநம் இன்னுயிர்த் துணையெனச்
சில்கோல் எல்வளை யொடுக்கிப் பல்கால்
அருங்கடி வியனகர் நோக்கி
வருந்துமால் அளியள் திருந்திழை தானே.

—[1]ஆவூர் மூலங்கிழார் மகனார் பெருந்தலைச் சாத்தனார்.

(சொ-ள்.) கரு. தோழி—,

உ—கரு. வல்லோன் அடங்கு கயிறு அமைப்ப - வல்லோனாகிய பாகன் அடங்கிச் செல்வதற்கு உரிய கடிவாளக் கயிற்றினைப் பூட்ட, கொல்லன் விசைத்து வாங்கு துருத்தியின் வெய்ய உயிரா - கொல்லன் வலித்து இழுக்கும் துருத்தியினைப்போல வெப்பமாகப் பெருமூச்சுவிட்டு, கொடு நுகத்து யாத்த தலைய - வளைந்த நுகத்திடத்தே கட்டப்பெற்ற தலையினவாகிய, கடு நடை கால் கடுப்பு அன்ன கடும் செலல் இவுளி - கடிய நடையினையும் காற்றின் வேகத்தை யொத்த விரைந்த ஓட்டத்தினையுமுடைய குதிரைகளின், பால் கடை நுரையின் பரூஉ மிதப்பு அன்ன - பால் கடையுங்கால் எழும் வெண்மையின் பெரிய மிதப்பினை யொத்த, வால் வெண் தெவிட்டல் வழி வார் நுணக்கம் - மிக வெள்ளியதான வாயின் தெவிட்டலாய பின்னே வழிந்திடும் மெல்லிய நுரை, சிலம்பி நூலின் நுணங்குவன பாறி - சிலம்பியின் நூல்போல நுணுகுவனவாய்ச் சிதறி, சாந்து புலர் அகலம் மறுப்ப - சந்தனம் பூசிப் புலர்ந்த மார்பில் மறுச்செய்யவும், காண்தக புதுநலம் பெற்ற வெய்து நீங்கு புறவில் - அழகுபெறப் புது நலத்தினைப்பெற்ற வெம்மை நீங்கிய காட்டில், தெறி நடை மரைக் கணம் இரிய - குதித்துச் செல்லும் மரையினங்கள் அஞ்சியோடவும், மனையோள் ஐது உணங்கு வல்சி பெய்து முறுக்கு உறுத்த - மனைவி பதமாகக் காய்ந்த அரிசியைப் பெய்து சுற்றுதல் செய்த, திரிமரக் குரலிசை கடுப்ப - சுழலும் திரிகையின் குரலொலி ஒக்க, வரி மணல் - வரிப்பட்ட மணலில், அலங்கு கதிர் திகிரி ஆழி போழ - சுழலும் கதிரினையுடைய வட்ட ஆழி அறுத்துக் கொண்டு செல்லவும், நம் இன் உயிர்த்துணை வரும் கொல் என - நமது இனிய உயிர்த்துணைவராய காதலர் வருவர்கொல் என்று,

கசு—அ. சில் கோல் எல் வளை ஒடுக்கி - சிலவாய திரண்ட ஒளி பொருந்திய வளையினை யொடுக்கி, பல் கால் அருங்கடி வியன் நகர் நோக்கி - பலமுறை அரிய காவலுடைய பெரிய மனையின் புறத்தே வந்து பார்த்து, அளியள் திருந்து இழை - இரங்கத்தக்காளாகிய திருந்திய அணியினையுடைய நம் காதலி, வருந்தும் - வருந்துவாள் :

(பாடம்.) 1. ஆவூர் கிழார் மகன் பெருஞ்சாத்தன்.

க. எல்லின்று பொழுதே - பொழுதும் இரவாயிற்று ஆதலின், செல்க பாக - பாகனே விரைந்து நம் தேர் செல்வதாக.

(முடிபு) 'தோழி ! இன்னுயிர்த்துணை வருங்கொல்' எனப் பல்கால் வியனகர் நோக்கி அளியள் திருந்திழை வருந்தும்; பொழுதும் எல்லின்று ; பாக, (தேர்) செல்க.

(வி - ரை.) செல்க - செலுத்துக எனப் பிறவினைப் பொருட்டாக் கலுமாம். இவுளியின் தெவிட்டல் என்க. தெவிட்டல் - வாய் குதட்டுதலால் உண்டாகும் விலாழிநீர். மறுப்ப - மறுச்செய்ய. 'காண்டகப் புது நலம் பெற்ற வெய்து நீங்கு புறவில்' என்றமை யால், கார்ப்பருவம் வந்தமை பெற்றும். முறுக்குறுத்த - சுழற்றி விட்ட. திரிமரம் - இது திரிகை என வழங்கும். திகிரியாய ஆழி என இருபெயரொட்டுமாம். கழலும் வளைகளைச் செறித்து என்பான், எல்வளை ஒடுக்கி என்றான்.

---

## 225. பாலை

[பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.]

அன்பும் மடனுஞ் சாயலும் இயல்பும்
என்பு நெகிழ்க்குங் கிளவியும் பிறவும்
ஒன்றுபடு கொள்கையொ டோராங்கு முயங்கி
இன்றே யிவணை மாகி நாளைப்
ரு புதலிவ ராடமைத் தும்பி குயின்ற
அகலா அந்துளை கோடை முகத்தலின்
நீர்க்கியங் கினநிரைப் பின்றை வார்கோல்
ஆய்க்குழற் பாணியி னேதுவந் திசைக்குந்
தேக்கமல் சோலைக் கடறோங் கருஞ்சுரத்
கல யாத்த தூணித் தலைநிறந் தவையோற்
பூத்த விருப்பைக் குழைபொதி குவியிணர்
கழறுளை முத்திற் செந்நிலத் துதிர
மழைதுளி மறந்த அங்குடிச் சீறூர்ச்
சேக்குவங் கொல்லோ நெஞ்சே பூப்புனை
கரு புயலென ஒலிவருந் தாழிருங் கூந்தற்
செறிதொடி முன்கைநங் காதலி
அறிவனுர் நோக்கமும் புலவியும் நினைந்தே.

—எயினந்தை மகனார் இளங்கீரனார்.

(சொ - ள்.) கச - நெஞ்சே—,

க—ச. அன்பும் மடனும் சாயலும் இயல்பும் - அன்பும் மடனும் மென்மையும் ஒழுக்கமும், என்பும் நெகிழ்க்கும் கிளவியும் - என்பை யும் நெகிழ்விக்கும் சொல்லும், பிறவும் - ஏனையவும், ஒன்றுபடு

கொள்கையொடு - தலைவியுடன் ஒன்றுபட்டுள்ள நற்கொள்கை யுடையேமாய், ஓராங்கு முயங்கி - ஒருபெற்றியே தழுவி, இன்று இவணம் ஆகி - இன்று இவ்விடத்தேம் ஆகி,

ச—கங. நாளை - நாளைப் போழ்தில், புதல் இவர் ஆடு அமை - புதல்கள் பரந்த இடத்தேயுள்ள அசையும் மூங்கிற்கண்ணே, தும்பி குயின்ற அகலா அம்துளை - வண்டு துளைத்த குறுகிய அழகிய துளை வழியே, கோடை முகத்தலின் - மேல்காற்றுப் புகுந்து வருதலின் (எழும் ஒலி), நீர்க்கு இயங்கு இன நிரைப்பின்றை - நீர்பருகச் செல்லும் கூட்டமாய ஆனிரைக்குப்பின்னே வரும், வார்கோல் ஆய்க் குழல் பாணியின் ஐது வந்து இசைக்கும் - நீண்ட கோலினையுடைய ஆயர்தம் குழலின் இசையென அழகிதாக வந்து ஒலிக்கும், தேக்கு அமல் சோலை கடறு ஓங்கு அருசுரத்து - தேக்குமரங்கள் நிறைந்த சோலையினையுடைய காடு உயர்ந்த அரிய பாலைவழியிலுள்ள, யாத்த தூணி தலைதிறந்தவைபோல் - அம்புகளைத் தொகுத்த புட்டில்கள் மூடி திறக்கப்பெற்றனபோற் காணப்பெறும், பூத்த இருப்பைக் குழை பொதி குவி இணர் - பூத்துள இருப்பையின் தளிர் பொதியப் பெற்ற குவிந்த (துளையுடைய) பூங்கொத்துக்கள், கழல் துளை முத்தில் செந்நிலத்து உதிர - நூலினின்று கழன்று விழும் துளை பொருந்திய முத்தைப்போல சிவந்த நிலத்தே உதிர, மழைதுளி மறந்த - மழை பெய்தலை மறந்த இடமாய, அம்குடி சீறூர் - அழகிய குடிகளையுடைய சிறிய ஊரின்கண்ணே,

கச—எ. பூ புனை புயல் என ஒலிவரும் தாழ் இரு கூந்தல் - பூவாற் புனையப்பெற்ற மேகம்போலத் தழைத்த தாழ்ந்த கரிய கூந்தலினையும், செறிதொடி முன்கை - நெருங்கிய வளைகளையுடைய முன்கையினையும் உடைய, நம் காதலி அறிவு அஞர் நோக்கமும் புலவியும் நினைந்து - நம் காதலியின் அறிவு கலங்கிய பார்வையினையும் புலவியினையும் நினைந்து, சேக்குவம் கொல்லோ - (தனித்துத்) தங்கியிருப்பேமோ.

(முடிபு) நெஞ்சே! தலைவியுடன் ஓராங்கு முயங்கி இன்றே இவணமாகி, நாளை, அருஞ்சுரத்துச் சீறூர், காதலி நோக்கமும் புலவியும் நினைந்து சேக்குவம் கொல்லோ.

(வி - ரை.) அன்பு - ஒருவரை யொருவர் இன்றியமையாமைக் கேதுவாகிய காதல். மடன் - ஒருவர் குற்றம் ஒருவர் அறியாமை. சாயல் - மென்மைத் தன்மை. இயல்பு - ஒழுக்கம். [1]"சால்பும் வியப்பும் இயல்பும்" என்பதின் உரை காண்க. பிற என்றது செறிவு, நிறை, அறிவு முதலாயினவற்றை. ஒன்றுபடு கொள்கை என்றமையால் இவையெல்லாம் தலைவனுக்கும் தலைவிக்கும் ஒத்திருத்தல் வேண்டும் என்றவாறாயிற்று. இனி, தலைவி, அன்பு முதலிய யாவும் ஒன்றிய கொள்கையை யுடைமையினாலே அவனுடன் ஓராங்கு முயங்கி என்றலுமாம். கடறு - கற்காடு. இருப்பையின்

1. குறிஞ்சிப். கரு.

அரும்பு அம்புக் குப்பி போலுமாகலின், தூணித்தலை திறந்தவை போல் இருப்பைக் குழை பொதி குவியிணர் என்றார். [1]'வில்லோர் தூணி வீங்கப் பெய்த, அப்பு நுனை யேய்ப்ப அரும்பிய இருப்பை' என முன் வந்தமையுங் காண்க. இருப்பையின் குவியிணர் முத்துப் போற் செந்நிலத் துதிர்ந்து கிடத்தலால் அழகு பெற்ற குடியிருப் பினையுடைய சீறூர் என்க. இன்று நம்மாற் பாராட்டப்பெற்று மகிழ்ச்சியுடன் இருக்கும் நம் காதலி, நாளை நம்மைப் பிரிந்து ஒப் பனை செய்யாத கூந்தலும், தொடி நெகிழும் கையும், கலங்கிய நோக் கமும், அதனால் வெறுப்பும் உடையள் ஆதலை நினைந்து சீறூரில் தங்கி யிருப்போம்போலும் என்றான் என்க.

---

## 226. மருதம்

[தலைமகற்குத் தோழி வாயின் மறுத்தது.]

உணர்குவெ னல்லென் உரையல்நின் மாயம்
நாணிலை மன்ற யாண ரூர
அகலு ளாங்கண் அம்பகை மடிவைக்
குறுந்தொடி மகளிர் குரூஉப்புனன் முனையிற்
ரு பழனப் பைஞ்சாய் கொழுதிக் கழனிக்
கரந்தையஞ் செறுவின் வெண்குரு கோப்பும்
வல்வி லெறுழ்த்தோட் பரதவர் கோமான்
பல்வேன் மத்தி கழாஅர் முன்றுறை
நெடுவெண் மருதொடு வஞ்சி சாஅய்
க0 விடியல் வந்த பெருநீர்க் காவிரித்
தொடியணி முன்கை நீவெய் யோளொடு
முன்ற ளாடிய கவ்வை யிந்நாள்
வலிமிகு முன்பிற் பாணனொடு மலிதார்த்
தித்தன் வெளிய னுறந்தை நாளவைப்
கரு பாடின் றெண்கிணைப் பாடுகேட் டஞ்சிப்
போரடு தானைக் கட்டி
பொராஅ தோடிய ஆர்ப்பினும் பெரிதே.

—பரணர்.

(சொ - ள்.) க—உ. யாணர் ஊர - புது வருவாயையுடைய ஊரனே! நின் மாயம் உரையல் - நின் வஞ்சனை பொதிந்த சொற் களைக் கூறாதே, உணர்குவென் அல்லென் - யான் அவற்றை மெய்ம்மை யாகக் கொள்வேன் அல்லேன், நாண் இலை மன்ற - நீ தேற்றமாக நாணம் உடையை யல்லை;

ந—கஉ. அகலுள் ஆங்கண் - அகன்ற ஊரிடத்தே, அம் பகை மடிவை - அழகிய பகுப்பையுடைய தழையுடையினையும், குறு தொடி - குறிய வளையலையுமுடைய மகளிர், குரூஉ புனல் முனையின் -

---

1. அகம். க.

விளங்கும் புனல் விளையாட்டை வெறுப்பின், பழனம் பைஞ்சாய் கொழுதி - பொய்கையிலுள்ள கோரைகளைக் கோதி, கழனிக்கரந்தை செறுவில் வெண்குருகு ஓப்பும் - கழனியாகிய கரந்தையையுடைய செய்யின்கண்ணுள்ள வெள்ளிய நாரையை ஓட்டும் (இடமாய), வல்வில் எறும் தோள் பரதவர் கோமான் - வலிய வில்லைத் தாங்கிய வலிமை பொருந்திய தோள்களையுடைய பரதவர்கட்குத் தலைவனாகிய, பல் வேல் மத்தி - பல வேற்படைகளையுடைய மத்தி என்பானது, கழாஅர் - கழார் என்னும் பதியின், முன்றுறை - துறையின் முற்றத்தே, நெடுவெள் மருதொடு வஞ்சி சாஅய் - நீண்ட வெள்ளிய மருத மரத்துடன் வஞ்சி மரத்தையும் சாய்த்து, விடியல் வந்த பெரு நீர்க் காவிரி - நாட்காலையில் வந்த மிக்க வெள்ளத்தையுடைய காவிரியிடத்தே, தொடி அணி முன்கை நீ வெய்யோளொடு - வளையல் அணிந்த முன்கையினையுடைய உன்னால் விரும்பப் பெற்ற பரத்தையொடு, முன்நாள் ஆடிய கவ்வை - நீ நேற்று விளையாடிய தாலெழுந்த அலர்,

கஉ—எ. இந்நாள் - இன்று, வலிமிகு முன்பின் பாணனொடு - ஆற்றல் மிக்க வலிமையையுடைய பாணன் என்பானொடு கூடி, போர் அடு தானை கட்டி - போர் அடுதலில்வல்ல தானையையுடைய கட்டியென்பான் (போர் செய்தற்கு வந்து), மலி தார் தித்தன் வெளியன் உறந்தை நாள் அவை - தார் மலிந்த தித்தன் வெளியன் என்பானது உறையூரின்கண்ணுள்ள நாளோலக்கத்தின் கண்ணே எழுந்த, பாடு இன் தெண் கிணைப் பாடு கேட்டு அஞ்சி - ஓசை இனிய தெளிந்த கிணையினது ஒலியைக் கேட்டு அவனது பெருமையையுணர்ந்து அஞ்சி, பொராஅது ஓடிய ஆர்ப்பினும் பெரிது - போர் செய்யாது ஓடியபோது உண்டாய ஆரவாரத்தினும் பெரிதாகும்.

(முடிபு) **ஊர! மாயம் உரையல்; யான் அவற்றை உணர்குவென் அல்லென்; நாணிலே; காவிரியில் கழாஅர் முன்றுறைக்கண்ணே நீ வெய்யோளொடு முன்னாள் ஆடிய கவ்வை, இந்நாள் கட்டியென்பான் பாணன் என்பானொடு கூடிப் போர் செய்தற்கு வந்து வெளியன் உறந்தை நாளவைக்கண்ணே கிணையொலி கேட்டு அஞ்சிப் பொராது ஓடியபோதுண்டாய ஆரவாரத்தினும் பெரிதாகும்.**

(வி - ரை.) மாயம் - பரத்தையை அறியேன் என்னும் பொய்ம் மொழி. பகை - பகுப்பு. ஒன்றற் கொன்று முரண் என்றுமாம். பலநிறமுடைய பூக்களாலும் தழையாலும் செய்யப்படுதலின் பகை மடிவை என்றார். மடிவை - தழையுடை. குறுந்தொடி மகளிர் - என்றது மருத நிலத்து உழவர் மகளிரை. மகளிர் புனலாடுதலில் வெறுப்புறின் செறுவில் குருகினை யோட்டி விளையாடுவர் என்க. விளை செறுவில் கரந்தை உளதாதல், [1]"காய்த்த கரந்தை மாக்கொடி விளைவயல்' எனப் பிறண்டும் கூறப்படுதல் காண்க. [2]"பல்வேல் மத்தி கழாஅர்' என இவ்வாசிரியர் முன்னரும் கூறியுள்ளமை அறியற்பாற்று. கிணை - ஈண்டு முரசு. பாணனும் கட்டியும் மிக்க மெய் வலியும் படைவலியும் உடையராகியும் தித்தன் வெளியனது நாள

1. பதிற். சுo. 2. அகம். சு.

வைக்கண் ஒலிக்கும் கிணையொலி கேட்டல் மாத்திரையானே அஞ்சி யோடினமையின் எள்ளல்பற்றிய நகை யாரவாரம் பெரிதாயிற் றென்க. ஓடிய ஆர்ப்பினும் : பெயரெச்சம் காரணப் பொருட்டு.

---

## 227. பாலை

[தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. பிரிவின்கண் வேறுபட்ட தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்.]

நுதல்பசந் தன்றே தோள்சா யினவே
திதலை யல்குல் வரியும் வாடின
என்னா குவள்கொல் இவளெனப் [1]பன்மாண்
நீர்மலி கண்ணொடு நெடிதுநினைந் தொற்றி
௫ இனையல் வாழி தோழி நனைகவுட்
காய்சினஞ் சிறந்த வாய்புகு கடாத்தொடு
முன்னிலை பொருஅது முரணிப் பொன்னிணர்ப்
புலிக்கேழ் வேங்கைப் பூஞ்சினை புலம்ப
முதல்பாய்ந் திட்ட முழுவலி யொருத்தல்
௧௦ செந்நிலப் படுநீ ருடிச் செருமலைந்து
களங்கொள் மள்ளரின் முழங்கும் அத்தம்
பலவிறந் தகன்றன ராயினும் நிலைஇ
நோயில ராகநங் காதலர் வாய்வாட்
டமிழகப் படுத்த இமிழிசை முரசின்
௧௫ வருநர் வரையாப் பெருநா ளிருக்கைத்
தூங்கல் பாடிய ஓங்குபெரு நல்லிசைப்
[2]பிடிமிடை வழுதுணைப் பெரும்பெயர்த் தழும்பன்
கடிமதில் வரைப்பின் ஊணூர் உம்பர்
விழுநிதி துஞ்சும் [3]வீறுபெறு திருநகர்
௨௦ இருங்கழிப் படப்பை மருங்கூர்ப் பட்டினத்து
எல்லுமிழ் ஆவணத் தன்ன
கல்லென் கம்பலை செய்தகன் றோரே.

—நக்கீரர்.

(சொ - ள்.) ௧ - ௫. தோழி—, வாழி—, நுதல் பசந்தன்று - நுதல் பசந்துளது, தோள் சாயின - தோள்கள் மெலிந்துவிட்டன, திதலை அல்குல் வரியும் வாடின - தேமல் பரந்த அல்குலின் வரிகளும் வாடிப்போயின, என் ஆகுவள் கொல் இவள் என - இனி இவள் எந்நிலை யடைவளோ என்று, பல்மாண் நீர்மலி கண்ணொடு - பலபடியாக நீர் நிறைந்த கண்ணோடு, நெடிது நினைந்து - நெடிது எண்ணி, ஒற்றி - ஆராய்ந்து, இனையல் - வருந்தாதே ;

---

(பாடம்) 1. பன்னாணீர்மலி. 2. பிடிமிழ் வழுதுணை. 3. விழவுறு திருநகர்.

௫—௧௨. காய் சினம் சிறந்த - காயும் சினம் மிக்கமையால், நனை கவுள் வாய்புகு கடாத்தொடு - நனைந்த கன்னத்தினின்றும் வாயிற் புகும் மதநீரொடு, முன் நிலை பொறாஅது - தன் முன்னே நிற்றலைக் காணப் பொறாமல், முரணி - பகைத்து, பொன் இணர் புலி கேழ் வேங்கை - பொன்னிறமான கொத்துக்களையுடைய புலியின் நிறத்தினைக்கொண்ட வேங்கை மரத்தினது, பூ சினை புலம்ப - பூங்கொம்புகள் பூக்கள் உதிர்தலால் தனிமையுற, முதல் பாய்ந்திட்ட - அவ்வேங்கையின் அடிமரத்தில் பாய்ந்திட்ட, முழுவலி ஒருத்தல் - மிக்க வலியினையுடைய களிறு, செங் நிலப் படு நீறு ஆடி - செம்மண் நிலத்திற் பொருந்திய புழுதியை அளைந்து, செரு மலைந்து களம் கொள் மள்ளரின் - போர் புரிந்து களத்தில் வெற்றி கொண்ட வீரர்போல், முழங்கும் அத்தம் - முழங்குகின்ற சுர நெறிகள், பல இறந்து அகன்றனர் ஆயினும் - பலவற்றைக் கடந்து அகன்று போயினராயினும்,

௧௨—௨௨. வாய் வாள் - தப்பாத வாளினையும், தமிழ் அகப்படுத்த - தமிழ் நாடு முழுதினையும் அகப்படுத்திய, இமிழ் இசை முரசின் - ஒலிக்கும் புகழமைந்த முரசினையும், வருநர் வரையா பெரு நாளிருக்கை - பாடிவருநர்க்கு வரையாத பெரிய நாளோலக்க இருக்கையினையும் உடைய, தூங்கல் பாடிய - தூங்கல் எனும் புலவராற் பாடப்பெற்ற, ஓங்கு பெரு நல்இசை - மிக உயர்ந்த நல்ல புகழ் வாய்ந்த, பிடி மிதி - பிடி மிதித்தமையால் ஆகிய, வழுதுணைப் பெரும் பெயர்த் தழும்பன் - வழுதுணங்காய் போலும் தழும்பினையுடைமையால் வழுதுணைத் தழும்பன் என்னும் சிறந்த பெயரினையுடையானது, கடிமதில் வரைப்பின் ஊணூர் உம்பர் - காவல் பொருந்திய மதில் எல்லையையுடைய ஊணூர்க்கு அப்பாலுள்ள, விழுநிதி துஞ்சும் வீறு பெறு திருநகர் - மிக்க பொருள் நிலைபெற்றிருக்கும் பெருமை கொண்ட அழகிய நகராகிய, இரு கழி படப்பை மருங்கூர் பட்டினத்து - பெரிய உப்பங்கழிப் பக்கங்களையுடைய மருங்கூர்ப் பட்டினத்து, எல் உமிழ் ஆவணத்து அன்ன - ஒளி வீசும் கடைத்தெருவைப்போன்ற, கல் என் கம்பலை செய்து அகன்றோர் - கல்லென்னும் அலரை இவ்வூரில் எழச்செய்து பிரிந்தகன்றோராகிய, நம் காதலர் - நமது காதலர், நிலைஇ நோயிலராக - நோயில்லாதவராகி நிலைபெற்று வாழ்வாராக.

(முடிபு) தோழி! வாழி! இவள் என்னுகுவள் என இனையல்; அத்தம் இறந்தகன்றனராயினும் மருங்கூர்ப் பட்டினத்து ஆவணத் தன்ன கம்பலை செய்து அகன்றோர் ஆய நம் காதலர் நிலைஇ நோயிலராக.

(வி - ரை.) இனையல் எனத் தலைவி தோழிக்குக் கூறினாள் என்க. நீர்மலி கண்ணொடு நெடிது நினைந்தொற்றுதல் தோழியிடத்துண்டாய வேறுபாடாகும். எனவே இச்செய்யுள், இரண்டாவதாகக் குறிக்கப்பட்டுள்ள தலைவி கூற்றாதற்குப் பெரிதும் பொருந்தமாம். நோயிலராக நம் காதலர் எனத் தலைவி தோழியை உளப்படுத்திக் கூறலின், தலைவியும் தோழியும் தலைவனை வாழ்த்தினாரெனக் கொள்

ளுதலும் அமையும். சிறந்த என்னும் பெயரெச்சம் காரணப் பொருட்டு. ஒருத்தல் செந்நிலப் படுநீ ருடியது என்றதற் கேற்ப மள்ளர் குருதியால் உடல் சிவந்தமை கொள்க. ஒருத்தல் பகையை ஒழித்த பெருமிதத்துடன் முழங்குதலின், களங்கொள் மள்ளரின் முழங்கும் என்றார். நிலைஇ நோயிலராக - நோயிலராய் நிலைபெற்று வாழ்க என விகுதி பிரித்துக் கூட்டி யுரைக்க. முரசு - வீரமுரசும் கொடை முரசுமாம். அவனது வீரமும் வண்மையும் தமிழ் நாடு முழுதும் பரந்திருந்தமையின் தமிழகப்படுத்த இசை முரசு என்றார். வாளினையும் முரசினையும் இருக்கையினையும் உடைய தழும்பன் எனவும், தூங்கல் பாடிய நல்லிசைத் தழும்பன் எனவும் கூட்டுக. தூங்கல் - தூங்கல் ஓரியார் என்னும் புலவர். அவர் தழும்பனைப் பாடிய பாட்டுக்கிடைத்திலது. பிடிமிதித்த புண்ணின் தழும்பு என்க. வழுதுணைத் தழும்பன் என்னும் பெயர் தழும்பன் என்றே வழங்கலு முண்டு. [1]'பெரும்புண், ஏஎர் தழும்பன் ஊணூர்' என வருதலுங் காண்க. கழிப்படப்பை - உப்புவிளையும் செறு.

(மே - ள்.) [2]'மங்கல மொழியும்' என்னுஞ் சூத்திரத்து மங்கலமொழி என்றதற்குத் 'தலைவற்குத் தீங்கு வருமென்று உட்கொண்டு தோழியும் தலைவியும் அதற்கஞ்சி அவனை வழுத்துதலும்' என்று பொருள் கூறி, அதற்கு, 'நோயிலராக நங் காதலர்' என்னும் இதனை எடுத்துக் காட்டினார் நச்.

---

## ௸ 228. குறிஞ்சி

[தலைமகன் சிறைப் புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது.]

பிரசப் பல்கிளை யார்ப்பக் கல்லென
வரையிழி யருவி யாரந் தீண்டித்
தண்ணென நனைக்கும் நளிமலைச் சிலம்பிற்
கண்ணென மலர்ந்த மாயிதழ்க் குவளைக்
௫ கன்முகை நெடுஞ்சுனை நம்மொ டாடிப்
பகலே யினிதுடன் கழிப்பி யிரவே
செல்வ ராயினும் நன்றுமற் றில்ல
வான்கண் விரிந்த பகன்மருள் நிலவிற்
சூரல் [3]மிளைய சாரல் ஆராற்று
௧௦ ஓங்கல் மிசைய வேங்கை யொள்வீப்
புலிப்பொறி கடுப்பத் தோன்றலிற் கயவாய்
இரும்பிடி யிரியுஞ் சோலைப்
பெருங்கல் யாணர்த்தஞ் சிறுகுடி யானே.

— அண்டர்மகன் குறுவழுதியார்.

---

1. நற். ௩௦௦. 2. தொல். பொருளியல், ௩௪. (பாடம்) 3. மிளைஇய.

(சொ - ள்.) தோழி,

க—ரு. பிரசம் பல்கிளை ஆர்ப்ப - தேனை உண்ணும் பலவாய வண்டின் இனங்களும் ஆரவாரிக்க, கல் என வரை இழி அருவி - கல்லென்னும் ஒலியுடன் வரையினின்றும் இறங்கும் அருவியானது, ஆரம் தீண்டி தண் என நனைக்கும் - சந்தன மரத்தில் வீழ்ந்து அதனைத் தண்ணியதாக நனைத்திடும், நளிமலை சிலம்பில் - செறிந்த பக்க மலையில் உள்ள, கண் என மலர்ந்த மா இதழ் குவளை - கண்போல் மலர்ந்த கரிய இதழினையுடைய குவளை மலர்களையுடைய, கல்முகை நெடு சுனை - மலைமுழைஞ்சிலுள்ள நெடிய சுனையில், நம்மொடு ஆடி - தலைவர் நம்முடன் விளையாடி, பகல் இனிது உடன் கழிப்பி - பகற் பொழுதை இனிதாக நம்முடனிருந்து கழித்து,

அ.—கக. வான்கண் விரிந்த பகல் மருள் நிலவில் - வானிடத்தே விரிந்த பகலை யொத்த நிலவொளியில், சூரல் பிணைய சாரல் ஆர் ஆற்று - பிரப்பங்காட்டினையுடைய சாரல் பொருந்திய நெறியிலே, ஓங்கல் மிசைய வேங்கை ஒள் வீ - மலையின் மேலுள்ளவாகிய வேங்கை மரத்தின் ஒளிபொருந்திய மலர்கள், புலிப் பொறி கடுப்பத் தோன்றலின் - புலியின் உடம்பிலுள்ள புள்ளிகளைப்போலத் தோன்றுதலின், கயவாய் இரும்பிடி இரியும் சோலை - பெரிய வாயினை யுடைய கரிய பெண்யானைகள் அஞ்சியோடும் சோலையினையுடைய, பெருகல் யாணர் தம் சிறுகுடியான் - பெரிய மலையில் உள்ள அழகிய தமது சிறுகுடியாய ஊர்க்கு,

கா—எ. இரவே செல்வர் ஆயினும் நன்று - இரவினிற் செல்வாராயினும் மிக நன்றாகும்.

(முடிபு) தோழி! நம் தலைவர் நெடுஞ்சுனை நம்மோடாடிப் பகலே இனிது கழிப்பி, பெருங்கல் யாணர்த் தம் சிறுகுடியான் இரவு செல்வராயினும் நன்றுமன்.

(வி - ரை.) பிரசம் என்னும் அடையால், கிளை வண்டிற்காயிற்று. ஆர்ப்ப இழி அருவி என்க; வண்டுகள் ஒலித்தலாலும், அருவி நறிய சந்தன மரத்தைத் தீண்டி வந்து தட்பமுற நனைத்தலாலும், குவளைகள் கண்ணென மலர்தலாலும், செவிமுதலிய பொறிகளுக்கு இன்பம் விளைக்கும் சுனை யெனச் சுனையின் சிறப்புக் கூறினாளென்க. பகலினும் இரவினும் தலைவனைப் பிரியாதிருத்தலே தம் விருப்பமாயினும், இரவில் நிலவு வெளிப்பாடு முதலியவற்றால் கூட்டத்திற்கு இடையீடு உண்டாகலானும், பகலில் மலையிடத்துள்ள சுனையில் ஆடுதற்கண் அன்னதோர் இடையீடு இன்மையானும், 'பகலே யினிதுடன் கழிப்பி இரவே, செல்வராயினும் நன்று மன்' என்றாள். தில் என்னும் இடைச்சொல் தில்ல எனத் திரிந்தது. தில் - விழைவுப் பொருட்டு. நிலவு வானிடமெல்லாம் விரிந்தமையான் மலைமீதுள்ள வேங்கை மரத்தின் பூக்கள் சாரற்கண்ணுள்ள பெண் யானைகட்கு இரவிலே புலிப்பொறி யொப்பத் தோன்றின என்க.

## 229. பாலை

[தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளை வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் வன்புறை யெதிரழிந்து சொல்லியது.]

பகல்செய் பல்கதிர்ப் பருதியஞ் செல்வன்
அகல்வாய் வானத் தாழி போழ்ந்தென
நீரற வறந்த நிரம்பா நீளிடைக்
கயந்தலைக் குழவிக் கவியுகிர் மடப்பிடி
ரு குளகுமறுத் துயங்கிய மருங்குல் பலவுடன்
பாழூர்க் குரம்பையிற் றோன்றும் ஆங்கண்
நெடுஞ்சே ணிடைய குன்றம் போகிய
பொய்வ லாளர் முயன்றுசெய் பெரும்பொருள்
நம்மின் றாயினும் முடிக வல்லெனப்
க0 பெருந்துனி மேவல் நல்கூர் குறுமகள்!
நோய்மலிந் துகுத்த நொசிவரற் சின்னீர்
பல்லிதழ் மழைக்கட் பாவை மாய்ப்பப்
பொன்னேர் பசலை ஊர்தரப் பொறிவரி
நன்மா மேனி தொலைதல் நோக்கி
கரு இனைய லென்றி தோழி சினைய
பாசரும் பீன்ற செம்முகை முருக்கினப்
போதவிழலரி கொழுதித் தாதருந்து
அந்தளிர் மாஅத் தலங்கள் மீமிசைச்
செங்கண் இருங்குயில் நயவரக் கூஉம்
உ0 இன்னிள வேனிலும் வாரார்
இன்னே வருதும் எனத்தெளித் தோரே.

—மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார்.

(சொ - ள்.) க0. நல்கூர் குறுமகள் - மகட்கு நல்கூர்ந்தாரது செல்வ மகளாய இளைய தலைவியே,

க—க0. பகல் செய் பல்கதிர் பருதி அம் செல்வன் - பகலைத் தோற்றுவிக்கும் பல கதிர்களையுடைய ஞாயிறாகிய அழகிய செல்வனது, அகல் வாய் வானத்து ஆழி - அகன்ற இடமாய வானின் கண்ணுள்ள ஆணையாய ஆழி, போழ்ந்தென - உலகைக் கிழித்துச் சென்றதாக, நீர் அற வறந்த நிரம்பா நீள் இடை, நீரில்லையாக வறந்திட்ட செல்லத் தொலையாத நீண்ட நெறியிடத்தே, கயம் தலை குழவிக் கவியுகிர் மடபிடி - மெல்லிய தலையினையுடைய கன்றினையும் கவிந்த நகத்தினையுமுடைய இளைய யானை, குளகு மறுத்து உயங்கிய- தன் கன்றுண்ண வேண்டித் தான் தழை உணவை உண்ணாது மறுத்தமையின் வாடிய, மருங்குல் பலவுடன் - உடம்பின் உறுப்புக்கள் பலவற்றுடன், பாழ் ஊர் குரம்பையில் தோன்றும் ஆங்கண் - பாழ் பட்ட ஊரிலுள்ள குடிசைகள் போலத் தோன்றும் அவ்விடங்களையுடைய, நெடு சேண் இடைய குன்றம் போகிய - நெடிய சேய்

மையிலிலுள்ள குன்றங்களைத் தாண்டிச்சென்ற, பொய்வலாளர் - பொய் மிக்காராய நம் தலைவர், முயன்று செய் பெரும் பொருள் - முயன்று ஈட்டும் பெரிய பொருள், நம் இன்று ஆயினும் வல் முடிக என - நாம் இல்லையாயினும் விரைந்து கைகூடுக என்று, பெரு துனி மேவல் - பெரிய வெறுப்பு மேவற்க ;

கக—டு. நோய் மலிந்து உகுத்த நொசி வரல் சின்னீர் - வருத்த மிக்கு உதிர்த்த நுண்ணிதாக வரும் சிறிதளவாய கண்ணீர், பல் இதழ் மழை கண் பாவை மாய்ப்ப - பலவாய இதழ்களையுடைய தாமரை மலர் போன்ற குளிர்ந்த கண்ணில் உள்ள கருமணியை மறைத்திட, பொன் ஏர் பசலை ஊர்தர - பொன்னை யொத்த பசலை பரந்திட, பொறி வரி நன் மா மேனி தொலைதல் நோக்கி - புள்ளி களாய தேமலையுடைய நல்ல சிறந்த எனது மேனியின் அழகு தொலைதலைப் பார்த்து, இனையல் என்றி - வருந்தாதே என்கின்றாய் ;

கடு—உக. தோழீ—, பசு அரும்பு ஈன்ற சினைய - அழகிய அரும் புகளை ஈன்ற கிளைகளையுடைய, செம்முகை முருக்கின் அ போது அவிழ் அலரி கொழுதி - சிவந்த அரும்புகளையுடைய முருக்க மரத் தின் அழகிய போதுகள் விரிந்த மலர்களைக் கிண்டி, தாது அருந்து - அவற்றிலுள்ள பொடிகளை உண்டு, அம் தளிர் மாஅத்து அலங்கல் மீமிசை - அழகிய தளிர்களையுடைய மா மரத்தின் அசையும் கிளை களின் உச்சியிலிருக்கும், செம் கண் இரு குயில் - சிவந்த கண்ணினை யுடைய கரியகுயில், நயவர கூஉம் இன் இள வேனிலும் - இனிமை தோன்றக் கூவும் இனிய இளவேனிற்காலத்திலும், இன்னே வருதும் எனத் தெளித்தோர் - இப்பொழுதே வருவேம் எனத் தெளிவித்துச் சென்றவர், வாரார் - வந்திலரே ; என் செய்வேன்.

(முடிபு) 'நல்கூர் குறுமகள் ! குன்றம் போகிய பொய்வலாளர் முயன்று செய்பொருள் நம்மின்றாயினும் முடிக எனப் பெருந் துனி மேவல் ; மேனி தொலை தல் நோக்கி, இனையல்' என்றி ; தோழீ ! இன்னே வருதும் எனத் தெளித்தோர் இன்னிளவேனிலும் வாரார் ; என்செய்வேன்.

(வி - ரை.) முதுவேனிற் காலத்தில் ஞாயிற்றின் கதிர் முறுகு தலால் காட்டின் இடமெல்லாம் நீர் அற வறண்டமையை, பருதியஞ் செல்வனுடைய ஆழி போழ்ந்தமையால் வறந்த தென்றார். ஆழி - ஆணை. குழவியை ஈன்றமையாலும் உணவு பெறாமையாலும் என்பு தோன்ற வற்றிய உடம்பினையுடைமையான், பிடிகள் கூரை சிதைந்த குரம்பை போலத் தோன்றும் என்க. பெரும்பொருள், நம்மின்றாயினும் முடிக என்றது நாம் இறந்துபடினும் அவர் அப் பெரும் பொருளைப் பெற்று வாழ்வாராக எனத் தலைவி துனிபற்றிக் கூறியதாகும். தோழியானவள் தலைவியை நோக்கி, நீ அங்ஙனம் கூறித் துனியுறாதே எனவும், மேனி தொலைதல் நோக்கி இனையல் எனவும் வற்புறுத்தினளாக, தலைவி நீ அங்ஙனம் வற்புறுத்தலாற் பயனென்னை ? இன்னே வருதும் எனத் தெளிவித்துச் சென்றவர், இளவேனிற் பருவம் வந்தும் வந்திலராகலின் யான் எங்ஙனம் ஆற்றி யிருப்பேன் எனத் தோழிக்கு எதிரழிந்து கூறினளென்க. பல்

இதழ் - பல இதழ்களையுடைய தாமரைப் பூ. செம்முகை என்றது முருக்கிற்கு இயல்பாய அடை. அருந்து - அருந்தி எனத் திரிக்க. அருந்து குயில் எனக் கூட்டியுரைத்தலுமாம். முதுவேனிற்காலத்தே பிரிதலுற்ற தலைமகன் அடுத்துள்ள கார்ப்பருவத்தின் தொடக்கத்தே வருவேன் எனக் காலம் குறித்துச் சென்றனனாகலின் அதனை இன்னே வருதும் எனத் தெளித்தோர் என்றாள். கார்ப்பருவத்து வாராமையேயன்றிக் கூதிர் முதலிய இடையிட்ட பருவங்களையும் கடந்து இளவேனில் வந்தும் அவர் இன்னும் வந்திலர் என்றாள். இளவேனிலில் மாமரத்தின் மீது குயிலிருந்து கூவுவது கூடியிருப்பார்க்கு இன்பம் விளைப்பதாகலின் குயில் நயவரக் கூவும் இன்னிளவேனில் என்றாள் என்க.

---

## 230. நெய்தல்

[தலைமகளைக் கண்ணுற்று நீங்கும் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]

உறுகழி மருங்கின் ஓதமொடு மலர்ந்த
சிறுகரு நெய்தற் கண்போன் மாமலர்ப்
பெருந்தண் மாத்தழை யிருந்த அல்குல்
ஐய அரும்பிய சுணங்கின் வையெயிற்று
ரு மையீ ரோதி வாணுதற் குறுமகள்
விளையாட் டாயமொடு வெண்மண லுதிர்த்த
புன்னை நுண்டாது பொன்னின் நொண்டு
மனைபுறந் தருதி யாயின் எனையதூஉம்
இம்மனைக் கிழமை யெம்மொடு புணரில்
க0 தீது முண்டோ மாத ராயெனக்
கடும்பரி நன்மான் கொடிஞ்சி நெடுந்தேர்
கைவல் பாகன் பையென இயக்க
யாந்தற் குறுகின மாக ஏந்தெழில்
அரிவே யுண்கண் பனிவர லொடுக்கிச்
கரு சிறிய இறைஞ்சினள் தலையே
பெரிய எவ்வம் யாமிவ ணுறவே.

—மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்.

(சொ – ள்.) க—ரு. உறுகழி மருங்கின் - பெரிய உப்பங்கழியின் பக்கலிலே, ஓதமொடு மலர்ந்த - கடல் நீரால் மலர்ந்த, கண் போல் சிறு கரு நெய்தல் மா மலர் - கண்ணைப்போன்ற சிறிய கரிய நெய்தலது பெரிய மலருடன் கூடிய, பெரு தண் மா தழை இருந்த அல்குல் - பெரிய குளிர்ந்த சிறந்த தழையுடை பொருந்திய அல்குலினையும், ஐய அரும்பிய சுணங்கின் - மென்மையவாகிய அரும்பிய தேமலையும், வை எயிற்று மை ஈர் ஓதி வாள் நுதல் - கூரிய எயிற்

றினையும் கரிய நெடிய கூந்தலையும் ஒளிபொருந்திய நெற்றியினையு முடைய, குறுமகள் - இளைய மகளே,

௯—௧௦. மாதராய் - பெண்ணே, விளையாட்டு ஆயமொடு - நீ கூடி விளையாடும் நின் ஆயத்தாருடன், புன்னை வெண்மணல் உதிர்த்த நுண்தாது - புன்னைமரம் வெள்ளிய மணலில் உதிர்த்த நுண்ணிய பொடியினை, பொன்னின் நொண்டு - பொன்னைக் கொண்டு முகந்து, மனை புறந்தருதியாயின் - இல்லறம் நடாத்து வாயாயின், இ மனைக்கிழமை எம்மொடு எனையதூஉம் புணரின் - இந்த இல்லறக்கிழமை சிறிதேனும் எம்முடன் பொருந்துவதாயின், தீதும் உண்டோ - வரக்கடவதொரு தீங்கும் உண்டோ, என - என்று கூறி,

௧௧—௩. கடும் பரி நல் மான் கொடிஞ்சி நெடுந் தேர் - கடிய செலவினையுடைய நல்ல குதிரை பூண்ட கொடிஞ்சியினையுடைய உயர்ந்த தேரினை, கைவல் பாகன் பை என இயக்க - செலுத்துந் திறமை மிக்க பாகன் மெல்லெனச் செலுத்த, யாம் தன் குறுகினம் ஆக - நாம் அவளை அணுகினமாக,

௧௩—௪. பெரிய எவ்வம் யாம் இவண் உற - யாம் இங்கே பெரிய வருத்தத்தை அடைய, ஏந்து எழில் அரி வேய் உண்கண் - அவள் அழகுமிக்க செவ்வரி பரந்த மையுண்ட கண்களில், பனி வரல் ஒடுக்கி - உவகைக் கண்ணீர் வருதலை மறைத்து, தலை சிறிய இறைஞ்சினள் - தன் தலையினைச் சிறிய அளவில் கவிழ்த்தனள்.

(முடிபு) குறுமகள்! மாதராய்! நீ மனைபுறந்தருதியாயின், இம் மனைக் கிழமை எம்மொடு புணரின் தீதுமுண்டோ என, நெஞ்சே யாம் நற்குறுகினமாக, யாம் பெரிய எவ்வம் உற, அவள், கண் பனி வரல் ஒடுக்கி, தலை சிறிய இறைஞ்சினள்.

(வி - ரை.) கண்போல் மா மலர் என்பது [1]'பொருளே யுவமம் செய்தனர் மொழியினும்' என்பதனால் அமையும். ஐய, பெயரெச்சக் குறிப்பு; வினையெச்சக் குறிப்பாக்கி, மென்மையவாக அரும்பிய என்றுரைத்தலுமாம். குறுமகள் என்பதனை, எழுவாயாகக்கொண்டு குறுமகள் இறைஞ்சினள் என முடித்தலுமாம். நொண்டு - முகந்து என்பதன் மரூஉ. மனை புறந்தருதலாவது, மனையில் வாழ்வோரைப் பேணுதலும் அறஞ்செய்தலுமாம். இம் மனைக்கிழமை எம்மொடு புணரின் என்பது நீ என்னுடன்கூடி மனையறம் புரிதியாயின் என்னுங் கருத்திற்று. தேரிற்பூட்டிய குதிரை மிக விரைந்து செல்வதாகவும், அம் மகளிர் அஞ்சி யகலாது தன் குறிப்பறிந்து மெல்லெனச் செலுத்தினமையின், கைவல் பாகன் என்றான். தலைவன் அணுகிய வழி தனக்கு உண்டாகிய வேட்கையை அதனால் எழும் கண்ணீர் புலப்படுத்திற்றாகலின் தலைவி நாணினால் அதனை மறைத்துத் தலை சிறிது இறைஞ்சினாள் என்க. அவள் அங்ஙனம் நாணி நின்ற நிலையானது அவள் வேட்கையைப் புலப்படுத்தி அவனைப் பிரிந்து செல்லும்

1. தொல். உவம. ௩.

தன் உள்ளத்தில் பெரிய துன்பத்தை விளைத்தலின் பெரிய எவ்வம் யாம் இவண் உறவே என்றான்.

(மே - ள்.) [1]'மறைந்தவற் காண்டல்' என்னுஞ் சூத்திரத்துக் 'கைப்பட்டுக் கலங்கினும்' என்னுந் துறைக்கு இதனைக் காட்டி, இது தலைவன் கூறியது என்றனர். நச்.

---

## 231. பாலை

[தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.]

செறுவோர் செம்மல் வாட்டலுஞ் சேர்ந்தோர்க்கு
உறுமிடத் துய்க்கும் உதவி யாண்மையும்
இல்லிருந் தமைவோர்க் கில்லென் றெண்ணி
நல்லிசை வலித்த நாணுடை மனத்தர்
ரு கொடுவிற் கானவர் கணையிடத் தொலைந்தோர்
படுகளத் துயர்த்த மயிர்த்தலைப் பதுக்கை
கள்ளியம் பறந்தலைக் களர்தொறுங் குழீஇ
யுள்ளுநர்ப் பனிக்கும் ஊக்கருங் கடத்திடை
வெஞ்சுரம் இறந்தனர் ஆயினும் நெஞ்சுருக
க0 வருவர் வாழி தோழி பொருவர்
செல்சமங் கடந்த செல்லா நல்லிசை
விசும்பிவர் வெண்குடைப் பசும்பூட் பாண்டியன்
பாடுபெறு சிறப்பிற் கூடல் அன்னநின்
ஆடுவண் டரற்று முச்சித்
கரு தோடார் கூந்தல் மரீஇ யோரே.

—மதுரை ஈழத்துப் பூதன் றேவனார்.

(சொ - ள்.) க0. தோழி -, வாழி -,

க—ச. செறுவோர் செம்மல் வாட்டலும் - நம் பகைவர் செருக்கினை ஒழித்தலும், சேர்ந்தோர்க்கு உறுமிடத்து உய்க்கும் உதவி ஆண்மையும் - தம்மைச் சேர்ந்தோர்க்கு ஓர் ஊறு எய்துமிடத்து உதவி செய்தலாய ஆண்மையும், இல் இருந்து அமைவோர்க்கு இல் என்று எண்ணி - இல்லின்கண்ணே வாளாவிருந்து மடியால் அமைந்திருப்போர்க்கு இல்லை என்று எண்ணி, நல்இசை வலித்த நாண் உடை மனத்தர் - நல்ல புகழைக் கருதிய நாண் உடைய மனத்தராய நம் தலைவர்,

ரு—க. கொடு வில் கானவர் கணை இடத் தொலைந்தோர் - கொடிய வில்லையுடைய வேடர் தமது அம்பினை விடுதலாற் பட்டோர், படுகளத்து உயர்த்த மயிர்த்தலைப் பதுக்கை - விழுந்து கிடக்கும் களத்தில் உயர்த்திய மயிரினையுடைய தலைகளையுடைய கற்

---

1. தொல். கள. உ0.

குவியல்கள், கள்ளி பறந்தலை களர்தொறும் குழீஇ - கள்ளியினை யுடைய பாழிடமாகிய களர்நிலந்தோறும் திரண்டு, உள்ளுநர் பனிக்கும் ஊக்கு அருங் கடத்திடை - நினைப்போரையும் நடுங்கச் செய்தலின் யாரும் செல்லத்துணியாத காட்டிடையே உள்ள, வெம் சுரம் இறந்தனராயினும் - கொடிய சுரத்தைக் கடந்தனர் ஆயினும்,

கo—ரு. பொருவர் செல் சமம் கடந்த செல்லா நல் இசை - பகைவரது எதிர்ந்த போரினை ஒழித்த கெடாத நல்ல புகழினையும், விசும்பு இவர் வெண்குடை - வானிடத்தே ஓங்கிய வெண்குடை யினையும் உடைய, பசும் பூண் பாண்டியன் - பசும் பூட் பாண்டியன் என்பானது, பாடு பெறு சிறப்பின் கூடல் அன்ன நின் - பெருமை யமைந்த சிறப்பினையுடைய மதுரையை யொத்த நினது, ஆடு வண்டு அரற்றும் உச்சி - அசையும் வண்டு ஒலிக்கும் உச்சியினையுடைய, தோடு ஆர் கூந்தல் மரீஇயோர் - பூவிதழ் பொருந்திய கூந்தற் கண்ணே பொருந்தித் துயின்றோர் ஆய அவர்,

கூ—கo. நெஞ்சு உருக வருவர் - அதனை நினைந்து தம் நெஞ்சம் உருகுதலால் விரைந்து வருவர்; ஆகலின் வருந்தாதேகொள்.

(முடிபு) தோழி! வாழி! நல்லிசை வலித்த நாணுடை மனத்தர், வெஞ் சுரம் இறந்தனராயினும், நின் கூந்தல் மரீஇயோர் ஆய அவர் நெஞ்சுருக, வருவர். ஆகலின் வருந்தாதே கொள்.

(வி - ரை.) பகைவரை அழித்தற்கும் நட்டாரை ஆக்கற்கும் பொருள் இன்றியமையாததாகலின், பொருளீட்டும் முயற்சியின்றி இல்லில் இருப்போர்க்கு அவை இல்லை என்றார். பொருள் பகைவரை அழித்தற்குக் கருவியாகுமென்பதை, [1]'செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும் எஃகதனிற் கூரிய தில்' என்பதனால் அறிக. அது நட்டாரை ஆக்குதற்கு உரியதென்பது, ஆசிரியர் நக்கீரனார் பாடிய [2]'கேள்கே டூன்றவுங் கிளைஞராரவும்' என்னும் பாட்டினுற் பெறப்படும். [3]'அரிதாய அறனெய்தி அருளியோர்க் களித்தலும், பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்,... தருமெனப்...பொருள்வயிற் சென்றநங் காதலர்' என்பதுங் காண்க. செம்மல் - தலைமை; ஈண்டுச் செருக்கின் மேற்று. உதவி உய்க்கும் ஆண்மை என்க. உவக்கும் என்பது பாடமாயின், சேர்ந்தோர் உவத்தற்கு ஏதுவாய உதவியை ஆளுந்தன்மை என்று பொருள் கொள்க. நாண் - பழிக்கு அஞ்சும் குணம். தொலைந்தோர் தலைகளை யுடைமையின் நினைப்போரை நடுங்கச் செய்யும் கடம் என்க. நம் நெஞ்சு நெகிழுமாறு வருவர் என்றுரைத்தலுமாம். கடந்த பாண்டியன் என்க; பெயரெச்சத்தினைக் காரணப் பொருட்டாகக் கொண்டு, கடந்த நல்லிசை என்றலுமாம். அரற்றும் முச்சி எனப் பிரித்தலு மாம்.

---

1. குறள், எசு : கூ. 2. அகம், கூஈ. 3. கலி. கக : க-ச.

## 232. குறிஞ்சி

[தோழி, தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.]

காணினி வாழி தோழி பானாள்
மழைமுழங் கரவங் கேட்ட கழைதின்
மாஅல் யானை புலிசெத்து வெரீஇ
இருங்கல் விடரகஞ் சிலம்பப் பெயரும்
ரு பெருங்கல் நாடன் கேண்மை இனியே
குன்ற வேலிச் சிறுகுடி யாங்கண்
மன்ற வேங்கை மணநாட் பூத்த
மணியே ரரும்பின் பொன்வீ தாஅய்
வியலறை வரிக்கும் முன்றிற் குறவர்
கo மனைமுதிர் மகளிரொடு குரவை தூங்கும்
ஆர்கலி விழவுக்களங் கடுப்ப நாளும்
விரவுப்பூம் பலியொடு விரைஇ அன்னை
கடியுடை வியனகர்க் காவல் கண்ணி
முருகென வேலற் றரூஉம்
கரு பருவ மாகப் பயந்தன்றால் நமக்கே.

—கோடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனார்.

(சொ-ள்.) க. தோழி-, வாழி-, இனிகாண் - இப்பொழுது யான் கூறுவதனை உணர்வாயாக;

க—ரு. பால் நாள் - நடு இரவில், மழை முழங்கு அரவம் கேட்ட - மேகம் முழங்கும் இடியொலியினைக் கேட்ட, கழைதின் மாஅல் யானை - மூங்கிலைத் தின்னும் பெரிய யானையானது, புலி செத்து வெரீஇ - அவ்வொலியினைப் புலியின் ஒலி எனக் கருதி அஞ்சி, இரு கல் விடர் அகம் சிலம்ப பெயரும் - பெரிய மலையின் முழைஞ்சிடம் எதிரொலி செய்யக் கதறிப் பெயர்ந்தோடும், பெரு கல் நாடன் கேண்மை - பெரிய மலைபொருந்திய நாட்டினையுடைய தலைவனது நட்பு,

ரு—கக. இனி - இக்காலத்து, குன்றவேலி சிறு குடி ஆங்கண் - குன்றங்களாய வேலியினையுடைய சிறூரிடத்தே, மன்ற வேங்கை மணம் நாள் பூத்த - மன்றத்தின்கண்ணுள்ள வேங்கை மரங்கள் மண நாளாகிய காலத்தே பூத்த, மணி ஏர் அரும்பின் பொன் வீ தாஅய் - மணியையொத்த அரும்பு மலர்ந்த பொன்போன்ற பூக்கள் பரந்து, வியல் அறை வரிக்கும் முன்றில் - அகன்ற பாறைகளை அழகுறுத்தும் முற்றத்திலே, குறவர் - குறவர்கள், மனை - மனைக்கண்ணுள்ள, முதிர் மகளிரொடு குரவை தூங்கும் - ஆடுதல் வல்ல மகளிரொடு குரவைஆடும், ஆர்கலி விழவுக் களம் கடுப்ப - ஆரவாரமிக்க விழாக்களத்தை யொப்ப,

கக—ரு. அன்னை -, நாளும் - நாடோறும், விரவு பூ பலியொடு விரைஇ - விரவிய பலவகைப் பூக்களாய பலியொடு பொருந்தி, கடி உடை வியன் நகர் காவல் கண்ணி - காவல் பொருந்திய அகன்ற மனையின்கண் காத்தலைக் கருதி, முருகு என - நமது வேறுபாடு முருகனால் உண்டாயதென்று, வேலன் தரூஉம் - வேலனை அழைக்கும், பருவம் ஆக நமக்கு பயந்தன்று - காலமாக நமக்கு விளைந்தது.

(முடிபு) தோழி! வாழி! காண்; நாடன் கேண்மை, இனி அன்னை முருகென (எண்ணி) காவல் கண்ணி, பலியொடு விரைஇ, வேலனைத் தரூஉம் பருவமாக நமக்குப் பயந்தன்று.

சிறுகுடியாங்கண் வேங்கையின் பொன்வீ தாஅய் அறைவரிக்கும் முன்றிலில் குறவர் மகளிரொடு குரவை தூங்கும் களங்கடுப்பப் பூம்பலியொடு விரைஇ என்க.

(வி - ரை.) மணி - முத்து. முத்துக்களில் பொன்மை செம்மை யுடையவும் உளவென்பது [1]'சந்திர குருவே அங்கா ரகனென, வந்த நீர்மைய வட்டத் தொகுதியும்' என்பதனாற் பெற்றாம். அரும்புடன் வீ தாஅய் என்றலுமாம். காவல் கண்ணி என்பதற்கு, நம்மை இற்செறித்தலைக் கருதி என்றும், நமக்குத் தீங்குண்டாகாமல் முருகன் காத்தலைக் கருதியென்றும், இருவகையாகக் கோடலும் பொருந்தும். விழவுக்களம் கடுப்ப என்னும் உவமையால், வேலன் வெறியாடுமிடத்திற்கு மலர் சிதறிக்கிடத்தலுடன் குரவை ஆடுதல் கோடலுமாம்.

---

## 233. பாலை

[பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.]

அலமரல் மழைக்கண் மல்குபனி வாரநின்
அலர்முலை நனைய அழாஅல் தோழி
எரிகவர் புண்ட கரிபுறப் பெருநிலம்
பீடுகெழு மருங்கின் ஓடுமழை துறந்தென
ரு ஊனில் யானை உயங்கும் வேனில்
மறப்படைக் குதிரை மாறா மைந்தின்
துறக்கம் எய்திய தொய்யா நல்லிசை
முதியர்ப் பேணிய உதியஞ் சேரல்
பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை இரும்பல்
க0 கூளிச் சுற்றங் குழீஇயிருந் தாங்குக்
குறியவும் நெடியவுங் குன்றுதலை மணந்த
சுரனிறந் தகன்றன ராயினும் மிகநனி
மடங்கா உள்ளமொடு மதிமயக் குறாஅப்
பொருள்வயின் நீடலோ இலர்நின்
கரு இருளைங் கூந்தல் இன்றுயின் மறந்தே.

—மாமூலனார்.

---

1. சிலப். ஊர்காண். கக௬-௬.

(சொ - ள்.) க—உ. தோழி -, அலமரல் மழை கண் மல்கு பனி வார - கலங்குகின்ற குளிர்ந்த கண்ணினின்றும் நிறைந்த நீர் ஒழுகலின்; நின் அலர்முலை நனைய அழாஅல் - நின் பரந்த முலை நனைய அழாதே;

ங—ரு. எரி கவர்பு உண்ட - நெருப்புச் சூழ்ந்து எரித்திட்ட, கரி புறம் பெரு நிலம் - கரிந்த இடங்களையுடைய பெரிய நிலத்தை, பீடு கெழு மருங்கின் ஓடு மழை துறந்தென - வளம் பொருந்திய வேறு இடங்கட்கு ஓடும் மழை துறந்திட்டதாக, ஊன் இல் யானை உயங்கும் வேனில் - தசையொழிந்த யானை வருந்தும் வேனிற்கண்,

சா—க0. மறப் படைக் குதிரை மாறா மைந்தின் - வீரம் பொருந்திய குதிரைப் படைகளுடன் புறக்கிடாத வலியையுடைய, துறக்கம் எய்திய தொய்யா நல் இசை - துறக்கத்தினை யடைந்த கெடாத நல்ல புகழினையுடைய, முதியர் பேணிய உதியன் சேரல் - முன்னோர் கட்குத் தென்புலக் கடன் ஆற்றிய உதியன் சேரலாதன் எனும் மன்னன், பெரு சோறு கொடுத்த ஞான்றை - அவர்கட்குப் பலியாகப் பெருஞ்சோறு படைத்திட்ட காலத்தே, இரு பல் கூளிச் சுற்றம் குழீஇ இருந்தாங்கு - கரிய பலவாய பேய்ச் சுற்றங்கள் அதனை உண்பதற்குக் கூடியிருந்தாற்போல,

கக—ச. குறியவும் நெடியவும் குன்று தலை மணந்த - குறியனவும் நெடியனவுமாய குன்றுகள் இடந்தொறுமுள்ள, சுரன் இறந்து - சுரத்தினைக் கடந்து, மிக நனி மடங்கா உள்ளமொடு - மிகப் பெரிதும் அடங்காத உள்ளமுடையராய், மதிமயக்குறூஉ - அறிவுமயங்குதலுற்று, பொருள்வயின் அகன்றனர் ஆயினும் - பொருள் ஈட்டுதலைக் கருதிச் சென்றாராயினும்,

கரு—ரு. நின் இருள் ஐங் கூந்தல் இன் துயில் மறந்து - நினது கரிய ஐம்பகுப்பாய கூந்தலிற் பெறும் இனிய துயிலை மறந்து, நீடல் இலர் - தாழ்த்திருத்தல் இலராவர்; விரைந்து வருவர்.

(முடிபு) தோழி அழாஅல்; வேனிற்கண் குறியவும் நெடியவும் குன்றுதலை மணந்த சுரன் இறந்து பொருள்வயின் அகன்றனராயினும் நின் கூந்தல் இன்றுயில் மறந்து, நீடலோ இலர்.

(வி - ரை.) பெரு நிலத்தின்கண் யானை உயங்கும் வேனில் எனவும், குதிரைப்படையினையும் மைந்தினையுமுடைய உதியன் சேரல் எனவும் கூட்டுக. இனிக் குதிரைப் படையினையும் மைந்தினையு முடைய முதியர் என்றுரைத்தலுமாம். உதியன் சேரல் துறக்கமெய்திய தன் முன்னோர்க்குப் பிண்டம் ஈதலாகிய கடன் ஆற்றியபோது, பெருஞ்சோறு அளித்தனன் என்க. இனி, பெருஞ்சோறு கொடுத்த ஞான்று என்பதனை பாரதப்போரில் இருதிறப் படைக்கும் சோறளித்த ஞான்று என்றுரைப்பாருமுளர். உதியஞ் சேரலாதன் என்பான் பாரதப் போரில் சோறளித்தமை, [1]"அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ, . . . . . ஈரைம் பதின்மரும் பொருது களத்

1. புறம் உ.

தொழியப், பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்' [1]'ஓரைவ ரீரைம் பதின்மர் உடன்றெழுந்த, போரிற் பெருஞ்சோறு போற்றுது தானளித்த, சேரன்' என்பவற்றுற் பெறப்படுமாயினும், ஈண்டுப் பாரதப்போரைச் சுட்டும் குறிப்பு யாதுமின்மையின் இவ் வுதியன் சேரன் அவனின் வேருயினுன் எனக் கொள்ளல் வேண்டும். தொய்யா - கெடாத. கூளிச் சுற்றம் - குறியவும் பெரியவுமாகிய பேய்களின் சுற்றம்.

---

## 234. முல்லை

[தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.]

கார்பயம் பொழிந்த நீர்திகழ் காலை
நுண்ணயிர் பரந்த தண்ணயம் மருங்கில்
நிரைபறை யன்னத் தன்ன விரைபரிப்
புல்லுளைக் கலிமா மெல்லிதிற் [2]கொளீஇய
ரு வள்பொருங் கமையப் பற்றி [3]மூள்கிய
பல்கதி ராழி மெல்வழி யறுப்பக்
காலென மருள ஏறி நூலியற்
[4]கண்ணேக் கொழிக்கும் பண்ணமை நெடுந்தேர்
வல்விரைந் தூர்மதி நல்வலம் பெறுந
க0 [5]ததர்தழை முனைஇய தெறிநடை மடப்பிணை
ஏறுபுணர் உவகைய ஊறில உகள
அஞ்சிறை வண்டின் மென்பறைத் தொழுதி
முல்லை நறுமலர்த் தாதுநயந் தூத
எல்லை போகிய புல்லென் மாலைப்
கரு புறவடைந் திருந்த உறைவின் நல்லூர்க்
கழிபட ருழந்த பனிவா ருண்கண்
நன்னிறம் பரந்த பசலையள்
மின்னே ரோதிப் பின்னுப்பிணி விடவே.

—[6]பேயனுர்.

(சொ - ள்.) கூ. நல்வலம்பெறுந - தேர் செலுத்துதலில் நல்ல வெற்றியுடைய பாக!

க—அ. கார் பயம் பொழிந்த நீர் திகழ் காலை - மேகம் நீரைப் பொழிந்ததாலாய வெள்ளம் விளங்கும் காலத்தே, நுண் அயிர் பரந்த தண் அயம் மருங்கின் - நுண்ணிய மணல் பரவிய குளிர்ந்த நீர் நிலையிடத்தே, நிரை பறை அன்னத்து அன்ன - வரிசையாகப் பறத்தலையுடைய அன்னப் பறவையை ஒத்த, விரை பரி புல் உளை

---

1. சிலப் - வாழ்த்து. ஊசல்வரி, கூ—அ. (பாடம்) 2. கொளீஇ. 3. மூழ்கிய. 4. கண்ணேக் கொளிக்கும். 5. ததர் நணை. 6. கழார்க் கீரன் எயிற்றியார்.

கலிமா - விரைந்த செலவினையுடைய புல்லிய பிடரி மயிரினையுடைய செருக்குவாய்ந்த குதிரைகளை, மெல்லிதின் கொளீஇய வள்பு ஒருங்கு அமையப் பற்றி - மென்மையுறப் பூட்டிய கடிவாள வாரினை ஒரு பெற்றியமையப் பற்றி, முள்கிய பல் கதிர் ஆழி மெல்வழி அறுப்ப - நிலத்தே பதிந்த பல ஆரங்களையுடைய உருளை மென்னில வழியை அறுத்தேக, கால் என மருள - வேகத்தாற் காற்றெனா வியக்க, ஏறி - ஏறியமர்ந்து, நூல் இயல் கண் நோக்கு ஒழிக்கும் பண் அமை நெடுந்தேர் - நூல் நெறிப்படி இயன்றதும் வேகத்தாற் கண்ணின் பார்வையினைத் தவிர்ப்பதும் பண்ணுதல் அமைந்ததுமாய நெடிய தேரினை,

௧0—௫. ததர் தழை மூனைஇய தெறிநடை மடப்பிணை - நெருங்கிய தழையினை மிகத்தின்று வெறுத்த துள்ளிச்செல்லும் நடையினையுடைய இளைய பெண்மான், ஏறு புணர் உவகைய ஊறு இல உகள - ஆண்மானுடன் கூடிய மகிழ்ச்சியை யுடையவாய் இடையூறின்றித் துள்ளித்திரிய, அம் சிறை வண்டின் மென்பறைத் தொழுதி - அழகிய சிறையினையுடைய வண்டின் மெல்லிய பறத்தலையுடைய கூட்டம், முல்லை நறுமலர் தாது நயந்து ஊத - நறிய முல்லை மலரில் உள்ள பூம்பொடியினை விரும்பி ஊத, எல்லை போகிய புல் என் மாலை - பகற்பொழுது கழிந்த பொலிவற்ற மாலைக் காலத்தே, புறவு அடைந்திருந்த உறைவு இன் நல் ஊர் - முல்லை நிலத்தைச் சார்ந்திருந்த உறைதற்கு இனிதாகிய நல்ல ஊரின்கண்ணே,

௧௬—அ. கழி படர் உழந்த பனிவார் உண்கண் - மிக்க துன்பத்தால் வருந்திய நீர் வாரும் மையுண்ட கண்களையும், நல் நிறம் பரந்த பசலையள் — நல்ல மேனியின்கண் பரவிய பசலையையும் உடைய நம் தலைவி, மின் நேர் ஓதி - தனது மின்னலையொத்த கூந்தலின், பின்னுப் பிணி விடவே - பின்னலாய பிணிப்பு நீங்க,

௯. வல் விரைந்து ஊர்மதி - மிக விரைந்து செலுத்துவாயாக.

(முடிபு) நல்வலம் பெறுந! நல்லூர்க்கண் மாலையில் கழிபடர் உழந்த பசலையள் ஓதியின் பின்னுப் பிணிவிட நெடுந்தேர் வல்விரைந்து ஊர்மதி.

(வி - ரை.) கார்பயம் பொழிந்த என்றதனால், தலைவன் குறித்த கார்ப்பருவம் வந்தமை பெற்றாம். நுண்மணல் பரந்த நீர்நிலைகளின் பக்கத்தே தாழவிரைந்து பறக்கும் அன்னம், அங்ஙனம் பறப்பதுபோல் விரைந்து தாவிச்செல்லும் குதிரைக்குத் தொழில் பற்றி உவமமாகும். தொல்காப்பியனார், [1]'வினைவயிற் பிரிந்தோன் மீண்டு வரு காலை, இடைச்சுர மருங்கிற் றவிர்த லில்லை, உள்ளம் போல உற்றுழி யுதவும், புள்ளியற் கலிமா வுடைமை யான' எனக் கூறுதலுங் காண்க. தூய வெண்ணிறமுடைமை பற்றிப் பண்புவமை விரவிவந்ததெனலுமாம். குதிரைக்கு வெண்ணிறம் சிறந்ததாதல், [2]'பால் புரை புரவி நால்குடன் பூட்டி' என்பதனால் அறிக. வள்பு - வார். மழையால் நிலம் நெகிழ்ந்திருத்தலின் மெல்வழி எனப்பட்டது. கட்புலன்

---

1. தொல். கற். ௫௧. 2. பொருந. ௧௬௫.

கதுவலாகாத விரைவுடைமையின் காலெனமருள எனவும் கண்ணேக் கொழிக்கும் எனவும் கூறினர். தன் பிரிவால் பசலே பரந்த மேனியளாய் ஒப்பனை செய்யாது பிணிப்புற்றிருக்கும் கூந்தலேயுடையளாய்ப் படருழக்கும் தலைவியின் துன்பத்தைப் போக்குதற்கு மிக விரைந்து சேறல் வேண்டுமென்பான் காலெனமருள வல்விரைந்து ஊர்மதி என்றான். பாகன் அங்ஙனம் செலுத்தும் ஆற்றல் உடையன் என்பது புலப்பட நல்வலம் பெறுந என விளித்தான். கார்ப் பருவம் வந்துற்றமையால் முல்லை நிலத்துள்ள மானினங்களும் வண்டுகளும் நறிய உணவினையுண்டும், துணையுடன் கூடியும் மகிழ்ந்திருக்க அந்நிலத்தின் கண்ணதாகிய உறைதற்கினிய ஊரிலிருக்கும் தலைவி அவற்றைக் காணுந்தொறும் ஆற்றுமை மீதூர்ந்து படருழப்பள் என்பது தோன்ற, மடப்பிணை உவகைய உகள, வண்டின் தொகுதி தாது நயந்தூத, கழிபடருழந்த பசலேயள் என்றான் என்க. பின்னுப் பிணி விட என்றது, தன் வருகையால் மகிழ்ச்சியுற்றுக் கூந்தலே ஒப்பனை செய்துகொள்ள என்றபடி.

---

## 235. பாலே

[தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் ஆற்றுமை மீதூரத் தோழிக்குச் சொல்லியது.]

அம்ம வாழி தோழி பொருள்புரிந்து
உள்ளார் கொல்லோ காதல ருள்ளியுஞ்
சிறந்த செய்தியின் மறந்தனர் கொல்லோ
பயனிலங் குழைய வீசிப் பெயல்முனிந்து
௫ விண்டு முன்னிய கொண்டல் மாமழை
மங்குல் அற்கமொடு பொங்குபு துளிப்ப
வாடையொடு நிவந்த ஆயிதழ்த் தோன்றி
சுடர்கொ ளகலிற் சுருங்குபிணி யவிழச்
சுரிமுகிழ் முசுண்டைப் பொதியவிழ் வான்பூ
க0 விசும்பணி மீனிற் பசும்புத லணியக்
[1]கள்வன் மண்ணளைச் செறிய அகல்வயற்
கிளைவிரி கரும்பின் கணைக்கால் வான்பூ
மாரியங் குருகின் ஈரிய குரங்க
நனிகடுஞ் சிவப்பொடு நாமந் தோற்றிப்
கரு பனிகடி கொண்ட பண்பில் வாடை
மருளின் மாலையொ [2]டருளின்றி நலிய
நுதலிறை கொண்ட அயலறி பசலேயொடு
தொன்னலஞ் சிதையச் சாஅய்
என்னள்கொல் அளியள் என்னு தோரே.

—கழாஅர்க் கீரனெயிற்றியனார்

---

(பாடம்) 1. களவன். 2. அருளின்று.

(சொ - ள்.) க. தோழி -, வாழி -, அம்ம - கேட்பாயாக ;

உ—கக. பயன் நிலம் குழைய வீசி - பயன் தரும் நிலங்கள் நெகிழப்பெய்து, பெயல் முனிந்து - பின் பெய்தலை வெறுத்து, விண்டு முன்னிய கொண்டல் மா மழை - மலையைச் சேர்ந்த கொண்டலாகிய கரியமேகம், மங்குல் அற்கமொடு பொங்குபு துளிப்ப - மீண்டும் இரவில் தங்குதலுற்றுப் பொங்கித் துளிக்க, வாடையொடு நிவந்த ஆய் இதழ் தோன்றி - வாடைக் காற்றால் உயர்ந்த அழகிய இதழினையுடைய செங்காந்தள், சுடர் கொள் அகலில் சுருங்கு பிணி அவிழ - சுடரினைக்கொண்ட அகல்போலச் சுருங்கிய அரும்பு விரிய, சுரி முகிழ் முசுண்டை பொதி அவிழ் வான்பூ - சுரிந்த அரும்பினை யுடைய முசுண்டையின் கட்டவிழ்ந்த பெரிய பூ, விசும்பு அணி மீனில் பசும் புதல் அணிய - வானை அழகுறுத்தும் மீன்களைப்போலப் பசிய புதர்களை அழகுறுத்த, கள்வன் மண் அளை செறிய - நண்டு தனது மண் வளையுட் செறிந்திட, அகல் வயல் கிளைவிரி கரும்பின் கணைக்கால் வான் பூ - அகன்ற வயலில் கிளைத்து விரிந்த கரும்பினது திரண்ட காம்பினையுடைய பெரிய பூ, மாரி அம் குருகின் ஈரிய குரங்க, மழையில் நனைந்த நாரையைப்போல ஈரம் கொண்டனவாய் வளைந் திருக்க, நனி கடும் சிவப்பொடு நாமம் தோற்றி - மிக்க கடிய சினத் தினால் அச்சத்தை உண்டாக்கி, பனி கடிகொண்ட பண்பில் வாடை - பனி தங்கிய நற்பண்பில்லாத வாடைக் காற்றானது, மருளின் மாலை யொடு அருளின்றி நலிய - மயங்குதலையுடைய மாலைப்பொழுதுடன் கூடி இரக்கமின்றி நலிந்திட,

கஎ—கஅ. நுதல் இறை கொண்ட அயல் அறி பசலையொடு - நுதற்கண்ணே தங்குதல்கொண்ட அயலோரால் அறியப்படும் பசலை யுடன், தொல் நலம் சிதையச் சாஅய் - பழைய மேனி நலம் கெட மெலிந்து, என்னள் கொல் அளியள் என்னுதோர் - என்ன நிலையின ளாயினளோ இரங்கத்தக்காள் என்று உசாவி யறியாராதலின்,

க—கூ. காதலர் - நம் தலைவர், பொருள் புரிந்து உள்ளார் கொல்லோ - பொருள் தேடுதலையே விரும்பி நம்மை நினைத்திலரோ, உள்ளியும் - நினைந்தும், சிறந்த செய்தியின் - செய்யும் வினையின் மிகுதியால், மறந்தனர் கொல்லோ - உசாவுதலை மறந்து விட்டனரோ.

(முடிபு) தோழி ! வாழி ! பண்பில் வாடை மாலையொடு அருளின்றி நலிய, என்னள்கொல் அளியள் என்னுதோர் ஆதலின், நம் காதலர் நம்மை உள்ளார் கொல்லோ, உள்ளியும் சிறந்த செய்தியின் மறந்தனர் கொல்லோ.

மழை பொங்குபு துளிப்ப, தோன்றி பிணி அவிழ, முசுண்டை வான் பூ புதல் அணிய, கள்வன் அளைச் செறிய, கரும்பின் பூ ஈரிய குரங்க, சிவப்பொடு நாமம் தோற்றிப் பனிகடி கொண்ட வாடை என்க.

(வி - ரை.) குழைய - தளிர்க்க என்றுமாம். பெயல் முனிந்து என்றமையாலும், பொங்குபு துளிப்ப என்றமையாலும், பனிகடி கொண்டவாடை என்றமையாலும், கூதிரின் பின்னரைத்தாகிய பனிப் பொழுது என்பது போதரும். மங்குல் - விசும்பு என்றுமாம். அற்கம் - தங்குதல்; தொழிற் பெயர். கூதிர்ப்பருவத்தே மேகம்

பெயலை வெறுத்து வானிலிருந்து துளிக்கும் இயல்பினது என்பது, [1]'பெயலுலந் தெழுந்த பொங்கல் வெண்மழை, அகலிரு விசும்பிற் றுவலை கற்ப' என்பதனானும் அறியப்படும். குரங்குதல் - வளைதல். சிவப்பு - வெகுளி. நாம் என்னும் உரிச்சொல் ஈறு திரிந்தது. தலைவனைப் பிரிந்து தலைவி வருந்துதலை ஏனோர்க்கு அறிவிப்பது பசலையாகலின், 'அயலறி பசலை' எனப்பட்டது.

---

## 236. மருதம்

[ஆற்றாமை வாயிலாகப் புக்க தலைமகன் நீக்கத்துக்கண் புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

மணிமருள் மலர முள்ளி யமன்ற
துணிநீர் இலஞ்சிக் கொண்ட பெருமீன்
அரிநிறக் கொழுங்குறை [2]வெளவினர் மாந்தி
வெண்ணெ லரிநர் பெயர்நிலைப் பின்றை
௫ [3]இடனில நெரிதரு நெடுங்கதிர்ப் பல்சூட்டுப்
பனிபடு சாய்ப்புறம் பரிப்பக் கழனிக்
கருங்கோட்டு [4]மாஅத் தலங்குசினைப் புதுப்பூ
மயங்குமழைத் துவலையில் தாஅம் ஊரன்
காமம் பெருமை யறியேன் நன்றும்
௧௦ உய்ந்தனென் வாழி தோழி யல்கல்
அணிகிளர் சாந்தின் அம்பட் டிமைப்பக்
கொடுங்குழை மகளிரின் ஒடுங்கிய இருக்கை
அறியா மையின் அழிந்த நெஞ்சின்
ஏற்றியல் எழினடைப் பொலிந்த மொய்ம்பின்
௧௫ தோட்டிருஞ் சுரியல் மணந்த பித்தை
ஆட்ட னத்தியைக் காணீ ரோவென
நாட்டின் நாட்டின் ஊரின் ஊரிற்
கடல்கொண் டன்றெனப் புனலொளித் தன்றெனக்
கலுழ்ந்த கண்ணள் காதலற் கெடுத்த
௨௦ ஆதி மந்தி போல
ஏதஞ் சொல்லிப் பேதுபெரி துறலே.

—பரணர்.

(சொ - ள்.) க—கூ. தோழி -, வாழி -, வெண் நெல் அரிநர் - வெள்ளிய நெல்லை அறுப்போர், மணி மருள் மலர - நீல மணியினை யொத்த மலர்களையுடைய, முள்ளி அமன்ற - நீர் முள்ளி நிறைந்த, துணி நீர் இலஞ்சி கொண்ட - தெளிந்த நீரினையுடைய மடுவிற் கவர்ந்த, பெருமீன் அரி நிறம் கொழு குறை - பெரிய மீனின் வரிகள்

1. நெடுநல். ௧௯-௨௦. (பாடம்) 2. வெவ்விளர். 3. இடைநிலம். 4. மாஅத்த அஞ்சினை.

பொருந்திய நிறத்தினையுடைய வளவிய துண்டினை, வெளவினர் மாந்தி - கெளவியுண்டு, பெயர் நிலைப் பின்றை - எழுந்த பின்னர்க் (கொண்டு போய்ப் போகட்ட), இடன் இல நெரிதரு நெடும் கதிர்ப் பல் சூட்டு - களத்தே வெற்றிடம் அறச் செறிந்துள நீண்ட கதிரினையுடைய பல நெற்கட்டுக்களையுடைய, பனிபடு சாய்ப்புறம் பரிப்ப - பனிதங்கிய கோரையையுடைய களனெலாம் சூழ, கழனி - வயற்புறத்தேயுள்ள, கருங்கோட்டு மாஅத்து - கரிய கவையினையுடைய மாமரத்தின், அலங்கு சினைப் புது பூ - அசையும் கொம்புகளிலுள்ள புதிய பூக்கள், மயங்கும் மழைத் துவலையில் தாஅம் ஊரன் - கலந்து சொரியும் மழைத்துளிபோல உதிர்ந்து பரந்து கிடக்கும் ஊரனாகிய நம் தலைவனது, காமம் பெருமை அறியேன் - காமம் பெருமை இவற்றினை அறியாதேன்,

கo—௩. அல்கல் - இரவில், அணிகிளர் சாந்தின் அம்பட்டு இமைப்ப - அழகு விளங்கும் சாந்தினுடன் அழகிய பட்டாடை ஒளிசெய, கொடு குழை மகளிரின் ஓடுங்கிய இருக்கை - வளைந்த குழையணிந்த மகளிரைப்போல நம் தலைவன் நாணியிருந்த இருக்கையினைக் கண்டு, அறியாமையின் அழிந்த நெஞ்சின் - மடமையால் உருகப்பெற்ற நெஞ்சினேன் ஆயினமையின்,

கச—உக. காதலற்கெடுத்த - தன் கணவனை இழந்தமையின், கலுழ்ந்த கண்ணள் - அழுத கண்ணினளாகிய, ஆதிமந்தி போல - ஆதிமந்தியைப்போல, ஏற்று இயல் எழில் நடை - ஏற்றின் தன்மையுடைய எழுச்சி பொருந்திய நடையினையும், பொலிந்த மொய்ம்பின் - பொலிவுற்ற தோளினையும், தோடு இரு சுரியல் மணந்த பித்தை - தொகுதிகொண்ட கரிய சுருளைப் பொருந்திய தலைமயிரினையுமுடைய, ஆட்டன் அத்தியைக் காணிரோ என - ஆட்டன் அத்தியாய என் தலைவனைக் கண்டீரல்லிரோ என்று, நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின் - நாடுதோறும் ஊர்தோறும் சென்று, கடல் கொண்டன்று என புனல் ஒளித்தன்று என - என் தலைவனைக் கடல் கொண்டது போலும் புனல் கொண்டொளித்தது போலுமெனக் கூறி, ஏதம் சொல்லிப் பேது பெரிது உறல் - துன்பத்தைச் சொல்லிப் பெரிதும் மயங்குதலினின்றும்,

௨௨—௨௩. நன்றும் உய்ந்தனென் - பெரிதும் தப்பினேன்.

(முடிபு) தோழி! வாழி! ஊரன் காமம் பெருமை அறியேன், அல்கல், மகளிரின் ஒடுங்கிய அவனது இருக்கை கண்டு அழிந்த நெஞ்சின், காதலற் கெடுத்த ஆதிமந்திபோல ஏதம் சொல்லிப் பேதுறல் நன்றும் உய்ந்தனென்.

(வி - ரை.) பின்றைக் கொண்டு போகட்ட என வருவித்துரைக்க. காமம் பெருமை : எண்ணும்மை விகாரத்தாற் றொக்கன. சாந்தொடு பட்டிமைப்ப என்றமையால், பரத்தையிற் பிரிந்து வந்தான் என்பது பெற்றாம். நாணாலும் அச்சத்தாலும் ஒடுங்கிய இருக்கை என்க. இருக்கை கண்டு என ஒரு சொல் வருவிக்கப்பட்டது. நெஞ்சின் - நெஞ்சினேனாகலின் என விரித்துரைக்க. ஆதிமந்தி, தன் காதலனாகிய ஆட்டன்அத்தியுடன் நீராடியபொழுது அத்தியைக் காவிரி

வவ்விச் சென்றமையின், அவள் அவனைப் பல விடங்களிலும் தேடி யுழந்த வரலாறு முன்னர் [1]'வானுற நிவந்த' என்னும் அகப்பாட்டிலும் பரணராற் கூறப்பட்டமை அறிக. நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின் என்னும் அடுக்குகள் பன்மை குறித்தன. கொண்டன்று, ஒளித்தன்று என்னும் இடங்களில் ஐயப் பொருட்டாகிய இடைச்சொல் விரித்துரைத்துக்கொள்க.

(மே - ள்.) [2]'அணங்கே விலங்கே' என்னும் சூத்திரத்தே, புலவி பொருளாக அச்சம் வருதற்கு இப்பாட்டின் 'அணிகிளர் சாந்தின் அம்பட்டிமைப்பக், கொடுங்குழை மகளிரின் ஒடுங்கிய இருக்கை' என்ற அடிகளைக் காட்டினர். பேரா.

---

## 237. பாலை

[தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.]

புன்காற் பாதிரி அரிநிறத் திரள்வீ
நுண்கொடி யதிரலொடு நுணங்கறல் வரிப்ப
அரவெயிற் றன்ன அரும்புமுதிர் குரவின்
தேனிமிர் நறுஞ்சினைத் தென்றல் போழக்
௫ குயில்குரல் கற்ற வேனிலுந் துயில்துறந்து
இன்னா கழியுங் கங்கு லென்றுநின்
நன்மா மேனி யணிநலம் புலம்ப
இனைதல் ஆன்றிசின் ஆயிழை கனைநிறச்
செந்தீ அணங்கிய செழுநிணக் கொழுங்குறை
௧௦ மென்றினைப் [3]புன்கம் உதிர்த்த மண்டையொடு
இருங்கதிர் அலமருங் கழனிக் கரும்பின்
விளைகழை பிழிந்த அந்தீஞ் சேற்றொடு
பால்பெய் செந்நெற் பாசவற் பகுக்கும்
புனல்பொரு புதவின் உறந்தை யெய்தினும்
௧௫ வினைபொரு ளாகத் [4]தவிர்விலர் கடைசிவந்து
ஐய அமர்த்த உண்கணின்
வையேர் வாலெயி றூறிய நீரே.

—தாயங்கண்ணனார்.

(சொ - ள்.) க—அ. ஆயிழை - அழகிய அணிகளையுடைய தலைவியே! புன் கால் பாதிரி அரி நிற திரள் வீ - புல்லிய காம்பினையுடைய பாதிரியின் வரிகள் பொருந்திய நிறமுடைய திரண்ட மலர், நுண்கொடி அதிரலொடு - மெல்லிய கொடியாகிய புனலியின் மலரொடு, நுணங்கு அறல் வரிப்ப - நுண்ணிய மணலிடத்தே கோலஞ் செய்ய, அரவு எயிறு அன்ன அரும்பு முதிர் குரவின் - பாம்பின் பல்

1. அகம். ௨௨௨. 2. தொல். மெய். அ. (பாடம்) 3. புன்கம் உயர்த்த. 4. தவிரலர்.

அனைய அரும்புகள் முதிர்ந்த குராவினது, தேன் இமிர் நறு சினை தென்றல் போழ - வண்டுகள் ஒலிக்கும் நறிய கிளையில் தென்றல் ஊடறுத்துச் செல்ல, குயில் குரல் கற்ற வேனிலும் - குயில் கூவுதலைப் பயின்ற வேனிற்காலத்தும், கங்குல் - இராப்பொழுதானது, துயில் துறந்து இன்னு கழியும் என்று - துயிலின்றி வருந்தும்படி இன்னாதாய்க் கழியாநிற்கும் என்று கூறி, நின் நல்மா மேனி அணி நலம் புலம்ப - நினது நல்ல மாமை நிறத்தையுடைய மேனியின் சிறந்த அழகு ஒழிய, இனைதல் ஆன்றிசின் - வருந்துதல் ஒழிவாயாக;

அ—கச. கனை திறல் செந்தீ அணங்கிய செழு நிண கொழு குறை - செறிந்த வலிய செந்தீயில் சுட்ட வளம் பொருந்திய நிணத்தில் கொழுவிய துண்டுகளை, மென்தினை புன்கம் உதிர்த்த மண்டையொடு - மெல்லிய தினைச்சோற்றிலே சொரிந்த கலத்துடன், இருங் கதிர் அலமரும் கழனி - பெரிய நெற்கதிர்கள் சுழல்கின்ற வயலிடத்து, கரும்பின் விளைகழை பிழிந்த - முற்றிய கரும்பின் தண்டினைப் பிழிந்த, அம்தீம் சேற்றொடு - அழகிய இனிய சாறு அட்ட பாகுடன், பால் பெய் - பாலினையும் பெய்து அளைந்த, செந்நெல் பாசவல் - செந்நெல்லாலாகிய பசிய அவலை, பகுக்கும் - பாணர் முதலாயினோர்க்குப் பகுத்துக்கொடுக்கும், புனல் பொரு புதவின் உறந்தை எய்தினும் - நீர் மோதுகின்ற வாய்த்தலைகளையுடைய உறையூரையே அடைவதாயினும்,

கரு—எ. கடை சிவந்து ஐய அமர்த்த உண்கண் நின் - கடை சிவப்புற்று வியக்குமாறு பொருந்திய மையுண்ட கண்களையுடைய நினது, வை ஏர் வால் எயிறு ஊறிய நீர் - அழகு பொருந்திய கூரிய வெள்ளிய எயிற்றின்கண் ஊறிய நீரினை, வினை பொருளாக - (நம் தலைவர்) பொருளீட்டும் வினை காரணமாக, தவிர்விலர் - உண்ணாது தவிர்ந்திருப்பாரல்லர்.

(முடிபு) ஆயிழை! வேனிலும் கங்குல் இன்னு கழியும் என்று நின்மேனி நலம் புலம்ப இனைதல் ஆன்றிசின்; நம் தலைவர் உறந்தை எய்தினும் நின் வால் எயிறு ஊறிய நீரினை வினைபொருளாகத் தவிர்விலர்.

(வி - ரை.) புன்கால் வீ எனக் கூட்டுக. அரி - ஒண்மையுமாம். 'புன்கால் . . . . குயில் குரல்கற்ற' என்றதனால் ஈண்டுக் குறித்தது இளவேனில் ஆகும். பாதிரி முதலிய பூக்கள் நீர் வற்றிய கருமணலிற் சிதறி அழகு செய்தலும், தென்றல் பூத்த குரா முதலியவற்றை ஊடறுத்துவந்து வீசுதலும், வண்டுகள் ஒலித்தலும், குயில் கூவுதலும் உடைய இளவேனிற்போது, கூடியிருப்பார்க்கு மிக்க இன்பத்தினைச் செய்வதாகலின், வேனிலும் என்னும் உம்மை உயர்வு சிறப்பு. அணங்குதல் - வருத்துதல்; ஈண்டுச் சுடுதல் என்றபடி. மண்டை - பாணருடைய உண்கலம். புன்கம் உதிர்த்த மண்டையொடு என்றுரேனும், மண்டையின்கண் சொரிந்த புன்கத்தினையும் பாசவலினையும் பகுக்கும் எனக்கொள்க; இனி, புன்கத்தை ஒழித்த மண்டையின்கண் பாசவற் பகுக்கும் என்னலுமாம்; இதற்கு மண்டையொடு என்பது வேற்றுமை மயக்கம். விளை கரும்பின் கழை என

மாறுக. சேறு - சாறு காய்ச்சிய பாகு. சாறு என்னலுமாம். பகுக்கும் உறந்தை என்றது பகுத்தளிக்கும் வண்மையுடையார் வாழும் செல் வம் மிக்க உறந்தை என்றபடி. பொருளாக - காரணமாக. ஊறிய நீர் தவிர்விலர் என்றது, அதனை உண்ணும் வேட்கையால் விரைந்து வருவர் என்று குறிப்பித்தவாறாயிற்று.

---

## 238. குறிஞ்சி

[இரவுக்குறி வந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.]

மான்றமை யறியா மரம்பயில் இறும்பின்
ஈன்றிளைப் பட்ட வயவுப்பிணைப் பசித்தெனை
மடமான் வல்சி தரீஇய நடுநாள்
இருண்முகைச் சிலம்பின் இரைவேட் டெழுந்த
ரு [1]பனைமருள் எருத்திற் பல்வரி இரும்போத்து
மடக்கண் ஆமான் மாதிரத் தலறத்
தடக்கோட் டாமான் அண்ணல் ஏஎறு
நனந்தலைக் கானத்து வலம்படத் தொலைச்சி
இருங்கல் வியலறை சிவப்ப ஈர்க்கும்
கூ0 பெருங்கல் நாட பிரிதி யாயின்
மருந்தும் உடையையோ மற்றே இரப்போர்க்கு
இழையணி நெடுந்தேர் களிறொடு டென்றும்
மழைசுரந் தன்ன ஈகை வண்மகிழ்க்
கழறொடித் தடக்கைக் [2]கலிமான் நள்ளி
கூரு நளிமுகை யுடைந்த நறுங்கா ரடுக்கத்துப்
போந்தை முழுமுதல் நிலைஇய காந்தள்
மென்பிணி முகையவிழ்ந் தலர்ந்த
தண்கமழ் புதுமலர் நாறுநறு நுதற்கே.

—கபிலர்.

(சொ - ள்.) க—கo. மான்றமை அறியா மரம் பயில் இறும் பின் - மரங்கள் ஒன்றோடொன்று பின்னியிருத்தல் அறியப்படாத வாறு நெருங்கியுள்ள காட்டின்கண், ஈன்று இளைப்பட்ட வயவு பிணை பசித்தென - ஈன்று காவற்பட்ட வேட்கையினையுடைய பெண்புலி பசியுற்றதாக, மடமான் வல்சி தரீஇய - அதற்கு இளைய மானாகிய உணவைக் கொணர்ந்துதர, நடுநாள் இருள் முகைச் சிலம்பின் இரைவேட்டு எழுந்த - நடு இரவில் இருண்ட குகைகளையுடைய பக்க மலையில் இரை கொள்ளுதலை விரும்பிப் புறப்பட்ட, பனை மருள் எருத்தின் பல் வரி இரு போத்து - பனந்துண்டினைப்போன்ற பிடரியினையுடைய பல வரிகளையுடைய பெரிய ஆண்புலி, மட கண் ஆ மான் மாதிரத்து அலற - மடப்பம் பொருந்திய கண்ணினையுடைய

(பாடம்) 1. பணை மருள். 2. கடுமான் நள்ளி.

காட்டுப்பசு சேய்மைக்கண் நின்று அலற, தட கோட்டு ஆமான் அண்ணல் ஏறு - வளைந்த கோட்டினையுடைய தலைமை பொருந்திய அக் காட்டுப் பசுவின் ஏற்றினை, நன தலைக் கானத்து வலம்பட தொலைச்சி - அகன்ற இடத்தினையுடைய காட்டில் வலப்பக்கம் வீழக் கொன்று, இரு கல் வியல் அறை சிவப்ப ஈர்க்கும் - பெரிய மலையை யடுத்த அகன்ற பாறைகள் குருதியால் சிவந்திட இழுத்தேகும், பெரு கல் நாட - பெரிய மலை பொருந்திய நாட்டையுடையவனே !

பிரிதியாயின் - நீ இவளைப் பிரிந்து செல்வாயாயின்,

௧௧—அ. இரப்போர்க்கு - பாணர் முதலிய இரவலர்க்கு, இழை அணி நெடு தேர் - அணிகள் அணிந்த நெடிய தேரை, களிறொடு - களிற்றுடன், என்றும் மழைசுரந்தன்ன ஈகை - எஞ்ஞான்றும் வானம் சுரந்தளிப்பது போன்று தரும் ஈகையினையும், வண் மகிழ் - மிக்க மகிழ்ச்சியினையும், கழல் தொடி - கழலவிட்ட தொடியணிந்த, தட கை - பெரிய கையினையும், கலிமான் - செருக்குற்ற குதிரைகளையு முடைய, நள்ளி - நள்ளி என்பானது, நளி முகை உடைந்த நறு கார் அடுக்கத்து - செறிந்த அரும்புகள் மலர்ந்த நறிய கரிய பக்கமலை களில், போந்தை முழுமுதல் நிலைஇய - பனையின் பெரிய அடிப் பக்கத்தே நிலைபெற்றுள்ள, காந்தள் மெல்பிணி முகை அவிழ்ந்து அலர்ந்த - காந்தளது மெல்லிய பிணிக்கப்பெற்ற அரும்புகள் இதழ் விரிந்து மலர்ந்த, தண் கமழ் புதுமலர் நாறும் நறு நுதற்கு - தண்ணி தாகிக் கமழும் புதிய மலர் போல நாறும் நறிய நெற்றியுடையாளை (இறவாது காத்தற்கு),

௧௧. மருந்தும் உடையையோ - மருந்தினையும் உடையையோ ? மற்று - உடையை யல்லையாகலின் பிரியற்க.

(முடிபு) பெருங்கல் நாட ! நீ இவளைப் பிரிதியாயின், நறு நுதலை யுடையாளை (இறவாது காத்தற்கு) மருந்தும் உடையையோ? மற்று.

(வி - ரை.) மான்றமை - மயங்கினமை. வயவு - சூல் முதிர்ந்த விடத்தும் ஈன்றவிடத்தும் உணவு முதலிய பற்றி யுண்டாம் ஆசைப் பெருக்கம். பணை மருள் என்பது பாடமாயின், பட்டடை போலும் என்க. பட்டடை - கொல்லன் உலைக்களத்து அடைகல். பல்வரி என்னும் அடையால், போத்து, புலிக்காயிற்று. புலியானது பசியால் உயிர் வருந்துவதாயினும் இடப்பக்கத்தில் வீழ்ந்த விலங்கினை உண்ணாமையும், வலப்பக்கத்தே வீழ்த்தி உண்ணுதலும் ஆகிய இயல் பினையுடையதென்பது [1]'கடுங்கட் கேழல் இடம்பட வீழ்ந்தென, அன்றவண் உண்ணாதாகி வழிநாள், . . . . இருங்களிற் றொருத் தல் நல்வலம் படுக்கும், புலிபசித்தன்ன' என்பதனால் அறிக. [2]'தொடங்கு வினைதவிரா அசைவில் நோன்றாள் ; கிடந்துயிர் மறு குவதாயினும் இடம்படின், வீழ்களிறு மிசையாப் புலியினும்' என இந்நூலுள் முன்னர்ப் போந்தமையும் அறியற்பாற்று. மற்று, வினை மாற்று. தேர் களிறொடு ஈயும் என ஒரு சொல் விரித்துரைக்க.

1. புறம். ௧௯௦. 2. அகம். ௨௯.

வண்மகிழ் - வண்மையாலாகிய மகிழ்ச்சியுமாம். நளிமுகையுடைந்த- பூக்களின் செறிந்த முகையுடைந்த என்க. நறு நுதற்கு - நறு நுதலையுடையாளை இறவாது காத்தற்கு என விரித்துரைக்க. மருந்தும் உடையையோ என்றது நீ பிரியின் இறந்து படுவள் என்றபடியாம்; என்றும் பிரியாதிருக்க வரைந்து கொள்க என்பது கருத்து.

---

## 239. பாலை

[பொருள்வயிற் பிரிந்துபோகாநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]

[1]அளிதோ தானே எவனா வதுகொல்
மன்றுந் தோன்றாது மரனும் மாயும்
புலியென உலம்புஞ் செங்கண் ஆடவர்
ஞெலியொடு பிடித்த வார்கோ லம்பினர்
௫ எல்லூர் எறிந்து பல்லாத் தழீஇய
விளிபடு பூசல் வெஞ்சுரத் திரட்டும்
வேறுபஃ றேஎத் தாறுபல நீந்திப்
புள்ளித் தொய்யிற் பொறிபடு சுணங்கின்
ஒள்ளிழை மகளிர் உயர்பிறை தொழூஉம்
௧0 புல்லென் மாலை யாமிவ ணொழிய
ஈட்டருங் குரைய பொருள்வயிற் செலினே
நீட்டுவி ரல்லிரோ நெடுந்தகை யீரெனக்
குறுநெடும் புலவி கூறி நம்மொடு
[2]நெருநலுந் தீம்பல மொழிந்த
௧௫ சிறுநல் லொருத்தி பெருநல் லூரே.

—எயினந்தை மகனிளங்கீரனார்.

(சொ - ள்.) ௧௨. நெடுந் தகையீர் - பெருந் தன்மையுடையீரே!

௩—எ. புலி என உலம்பும் செங்கண் ஆடவர் - புலிபோல முழங்கும் சிவந்த கண்ணையுடைய மறவர், ஞெலியொடு பிடித்த வார்கோல் அம்பினர் - தீக் கொள்ளியுடன் பிடித்துள்ள நீண்ட திரண்ட அம்பினராகிச்சென்று, எல் ஊர் எறிந்து - இரவில் மாற்றார் ஊரினைப் போரிற் றொலைத்து, பல் ஆ தழீஇய விளிபடு பூசல் - பல ஆனினங்களைக் கவர்ந்தமையால் உண்டாகிய ஒலித்தல் மிக்க ஆரவாரம், வெம் சுரத்து இரட்டும் - கொடிய சுரத்தே மாறி யொலிக்கும், வேறு பல் தேஎத்து ஆறு பல நீந்தி - வேறுபட்ட மொழி வழங்கும் பல தேயங்களின் நெறிகள் பலவற்றைக் கடந்து சென்று,

அ—௧௨. புள்ளித் தொய்யில் - புள்ளி வடிவினதாக எழுதப்பட்ட கோலத்தினையும், பொறிபடு சுணங்கின் - பொறிகள் பொருந்

---

(பாடம்) 1. அளிதோ தானே எவனா குவங்கொல். 2. நெருநையும்.

திய தேமலையும் உடைய, ஒள் இழை மகளிர் - ஒள்ளிய அணிகளை யணிந்த மங்கையர், உயர் பிறை தொழூஉம் புல் என் மாலை - உயர்ந்த பிறையினை வணங்கும் பொலிவற்ற மாலைக் காலத்தே, யாம் இவண் ஒழிய - நாம் இங்கே தனித்திருக்க, ஈட்டு அரும் குரைய - ஈட்டுதற்கு அருமையாய, பொருள் வயின் செலினே - பொருளீட்டும் வினைக் கண் செல்லின், நீட்டுவிர் அல்லிரோ என - காலம் தாழ்ப்பீர் அல் லீரோ என்று,

கங—டு. குறு நெடு புலவி கூறி - குறியனவும் நெடியனவுமாகிய ஊடலுரைகளைக் கூறி, நெருநலும் நம்மொடு தீம்பல மொழிந்த - நேற்றும் நம்முடன் இனிய பலவற்றை உரைத்த, சிறு நல் ஒருத்தி பெரு நல் ஊர் - இளமை பொருந்திய நல்லளாய நம் தலைவியது பெரிய நல்ல ஊரானது,

க—உ. மன்றும் தோன்றாது - மன்றும் தோன்றப் பெறாது; மரனும் மாயும் - மரங்களும் மறையப் பெறும்; எவன் ஆவதுகொல் - இனி எத் தன்மையது ஆகுமோ? அளிது - இரங்கத்தக்கது.

(முடிபு) நெடுந் தகையிர்! வேறு பல் தேயத்து ஆறு பல நீந்தி, யாம் இவண் ஒழிய, பொருள் வயிற் செலினே, நீட்டுவிர் அல்லிரோ என நெருநலும் நம் மொடு புலவிகூறித் தீம்பல மொழிந்த ஒருத்தி பெருநல் ஊர் மன்றும் தோன்றாது; மரனும் மாயும்; எவனாவது கொல்? அளிது.

(வி - ரை.) செங்கண் ஆடவர் என்றது வெட்சி மறவரை. மாற்றார் ஊரினைத் தீக்கொளுவுதற்கு ஞெலியும், பகைவரைக் கோறற்கு அம்புங்கொண்டு சென்றாராகலின், "ஞெலியொடு பிடித்த வார்கோலம்பினர்" எனப்பட்டார். இரவிலேசென்று ஊரினை அழிப்பராகலின் எல் ஊரெறிந்து என்றார்; [1]'அரவூர் மதியிற் கரி தூர ஏம, இரவூ ரெரிகொளீஇக் கொன்று' என வருதல் காண்க. விளிபடுபூசல் - வெட்சியாருங் கரந்தையாரும் போர் செய்தலால் எழும் ஆரவாரம். 'எல்லூரெறிந்து பல்லாத் தழீஇய விளிபடு பூசல்' என்பதன்கண், ஊர்கொலை, ஆகோள், பூசல் மாற்று என்னும் வெட்சித்திணையின் துறைகள் அமைந்திருத்தல் அறியற்பாற்று. இரட்டும் ஆறு எனவும் தேஎத்து ஆறு எனவும் இயையும். தொய்யில் - சந்தனக் குழம்பு முதலியவற்றால் மகளிர் மார்பிலும் தோளிலும் செய்யும் கோலம். உயர் பிறை - மேல் வளர்தற்குரிய பிறை என்றுமாம். வதுவையாகாத கன்னியர் பிறை தொழுதல் மரபு என்க. இளமையும் எழிலும் வாய்ந்த தலைவியின் ஊடலுரையும் தலைவனுக்கு மிக்க இன்பம் விளைத்தன வாகலின் 'புலவிகூறி நம்மொடு தீம்பல மொழிந்த சிறுநல் லொருத்தி' என்றான். தலைவியைப் பிரிந்த பிற்றைஞான்று, இடைச்சுரத்தே தன் நெஞ்சிற்குக் கூறுகின்றானாகலின், நெருநலும் என்றான். பெருநல்லூர் - அவள் பிறத்தலாற் பெருமையும் நன்மையும் வாய்ந்த ஊர் என்க. ஊரின்கண் மன்றும் தோன்றாது மரனும் மாயும் என்றுமாம். தலைவியைப் பிரிந்து அவ்வூரை

1. தொல். பொருள். புறத். ௩-ஆம் சூத்திர மேற்கோள்.

விடுத்துச் செல்லுந் தலைவன், தலைவிபாலுள்ள காதல் மிகுதியால் அவ்வூரினை நோக்கிய வண்ணம் செல்வானாகலின், அங்ஙனம் செல்லுங்கால் முதலில் மன்று மறையவும், பின் உயர்ச்சியுடைய மரங்களும் மறையலுற்றன; அதனால் ஆற்றாமை எய்திய தலைவன் இனியும் எனக்கு எத்தன்மையதாகுங் கொல் என்றான் என்க.

---

## 240. பாலை

[தோழி, இரவுக்குறிவந்த தலைமகற்குப் பகற்குறி நேர்ந்தது.]

செவ்வீ ஞாழற் [1]கருங்கோட் டிருஞ்சினைத்
தனிப்பார்ப் புள்ளிய தண்பறை நாரை
மணிப்பூ நெய்தல் மாக்கழி நிவப்ப
இனிப்புலம் பின்றே கானலும் நளிகடற்
௫ றிரைச்சுரம் உழந்த திண்டிமில் விளக்கிற்
பன்மீன் கூட்டம் என்னையர்க் காட்டிய
எந்தையுஞ் செல்லுமார் இரவே அந்தில்
அணங்குடைப் பனித்துறை கைதொழு தேத்தி
யாயும் ஆயமோ டயரும் நீயுந்
க௦ தேம்பாய் ஓதி திருநுதல் நீவிக்
கோங்குமுகைத் தன்ன குவிமுலை யாகத்து
இன்றுயில் அமர்ந்தனை யாயின் வண்டுபட
விரிந்த செருந்தி வெண்மணன் முடுக்கர்ப்
பூவேய் புன்னையந் தண்பொழில்
கரு வாவே தெய்ய மணந்தனை செலற்கே.

—எழுஉப்பன்றி நாகன் குமரனார்.

(சொ - ள்.) க—ச. செவ்வீ ஞாழல் கருங்கோட்டு இருசினை - சிவந்த பூவினையுடைய புலிநகக் கொன்றையின் கரிய கொம்பின் பெரிய கிளையில், தனி பார்ப்பு உள்ளிய தண்பறை நாரை - தனியே யிருக்கும் தன் குஞ்சினை நினைத்த தணியப் பறத்தலையுடைய நாரை, மணி பூ நெய்தல் மா கழி நிவப்ப - நீலமணிபோலும் நெய்தற் பூக்களையுடைய கரிய கழியினின்றும் மேலே எழுந்து பறந்திட, கானலும் இனி புலம்பின்று - கடற்கரைச் சோலையும் இப்பொழுது தனிமையுற்றது;

ச—எ. நளி கடல் திரை சுரம் உழந்த திண்திமில் விளக்கில் - செறிந்த கடலாகிய திரையையுடைய சுரத்தில் திரிந்து வருந்திய திண்ணிய படகின் விளக்கொளியில், பல் மீன் கூட்டம் என் ஐயர்க் காட்டிய - தான் அகப்படுத்த பலவாய மீன் கூட்டங்களை என் அண்ணன்மார்க்குக் காட்டுதற்கு, எந்தையும் இரவு செல்லும் - என் தந்தையும் இரவில் மனைக்கண் போதரும்,

---

(பாடம்) 1. கருங்கோட் டஞ்சினை.

எ—அ. யாயும் ஆயமோடு - என் தாயும் ஆயத்தாருடன், அணங்கு உடை பனி துறை அந்தில் கை தொழுது ஏத்தி அயரும் - தெய்வமுடைய குளிர்ந்த துறையாய ஆங்கே (அத்தெய்வத்தைக்) கையால் வணங்கித் துதித்து அதற்குச் சிறப்புச் செய்யும்;

கூ—கரு. நீயும் -, தேம்பாய் ஓதி - தேன் ஒழுகும் கூந்தலையுடைய தலைவியது, திரு நுதல் நீவி - அழகிய நெற்றியைத் தடவி, கோங்கு முகைத்தன்ன குவிமுலை ஆகத்து - கோங்கு அரும்பினை யொத்த குவிந்த முலையினையுடைய மார்பகத்தே, இன் துயில் அமர்ந்தனையாயின் - இனிய துயிலை விரும்பினையாயின், மணந்தனை செலற்கு - அங்ஙனம் அவளைக் கூடிச் செல்லுதற்கு, வண்டு பட விரிந்த செருந்தி - வண்டு மொய்க்க விரிந்த பூக்களையுடைய செருந்திமரம் பொருந்திய, வெண் மணல் முடுக்கர் - வெள்ளிய மணல் பரந்த முடுக்கில், பூவேய் புன்னை அம் தண்பொழில் - பூக்கள் பொருந்திய புன்னை மரங்களையுடைய அழகிய தண்ணிய சோலைக்கண், வா - வருவாயாக.

(முடிவு) (தலைவ!) நாரையும் நிவப்பக் கானல் புலம்பின்று; எந்தையும் இரவு (மனைக்கட்) செல்லும்; யாயும் ஆயமொடு அயரும்; நீயும் ஓதி ஆகத்து இன்றுயில் அமர்ந்தனையாயின் மணந்தனை செலற்குப் புன்னையந் தண்பொழில் வா.

(வி - ரை.) தண் பறை - மெல்லப் பறத்தல். நிவப்ப - உயர்ந்து பறந்து செல்ல என்றபடி. நாரை நிவப்பக் கானல் புலம்பின்று என்றது, கடலில் அகப்படுத்த மீன்களைக் கரையிற்போகட்டுச் செல்லுதற்கு இடையூறின்மை கூறியபடி. நாரை நிவப்ப என்றாரேனும் இனம் பற்றிப் பிற பறவைகளும் கொள்ளப்படும். வேட்டம் ஆடுவார் சுரத்திலே செல்லும் வழக்கு வலியால் கடலைச் சுரமாக உருவகித்தார். எந்தை இரவில் மனைக்கட் செல்லும் என்பதும், யாய் அணங்கிற்குச் சிறப்பயரும் என்பதும், இரவுக்குறியின் இடையீடு கூறியவாறு. அணங்கு - நெய்தற் றெய்வமாகிய வருணன். 'வண்டு பட விரிந்த . . . . தண் பொழில்' என்றது பகற்குறிக்குச் சிறந்த களம் சுட்டியவாறு. தெய்ய, அசை. அந்திலும் அசை யென்னலுமாம்.

(மே - ள்.) [1]'மாயோன் மேய' என்னுஞ் சூத்திரத்து 'அணங்குடை . . . . அயரும்' என்பது, நெய்தன் மகளிர் கிளையுடன் குழீஇ வருணற்குப் பரவுக்கடன் கொடுப்பது என்றும், [2]'தோழியின் முடியும் இடனுமாருண்டே' என்னுஞ் சூத்திரத்து, 'பூவேய் புன்னையந் தண் பொழில் நீவா' என்பதனை இது தோழி களஞ் சுட்டியது என்றும், [3]'பகற் புணர் களனே' என்னும் சூத்திரத்து, இது தோழி பகற்குறி உரைத்தது என்றும், [4]'பொழுதும் ஆறும்' என்னும் சூத்திரத்து, இது, பகல் நீவா என்றல்; வழுவமைதி என்றும் கூறினர் நச்.

---

1. தொல். அகத். ரு. 2. தொல். கள. ௩௦. 3. தொல். கள. ௪௧.
4. தொல். பொருளியல், கக.

## 241. பாலை

[பிரிவிடை வேறுபட்ட தலைமகள் வற்புறுத்துந் தோழிக்குச் சொல்லியது.]

துனியின் றியைந்த துவரா நட்பின்
இனிய ரம்ம அவரென முனியாது
நல்குவர் நல்ல கூறினும் அல்கலும்
பிரியாக் காதலொ டுழைய ராகிய
௫ நமர்மன் வாழி தோழி யுயர்மிசை
மூங்கில் இளமுளை திரங்கக் காம்பின்
கழைநரல் வியலகம் வெம்ப மழைமறந்து
அருவி யான்ற வெருவரு நனந்தலைப்
பேஎய் வெண்டேர்ப் பெயல்செத் தோடித்
௧௦ தாஅம் பட்ட தனிமுதிர் பெருங்கலை
புலம்பெயர்ந் துறைதல் செல்லா [1]தலங்குதலை
விருந்தின் வெங்காட்டு வருந்தி வைகும்
அத்த நெல்லித் தீஞ்சுவைத் திரள்காய்
வட்டக் கழங்கிற் றாஅய்த் துய்த்தலைச்
௧௫ செம்முக மந்தி யாடும்
[2]நன்மர மருங்கின் மலையிறந் தோரே.

—காவன் முல்லைப் பூதனார்.

(சொ - ள்.) ௫. தோழி -, வாழி -,

௧—௫. முனியாது நல்குவர் - என்னை வெறுத்து அருளுவார் ஒருவர், துனி இன்று இயைந்த துவரா நட்பின் - வெறுப்பின்றி ஒன்றிய என்றும் பிளவுபடாத நட்பினையுடைய, இனியர் - இனிய குணங்களையுடையர், அவர் என - நம் தலைவர் என, நல்ல கூறினும் - அவரது நற்குணங்களைப் பாராட்டிக் கூறினும், அல்கலும் - என்றும், பிரியாக் காதலொடு – நம்மைவிட்டுப் பிரியாத காதலுடன், உழையர் ஆகிய - நம் பக்கலில் உள்ளார் ஆகிய, நமர் - நம் காதலர் (இப்பொழுது),

௫—௧௬. உயர் மிசை - மலையின் உச்சிக்கண்ணே யுள்ள, மூங்கில் இளமுளை திரங்க - மூங்கிலின் இளைய முளை வதங்கவும், காம்பின் கழை நரல் வியல் அகம் வெம்ப - மூங்கிற்றண்டு ஒலிக்கும் பெரிய பாறையின் இடங்கள் வெம்பவும், மழை மறந்து - மழை பெய்யாது மறந்து போதலின், அருவி ஆன்ற - அருவி இல்லையாகிய, வெருவரு நனந்தலை - அச்சம்வரும் அகன்ற இடத்தே தோன்றிய, பேஎய் வெண்தேர் பெயல் செத்து ஓடி - வெள்ளிய பேய்த்தேரை மழையென்று கருதி ஓடி, தாஅம் பட்ட தனி முதிர் பெரு கலை - தாகம் பட்ட தனித்த முதிர்ந்த பெரிய கலைமான், புலம் பெயர்ந்து உறைதல் செல்லாது - அவ்விடத்தினின்றும மீண்டு உறைதல் மாட்டாது,

(பாடம்) 1. அலங்கு சிலை. 2. நீண் மரம்.

அலங்கு தலை விருந்தின் வெம் காட்டு - அப் பேய்த்தேர் அசையும் இடமாய புதிய வெவ்விய காட்டின் கண்ணே, வருந்தி வைகும் - வருத்தமுற்றுத் தங்கிக்கிடக்கும், அத்தம் நெல்லி தீம் சுவை திரள் காய் - பாலை நிலவழியில் உள்ள நெல்லியின் இனிய சுவை பொருந்திய திரண்ட காய்கள் ஆகிய, வட்ட கழங்கில் - வட்டமான கழங்குகளைக் கொண்டு, துய் தலை செம்முக மந்தி தாஅய் ஆடும் - பஞ்சுபோன்ற மயிரையுடைய தலையினையும் சிவந்த முகத்தையுமுடைய மந்தி தாவி விளையாடும், நல்மர மருங்கின் மலையிறந்தோர் - நல்ல மரங்கள் பொருந்திய பக்கத்தையுடைய மலையினைக் கடந்து சென்றார் ஆதலின் ஆற்றகில்லேன்.

(முடிபு) தோழி ! வாழி ! முனியாது நல்குவர் ஒருவர், 'நட்பின் இனியர் நம் தலைவர்' என நல்ல கூறினும், பிரியாக் காதலொடு உழையர் ஆகிய நமர், மலையிறந்தோர் ; (ஆதலின் ஆற்றகில்லேன் என்றாள்.)

(வி - ரை.) முனியாது நல்குவர் என்றது தோழியைப் பிறர் போற் கூறியதாகும். இனி அவர் நட்பின் இனியர், நல்குவர் என நீ முனியாது நல்ல கூறினும் என்றுரைத்தலுமாம். மறந்து - மறத்தலால். பேஎய்த் தேர் - வெண்டேர் எனவும் படும். தாகம் என்றது தாஅம் என விகாரமாயிற்று. புலம் - வேறு நற்புலம் என்றுமாம். அலங்குதலை - வருந்துதற் கேதுவாகிய இடமுமாம்.

---

## 242. குறிஞ்சி

[தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.]

அரும்புமுதிர் வேங்கை அலங்கல் மென்சினைச்
சுரும்புவாய் திறந்த பொன்புரை நுண்டாது
மணிமருள் கலவந் துறைப்ப அணிமிக்கு
அவிர்பொறி மஞ்ஞை யாடுஞ் சோலைப்
ரு பைந்தாட் செந்தினைக் கொடுங்குரல் வியன்புனம்
செந்நாக் கிள்ளை நம்மொடு கடிந்தோன்
பண்புநர வந்தமை அறியாள் நுண்கேழ்
முறிபுரை யெழினலத் தென்மகள் துயர்மருங்கு
அறிதல் வேண்டுமெனப் பல்பிரப் பிரீஇ
கo அறியா வேலற் றரீஇ அன்னை
வெறியயர் வியன்களம் பொலிய ஏத்தி
மறியுயிர் வழங்கா அளவைச் சென்றியாம்
செலவரந் துணிந்த சேண்விளங் கெல்வனை
நெகிழ்ந்த முன்கை நேரிறைப் பணைத்தோள்
கரு நல்லெழில் அழிவிற் றொல்கவின் பெறீஇய
முகிழ்த்துவரல் இளமுலை மூழ்கப் பல்லூழ்
முயங்க லியைவது மன்னோ தோழி

நறைகால் யாத்த [1]நளிர்முகைச் சிலம்பிற்
பெருமலை விடரகம், நீடிய சிறியிலைச்
உ0 சாந்த மென்சினை தீண்டி மேலது
பிரசந் தூங்கு சேட்சிமை
வரையக வெற்பன் [2]மணந்த மார்பே.

—பேரி சாத்தனார்.

(சொ - ள்.) கஎ. தோழி -,

க—எ. அரும்பு முதிர் வேங்கை அலங்கல் மெல் சினை - அரும்புகள் முதிர்ந்த வேங்கை மரத்தின் அசையும் மெல்லிய கிளைகளில், சுரும்பு வாய்திறந்த பொன்புரை நுண் தாது - வண்டுகள் பூவின் வாயைத் திறத்தலால் பொன்னை யொத்த நுண்ணிய பொடிகள், மணி மருள் கலவத்து உறைப்ப - நீல மணியை யொத்த தோகையில் உதிர்ந்திட, அணி மிக்கு - அழகு மிகுந்து, அவிர் பொறி மஞ்ஞை ஆடும் சோலை - விளங்கும் பொறிகளையுடைய மயில் ஆடும் சோலையின் பக்கத்தே, பைந்தாள் செந்தினை கொடுங்குரல் - பசிய தாளினையுடைய சிவந்த தினையின் வளைந்த கதிர்களையுடைய, வியன்புனம் - பெரிய கொல்லையில் வரும், செந்தார்க்கிள்ளை நம்மொடு கடிந்தோன் - சிவந்த இரேகையையுடைய கிளிகளை நம்முடனிருந்து ஓட்டிய நம் தலைவனது, பண்பு தர வந்தமை அறியாள் - நல்லியல்புகள் தருதலால் வந்த வருத்தத்தை அறியாதவளாகி,

எ—கஉ. அன்னை - நமது அன்னை, நுண் கேழ் முறி புரை எழில் நலத்து என் மகள் - நுண்ணிய நிறம் பொருந்திய தளிரை யொத்த எழுச்சிவாய்ந்த அழகினையுடைய எனது மகளது, துயர் மருங்கு அறிதல் வேண்டும் என - துயர் வந்த பரிசினை அறிதல் வேண்டும் என்று, பல் பிரப்பு இரீஇ - பல பிரப்பினைப் பலியாகவைத்து, அறியா வேலன் தரீஇ - உண்மை உணரமாட்டாத வேலனை அழைத்து, வெறி அயர் வியன் களம் பொலிய ஏத்தி - வெறியாடும் பெரிய களம் பொலிவுறுமாறு துதித்து, மறி உயர் வழங்கா அளவை - ஆட்டுக் குட்டியின் உயிரைப் பலியிடா முன்னரே,

கஉ—ரு. செலவரத் துணிந்த - ஏறி இறங்கும் அளவில் எண்ணிச்சேர்த்த, சேண் விளங்கு எல்வளை - சேய்மைக்கண் சென்று விளங்கும் ஒளியினையுடைய வளை, நெகிழ்ந்த முன் கை - கழன்ற முன் கையும், நேர் இறை - நேரிய சந்தினையுடைய, பணை தோள் - பெரிய தோளும், நல் எழில் அழிவில் - நல்ல அழகு ஒழிவினின்றும் நீங்கி, தொல்கவின் பெறீஇய - பழைய அழகினைப் பெறுமாறு, யாம் சென்று - யாம் சென்று,

கஅ—உஉ. நறை கால் யாத்த நளிர் முகை சிலம்பின் - தேன் கூடுகள் நிரம்பிய குளிர்ந்த குகைகளையுடைய பக்க மலைகளைக் கொண்ட, பெருமலை விடர் அகம் - பெரிய மலையின் பிளப்புக்களிடத்தே, நீடிய சிறி இலை சாந்த மெல் சினை தீண்டி - நீண்டு

(பாடம்) 1. நளிமுகை. 2. மலர்ந்த மார்பு.

வளர்ந்த சிறிய இலைகளையுடைய சந்தன மரத்தின் மெல்லிய கிளைகள் தீண்ட, மேலது பிரசம் தூங்கும் - மேலிடத்ததாகிய தேனிறால் தொங்கும், சேண் சிமை வரையக வெற்பன் - நெடிய உச்சியினையுடைய மூங்கிலைத் தன்னகத்தே கொண்ட மலை நாடனது, மணந்த மார்பு - முன்பு கூடிய மார்பினை,

கசு—எ. முகிழ்த்து வரல் இள முலை மூழ்க - அரும்பிவருதலுடைய இளைய முலை மூழ்கிட, பல் ஊழ் முயங்கல் இயைவது - பல முறை தழுவுதல் தக்கது.

(முடிபு) தோழி! (நமது இடும்பை) கிள்ளை நம்மொடு கடிந்தோன் பண்பு தர வந்தமை அறியாள், அன்னை துயர் மருங்கு அறிதல் வேண்டுமென வேலற் றரீஇ, பிரப்பு இரீஇ, களம் பொலிய ஏத்தி, மறியுயிர் வழங்கா அளவை, யாம் சென்று வெற்பன் மணந்த மார்பு முலை மூழ்க முயங்கல் இயைவது.

(வி - ரை.) வாய் திறந்த - பூவின் வாயைத் திறந்த என விரித்துக் கொள்க. திறந்த என்னும் பெயரெச்சம் காரணப் பொருட்டு. கிள்ளை நம்மொடு கடிந்தோன் என்றது, எளியனாய் நம்முடனிருந்து கிளியை ஓட்டி உதவிபுரிந்த நன்மையாளன் என்றபடி. பண்பு தர வந்தது என்றது, அவனது உயர்ந்த குண வொழுக்கங்களால் தலைவிக்கு மெலிவுண்டாயிற்று என்று கூறும் வாயிலாகத் தலைவி அவனைக் காதலித்தது தகவுடையதே என்றும், அவனுடன் இடையறாது கூடியிருக்கப் பெறாமையால் மெலிவுறுகின்றாள் என்றும் தோழி கூறியபடியாம். இவ்வுண்மையை அறியாத அன்னை தன் மகளுற்ற மெலிவு அணங்கு முதலியவற்றால் உண்டாயதோ என ஐயுற்று, அதனை அறிந்து களைதற்கு வேலனை யழைத்து வெறியாட்டெடுத்து மறியைப் பலியிட முந்துகின்றாளாகலின், அவள் அங்ஙனம் செய்தற்கு முன் நமது மேனி பழைய அழகினைப் பெறும்படி தலைவனைப் பல்லூழ் முயங்கல் வேண்டுமென்று, தலைமகன் சிறைப்புறத்தினின்று கேட்பத் தோழி தலைமகட்குக் கூறினாளென்க. அதனைத் தலைமகன் கேட்டு விரைய வரைந்துகொள்வானாதல் பயன். அறியா வேலன் என்றது உண்மையை அறியாமலே, எதனையும் தெய்வத்தால் வந்ததென்று கூறுபவன் என்றபடி. முன்கையும் பணைத்தோளும் தொல்கவின் பெறீஇய என்றுரைத்தாளேனும், மேனி தொல்கவின் பெறீஇய என்பது கருத்தாகக் கொள்க. 'பழைய கவின் பெற்றமையைக் காணின், அன்னை வெறியாட்டெடுத்தலை நிறுத்துவள் என்க.' செலவற (கரு) என்று பாடம் கொள்ளின் வளை கழலாவாறு என்றும், மலர்ந்த மார்பு என்பது பாடமாயின் பரந்த மார்பு என்றும் பொருள்கொள்க.

(உ - றை.) வேங்கை நுண்தாது கலவத்து உறைப்ப, மஞ்ஞை அணி மிக்கு ஆடும் என்றது, தலைவனது மார்பின் சாந்தம் நம் ஆகத்திற் பொருந்துமாறு முயங்குதல் கூடின் நாம் எழில் சிறந்து மகிழ்ச்சியுறுவேம் என்றவாறு. உயர்ந்த சந்தனத்தின் கிளை தீண்டத் தேனிறால் தொங்கும் என்றது பல்லாற்றானும் ஒப்புமையுடைய உயர்ந்த தலைவனும் தலைவியும் கூடி இல்லறம் புரிதல் யாவர்க்கும் இன்பம் பயப்பதாம் என்றபடி.

---

## 243. பாலை

[தலைமகன் பிரிவின்கண் வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் ஆற்றேன் என்பதுபடச் சொல்லியது.]

அவரை ஆய்மலர் உதிரத் துவரின
வாங்குதுளைத் துகிரின் ஈங்கை பூப்ப
இறங்குபோ தவிழ்ந்த ஈர்ம்புதற் பகன்றை
கறங்குநுண் துவலையின் ஊருழை யணியப்
௫ பெயனீர் புதுவரல் தவிரச் சினைநேர்பு
பீள்விரிந் திறைஞ்சிய பிறங்குகதிர்க் கழனி
நெல்லொலி பாசவல் துழைஇக் கல்லெனக்
கடிதுவந் திறுத்த கண்ணில் வாடை
நெடிதுவந் தனையென [1]நில்லா தேகிப்
௧௦ பலபுலந் துறையுந் துணையில் வாழ்க்கை
நம்[2]வலத் தன்மை கூறி யவர்நிலை
[3]அறியு மாயின் நன்றுமன் றில்ல
பனிவார் கண்ணே மாகி யினியது
நமக்கே யெவ்வம் ஆகின்று
௧௫ அனைத்தாற் றோழிநந் தொல்வினைப் பயனே.

—[4]கோடியூர்கிழார் மகனார் நெய்தற்றத்தனார்.

(சொ - ள்.) ௧௫. தோழி -,

௧—௪. அவரை ஆய் மலர் உதிர - அவரையின் அழகிய மலர் உதிரவும், துவரின வாங்கு துளை துகிரின் - சிவந்த வளைந்த துளையினையுடைய பவளம்போல, ஈங்கை பூப்ப - இண்டையானது பூக்கவும், இறங்கு போது அவிழ்ந்த ஈர் புதல் பகன்றை - ஞாயிறு தாழும் பொழுது விரிந்த குளிர்ந்த புதலாகிய பகன்றை, கறங்கு நுண் துவலையின் ஊர் உழை அணிய - ஒலிக்கும் வாடையுடன் வரும் நுண்ணிய மழைத்துளியால் ஊரின் அருகே அழகுபெற மலரவும், பெயல் நீர் புது வரல் தவிர - மழையாகிய நீர் புதுவதாக வருதல் ஒழியவும், சினை நேர்பு பீள் விரிந்து இறைஞ்சிய - கிளைத்தல் பொருந்திக் கருவிரிந்து எழுந்து வளைந்த, பிறங்கு கதிர் கழனி நெல் ஒலி பசு அவல் துழைஇ - விளங்கும் கதிர்களையுடைய வயலின் நெல் ஒலி செய்யும் பசிய பள்ளங்களைத் துழாவி, கல் என கடிது வந்து இறுத்த கண் இல் வாடை - கல்லென்ற ஒலியுடன் விரைந்து வந்து தங்கிய இரக்கமற்ற வாடையானது, நில்லாது ஏகி - தாழ்க்காது தலைவரிடத்தே விரைந்து சென்று, நெடிது வந்தனை என - நீ வந்து நெடுங்காலம் தாழ்த்தனை என்று,

௧௦—௨. பல புலந்து உறையும் துணை இல் வாழ்க்கை - பலவற்றையும் வெறுத்து உறையும் துணைவருடன் கூடியிராத வாழ்க்கை

(பாடம்) 1. நில்லா தேங்கி. 2. வலித்தன்மை. 3. அறியுநமாயின். 4. குடிக்கிழார் மகனார்.

யினையுடைய, நம் வலத்தன்மை கூறி - நமது வலித் தன்மையைக் கூறி, அவர் நிலை அறியும் ஆயின் நன்று மன் - அவர்தம் நிலையினைத் தேருமாயின் பெரிதும் நன்றாகும்;

கங—ரு. இனி அது - இப்பொழுது அவ்வாடையானது, பனி வார் கண்ணேம் ஆகி - நாம் நீர் ஒழுகும் கண்களை யுடையேம் ஆக, நமக்கே எவ்வம் ஆகின்று - நமக்கே துன்பம் தருவதாக ஆகின்றது, நம் தொல்வினைப் பயன் அனைத்து - நமது பழைய தீவினையின் பயன் அத்தன்மைத்துப் போலும்.

(முடிபு) தோழி! வாடை நில்லாது தலைவரிடத்தே ஏகி, நீ நெடிது வந்தனையெனக்கூறி, பல புலந்து உறையும் துணையில் வாழ்க்கை நம் வலத்தன்மை கூறி, அவர் நிலை அறியுமாயின் நன்று; இனி அது, பனிவார் கண்ணேம் ஆக, நமக்கே எவ்வம் ஆகின்று; நம் தொல்வினைப் பயன் அனைத்து.

உதிர, பூப்ப, அணிய, தவிர, துழைஇ, கல்லென இறுத்த வாடை என்க.

(வி - ரை.) முன்னரே, தலைவனைப் பிரிந்து வருந்தும் நம்பாற் சிறிதும் இரக்கமின்றி, வாடை நம்மை மேலும் வருத்துகின்றது என்பாள் கண்ணில் வாடை என்றாள். கண் - கண்ணோட்டம், இரக்கம்; அது வரக் கடவதாகிய காலத்தினும் முன்னரே நம்மை வருத்துதற் பொருட்டு வந்து நிலைபெற்றுளது என்பாள் கடிது வந்திறுத்த என்றாள். வலத் தன்மையாவது இன்னலைப் பொறுத்து உயிர் தாங்கியிருக்கும் வலித்தன்மையாகும். அவர் நிலை அறியுமாயின் நன்று மன் என்றது, நம்மிடத்தே தங்கி இன்னல் விளைக்கும் இவ்வாடை, தலைவன் உறையுமிடத்தும் இருப்பதாயின் அவர் அதற்கு ஆற்றாது வருவர் என்னும் கருத்திற்று. அன்றி, வாடையானது தலைவர்பால் தூதாகச் சென்று அவரைப் பிரிந்து நாம் எய்தும் துன்பநிலையினை அவர்க்கு உரைத்து அவர் கருத்தினை அறிந்துவந்து உரைக்குமாயின் நன்று என்று உரைத்தலுமாம். தில்ல - இடைச்சொல் ஈறு திரிந்தது. ஆகி - ஆக எனத் திரிக்க.

## 244. முல்லை

[வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.]

[1]பசைபடு பச்சை நெய்தோய்த் தன்ன
சேயுயர் சினைய மாச்சிறைப் பறவை
பகலுறை முதுமரம் புலம்பப் போகி
முகைவாய் திறந்த நகைவாய் முல்லை
ரு கடிமகள் கதுப்பின் நாறிக் கொடிமிசை
வண்டினந் தவிர்க்குந் தண்பதக் காலை
வரினும் வாரா ராயினும் ஆண்டவர்க்கு
இனிதுகொல் வாழி தோழி யெனத்தன்
பல்லிதழ் மழைக்கண் நல்லகஞ் சிவப்ப

(பாடம்) 1. பகைபடு பச்சை,

கo அருந்துய [1]ருடையள் அவளென விரும்பிப்
பாணன் வந்தனன் தூதே நீயும்
புல்லார் புரவி வல்விரைந்து பூட்டி
[2]நெடுந்தேர் ஊர்மதி வலவ
முடிந்தன் றம்மநாம் முன்னிய வினையே.

—மதுரை... மள்ளனார்.

(சொ - ள்.) கரு. வலவ - பாகனே ;

க—ௌ. பசை படு பச்சை நெய் தோய்த்தன்ன மா சிறை பறவை - பசைபொருந்திய தோலை நெய்யிற் றோய்த்தாற் போன்ற கரிய சிறகினையுடைய வாவல், பகல் உறை சேய் உயர் சினைய முதுமரம் புலம்பப் போகி - பகலில் தங்கியிருந்த மிக உயர்ந்த கிளைகளை யுடைய முதிர்ந்த மரம் தனித்திடப்போக, கொடி மிசை முகை வாய் திறந்த நகைவாய் முல்லை - கொடியின்மீது அரும்புகள் வாய் திறந்து மலர்ந்த ஒளி பொருந்திய முல்லை, கடிமகள் கதுப்பின் நாறி - மணமகள் கூந்தலைப் போல மணந்து, வண்டினம் தவிர்க்கும் - வண்டின் தொகுதிகளைச் செல்லவொட்டாது தடுக்கும், தண் பதக் காலை - குளிர்ந்த செவ்வியையுடைய கார்காலத்தே,

எ—கக. தோழி - தோழியே! வரினும் வாரார் ஆயினும் - நம் தலைவர் ஈண்டு வரினும் வாராதிருப்பினும், ஆண்டு அவர்க்கு இனிது கொல் - அவர் சென்ற இடம் அவர்க்கு இனியதுபோலும், வாழி, என - என்று கூறி, தன் பல் இதழ் மழைக் கண் - தனது பல இதழை யுடைய தாமரை மலர்போன்ற குளிர்ந்த கண்ணின், நல் அகம் சிவப்ப - நல்ல உள்ளிடமெல்லாம் சிவக்க, அரும் துயர் உடையள் - பொறுத்தற் கரிய துயரினை யுடையளாயினள், அவள் என - நினது தலைவி என்று, பாணன் - பாணன், விரும்பித் தூது வந்தனன் - விருப்பமுற்றுத் தூதாக வந்தனன் ;

கச. நாம் முன்னிய வினை முடிந்தன்று - நாம் எண்ணி முயன்ற வினையும் முடிவுற்றது ;

கக—கரு. நீயும் புல் ஆர் புரவி பூட்டி - நீயும் புல்லினைத் தின்ற குதிரையைப் பூட்டி, நெடு தேர் வல்விரைந்து ஊர்மதி - நீண்ட தேரினை மிக விரைந்து செலுத்துவாயாக.

(முடிபு) 'தோழி, தண் பதக் காலை நம் காதலர் வரினும் வாராராயினும் ஆண்டு அவர்க்கு இனிதுகொல்' என்று கூறித் தன் கண் சிவப்ப அருந் துயருடையாள் நின் தலைவி என்று பாணன் தூது வந்தனன் ; வலவ! வினையும் முடிந்தன்று ; நீயும் தேர் விரைந்து ஊர்மதி.

(வி - ரை.) போகி - போக எனத்திரிக்க. மாச் சிறைப் பறவை போக, முல்லை வண்டினம் தவிர்க்கும் தண் பதக் காலை என்க. போக என்பது நிகழ்வு உணர்த்திற்று. தண் பதக்காலை - கார்காலம். பறவை போதல் கார் காலத்து மாலை எனக் கொள்க. என்னை, 'நெடுநீ ராம்

(பாடம்) 1. வருந்துவள் அவளென. 2. நெடுந்தேர் ஏவு மதி.

பல் அடைப்புறத் தன்ன, கொடுமென் சிறைய கூருகிர்ப் பறவை, . . . . பகலுறை முதுமரம் புலம்பப் போகும், சிறு புன் மாலை' என வருதலின். 'வரினும் வாரா ராயினும் ஆண்டவர்க்கு, இனிது கொல்' என்றது, அவர் வந்து நமது துன்பத்தைப் போக்காதொழியினும், அவர் உறையுமிடம் அவர்க்கு இன்பம் விளைப்பதாயின் நன்றாம்; அவ்வாறு விளைக்குங் கொல்லோ என்று தலைவி துயருற்று மொழிந்தாள் என்க. அதனைக் கூறிப் பாணன் தூது வந்தமையானும், வினை முடிந்தமையானும் விரைந்து தேரினை ஊர்மதி என்று தலைவன் கூறினான் என்க.

(மே - ள்.) [1]'வேந்து வினையியற்கை' என்னுஞ் சூத்திரத்து 'முடிந்தன் றம்மநாம் முன்னிய வினையே' என்றலின், தானே குறுநில மன்னன் சென்றதாம் என்றனர் நச்.

---

## 245. பாலை

[பொருள் கடைக் கூட்டிய நெஞ்சினைக் கழறித் தலைமகன் சொல்லிச் செலவழுங்கியது.]

உயிரினுஞ் சிறந்த ஒண்பொருள் தருமார்
நன்றுபுரி காட்சியர் சென்றன ரவரென
மனைவலித் தொழியும் மதுகைய ளாதல்
நீநற் கறிந்தனை யாயின் நீங்கி
௫ மழைபெயன் மறந்த கழைதிரங் கியவில்
செல்சாத் தெறியும் [2]பண்பில் வாழ்க்கை
வல்வில் இளையர் தலைவர் எல்லுற
வரிகிளர் பணைத்தோள் வயிறணி திதலை
அரிய லாட்டியர் அல்குமனை வரைப்பின்
௧௦ மகிழ்நொடை பெறாஅ ராகி நனைகவுட்
கான யானை வெண்கோடு சுட்டி
மன்றோடு புதல்வன் புன்றலை நீவும்
அருமுனைப் பாக்கத் தல்கி வைகுற
நிழல்படக் கவின்ற நீளரை இலவத்து
௧௫ அழலகைந் தன்ன அலங்குசினை யொண்பூக்
குழலிசைத் தும்பி யார்க்கும் ஆங்கண்
குறும்பொறை யுணங்குந் ததர்வெள் ளென்பு
கடுங்கால் ஒட்டகத் தல்குபசி தீர்க்கும்
கன்னெடுங் கவலைய கானம் நீந்தி
௨௦ அம்மா அரிவை யொழியச்
சென்மோ நெஞ்சம் வாரலென் யானே.

—மதுரை மருதனிள நாகனார்.

---

1. தொல். பொருள். அகத். ௪௨. (பாடம்) 2. அன்பில் வாழ்க்கை.

(சொ - ள்.) உக. நெஞ்சம் - நெஞ்சே !

க—ச. நன்று புரி காட்சியர் அவர் - நன்மையினை விரும்பிய அறிவினையுடையராய தலைவர், உயிரினும் சிறந்த ஒள்பொருள் தருமார் - உயிரைக் காட்டினும் சிறந்த ஒள்ளிய பொருளைத் தருதல் வேண்டி, சென்றனர் என வலித்து - சென்றனர் என்று துணிந்து, மனை ஒழியும் மதுகையள் ஆதல் - மனையின்கண் தங்கியிருக்கும் வலியுடையள் ஆதலை, நீ நற்கு அறிந்தனையாயின் - நீ நன்றாக அறிந்துளாயாயின், நீங்கி - இவளின் நீங்கி,

ரு—உக. மழைபெயல் மறந்த - மழை பெய்தலை மறந்தமையால், கழை திரங்கு இயவில் - மூங்கில்கள் வற்றிய நெறியில், செல் சாத்து எறியும் – செல்லும் வணிகர் திரளை அலைத்திடும், பண்பு இல் வாழ்க்கை - அன்பில்லாத வாழ்க்கையினையுடைய, வல்வில் இளையர் தலைவர் - வலிய வில்லினைக்கொண்ட மறவர் தலைவர், எல் உற - இருள் வர, வரி கிளர் பணை தோள் திதலை அணிவயிறு - வரி விளங்கும் பருத்த தோளினையும் தேமல் அணிந்த வயிற்றினையுமுடைய, அரிய லாட்டியர் அல்கு மனை வரைப்பின் - கள் விற்போர் பொருந்திய மனையகத்தே, மகிழ் நொடை பெறுஅர் ஆகி – கள்ளிற்கு உரிய விலைப்பொருள் எய்தப் பெறுராகி, நனை கவுள் கான யானை வெண் கோடு சுட்டி - மதத்தால் நனைந்த கன்னத்தினையுடைய யானையின் வெள்ளிய கொம்பினை எடுத்துவருதல் குறித்து, மன்று ஓடு புதல் வன் - மன்றின்கண் ஓடி விளையாடும் புதல்வனுடைய, புன்தலை நீவும் - புல்லிய தலையைத் தடவி ஏவும், அருமுனை பாக்கத்து அல்கி - அரிய போர்முனைகளையுடைய பாக்கத்திடத்தே தங்கி, வைகு உற - இருள் கழியும் விடியல் தோன்ற, நிழல் படக் கவின்ற நீள் அரை - நிழல் பொருந்த அழகு பெற்ற நீண்ட அரையினை யுடைய, இலவத்து - இலவ மரத்தினது, அலங்குசினை - அசையுங் கிளைகளிலுள்ள, அழல் அகைந்தன்ன ஒள்பூ - எரி தளிர்த்தாலொத்த ஒள்ளிய பூக்களில், குழல் இசைத் தும்பி ஆர்க்கும் ஆங்கண் - குழல் போலும் இசையையுடைய வண்டுகள் ஒலிக்கும் இடமாகிய, குறும் பொறை உணங்கும் - பாறையிடத்தே காய்ந்து கிடக்கும், ததர் வெள் என்பு - சுள்ளிபோலும் வெள்ளிய எலும்புகள், கடும் கால் ஒட்டகத்து அல்கு பசி தீர்க்கும் - வேகம் வாய்ந்த கால்களையுடைய ஒட்டகத்தின் மிக்க பசியினைப் போக்கும், கல் நெடும் கவலைய கானம் நீந்தி - கற்கள் பொருந்திய நீண்ட கவர் வழிகளையுடைய காட்டினைக் கடந்து, அம் மா அரிவை ஒழியச் சென்மோ - அழகிய மாமை நிறத்தையுடைய நம் தலைவி தனித்திருக்க நீ செல்வாயாக, யான் வாரலென் - யான் அவளைப் பிரிந்து நின்னுடன் வாரேன்.

(முடிபு) நெஞ்சம்! மனை வலித்தொழியும் மதுகையாளாதல் நீ நற்கு அறிந்தனையாயின், நீங்கி, அருமுனைப் பாக்கத்து அல்கி, வைகுற, கானம் நீந்தி, அரிவை ஒழியச் சென்மோ; யான் வாரலென்.

(வி - ரை.) 'உயிரினுஞ் சிறந்த .... சென்றனரவர்' என என்பது தலைவியின் கூற்றைத் தலைவன் கொண்டு கூறியது. தலைவன்

பொருள் வயிற் பிரியின், தன் உயிர்க்கு ஊறுபாடும் அக்காரணத் தால் தலைவன் உயிர்க்கு ஏதமும் உண்டாகும் என்பது தோன்ற, 'உயிரினும் சிறந்த' எனப் பொதுப்படக் கூறினாள். அறனும் இன்ப மும் பயவாமையேயன்றி, உயிர்க்கும் ஊறு விளைக்கும் பொருளைத் தேடுதற்பொருட்டுச் செல்பவர் அதனை உயிரினும் சிறந்ததெனக் கருதினாராவர் எனவும், அதனால் அவர் நன்று புரி காட்சியர் அல்லர் எனவும் கொள்வள் என்பதும், அந்நீரதாகிய நமது பிரிவினால் அவள் மனையின்கண் தனித்து ஆற்றியிருக்கும் வலியுடையள் அல்லள் என்பதும் நீ அறிந்திலை என்பான், 'உயிரினும் சிறந்த ஒண்பொருள்' எனவும், 'நன்றுபுரி காட்சியர்' எனவும் 'மதுகையள்' எனவும் குறிப்பு மொழியாற் கூறினான் என்க. கள் விற்கும் மகளிர் தம் மனையின்கண் வைத்து விற்பராகலின், அரியலாட்டியர் அல்கு மனை வரைப்பின் என்றார். பெருஅ ராகி என்றது, வேறு பொருள் பெருமையால் என்க. வெண்கோடு சுட்டிப் புதல்வன் புன்றலை நீவும் என்றது தம் மனையின்கண் ணுள்ள யானையின் கோட்டினைக் கள் விலையாகத் தருதற்கு, அதனைக் கொணருமாறு புதல்வனை ஏவு வர் என்றபடி. தலையை நீவுதல் அவற்கு மனவெழுச்சி யுண்டாக்கு தற்பொருட்டாம். தலைவர் ஒவ்வொருவரும் தம் புதல்வன் புன்றலை நீவுவர் எனக் கொள்க. கானவர்கள் விலையாக யானைக்கோடு கொடுத்தலை, [1]"வேட்டுவர், . . . . மதனுடை வேழத்து வெண்கோடு கொண்டு, பொன்னுடை நியமத்துப் பிழிநொடை கொடுக்கும்" [2]"வேந்தூர் யானை வெண்கோடு கொண்டு, கட்கொடி நுடங்கு மாவணம் புக்கு, அருங்கள் நொடைமை தீர்ந்தபின் மகிழ்சிறந்து" என்பவற்றானறிக. அத்தகைய கொடிய பாக்கத்திலே, நீ இரவிலே தங்கி இருள் கழிந்தபின் கானம் நீந்திச் செல் என்றான். வெள்ளென்பு ஒட்டகத்து அல்குபசி தீர்க்கும் என்றது அதற்கும் வேறு உணவு கிட்டாமை கூறியபடி. ஒட்டகம் பாலையிலும் விரைந்து செல்லும் இயல்பின தென்பது தோன்றக் 'கடுங்கால் ஒட்டகம்' என்றும், பலநாள் உணவுபெறாத பசியைப் பொறுத்திருக்கும் இயல்பினது என்பது தோன்ற, 'ஒட்டகத்து அல்குபசி' என்றும் கூறப்பட்டது.

---

## 246. மருதம்

[தோழி தலைமகற்கு வாயில் மறுத்தது.]

பிணர்மோட்டு நந்தின் பேழ்வாய் ஏற்றை,
கதிர்மூக் காரல் [3]கள்வ னாக
நெடுநீர்ப் பொய்கைத் துணையொடு புணரும்
மலிநீ ரகல்வயல் யாணர் ஊர
௫ போதார் கூந்தல் நீவெய் யோளொடு
தாதார் காஞ்சித் தண்பொழில் அகல்யாறு

---

1. பதிற். ௩௦. 2. பதிற். ௬௮. (பாடம்) 3. களவன்.

ஆடினை யென்ப நெருநை அலரே
[1]காய்சின மொய்ம்பிற் பெரும்பெயர்க் கரிகால்
ஆர்கலி நறவின் வெண்ணி வாயில்
௧0 சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின்
இமிழிசை முரசம் பொருகளத் தொழியப்
பதினொரு வேளிரொடு வேந்தர் சாய
மொய்வலி யறுத்த ஞான்றைத்
தொய்யா அழுந்தூர் ஆர்ப்பினும் பெரிதே.

—பரணர்.

(சொ - ள்.) க—ச. பிணர் மோட்டு நந்தின் பேழ்வாய் ஏற்றை - சருச்சரை பொருந்திய வயிற்றினையும் பிளந்த வாயினையு முடைய ஆண்சங்கு, கதிர் மூக்கு ஆரல் கள்வனொடு - கூரிய மூக்கினை யுடைய ஆரல் மீன் கரி கூறுவோனாக, நெடு நீர்ப் பொய்கை - ஆழ்ந்த நீரையுடைய பொய்கையில், துணையொடு புணரும் - பெண் சங்கினொடு மணம் புணரும், மலி நீர் அகல் வயல் யாணர் ஊர - நீர் நிறைந்த அகன்ற வயல்களையுடைய புது வருவாய் மிக்க ஊரனே!

ரு—எ. போது ஆர் கூந்தல் நீ வெய்யோளொடு - பூக்கள் நிறைந்த கூந்தலையுடைய நின்னால் விரும்பப்பெற்ற பரத்தையொடு, தாது ஆர் காஞ்சித் தண் பொழில் அகல் யாறு - பூந்துகள் நிறைந்த குளிர்ந்த காஞ்சிமரச் சோலை சூழ்ந்த அகன்ற ஆற்றின்கண்ணே, நெருநை ஆடினை என்ப - நேற்று நீர் விளையாட்டயர்ந்தனையெனப் பலரும் கூறுநிற்பர்;

எ—கச. அலரே - அதனாலெழுந்த அலர், காய் சின மொய்ம்பின் - மிக்க சினமும் வலியுமுடைய, பெரும் பெயர்க் கரிகால் - பெரிய புகழினைக்கொண்ட கரிகால் வளவன், ஆர்கலி நறவின் வெண்ணி வாயில் - ஆரவார மிக்க கள்வளமுடைய வெண்ணிவாயில் என்னுமிடத்தே, சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பில் - சிறப்பு வாய்ந்த பகையரசர் மாறுபட்டெழுந்த போரின்கண், இமிழ் இசை முரசம் பொருகளத்து ஒழிய - மிக்க ஓசையையுடைய வீர முரசம் போர்க்களத்தே ஒழிந்து கிடக்க, பதினொரு வேளிரொடு வேந்தர் சாய - வேளிர் பதினொருவருடன் இருபெரு வேந்தரும் நிலைகெட, மொய்வலி அறுத்த ஞான்றை - அவர்தம் மிக்க வலியைக் கெடுத்த நாளில், தொய்யா அழுந்தூர் ஆர்ப்பினும் - அழுந்தூர்க்கண் எழுந்த குறையாத ஆரவாரத்தினும், பெரிது - பெரிதாயது.

(முடிபு) யாணர் ஊர! நெருநை நீ வெய்யோளொடு காஞ்சித் தண்பொழில் அகல் யாறு ஆடினை என்ப; அலர் பெரும் பெயர்க் கரிகால் வளவன், வெண்ணி வாயிலின்கண், ஞாட்பில், முரசம் பொருகளத்தொழிய வேளிரொடு வேந்தர் சாய அவர்தம் மொய்வலி அறுத்த ஞான்றை, அழுந்தூரிலெழுந்த ஆர்ப்பினும் பெரிது.

(வி - ரை.) கள்வன் - கரி கூறுபவன்; பிறர் அறிய வெளிப் படுத்துபவன் என்றபடி. இச்சொல்லின் உருவம் களவன் என்றும்

---

(பாடம்) 1. காய்சின முன்பின்.

காணப்படுகின்றது. பொழிலிலும் யாற்றிலும் விளையாடினையென்ப என்றுரைத்தலுமாம். கரிகால் - கரிகால் வளவன். வேளிர் குறு நில மன்னராகலின், சீர்கெழு மன்னர் என்றது, வேளிரும் வேந்தருமாகிய இருதிறத்தார்க்கும் பொது. வேந்தர் என்றது, சேர பாண்டியரை. கெடாத அழுந்தூர் என்றலுமாம். நெருநை ஆடினை, அலர் அழுந்தூர் ஆர்ப்பினும் பெரிது என்றது, அவ் வலர் விரைந்து பரவுதலை உணர்த்தியபடி.

(உ - றை.) நந்தின் ஏற்றை ஆரல் கள்வனுகைத் துணையொடு புணரும் என்றது, நீ அலர் கூறுவோர் அறியும்படி நினக்குத் துணையாகிய பரத்தையொடு கூடி விளையாடினை என்றபடி.

(மே - ள்.) [1] 'ஆற்றலொடு புணர்ந்த' என்னுஞ் சூத்திரத்து, ஏற்றை என வருதற்கு, 'பிணர்மோட்டு நந்தின் பேழ்வாய் ஏற்றை' என்பதனை எடுத்துக் காட்டினர், பேரா.

---

## 247. பாலை

[தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு வேறுபட்ட தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

"மண்ணுறு முத்தம் ஒழுக்கிய வனமுலை
நன்மாண் ஆகம் புலம்பத் துறந்தோர்
அருளிலர் வாழி தோழி பொருள்புரிந்து
இருங்கிளை எண்கின் அழல்வாய் ஏற்றை
ரு கருங்கோட் டிருப்பை வெண்பூ முனையின்
பெருஞ்செம் புற்றின் இருந்தலை யிடக்கும்
அரிய கானம் என்னார் பகைபட
முனைபாழ் பட்ட ஆங்கண் நீர்ட்பார்த்துக்
கொலைவல் யானை சுரங்கடி கொள்ளும்
க0 ஊறுபடு கவலைய ஆறுபல நீந்திப்
படுமுடை நசைஇய பறைநெடுங் கழுத்திற்
பாறுகிளை சேக்குஞ் சேட்சிமைக்
கோடுயர் பிறங்கல் மலையிறந் தோரே.

—[2]மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார்.

(சொ - ள்.) ங. தோழி -, வாழி -,

ங—கங. பொருள் புரிந்து - பொருளை விரும்பி, இரு கிளை எண்கின் அழல் வாய் ஏற்றை - பெரிய சுற்றத்தினையுடைய வெப்பம் பொருந்திய வாயினையுடைய ஆண் கரடி, கரு கோட்டு இருப்பை வெண் பூ முனையின் - கரிய கிளைகளையுடைய இருப்பை மரத்தின் வெள்ளிய பூவினை வெறுத்தால், பெரு செம் புற்றின் இரு தலை

1. தொல். மரபு. சகூ. (பாடம்) 2. மதுரை மருதங்கிழார் மகனார் வெண்ணுகனார்.

இடக்கும் - பெரிய செம்மண் புற்றினது பெரிய உச்சியினைப் பெயர்த்திடும், அரிய கானம் என்னுர் - செல்லுதற்கு அரிய கானம் என்று நினையாராய், பகைபட முனை பாழ் பட்ட ஆங்கண் - மாறு கொண்டு போர் செய்தலால் சீறூர் பாழாகிய அவ்விடத்தே, ஆள் பார்த்து கொலை வல் யானை சுரம் கடி கொள்ளும் - ஆட்களின் வருகையை எதிர்நோக்கி கொல்லுதல் வல்ல யானை சுரநெறியைக் காவல்கொண்டிருத்தலின், ஊறுபடு கவலைய ஆறு பல நீந்தி - இடையூறுமிக்க கவர்த்தனவாகிய பல நெறிகளையும் கடந்து, படு முடை நசைஇய பறை நெடு கழுத்தின் - மிக்க புலால் நாற்றத்தினை விரும்பிச்செல்லும் பறத்தலையுடைய நீண்ட கழுத்தினையுடைய, பாறு கிளை சேக்கும் - பருந்து மரக்கிளைகளிற் றங்கியிருக்கும், சேண் சிமை கோடு உயர் பிறங்கல் மலை இறந்தோர் - நீண்ட உச்சியினையும் சிகரம் உயர்ந்த பக்க மலைகளையும் உடைய மலையைக் கடந்து சென்றோர் ஆகிய நம் தலைவர்,

௬—௭. மண்ணா முத்தம் ஒழுக்கிய வனமுலை - கழுவாத முத்தமாய கண்ணீர் ஒழுகவிடப்பெற்ற அழகிய முலையினையுடைய, நல் மாண் ஆகம் புலம்பத் துறந்தோர் - நல்ல மாண்புற்ற மார்பு தனித்து வருந்தத் துறந்து சென்றோர் ஆகலின், அருள் இலர் - அருள் அற்றவரே யாவர்; என் செய்வாம்.

(முடிபு) தோழி! வாழி! பொருள் புரிந்து, அரிய கானம் என்னுர், ஆறு பல நீந்தி, மலை யிறந்தோர் ஆகிய நம் தலைவர் ஆகம் புலம்பத் துறந்தோராகலின் அருள் இலர்.

(வி - ரை.) மண்ணுதல் - கழுவுதல். முத்தம் கழுவப்படுவதாகலின், மண்ணா முத்தம் ஒழுக்கிய வனமுலை என்புழி, மண்ணா முத்தம் என்றது கண்ணீர்த் துளிகளை; இது வெளிப்படை எனப்படும். பகைபட - மாறுபட்டுப் போர் செய்தலால் என்றபடி. முனை - வேட்டுவர் ஊர். சேட்சிமையையுடைய மலையெனவும், பிறங்கல் மலையெனவும் கூட்டுக.

---

## 248. குறிஞ்சி

[இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பத் தோழி சொல்லியது.]

நகைநீ கேளாய் தோழி அல்கல்
வயநாய் எறிந்து வன்பறழ் தழீஇ
இளைய ரெய்துநன் [1]மடக்கிக் கிளையொடு
நான்முலைப் பிணைவல் சொலியக் கானொழிந்து
௫ அரும்புழை முடுக்கர் ஆட்குறித்து நின்ற
தறுகட் பன்றி நோக்கிக் கானவன்

(பாடம்) 1. மடக்கிளை யோடு,

குறுகினன் தொடுத்த கூர்வாய்ப் பகழி
மடைசெலன் முன்பிற்றன் படைசெலச் செல்லாது
அருவழி விலக்குமெம் பெருவிறல் போன்மென
க0 எய்யாது பெயருங் குன்ற நாடன்
செறியரில் துடக்கலிற் பரீஇப் புரியவிழ்ந்து
ஏந்துகுவவு மொய்ம்பிற் பூச்சோர் மாலை
ஏற்றிமில் கயிற்றின் எழில்வந்து துயல்வர
இல்வந்து நின்றோற் கண்டனள் அன்னை
கரு வல்லே யென்முகம் நோக்கி
நல்லை மன்னென நகூஉப்பெயர்ந் தோளே.

—கபிலர்.

(சொ-ள்.) க. தோழி -, அல்கல் நகை நீ கேளாய் - (நேற்று) இரவு நிகழ்ந்த நகைக்கிடனுய செய்தியொன்றைக் கேட்பாயாக:

உ—க0. வய நாய் எறிந்து - வலிய வேட்டமாடும் நாயைக் கடிந்து விலக்கி, இளையர் எய்துதல் மடக்கி - வேட்டுவர் நெருங்குதலைத் தடுத்து, வன்பறழ் தழீஇ - வலியமைந்த குட்டிகளை அணைத்துக் கொண்டு, கிளையொடு நான்முலைப் பிணவல் சொலிய - தொங்கும் முலையினையுடைய பெண் பன்றி கிளையுடன் பெயர, கான் ஒழிந்து - காட்டினின்றும் வெளிவந்து, அரும் புழை முடுக்கர் - அரிய வாயிலாய முடுக்கிலே, ஆள் குறித்து நின்ற - வேட்டம் செய்யும் ஆட்களை எதிர்நோக்கி நின்ற, தறுகண் பன்றி - அஞ்சாமையையுடைய பன்றியினை, கானவன் - வேட்டுவன், குறுகினன் நோக்கி - அணிமையிற் சென்று நோக்கி, தொடுத்த கூர்வாய் பகழி - தன் வில்லிற்கோத்த கூரிய முனையையுடைய அம்பினை, மடை செலல் முன்பின் தன் படை செல - மடுத்தல் அமைந்த வலியையுடைய தன் படை இரியவும், செல்லாது - தான் பெயராது நின்று, அரு வழி விலக்கும் - பகைவர் வரும் அரிய வழியில் அவரைத் தடுத்து நிற்கும், எம் பெரு விறல் போன்ம் என - எமது பெரிய வல்லாளனைப் போலும் இது வென (வியந்து), எய்யாது பெயரும் குன்ற நாடன் - அப்பன்றியின்மேல் எய்யாது மீளும் இடமாய மலைபொருந்திய நாட்டினையுடைய நம் தலைவன் ஆகிய,

கக—ச. செறி அரில் துடக்கலின் - நெருங்கிய தூறுகள் பற்றியிழுத்தலால், பரீஇ புரி அவிழ்ந்து - அறுபட்டுப் புரிகள் அவிழ்ந்து வீழ்தலின், ஏந்து குவவு மொய்ம்பில் - உயர்ந்து திரண்ட தோளிடத்தே, பூ சோர் மாலை - பூக்கள் உதிரப் பெறும் மாலையானது, ஏற்று இமில் கயிற்றின் எழில் வந்து துயல்வர - எருதின் திமிலின் கட்கிடக்கும் கயிற்றைப்போன்று அழகு பெற அசைந்திட, இல் வந்து நின்றோன் - நம் இல்லின்கண் வந்து நின்றவனை,

கரு—கசா. அன்னை கண்டனள் - நம் அன்னை கண்டனளாகி, வல்லே என் முகம் நோக்கி - விரைய என் முகத்தினைப்பார்த்து,

நல்லை மன் என - நீ மிகவும் நல்லவள் என்று, நகூஉ பெயர்ந்தோள் - நகாநின்று புறம் போயினள், என் செய்வாம்.

(முடிபு) தோழி ! அல்கல் நகை நீ கேளாய் ; கானவன் தறுகட் பன்றியை நோக்கி எம் பெருவிறல் போன்மெனப் பகழி எய்யாது பெயரும் குன்ற நாடன் இல் வந்து நின்றோனைக் கண்டனளாகி, அன்னை என்முகம் நோக்கி நல்லை மன்னென நகூஉப் பெயர்ந்தோள்.

(வி - ரை.) வய நாய் எறிந்து இளையர் எய்துதலை மடக்கிக் கான் ஒழிந்து ஆட்குறித்து நின்ற பன்றி என்க. பன்றியை நோக்கிய கானவன் அதனது தறுகண்மையை வியந்து, தான் வில்நாணிற் றொடுத்த அம்பினை அதன்மீது எய்யாது அவ்விடத்து நின்று பெயர்வான் என்க. தன் படை செலச் செல்லாது அருவழி விலக்கும் என்றது, [1]'வருவிசைப் புனலைக் கற்சிறைபோல, ஒருவன் தாங்கிய பெருமை' என்னும் வஞ்சித் திணையின் துறைப்பொருள் அமைந்தது. மொய்ம்பிற்கு ஏற்றின் இமிலும், பூச்சோர் மாலைக்குக் கயிறும் உவமையாம். இல் வந்து நின்றோன் என்பதனால் இரவுக்குறி வந்து நின்றான் என்பது பெற்றாம். அன்னை நின்றோனைக் கண்டு என் முகம் நோக்கி நல்லைமன் எனக் கூறி நக்குச்சென்றாள் என்றது, அவன் வருகைக்கு யான் வாயிலாதல் கருதித் திங்குடையை யென இழித்துக்கூறி வெகுண்டு சென்றாள் என்றபடியாம். நல்லைமன் என்றது குறிப்புமொழி. நச்சினார்க்கினியரும் பேராசிரியரும் இச் செய்யுளைத் தலைவி கூற்றாகக் கொண்டனர்.

(உ - றை.) பன்றியானது தனது பிணவல் முதலியவற்றிற்கு உண்டாய ஊறுபாட்டை நீக்கிக் காத்து நின்றது என்பது, தலைவன் இற்செறித்தலால் தலைவிக்கு உண்டாகும் ஏதத்தை நீக்கிக் காக்க வேண்டும் என்றபடி.

(மே - ள்.) [2]'வரைவிடைவைத்த காலத்து வருந்தினும்' என்னுஞ் சூத்திரத்தே, தலைவி கூற்றிற்கு இச் செய்யுளை எடுத்துக்காட்டி, இது வந்தோன் செவிலியை எதிர்ந்துழிக் கூறியது என்றனர் நச்.

[3]'எள்ளல் இளமை' என்னுஞ் சூத்திரத்தே 'நகை நீ கேளாய் தோழி' என்பது தன் பேதைமை பொருளாக நகை பிறந்தது ; என்னை ? தான் செய்த தவற்றிற்குத் தாய் தன்னை வெகுண்டது தனக்கு நகையாகக் கொண்டமையின்; என்றும், 'நல்லை மன்னென நகூஉப் பெயர்ந்தோளே' என்பது பிறர் எள்ளியது பொருளாகத் தன்கண் நகை பிறந்தது ; என்னை? தன் மகள் தன்னை மதியாது இகழ்ந்தாளென நக்கவாறு ; இது வெகுளிப் பொருளாக நக்க தன்றோ வெனின், அது வீரர்க்கே உரித்தாகல் வேண்டும், இவள் அவளை வெகுண்டு தண்டம் செய்வாள் அல்லள் அதற்கே உவப்பின் அல்லது ; என்றும் கூறினர் பேரா.

---

1. தொல். புறத். அ. 2. தொல். களவியல், உக. 3. தொல். மெய். ச.

## 249. பாலை

[தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு ஆற்ருளாய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

அம்ம வாழி தோழி பன்னாள்
இவ்வூ ரம்ப லெவனோ வள்வார்
விசிபிணித் தியாத்த அரிகோற் றெண்கிணை
இன்குர லகவுந ரிரப்பின் நாடொறும்
௫ பொன்கோட்டுச் செறித்துப் பொலந்தார் பூட்டிச்
சாந்தம் புதைத்த [1]ஏந்துதுளங் கெழிலிமில்
ஏறுமுந் துறுத்துச் சால்பதங் குவைஇ
நெடுந்தேர் களிற்றெடு சுரக்குங் கொடும்பூட்
பல்வேல் முசுண்டை வேம்பி யன்னவென்
௧௦ நல்லெழி லிளநலந் தொலையினும் நல்கார்
பல்பூங் கானத் தல்குநிழல் அசைஇத்
தோகைத் தூவித் தொடைத்தார் மழவர்
நாகா வீழ்த்துத் திற்றி தின்ற
புலவுக்களந் துழைஇய துகள்வாய்க் கோடை
௧௫ நீள்வரைச் சிலம்பின் இரைவேட் டெழுந்த
வாள்வரி வயப்புலி தீண்டிய விளிசெத்து
வேறுவேறு கவலைய ஆறுபரிந் தலறி
உழைமான் இனநிரை யோடுங்
கழைமாய் பிறங்கன் மலையிறந் தோரே.

—நக்கீரனார்.

(சொ - ள்.) ௧. தோழி -, வாழி -, அம்ம - நான் கூறுவதனைக் கேட்பாயாக :

௧௧—௪. தோகை தூவி தொடை தார் மழவர் - மயிலின் சிறகாற் றொடுத்தலையுடைய மாலையை அணிந்த மழவர், பல் பூ கானத்து அல்கு நிழல் அசைஇ - பல பூக்களையுடைய காட்டில் சுருங்கிய நிழலில் தங்கி, நாகு ஆ வீழ்த்து - இளைய பசுவினைக் கொன்று, திற்றி தின்ற - அதன் ஊனைத் தின்ற இடமாய, புலவு களம் துழைஇய - புலால் வீசும் இடத்தினைத் துழாவிய, துகள் வாய்க் கோடை - புழுதியைத் தன்னிடத்தேகொண்ட மேல் காற்றின் ஒலியினை,

௧௫—௯. உழை மான் இனம் நிரை - ஆண் மானுடன் கூடிய கூட்டமாய மானினம், நீள் வரைச் சிலம்பின் இரை வேட்டு எழுந்த - நீண்ட மூங்கிலையுடைய பக்க மலையில் இரையினைக் கொள்ளுதற்கு விரும்பி எழுந்த, வாள் வரி வய புலி தீண்டிய விளி செத்து - ஒளி பொருந்திய வரிகளையுடைய வலிய புலி (மானைப்) பற்றியதால் எழும் ஒலியாகக் கருதி, வேறு வேறு கவலைய ஆறு பரிந்து அலறி

(பாடம்) 1. ஏந்துதுளங் கிமிலெழில்.

ஓடும் - வேறு வேறாய கவர்த்த நெறிகளில் வருந்தி அலறி ஓடா நிற்கும், கழை மாய் பிறங்கல் மலை இறந்தோர் - மூங்கிலால் மறையும் உயர்ந்த தோற்றமுடைய மலையைக் கடந்து சென்ற நம் தலைவர்,

உ—கo. வள் வார் விசி பிணித்து யாத்த - வளம் பொருந்திய வாரினால் இறுகப் பிணித்துக் கட்டிய, அரி கோல் தெண்கிணை இன் குரல் அகவுநர் - இழுத்து அடிக்கும் கோலினையுடைய தெளிந்த ஒலியினதாய கிணைப் பறையின் இனிய குரலை எழுப்பிப் பாடும் பாணர், இரப்பின் - இரந்து வேண்டின், நாடொறும் - நாள்தோறும், பொன் கோட்டுச் செறித்து - பொற் பூணினைக் கொம்பில் நெருங்கச்சேர்த்து, பொலம் தார் பூட்டி - பொன்னரி மாலையினைக் கழுத்தில் அணிவித்து, சாந்தம் புதைத்த ஏந்து துளங்கு எழில் இமில் - சந்தனம் பூசிய உயர்ந்து அசையும் அழகிய திமிலினையுடைய, ஏறு முந்துறுத்து - ஏற்றினை முன்னர் நிறுத்தி, சால் பதம் குவைஇ - மிக்க உணவினைக் குவித்து, நெடு தேர் களிற்றொடு சுரக்கும் - நீண்ட தேரினை யானையுடன் சேர அளிக்கும், கொடும் பூண் பல் வேல் முசுண்டை - வளைந்த பூணையும் பல வேற்படையையுமுடைய முசுண்டை என்பானது, வேம்பி அன்ன - வேம்பி எனும் ஊர் போன்ற, என் நல் எழில் இளநலம் தொலையினும் - எனது நல்ல அழகிய இளமைச் செவ்வி தொலைந்தவழியும், நல்கார் - வந்து அருள் செய்கின்றிலர் ; (அங்ஙனமாகவும்),

க—உ. பல் நாள் இ ஊர் அம்பல் எவனோ - பல நாளாக இவ் வூரார் செய்யும் அம்பல் என்னையோ.

(முடிபு) தோழி! வாழி! மலை யிறந்தோர், முசுண்டை என்பானது வேம்பி அன்ன என் நலம் தொலையினும் நல்கார் ; (அங்ஙனமாகவும்) பன்னாள் இவ்வூர் அம்பல் எவனோ?

(வி - ரை.) அரிகோல் - அரித்தெழும் ஓசையைச் செய்யும் கோல். பொன் - பொன்னாற்செய்த நுப்பிக்கு ஆகுபெயர். சால் பதம் குவைஇ ஏறு முந்துறுத்து நெடுந்தேர் களிற்றொடு சுரக்கும் என மாறுக. கோடை - மேல் காற்று ; சண்டு அதன் ஒலிக்கு ஆயிற்று. வயப்புலி தீண்டிய - வயப்புலி மானைத் தீண்டிய என ஒரு சொல் வருவித்துரைக்க. தீண்டிய என்னும் பெயரெச்சம் காரியப்பெயர் கொண்டது.

(உ - றை.) கோடையானது புலால் நாறும் களத்தைத் துழாவிப் புழுதியைத் தன்னிடத்துக்கொண்டதென்பது, அம்பற் பெண்டிர், பிறர் பழியாயவற்றையே ஆராய்ந்து தங்கண் கொள்ளுகின்றனர் என்றபடி. கோடையின் ஒலியை வயப்புலி மானைத் தீண்டிய ஒலியாகக் கருதி மானினம் அஞ்சுமென்றது, தலைவனாலாய மெய்வேறுபாட்டைத் தெய்வத்தால் ஆயதென்று அன்னை அஞ்சுகின்றாள் என்றபடி.

## 250. நெய்தல்

[தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகட்குக் குறைநயப்பக் கூறியது.]

எவன்கொல் வாழி தோழி மயங்குபிசிர்
மல்குதிரை யுழந்த ஒல்குநிலைப் புன்னை
வண்டிமி ரிணர நுண்டாது வரிப்ப
மணங்கமழ் இளமண லெக்கர்க் காண்வரக்
ரு கணங்கொ ளாயமொடு புணர்ந்துவிளை யாடக்
கொடுஞ்சி நெடுந்தே ரிளையரொடு நீக்கித்
தாரன் கண்ணியன் சேரவந் தொருவன்
வரிமனை புகழ்ந்த கிளவியன் யாவதும்
மறுமொழி பெறாஅன் பெயர்ந்தனன் அதற்கொண்டு
க0 அரும்பட ரெவ்வமொடு பெருந்தோள் சாஅய்
அவ்வலைப் பரதவர் கானலஞ் சிறுகுடி
வெவ்வாய்ப் பெண்டிர் கவ்வையிற் கலங்கி
இறைவளை நெகிழ்ந்த நம்மொடு
துறையுந் துஞ்சாது கங்கு லானே.

—செல்லூர்கிழார் மகனார் பெரும்பூதங்கொற்றனார்.

க—ரு. தோழி-, வாழி-, மயங்கு பிசிர் மல்கு திரை உழந்த - நெருங்கிய துளிகள் மிக்க அலைகளால் வருந்திய, ஒல்கு நிலை புன்னை - அசையும் நிலையினையுடைய புன்னை மரத்தின், வண்டு இமிர் இணர நுண் தாது வரிப்ப - வண்டுகள் ஒலிக்கின்ற பூங்கொத்துக்களின் நுண்ணிய பூம்பொடிகள் உதிர்ந்து அழகு செய்ய, மணம் கமழ் இள மணல் எக்கர் - மணம் நாறும் மெத்தென்ற மணல் மேட்டில், காண்வர கணம் கொள் ஆயமொடு புணர்ந்து விளையாட - யாம் அழகுபொருந்தக் கூட்டம் கொண்ட ஆயத்தாரோடு கலந்து விளையாடாநிற்க (அப்பொழுது),

சு—கூ. கொடுஞ்சி நெடுந்தேர் இளையரொடு நீக்கி - மொட்டினையுடைய நீண்ட தேரினைத் தன் ஏவலாளரொடு நீக்கி நிறுத்தி, தாரன் கண்ணியன் - தாரினையும் கண்ணியையும் உடையன் ஆகி, சேரவந்து - அணுகவந்து, ஒருவன் - ஒரு தலைவன், வரி மனை புகழ்ந்த கிளவியன் - யாம் இயற்றிய வண்டல் மனையைப் பாராட்டிய சொல்லையுடையனாகி, யாவதும் மறுமொழி பெறாஅன் பெயர்ந்தனன் - யாதொன்றும் மறுமொழி பெறாது மீண்டு சென்றனன்;

கூ—கச. அதற்கொண்டு - அது முதல், அரும் படர் எவ்வமொடு - அரிய நினைவாலாய துன்பத்தால், பெரும் தோள் சாஅய் - பெரிய தோள் மெலிய, அ வலை பரதவர் கானல் அம் சிறுகுடி - அழகிய வலைகளையுடைய பரதவரது கடற் கரையிலுள்ள அழகிய சிற்றூரி லுள்ள, வெவ்வாய்ப் பெண்டிர் கவ்வையில் கலங்கி - கொடிய வாயினையுடைய பெண்டிர் தூற்றும் அலரால் உள்ளம் கலங்க, இறை வளை

நெகிழ்ந்த நம்மொடு - முன்கையிடத்து வளை நெகிழப்பெற்ற நம் முடன், கங்குலான் - இராப்பொழுதிலே, துறையும் துஞ்சாது - கடற் றுறையும் துஞ்சுகின்றிலது ;

க. எவன் கொல் - இதற்குக் காரணம் என்னையோ?

(முடிபு) தோழி! வாழி! நாம் இள மணல் எக்கரிலே ஆயமொடு புணர்ந்து விளையாட, ஒருவன் தேரினை இளையரொடு நீக்கி அணுகவந்து, வரிமனை புகழ்ந்த கிளவியனும் மறுமொழி பெறாஅன் பெயர்ந்தனன் ; அதற்கொண்டு பெருந் தோள் சாஅய், கவ்வையிற் கலங்கி, வளை நெகிழ்ந்த நம்மொடு கங்குலான் துறையும் துஞ்சாது ; (இஃது) எவன்கொல்?

(வி - ரை.) மணம் - புன்னைப் பூவின் மணம். விளையாட என்னும் எச்சம், காலத்தையும் இடத்தையும் குறித்து நின்றது. தார், கண்ணி என்பவற்றின் பொருளைக் கடவுள் வாழ்த்துச் செய்யுளுரையிற்காண்க. 'வரிமனை புகழ்ந்த கிளவியன் யாவதும் மறுமொழி பெறாஅன் பெயர்ந்தனன்' என்றது, நம்பாலுள்ள அன்பு மிகுதியால் நம் வாய்ச்சொல்லைக் கேட்க விரும்பி, அவன் நம் வண்டல் மனையைப் புகழ்ந்தானாகவும், நாம் மறுமொழி யொன்றுங் கூறாது வன்கண்மையுடையேம் ஆயினமையின், வாளா பெயர்ந்து சென்றனன் என்றபடி. அதற்கொண்டு எவ்வமொடு தோள் சாஅய்க் கவ்வையிற் கலங்கி இறை வளை நெகிழ்ந்த நம்மொடு என்றமையால், நாம் உற்ற நோய்க்குக் காரணம், நம் உள்ளம் அவன்கண்ணதாக நாம் அவனைப் பிரிந்திருத்தலேயாம் என்பதும், நம்மொடு கங்குலானே துறையும் துஞ்சாது என்றமையால், அவனைப் பிரிந்த வருத்தத்தால் நாம் இரவிலே துயிலின்றியே வருந்துகின்றேம் என்பதும் கூறினாளாம். துறையும் துஞ்சாது என்றது இரவிலே துயிலின்றியே விழித்திருக்கும் தமக்கு அக்கடலொலி இடையறாது தோன்றி மிக வருத்துதலின், நம்மைப்போல் இக்கடலும் துஞ்சுகின்றிலதே, இஃதென்னை என்றும் கூறினாளாம். எனவே நாம் உற்ற நோயும் வெவ்வாய்ப் பெண்டிர் கவ்வையும் ஒழியவேண்டின், அப் பெருந்தகையின் குறையினை நயந்து ஏற்றுக்கோடல் வேண்டும் எனத் தோழி குறைநயப்பக் கூறினாளாம் என்க. சாஅய், கலங்கி என்னும் எச்சங்களைச் சாஅய, கலங்க எனத் திரிக்க; திரியாது தோள் சாஅய், உள்ளங் கலங்கி, வளை நெகிழ்ந்த நம்மொடு எனச் சினைகளின் வினையை முதலொடு சார்த்தி யுரைத்தலுமாம்.

---

## 251. பாலை

[தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு தோழி சொல்லியது.]

தூதும் சென்றன தோளுஞ் செற்றும்
ஓதி யொண்ணுதற் பசலையும் மாயும்
வீங்கிழை நெகிழச் சாஅய்ச் செல்லலொடு
நாம்படர் கூரும் அருந்துயர் கேட்பின்

ரு [1]நந்தன் வெறுக்கை யெய்தினும் மற்றவண்
தங்கலர் வாழி தோழி வெல்கொடித்
துனைகா லன்ன புனைதேர்க் கோசர்
தொன்மூ தாலத் தரும்பணைப் பொதியில்
இன்னிசை முரசங் கடிப்பிகுத் திரங்கத்
க௦ தெம்முனை சிதைத்த ஞான்றை மோகூர்
பணியா மையிற் பகைதலை வந்த
மாகெழு தானை வம்ப மோரியர்
புனைதேர் நேமி யுருளிய குறைத்த
இலங்குவெள் ளருவிய [2]அறைவா யும்பர்
கரு மாசில் வெண்கோட் டண்ணல் யானை
வாயுட் டப்பிய அருங்கேழ் வயப்புலி
மாநிலம் நெளியக் [3]குத்திப் புகலொடு
காப்பில வைகுந் தேக்கமல் சோலை
நிரம்பா நீளிடைப் போகி
உ௦ அரம்போழ் அவ்வளை நிலைநெகிழ்த் தோரே.

—மாமூலனார்.

(சொ - ள்.) ௬. தோழி -, வாழி -,

௧. தூதும் சென்றன - நாம் தலைவர்பாற் செலுத்திய தூதர்களும் சென்றுள்ளார்கள் ;

௨—௪. வீங்கு இறை நெகிழச் சாஅய் - செறிந்த அணிகள் நெகிழ்ந்து விழ மெலிந்து, செல்லலொடு நாம் படர்கூரும் அருந்துயர் கேட்பின் - நாம் வருத்தத்துடன் நினைவு மிகும் அரிய துயரினை அத் தூதுவர் கூறக் கேட்பின்,

௬—க௪. வெல் கொடி துனை கால் அன்ன புனை தேர்க் கோசர் - வெல்லும் கொடியினையுடைய விரையும் காற்றையொத்த அணி செயப்பெற்ற தேரினையுடைய கோசர் என்பார், தொல் முது ஆலத்து அரும் பணைப் பொதியில் - மிக்க தொன்மை வாய்ந்த ஆலமரத்தின் அரிய கிளைகளையுடைய மன்றத்தே, இன் இசை முரசம் கடிப்பு இகுத்து இரங்க - இனிய ஓசையையுடைய முரசம் குறுந்தடியால் அடிக்கப்பெற்று ஒலிக்க, தெவ் முனை சிதைத்த ஞான்றை - பகைவரது போர்முனையை அழித்தகாலத்தே, மோகூர் பணியாமையின் - மோகூர் என்பான் பணிந்து வாராமையின், பகை தலைவந்த மா கெழு தானை வம்ப மோரியர் - அவன்பாற் பகை ஏறட்டுக்கொண்டவராகிய குதிரைகள் பொருந்திய சேனையினை யுடைய புதிய மோரியர் என்பார், புனைதேர் நேமி உருளிய குறைத்த - புனையப் பெற்ற தேர் உருளை தடையின்றிச் செல்லுதற் பொருட்டு உடைத்து வழியாக்கிய, இலங்கு வெள் அருவிய அறைவாய் உம்பர் - விளங்கும் வெள்ளிய அருவிகளையுடைய மலைநெறிக்கு அப்பாற்பட்ட,

(பாடம்) 1. நந்தர் வெறுக்கை. 2. வரைவா யும்பர். 3. குத்திய புகலொடு.

கரு—கூ. மாசுஇல் வெண்கோட்டு அண்ணல் யானை - குற்ற மற்ற வெள்ளிய கொம்பினையுடைய பெருமை வாய்ந்த யானையானது, வாயுள் தப்பிய அருங்கேழ் வய புலி - தன் வாயினின்றும் தப்பிய அரிய நிறத்தையுடைய வலிய புலியை, மாநிலம் நெளியக் குத்தி - பெரிய நிலம் குழியக் குத்திக்கொன்று, புகலொடு காப்பில வைகும் தேக்கு அமல் சோலை - செருக்குடன் பாதுகாவல் இன்றித் தங்கியிருக்கும் தேக்குமரங்கள் நிறைந்த காடாகிய, நிரம்பா நீள் இடைப்போகி - தொலையாத நீண்ட இடத்திலே சென்று,

உ0. அரம் போழ் அவ்வளை நிலை நெகிழ்த்தோர் - அரத்தால் அறுத்து இயற்றப்பட்ட அழகிய வளையினை நிலையினின்றும் நெகிழச் செய்தோராகிய நம் தலைவர்,

ரு—சு. நந்தன் வெறுக்கை எய்தினும் - நந்தன் என்பான் தொகுத்து வைத்த செல்வத்தையே எய்துவதாயினும், மற்று அவண் தங்கலர் - இனி அங்குத் தங்கியிரார், (விரைந்து வந்துறுவார் ;)

க—உ. தோளும் செற்றும் - இனி நாம் தோளும் வளை செறியப் பெறுவேம், ஓதி ஒள்நுதல் பசலையும் மாயும் - நம் கூந்தல் சூழ்ந்த ஒளி தங்கிய நெற்றியின்கண் உள்ள பசலையும் மறைந்தொழியும்.

(முடிபு) தோழி ! வாழி ! தூதும் சென்றன, நீளிடைப் போகி நிலைநெகிழ்த்தோராகிய நம் தலைவர், நாம் படர் கூரும் அருந்துயர் கேட்பின் நந்தன் வெறுக்கை எய்தினும் அவண் தங்கலர் ; அதனால் நாம் தோளும் செற்றும், நுதற் பசலையும் மாயும்.

(வி - ரை.) செற்றும் - செறியப்பெறும் என்றபடி ; வளை செறியப் பெறும் என விரித்துரைக்க. செல்லல் - உடற்றுன்பமும் படர் கூர்தல் உளத் துன்பமும் ஆம். பாடலிபுரத்தை யாண்ட நந்த அரசர்களில் ஒருவன் மகாபதுமம் எனும் பேரெண் அளவு நிதியம் படைத்து அதனால் மகாபதும நந்தன் எனப் பெயர் சிறந்து விளங்கினனென்று வட நூல்களால் அறியப்படுதலின், அவனது செல்வத்தைக் குறித்து நந்தன் வெறுக்கை எய்தினும் என்றார் ; நந்தன் வெறுக்கை போல்வதோர் செல்வத்தை எய்தினும் என்றலுமாம். மோகூர் - மோகூர்க்கு மன்னனாகிய பழையன்; ஆகுபெயர். [1]'மோகூர், வலம்படு குழூஉநிலை யதிர மண்டி.' என்புழியும் ஆகுபெயராதல் காண்க. கோசர் என்பார் பழையனுடைய மோகூரில் வஞ்சினம் கூறிப் பொருதனர் என்பது, [2]'பழையன் மோகூர் அவையகம் விளங்க - நான்மொழிக் கோசர் தோன்றியன்ன' என்பதன் உரையால் அறியப்படும். மோகூர் மன்னன் கோசர்க்குப் பணியாமையினாலே கோசர்க்குத் துணையாய்வந்த மோரியர் என்க. மோரியர் தேர் நேமி யுருளும்படி மலையை யறுத்து வழி செய்தமையை [3]'ஆய்நலம் தொலைந்த மேனியும்' என்னும் அகப்பாட்டின் உரையிற் காண்க. வாயுட்டப்பிய—வாயினின்றும் தப்பிய ; உருபு மயக்கம்.

1. பதிற்று. சக. 2. மதுரைக். ருOஅ-கூ. 3. அகம். கக.

## 252. குறிஞ்சி

[தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொல்லியது.]

இடம்படு பறியா வலம்படு வேட்டத்து
வாள்வரி நடுங்கப் புகல்வந் தாளி
உயர்நுதல் யானைப் புகர்முகத் தொற்றி
வெண்கோடு புய்க்குந் தண்கமழ் சோலைப்
௫ பெருவரை யடுக்கத் தொருவேல் ஏந்தித்
தனியன் வருதல் அவனும் அஞ்சான்
பனிவார் கண்ணேன் ஆகி நோயட
எமியேன் இருத்தலை யானும் ஆற்றேன்
யாங்குச் செய்வாங்கொல் தோழி ஈங்கைத்
௧0 துய்யவிழ் பனிமல ருதிர வீசித்
[1]தொழின்மழை பொழிந்த பானாட் கங்குல்
எறிதிரைத் திவலை தூஉஞ் சிறுகோட்டுப்
பெருங்குளங் காவலன் போல
அருங்கடி யன்னையுந் துயின்மறந் தனளே.

—[2]நக்கண்ணையார்.

(சொ - ள்.) ௯. தோழி -,

௧—௫. இடம் படுபு அறியா வலம்படு வேட்டத்து - தான் வீழ்த்தும் விலங்குகள் இடதுபக்கத்தே வீழ்தலை அறியாத வெற்றி பொருந்திய வேட்டத்தினையுடைய, வாள் வரி நடுங்க புகல்வந்து - புலி நடுங்கிட விருப்பங்கொண்டு (பாய்ந்து), ஆளி - ஆளியானது, உயர் நுதல் யானை புகர் முகத்து ஒற்றி - உயர்ந்த நெற்றியினையுடைய யானையின் புள்ளி பொருந்திய முகத்தைத் தாக்கி, வெண் கோடு புய்க்கும் - அதன் வெள்ளிய தந்தத்தினைப் பறிக்கும் (இடமாய), தண் கமழ் சோலை பெருவரை அடுக்கத்து - தண்ணெனக் கமழும் சோலையினையுடைய பெரிய மலையின் சாரலின்கண்,

௫—௬. ஒரு வேல் ஏந்தி தனியன் வருதல் அவனும் அஞ்சான் - வேல் ஒன்றினையே கொண்டு தனியனாகி வருதலைத் தலைவனும் அஞ்சுகின்றிலன்;

௭—௮. பனி வார் கண்ணேன் ஆகி நோய் அட - நீர் ஒழுகும் கண்ணினேன் ஆகிப் பிரிதற்றுன்பம் வருத்த, எமியேன் இருத்தலை யானும் ஆற்றேன் - தனித்து இருத்தலை யானும் ஆற்றுகிலேன்;

௯—௧௪. அரு கடி அன்னையும் - கடிய காவல்கொண்ட நம் தன்னையும், ஈங்கை துய் அவிழ் பனி மலர் உதிர - இண்டையின் ஆர்க்கு விரிந்த குளிர்ந்த மலர் உதிருமாறு, வீசி தொழில் மழை

(பாடம்) 1. தெழிமழை. 2. இன்பொறு கோழிக் காவிதி மகன் கண்ணனார்; நக்கணான்.

பொழிந்த பானாள் கங்குல் - பெய்தற் றொழிலையுடைய மேகம் நீரினை வீசிச் சொரிந்த நடுநாள் இரவில், எறி திரை திவலை தூஉம் - வீசும் அலைகளின் துளிகள் பரக்கும், சிறு கோட்டுப் பெருங் குளம் காவலன் போல - சிறிய கரையினையுடைய பெரிய குளத்தைக் காத்தல் செய்பவன்போலக் (காவல் செய்து), துயில் மறந்தனள் - தூங்குதலை மறந்துவிட்டனள்; யாங்குச் செய்வாம் - யாம் என் செய்வாம்.

(முடிபு) தோழி! பெருவரை யடுக்கத்து அவனும் தனியன் வருதல் அஞ்சான்; யானும் நோயட எமியேன் இருத்தலை ஆற்றேன்; அருங்கடி அன்னையும் பெருங்குளம் காவலன் போலத் துயில் மறந்தனள்; யாங்குச் செய்வாம்.

(வி - ரை.) இடம் படுபு அறியா என்றமையால், புலி எப்பொழுதும் ஏனை விலங்குகளை வலப்பக்கத்தே வீழ்த்தி உண்ணும் இயல்பினது என்பது பெற்றாம். முன்னர்ப் புலியின் சிறப்புக் கூறினமையால், வாள்வரியும் என்னும் சிறப்பும்மை தொக்கதெனக் கோடலுமாம். புகல் வரல் - விரும்புதல். ஆளி - யாளி. சிங்கம் புய்க்கும் அடுக்கம் எனவும் சோலை அடுக்கம் எனவும் கூட்டுக. புய்க்கும் என்னும் பெயரெச்சம் இடப் பெயர் கொண்டது. எமியேன் - தமியேன். தனியன் வருதல் அவனும் அஞ்சான், எமியேன் இருத்தலை யானும் ஆற்றேன் என்றமையால், யான் அவனது கூட்டத்தையே விரும்புதலுடையேன்; எனினும் ஏதம் மிக்க வரையடுக்கத்து அவன் தனியனாய் வருதலை அஞ்சுகின்றேன் என்றாளாம். தொழில் மழை - உழுதொழிற்கு உதவும் மழை என்றலுமாம்; [1]' மழைதொழி லுதவ' என்புழி, நச்சினார்க்கினியர் இவ்விரு பொருளும் கொண்டமையுங் காண்க. தொழி மழை என்னும் பாடத்திற்கு - கனைக்கின்ற மழையென்க. மலர் உதிர வீசிப் பொழிந்த என்றமையால், பெரும் பெயல் என்பது பெறப்படும். நள்ளிரவில் மழை பொழிய, அதனால் நீர் நிரம்பி அலை மோதாநிற்க, அதன் துளிகள் கரையின்மேலிட மெலியும் பரத்தலின் மெலிந்த கரையினையுடைய அப் பெரிய குளத்தைக் காப்பவன், அதன் கரை உடையாதபடி துயிலென்பது சிறிதுமின்றி அதனைச் சூழ்வந்து காப்பன் ஆகலின், அவ்வாறு நள்ளிரவிலும் துயிலாது தன்னைப் பல்காலும் நோக்குதலுடைய அன்னைக்குக் குளங் காவலனை உவமை கூறினாள். காவலன் துயிலின்றிக் குளத்தைக் காத்தல் போல, அன்னையும் துயிலின்றி என்னைக் காக்கின்றனள் எனத் தொழில் உவமம் கொள்க. எறி திரைத் திவலை தூஉம் சிறு கோட்டுப் பெருங்குளம் என்றமையால், தலைவியானவள் காமவெள்ளம் மிகுதலால், தனது நாண் நுறுங்கி நின்ற நிலையைக் குறித்தாளாம். [2]'மிகுபெயல், உப்புச்சிறை நில்லா வெள்ளம் போல, நாணு வரை நில்லாக் காமம் நண்ணி' என்பது ஈண்டு அறியற்பாலது. அவனும், யானும், அன்னையும் என்னும் உம்மைகள் கட்டுரைச் சுவை பட நின்றன; எண்ணும்மையுமாம். கொல் - அசை.

---

1. மதுரைக்காஞ்சி, கo. 2. அகம், உoஅ.

## 253. பாலை

[தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.]

வைகல் தோறும் பசலை பாயவென்
மெய்யும் பெரும்பிறி தாகின் றுய்யென
அன்னையும் அமரா முகத்தினள் அலரே
வாடாப் பூவிற் கொங்க ரோட்டி
௫ நாடுபல தந்த பசும்பூட் பாண்டியன்
பொன்மலி [1]நெடுநகர்க் கூட லாடிய
இன்னிசை யார்ப்பினும் பெரிதே யாங்கியான்
சிலநாள் உய்யலென் போன்மெனப் பலநினைந்து
ஆழல் வாழி தோழி வடாஅது
௧௦ ஆரிருள் நடுநாள் [2]ஏரா ஓய்யப்
பகைமுனை யறுத்துப் பல்லினஞ் சாஅய்க்
கணஞ்சால் கோவலர் நெடுவிளிப் பயிரறிந்து
இனந்தலைத் தரூஉந் துளங்கிமில் நல்லேற்றுத்
தழூஉப்பிணர் எருத்தந் தாழப் பூட்டிய
௧௫ அந்தூம் பகலமைக் கமஞ்செலப் பெய்த
துறுகாழ் வல்சியர் தொழுவறை வௌவிக்
கன்றுடைப் பெருநிரை மன்றுநிறை தரூஉம்
நேரா வன்றோள் வடுகர் பெருமகன்
பேரிசை எருமை நன்னாட் டுள்ளதை
௨௦ அயிரியா றிறந்தன ராயினு மயரிறந்து
உள்ளுப தில்ல தாமே பணைத்தோட்
குரும்பை மென்முலை அரும்பிய சுணங்கின்
நுசுப்பழித் தொலிவருந் தாழிருங் கூந்தல்
மாக விசும்பில் திலகமொடு பதித்த
௨௫ திங்கள் அன்னநின் திருமுகத்து
ஒண்சூட் டவிர்குழை மலைந்த நோக்கே.

—நக்கீரர்.

(சொ - ள்.) ௧—௯. தோழி -, வாழி -, வைகல் தோறும் பசலை பாய - நாடோறும் பசலையானது படர்தலின், என் மெய்யும் ஓய் எனப் பெரும் பிறிது ஆகின்று - என் உடம்பும் விரைய இறப்பினை எய்தி வருகின்றது, அன்னையும் அமரா முகத்தினள் - அன்னையும் வெறுத்த முகத்தினள் ஆகின்றாள், அலரே - ஊர்க்கண் எழும் அலர் தான், வாடாப் பூவின் கொங்கர் ஓட்டி - பொற் பூவினை அணிந்த கொங்கரை அகற்றி, நாடு பல தந்த பசும் பூட் பாண்டியன் - அவர் தம் நாடு பலவற்றையும் கைப்பற்றிய பசும்பூட் பாண்டியன் என்பான், பொன் மலி நெடு நகர்க் கூடல் - பொன் மிக்க பெரிய நகரமாகிய கூடற்கண், ஆடிய இன் இசை ஆர்ப்பினும் பெரிது - அவ் வெற்றிக் களிப்பினால் ஆடிய இனிய ஒலியையுடைய ஆரவாரத்தி

(பாடம்) 1. நெடுமதிற் கூடல். 2, ஏரா உய்ய.

னும் மிக்கதாகின்றது, ஈங்கு யான் சில நாள் உய்யலென் போலும் என - இவ்விடத்தே யான் இனிச் சில நாளும் உயிர்தரித்திரேன் போலும் என்று, பல நினைந்து ஆழல் - பலவும் எண்ணித் துயரில் அழுந்தாதே ;

௯—௧௧. வடாஅது - வடக்கின் கண்ணதாகிய, ஆர் இருள் நடு நாள் - இயங்குதற்கரிய நள்ளிரவில், ஏர் ஆ ஒய்ய - அழகிய பசுக்களைக் கவர்ந்து வருதற்கு, பகை முனை அறுத்து - பகைப் புலத்தைக் கெடுத்து, பல் இனம் சாஅய் - பல இனங்களையும் ஓட்டியும்,

௧௨—௨0. நெடு விளி பயிர் அறிந்து - தங்கள் நெடிய கூப்பீட்டொலியை அறிந்து, இனம் தலைத் தரும் - பசுவினத்தைத் தம்மிடத்து அணைத்துக்கொடுவரும், துளங்கு இமில் நல் ஏற்று - அசையும் முசுப்பினையுடைய நல்ல ஏறுகளின், தழூஉப் பிணர் எருத்தம் - சருச்சரைகொண்ட கழுத்தில், தாழப் பூட்டிய - தொங்கப் பூட்டியுள்ள, அம் தூம்பு அகல் அமை கமம் செல பெய்த - அழகிய உட்டொளையினையுடைய அகன்ற மூங்கிற் குழாயில் நிறைவு எய்துமாறு பெய்த, துறு காழ் வல்சியர் - செறிவுமிக்க உணவினராகிய, கணம் சால் கோவலர் - கூட்டம் மிக்க கோவலரது, தொழூ அறை வெளவி - தொழுவாகிய அறையினைக் கவர்ந்தும், கன்று உடை பெருநிரை மன்று நிறை தரூஉம் - கன்றுகளையுடைய ஆனிரையை மன்றுகள் நிறையுமாறு கொணரும், நேரா வன் தோள் வடுகர் பெருமகன் - ஒப்பில்லாத வலிய தோளினையுடைய வடுகர் தலைவனாகிய, பேர் இசை எருமை நல் நாட்டு உள்ளதை - பெரிய புகழினையுடைய எருமை என்பானது நல்ல நாட்டின்கண் உள்ளதாகிய, அயிரியாறு இறந்தனர் ஆயினும் - அயிரி என்னும் யாற்றினைக் கடந்து (நம் தலைவர்) சென்றனர் ஆயினும்,

௨௧—௬. பணை தோள் - மூங்கில் போன்ற தோளினையும், குரும்பை மெல் முலை - குரும்பை போன்ற மெல்லிய முலையினையும், அரும்பிய சுணங்கின் - அரும்பிய சுணங்கினையும், நுசுப்பு அழித்து ஒலிவரும் தாழ் இரும் கூந்தல் - இடையினை வருத்தித் தழைத்த தாழ்ந்த கரிய கூந்தலையும் உடைய, நின் - நினது, மாக விசும்பில் திலகமொடு பதித்த திங்கள் அன்ன திருமுகத்து - மாகமாகிய வானில் உள்ள இடையே திலகம் பதித்த திங்கள் போன்ற அழகிய முகத்திலுள்ள, ஒண் சூட்டு அவிர் குழை மலைந்த நோக்கு - ஒள்ளிய மத்தக மணி யமைந்த விளங்குகின்ற காதணியாகிய குழையொடு பொருத பார்வையினை,

௨0—௧. தாம் மயர் இறந்து உள்ளுப - அவர் மறவியற்று என்றும் நினையாநிற்பர்.

(முடிபு) தோழி! வாழி! மெய்யும் பெரும் சிறிது ஆகின்று ; அன்னையும் அமரா முகத்தினள் ; அலர் பசும்பூட் பாண்டியன் கூடல் ஆடிய ஆர்ப்பினும் பெரிது ; யான் உய்யலென் போலும் என நினைந்து ஆழல் ; (நம் தலைவர்) வடாஅது எருமை நன்னாட்டு உள்ளதாகிய அயிரியாறு இறந்தனராயினும், நின் திருமுகத்து அவிர் குழை மலைந்த நோக்குத் தாம் மயர் இறந்து உள்ளுவர்.

சாய், வெளவிப் பெருநிரை தரூஉம் எருமை என்க.

(வி - ரை.) வாடாப்பூ - பொன்னானியன்ற பூவிற்கு வெளிப் படை. பூவென்றது வெட்சி முதலிய போர்ப் பூவினை. ஆடிய - வெற்றிக் களிப்பால் ஆடிய என்க. ஆடிய ஆர்ப்பு - ஆடியகாலை எழுந்த ஆர்ப்பு. இன் இசை - இனிய இயங்களின் ஓசையுமாம். போன்ம்- போலும்; ஒப்பில் போலி. வடாஅது நன்னாடு எனக் கூட்டுக. பகை முனை என்றது, கரந்தையாரது போர் முனை. பல் இனம் என்புழி பன்மை - மிகுதியை உணர்த்திற்று. தழூஉப் பிணர் - பிணர் தழூஉ என மாறுக; தழுவுதல் - பொருந்துதல். வல்சியராகிய கோவலரது தொழூ அறை என்றியைக்க. கோவலர் எருத்தின் கழுத்தில் மூங்கிற்குழாயில் உணவினைப் பெய்து பூட்டியிருப்பர் என்பது [1]'கோவலர், மழவிடைப் பூட்டிய குழாஅய்த் தீம்புளி, செவியடை தீரத் தேக்கிலைப் பகுக்கும், புல்லி நன்னாடு' எனப் பிறாண்டும் கூறப்பட்டது. நிறை - நிறைய. உள்ளதை - ஐ பகுதிப் பொருள் விகுதி. மாக விசும்பு - இருபெயரொட்டு. திலகமொடு பதித்த திங்கள் அன்ன என்றது இல்பொருள் உவமை. திலகமொடு - வேற்றுமை மயக்கம். சூடு - குழையிற் பதித்த மத்தக மணி.

---

## 254. முல்லை

[வினை முற்றி வந்தெய்திய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.]

நரைவிரா வுற்ற நறுமென் கூந்தற்
செம்முது செவிலியர் [2]பலபா ராட்டப்
பொலன்செய் கிண்கிணி நலம்பெறு சேவடி
மணன்மலி முற்றந் நிலம்வடுக் கொளாஅ
௫ மனையுறை புறவின் செங்காற் சேவல்
துணையொடு குறும்பறை பயிற்றி மேற்செல
விளையா டாயத் திளையோர்க் காண்டொறும்
நம்வயின் நினையும் நன்னுத லரிவை
புலம்பொடு வதியும் கலங்கஞர் அகல
௧௦ வேந்துறு தொழிலொடு வேறுபுலத் தல்கி
வந்துவினை முடிந்தன மாயின் நீயும்
பணைநிலை முனைஇய வினைநவில் புரவி
இழையணி நெடுந்தே ராழி யுறுப்ப
நுண்கொடி மின்னிற் பைம்பயிர் துமியத்
௧௫ தளவம் [3]முல்லையொடு தலைஇத் தண்ணென
வெறிகமழ் கொண்ட வீதுதை புறவின்
நெடியிடை பின்படக் கடவுமதி என்றியான்
சொல்லிய [4]அளவை நீடாது வல்லெனத்

---

1. அகம். ௩௯௪. (பாடம்) 2. பலர்பா ராட்ட. 3. முல்லையொடு தோன்றி தோன்ற. 4. அளவையிற் நீடாது.

தார்மணி மாவறி வுறூஅ
உ0 ஊர்நணித் தந்தனை உவகையாம் பெறவே.

—[1]மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்.

(சொ - ள்,) க—கூ. (பாக!), நரை விராவுற்ற நறுமெல் கூந்தல் - நரைமயிர் கலப்புற்ற நறிய மெல்லிய கூந்தலையுடைய, செம்முது செவிலியர் - செவ்விய முதிய செவிலித் தாயர், பல பாராட்ட - தன்னைப் பலவாறு பாராட்டிக் கூற, பொலன் செய் கிண்கிணி நலம் பெறு சே அடி - பொன்னாற் செய்யப்பெற்ற சதங்கையை அணிந்த அழகிய சிவந்த அடியால், மணல் மலி முற்றத்து நிலம் வடுக்கொளாஅ - மணல் பரந்த முற்றத்தே நிலம் வடுக்கொள்ளுமாறு செய்து, மனை உறை புறவின் செங்கால் சேவல் - மனையிற் றங்கி யுறையும் சிவந்த காலினையுடைய புறவின் சேவல், துணையொடு குறும்பறை பயிற்றி - தன்பெடையொடு குறுகக் குறுகப் பறந்தலைச் செய்து, மேல்செல - பின்பு மேலே எழுந்திட, விளையாடு ஆயத்து இளையோர்க் காண்தொறும் - விளையாடும் தன் தோழியராய இளையரைக் காணுந்தொறும், நம்வயின் நினையும் - நம்பால் நினைவு கொள்ளும், நல் நுதல் அரிவை - அழகிய நெற்றியினையுடைய நம் தலைவி, புலம்பொடு வதியும் கலங்கு அஞர் அகல - தனிமையொடு தங்கியிருக்கும் மிக்க துன்பம் நீங்குமாறு,

க0—க. வேந்து உறு தொழிலொடு - வேந்தற்கு உற்றுழி உதவும் வினையினால், வேறு புலத்துவந்து அல்கி - இவ் வேற்று நாட்டின்கண் வந்து தங்கி, வினைமுடித்தனம் ஆயின் - மேற்கொண்ட வினையினை முடித்துளோம் ஆகலின்,

கக—அ. நீயும் -, பணை நிலை முனை இய வினைநவில் புரவி - பந்தியில் நிற்றலை வெறுத்த போர்த் தொழிலிற் பயின்ற குதிரை பூட்டிய, இழை அணி நெடு தேர் ஆழி - முத்தாரம் முதலியன அணிந்த நீண்ட தேர் உருளை, நுண்கொடி மின்னின் உறுப்ப - நுண்ணிய மின்னுங்கொடி போன்று செலுத்தப் பெறுதலின், பைம்பயிர் துமிய - வழியிலுள்ள பசிய பயிர்கள் அறுபட்டு விலக, தளவம் முல்லையொடு தலைஇ - செம்முல்லை வெண்முல்லையுடன் கூடி, தண் என வெறி கமழ் கொண்ட வீ ததை புறவின் - தண்ணென்று நறுமணம் கமழும் மலர் செறிந்த காட்டினது, நெடி இடை பின்படக் கடவுமதி என்று, நீண்டவழி பின்னுறச் செலுத்துவாய் என்று, யான் சொல்லிய அளவை - யான் கூறிய மாத்திரையானே,

கஅ—உ0. நீடாது - தாழ்க்காது, உவகை யாம் பெற - யாம் மகிழ்வு பெறும் பரிசு, தார் மணி மா அறிவுறூஅ - மணிமாலை யணிந்த குதிரையின் உள்ளம் அறிந்து, வல்லென - விரைய, ஊர் நணி தந்தனை - ஊர்க்கு அணித்தாகத் தேரினைக் கொண்டு வந்தனை (வாழியர்.)

(முடிபு) பாக! வந்து வினை முடித்தனமாயின், அரிவை புலம்பொடு வதியும் கலங்கஞர் அகல, நெடுந்தேரினைப் புறவின் நெடியிடை பின்படக் கடவுமதி

(பாடம்) 1. கபிலர்.

என்று யான் சொல்லிய அளவை யாம் உவகைபெற வல்லென ஊர் நணித் தந்தனை (வாழியர்).

(வி - ரை.) கிண்கிணி நலம்பெறு சேவடி - கிண்கிணியானது அழகு பெறுதற்கு ஏதுவாகிய சேவடி என்றுமாம். [1]'குழைக்கு விளக்காகிய ஒண்ணுதல் பொன்னின், இழைக்கு விளக்காகிய . . . மகளிர்' என்பது காண்க. வடுக்கொளாஅ - வடுக்கொள்ள என்பது திரிந்து நின்றது; வடுச் செய்து என்றுமாம். பாராட்ட விளையாடும், நிலம் வடுக்கொள விளையாடும், மேற்செல விளையாடும் எனத் தனித்தனிக் கூட்டுக. மணல் முற்றத்தே இளையோர் ஓடி விளையாடுதலின் அங்குள்ள சேவலும் பெடையும் மேலெழுந்து செல்வவாயின. அங்ஙனம் புறுக்கள் சேவலும் பெடையுமாக மேற் செல்ல, இளம்பருவமுடைய மகாரும் மகளிரும் விளையாடும் மகிழ்ச்சி மிக்க விளையாட்டு, கூடி யிருப்பவர்க்கே இன்பம் விளைக்குமாகலின், நாம் தலைவருடன் கூடி இவ்வின்பினை நுகரப் பெற்றிலேமென்று தலைவி நம்மை நினைந்து வருந்துவள் எனக் கருதி, அவ்வருத்தம் நீங்க நீ தேரினை விரைந்து கடவுதி என்று தலைவன் பாகற்குக் கூறினான் என்க. வினை நவில் புரவி - குறிப்பறிந்து செல்லும் தொழில் பயின்ற புரவி என்றுமாம். பணை நிலை முனைஇய என்றதனால், அதுவும் விரைந்து சேறற்கண் மனவெழுச்சி யுடையதாதல் கூறியவாறாயிற்று. உறுப்ப - ஊடறுத்துச் செல்ல. நெடிய இடை என்பது நெடியிடை என விகாரமாயிற்று. மா - குதிரையின் உள்ளம். அறிவுறூஉ - அறிந்து தந்தனையாகலின் வாழி என விரித்துரைக்க.

---

## 255. பாலை

[பிரிவிடை வேறுபட்ட தலைமகள் ஆற்றுமை மீதூரத் தோழிக்குச் சொல்லியது.]

உலகுகிளர்ந் தன்ன உருகெழு வங்கம்
புலவுத்திரைப் பெருங்கடல் நீரிடைப் போழ
இரவும் எல்லையும் அசைவின் ருகி
விரைசெல லியற்கை வங்கூ ழாட்டக்
௫ கோடுயர் திணிமணை லகன்றுறை நீகான்
மாட வொள்ளெரி மருங்கறிந் தொய்ய
ஆள்வினைப் பிரிந்த காதலர் நாள்பல
கழியா மையே அழிபட ரகல
வருவர் மன்னுற் ருேழி நண்பணைப்
௧0 பொருபுனல் வைப்பின் நம்மூ ராங்கட்
கருவிளை முரணிய தண்புதற் பகன்றைப்
பெருவள மலர அல்லி தீண்டிப்

---

1. பதிற்று. ௫௧.

பலவுக்காய்ப் புறத்த பசும்பழப் பாகல்
கூதள மூதிலைக் கொடிநிரைத் தூங்க
கரு அறனின் றலைக்கும் ஆறா வாடை
கடிமனை மாடத்துக் கங்குல் வீசித்
திருந்திழை நெகிழ்ந்து பெருங்கவின் சாய
நிரைவளை யூருந் தோளென
உரையொடு செல்லு மன்பினர்ப் பெறினே.

—மதுரை மருதனிளநாகனார்.

(சொ-ள்.) கூ. தோழி -,

க—எ. உலகு கிளர்ந்தன்ன - உலகு புடைபெயர்ந்தா லொத்த, உருகெழு வங்கம் - அச்சம் தோன்றும் நாவாய், புலவு திரை பெருங் கடல் நீர் இடைப் போழ - புலால் வீசும் அலைகளையுடைய பெரிய கடலின் நீரை இடையே பிளந்து செல்ல, இரவும் எல்லையும் அசைவு இன்று ஆகி - இரவும் பகலும் ஓரிடத்தும் தங்குதல் இன்றி, விரை செலல் இயற்கை வங்கூழ் ஆட்ட - விரைந்து செல்லும் இயற்கையினதாய காற்று அசைத்துச் செலுத்த, நீகான் - நாவாய் ஓட்டுவான், கோடு உயர் திணி மணல் அகன் துறை - கரை உயர்ந்த செறிந்த மணலையுடைய அகன்ற துறைக்கண், மாடஒள் எரி மருங்கு அறிந்து ஒய்ய - மாடத்தின் மீதுள்ள ஒள்ளிய விளக்கினால் இடம் அறிந்து செலுத்த, ஆள்வினைப் பிரிந்த காதலர் - பொருளீட்டும் முயற்சிபற்றி நம்மைப் பிரிந்து சென்ற நம் தலைவர்,

அ—கக. தண் பணைப் பொரு புனல் வைப்பின் நம் ஊர் ஆங்கண் - குளிர்ந்த மருத நிலமாய நீர் மோதும் நாட்டிலுள்ள நமது ஊரிடத்தே, கருவிளை முரணிய தண் புதல் பகன்றை - கருவிளையின் பூவினொடு மாறுபட்ட குளிர்ந்த பகன்றைச் செடியின், பெருவளம் மலர அல்லி தீண்டி - மிக்க செழுமையுடைய மலர்களின் அகவிதழை அசைத்து, பலவுக் காய்ப் புறத்த பசும் பழப் பாகல் - பலாக்காய் போலும் புறத்தினையுடைய அழகிய பழத்தினையுடைய பாகற்கொடிகள், கூதள முது இலைக் கொடி நிரை தூங்க - கூதாளியின் முதிய இலைகளையுடைய கொடிகளின் கூட்டத்திற் கிடந்து அசையும்படி செய்து, அறன் இன்று அலைக்கும் ஆறா வாடை - நம்மை அறமில்லாது வருத்தும் நீங்காத வாடை, கடி மனை மாடத்துக் கங்குல் வீசி - காவல் பொருந்திய மாடமாய மனையில் இரவெல்லாம் வீசலின், திருந்து இழை நெகிழ்ந்து பெருங்கவின் சாய - திருந்திய அணிகள் சோரப் பெரிய அழகு கெட, நிரை வளை ஊரும் தோள் என - தோளானது வரிசையாகவுள்ள வளைகள் நெகிழ்ந்து விழப்பெறும் என்னும், உரையொடு செல்லும் அன்பினர் பெறின் - உரைகொண்டு தூது செல்லும் அன்புடையாரை நாம் பெறுவோமாயின்,

எ—கூ. அழிபடர் அகல - நமது மிக்க துன்பம் நீங்க, நாள் பல கழியாமை - பலநாள் தாழ்க்காது, வருவர் - விரைந்து வந்துறுவர், மன் - அங்ஙனம் சென்றுரைப்பார் இலரே ; (என் செய்வாம்.)

(முடிபு) தோழி! ஆள்வினைப் பிரிந்த நங் காதலர், வாடை, கடிமனை மாடத்துக் கங்குல் வீச, இறை நெகிழ்ந்து கவின் சாய, தோள் வளையூரும் என உரையொடு செல்லும் அன்பினர்ப் பெறின், நாள் பல கழியாமையே, அழிபடர் அகல வருவர் மன்.

(வி - ரை.) உலகு கிளர்ந்தன்ன வங்கம் என்பது வங்கத்தின் பெருமை கூறியபடி; உலகு புடைபெயர்வது போலும் புடைபெயர்ச்சியையுடைய வங்கம் என்க. வங்கூழ் - காற்று. மாட ஒள்ளெரி - கலங்கள் துறையறிந்து வருதற் பொருட்டு உயரிய மாடத்தின்மீது அமைக்கப்பெற்ற ஒள்ளிய விளக்கு. இது கலங்கரை விளக்கம் எனவும்படும். வங்கம் ஈகான் ஒய்ய ஆள்வினைப் பிரிந்த காதலர் என்றமையான், பொருளீட்டுதற்குக் கலத்திற் பிரிந்த தலைவன் என்பதாயிற்று. பகன்றையின் மலர் வெண்ணிறமுடையய தாகலின் கருவிளை முரணிய பகன்றை மலர் எனப்பட்டது. பகன்றை - சிவதை. தூங்க - தூங்கச் செய்து என விரித்துரைக்க. வீசி, வீச என்பதன் திரிபு. வீச என்னும் பாடமே கொள்ளுதலும் ஆம். என உரையொடு - என உரைக்கும் உரையொடு என விரித்துரைக்க. உரையொடு செல்லும் அன்பினர் என்பது, சென்று உரைக்கும் அன்பினர் என்றபடி. செல்லும் அன்பினர்ப் பெறினே என்றது தோழி அங்ஙனம் செய்திலள் என்பதனைக் குறிப்பிற் கூறியவாறும்.

(மே - ள்.) [1]'முந்நீர் வழக்கம் மகடூஉவோ டில்லை' என்னுஞ் சூத்திரத்து இச் செய்யுள் கலத்திற் பிரிவு தலைமகளை யொழியப் பிரிந்தமைக்கு உதாரணமென்றனர்; இளம்.

[2]'இருவகைப் பிரிவும்' என்னுஞ் சூத்திரத்து, இச் செய்யுள் தூது விடுவது காரணமாக உரைத்தது எனவும்; இம் மணிமிடை பவளத்துப் பின்பனி வந்தவாறும் நண்பகல் கூறுமையும் அவர் குறித்த காலம் இதுவென்பது தோன்றியவாறும் காண்க எனவும், [3]'ஏவன் மரபின்' என்னுஞ் சூத்திரத்து, இப் பாட்டுள் வணிகன் தலைவனாகவும் கொள்ளக் கிடந்தவின் தலைவியும் அவ்வருணத் தலைவியாமென் றுணர்க எனவும் கூறினர்; நச்.

---

## 256. மருதம்

[தோழி தலைமகற்கு வாயின் மறுத்தது.]

பிணங்கரில் வள்ளை நீடிலைப் பொதும்பின்
மடிதுயின் முனைஇய வள்ளுகிர் யாமை
நொடிவிடு கல்லிற் போகி அகன்றுறைப்
பகுவாய் நிறைய நுங்கிற் கள்ளின்
ரு [4]உகுவா ரருந்து மகிழ்பியங்கு நடையொடு

---

1. தொல். பொருள். அகத். ௩௭. 2. தொல். அகத். கக. 3. தொல். அகத், உ௪. (பாடம்) 4. நுகர்வார் உந்து.

தீம்பெரும் பழன முழக்கி அயலது
ஆம்பன் மெல்லடை யொடுங்கு மூர
[1]பொய்யா லறிவெனின் மாய மதுவே
கையகப் பட்டமை யறியாய் நெருநை
க0 மையெழி லுண்கண் மடந்தையொடு வையை
ஏர்தரு புதுப்புன லுரிதினி னுகர்ந்து
பரத்தை யாயங் கரப்பவு மொல்லாது
கவ்வையா கின்றாற் பெரிதே காண்டகத்
தொல்புகழ் நிறைந்த பல்பூங் கழனிக்
கரு கரும்பமல் படப்பைப் பெரும்பெயர்க் கள்ளூர்த்
திருநுதற் குறுமக ளணிநலம் வவ்விய
அறனி லாள னறியே னென்ற
திறனில் வெஞ்சூ ளறிகரி கடாஅய்
முறியார் பெருங்கிளை செறியப் பற்றி
உ0 நீறுதலைப் பெய்த ஞான்றை
வீறுசா லவையத் தார்ப்பினும் பெரிதே.

—மதுரைத் தமிழ்க்கூத்தனார் கடுவன் மள்ளனார்.

(சொ - ள்.) க—எ. பிணங்கு அரில் வள்ளை நீடு இலை பொதும்பில் - பின்னிய தூறுகளையுடைய வள்ளைக் கொடியின் நீண்ட இலைச் செறிவில், மடிதுயில் முனைஇய வள் உகிர் யாமை - மடிந்து கிடக்கும் துயிலை வெறுத்த வலிய நகத்தினையுடைய யாமை, நொடி விடு கல்லில் போகி - ஒலித்தல் செய்கின்ற பரல்களின் வழியே சென்று, அகன்துறை - அகன்ற நீர்த்துறைக்கண்ணே, பகுவாய் நிறைய - பிளந்த வாய் நிறைந்திட, நுங்கின் கள்ளின் உகுவார் அருந்து மகிழ்பு இயங்கு நடையொடு - பனங்கள்ளின் அருந்துங்கால் சிந்திய ஒழுக்கினை உண்ட களிப்புடன் செல்லும் நடையொடு, தீம் பெரும் பழனம் உழக்கி - இனிய பெரிய வயல்களைக் கலக்கி, அயலது ஆம்பல் மெல் அடை ஒடுங்கும் ஊர - அதன் அயலதாகிய ஆம்பலது மெல்லிய இலைகட்குள்ளே ஒடுங்கிக் கிடக்கும் ஊரனே !

அ—கங. பொய்யால் - நீ பொய் கூறுதே, நின் மாயம் அறிவென் - நின் வஞ்சனையை அறிவேன், அது கையகப்பட்டமை அறியாய் - நின் பரத்தமை வெளிப்பட்டமையை நீ அறிந்திலை, நெருநை - நேற்று, மை உண் எழில் கண் மடந்தையொடு - மையுண்ட அழகிய கண்களையுடைய பரத்தையுடன், வையை ஏர்தரு புதுப்புனல் - வையையின் அழகு பொருந்திய புதிய புனலில், உரிதினில் நுகர்ந்து - உரிமையுடன் இன்பம் நுகர்ந்திட, பரத்தை ஆயம் கரப்பவும் - அதனைப் பரத்தையர் கூட்டம் ஊரார் அறியாமல் மறைக்கவும், ஒல்லாது கவ்வை ஆகின்று பெரிது - மறைக்க முடியாமல் மிகவும் அலர் எழுகின்றது ; (அவ் வலர்தான்),

---

(பாடம்) 1. பொய்யா னறிவன்.

கரு—ரு. காண் தக தொல் புகழ் நிறைந்த - அழகு விளங்க பழமையான புகழ் மிக்க, பல் பூ கழனி - பலவகையான பூக்கள் நிறைந்த வயல்களையும், கரும்பு அமல் படப்பை - கரும்பு மிக்க தோட்டங்களையுமுடைய, பெரும் பெயர்க் கள்ளூர் - மிக்க சிறப்பு வாய்ந்த கள்ளூர் என்னும் ஊரின்கண்,

கசா—உக. திரு நுதல் குறுமகள் அணி நலம் வவ்விய - அழகிய நெற்றியினையுடைய இளையாள் ஒருத்தியின் அழகிய நலத்தினைக் கவர்ந்துண்ட, அறன் இலாளன் அறியேன் என்ற திறன் இல் வெம் சூள் - அறநெறி நில்லா ஒருவன் பின்பு தான் அவளை அறியேன் என்று கூறிய நீதியில்லாத கொடிய சூளினை, அறிகரி கடாஅய் - அவர்தம் கூட்டம் உணர்ந்த சான்றுவாரை வினவி உணர்ந்து, (அவனை), முறிஆர் பெருங்கிளை செறியப் பற்றி - (அவையத்தார்) தளிர்கள் பொருந்திய பெரிய மரத்தின் கிளையில் இறுகப்பிணித்து, நீறு தலைப் பெய்த ஞான்றை - நீற்றினை அவன் தலையிற் பெய்த காலத்தே, வீறுசால் அவையத்து ஆர்ப்பினும் பெரிது - சிறப்பு மிக்க அவையின்கண் எழுந்த ஆரவாரத்தினும் பெரிதாயிற்று.

(முடிபு) ஊர ! பொய்யால்; அறிவன் நின் மாயம்; அதுவே கையகப் பட்டமை அறியாய்; நெருநை மடந்தையொடு வையைப் புனல் உரிதினில் நுகர்ந்து, பரத்தை ஆயம் கரப்பவும் ஒல்லாது கவ்வையாகின்று; அது கள்ளூர் அறனிலாளனை, வெஞ்சூள் அறிகரி கடாஅய், கிளைபற்றி, நீறுதலைப் பெய்த ஞான்றை அவையத்து ஆர்ப்பினும் பெரிது.

(வி - ரை.) நொடி விடுதல் - வெடித்தல். நொடிவிடு கல்லிற் போகி என்பதற்குச் சிறுர்கள் நீரிலே தத்திச் செல்லுமாறு விடுகின்ற வட்டக்கல் போலச் சென்று என்றலுமாம். நுங்கிற்கள் - பனங்கள். உகுவார் - கள் சிதறுண்டு ஒழுகுவது. [1]'மேற்றுறைக் கொளீஇய கழாலிற் கீழ்த்துறை, உகுவார் அருந்தப் பகுவா யாமை' எனப் பின் வருவதுங் காண்க. நிறைய அருந்தும் எனக் கூட்டுக. அருந்தும் என்னும் பெயரெச்சம் காரணப் பொருட்டு. கையகப் பட்டமை என்றது தெளிய அறியப்பட்டமையை உணர்த்திற்று. குறுமகள் அணிநலம் வவ்விய அறனிலாளன் அறியேன் என்ற திறனில் வெஞ்சூள் என்றமையால் கவினையாளன் ஒருவன் ஓர் இளமகளின் நலத்தை நுகர்ந்து பின் அவளைக் கைவிடுத்து, அவளது முறையீட்டினைக் கேட்டு அவனை உசாவிய சான்றோர் முன், யான் அவளை அறிந்திலேன் எனப் பொய்ச் சூள் கூறினன் என்றவாறாயிற்று. வெஞ் சூள் அறிகரி கடாஅய்ச் செறியப் பற்றி நீறு தலைப் பெய்த என்றமையால், சான்றோர்கள் கரியாவார் கூற்றினாலே உண்மை தெளிந்து அவனை அவ்வாறு ஒறுத்தனர் என்பதாயிற்று. மூன்று கவராய கிளைகளின் நடுவே வைத்துப் பிணித்தலும் நீறுதலைப் பெய்தலும் அஞ்ஞான்று குற்றத்திற்கு விதிக்கும் தண்டங்களாம் என்க.

(உ - றை.) வள்ளை நீடிலைப் பொதும்பில் துயில் முனைஇய யாமை, கள்ளின் உகுவார் அருந்து மகிழ்பியங்கு நடையொடு பழனம் உழக்கி

1. அகம். நடுசா.

அயல ஆம்பல் மெல்லடை ஒடுங்கும் ஊர என்றது, நின் மனையிடத்துத் துயிறலை வெறுத்துச் சென்று பரத்தையர் சேரியில் அவர் இன்பம் நுகர்ந்த பெருமிதத்தோடு, இற்பரத்தைபாற் சென்று தங்குவை என்ற வாறும்.

---

## 257. பாலை

[உடன் போகாநின்ற தலைமகட்குத் தலைமகன் சொல்லியது.]

வேனிற் பாதிரிக் கூனி மாமலர்
நறைவாய் வாடல் நாறும் நாட்சுரம்
அரியார் சிலம்பிற் சீறடி சிவப்ப
எம்மொடொ ராறு படஇயர் யாழநின்
ரு பொம்ம லோதி பொதுள வாரி
அரும்பற மலர்ந்த வாய்பூ மராஅத்துச்
சுரும்புசூ ழலரி தைஇ வேய்ந்தநின்
தேம்பாய் கூந்தற் குறும்பல மொசிக்கும்
வண்டுகடிந் தோம்பல் தேற்றாய் அணிகொள
க0 நுண்கோ லெல்வளை தெளிர்க்கும் முன்கை
மெல்விறைப் பணைத்தோள் விளங்க வீசி
வல்லுவை மன்னால் நடையே கள்வர்
பகைமிகு கவலைச் சென்னெறி காண்மார்
மிசைமரஞ் சேர்த்திய கவைமுறி யாஅத்து
கரு நாரரை மருங்கின் நீர்வரப் பொளித்துக்
களிறுசுவைத் திட்ட கோதுடைத் ததரல்
கல்லா உமணர்க்குத் தீமூட் டாகுந்
துன்புறு தகுந ஆங்கண் புன்கோட்டு
அரிலிவர் புற்றத் தல்கிரை நசைஇ
உ0 வெள்ளரா மிளிர வாங்கும்
பிள்ளை யெண்கின் மலைவயி னானே.

—உறையூர் மருத்துவன் தாமோதரனார்.

(சொ - ள்.) கஉ—உக. குறுமகள், கள்வர் பகை மிகு கவலை செல் நெறி காண்மார் – ஆறலை கள்வர்களுடைய பகை மிக்க கவர்த்த நெறிகளில் வம்பலர் தாம் செல்லுதற்குரிய நெறியிது வெனக் காணும் பொருட்டு, மிசை மரம் சேர்த்திய கவை முறி யாஅத்து - மேலிடத்தே ஏணி சார்த்தப்பெற்ற கவர்த்த தளிர்களை யுடைய யா மரத்தின், நார் அரை மருங்கின் நீர் வர பொளித்து - நாரினையுடைய அடிமரத்தில் நீர் வரும்படி உரித்து, களிறு சுவைத் திட்ட கோது உடை ததரல் - களிற்றியானை சுவைத்துப் போகட்ட சக்கையாகிய சுள்ளிகள், கல்லா உமணர்க்குத் தீமூட்டு ஆகும் - கல்லாத உப்பு வாணிகர்க்குத் தீமூட்டும் துரும்பு ஆகும், துன்பு உறு தகுந ஆங்கண் - துன்பம் உறத் தகுவன ஆகிய அவ்விடங்களில், புன்

கோட்டு அரில் இவர் புற்றத்து - புல்லிய புடைகளையுடைய சிறு தூறுகள் படர்ந்த புற்றின்கண், அல்கு இரை நசைஇ - இராப்பொழு தில் உண்ணும் இரையினை விரும்பி, வெள் அரா மிளிர வாங்கும் - வெள்ளிய பாம்புகள் பிறழும்படி கையால் வவ்வும், பிள்ளை எண்கின் மலையின் ஆன - குட்டிக் கரடிகளையுடைய மலையினிடத்தே,

க—கஉ. பாதிரி நறைவாய் கூனி மாமலர் வாடல் நாறும் - பாதிரி யின் தேன் பொருந்திய வளைவையுடைய சிறந்த பூக்களின் வாடல் நாறுகின்ற, வேனில் நாள் - வேனிற் காலத்தின் பகற் பொழுதில், சுரம் - சுரத்தின் கண்ணே, அரி ஆர் சிலம்பின் சிறு அடி சிவப்ப - பரற்கல் பொருந்திய சிலம்பினை அணிந்த நின் சிறிய அடிகள் சிவக்க, எம்மொடு ஓர் ஆறு படஇயர் - எம்முடன் ஒரு நெறியில் பொருந்தி வரற்கு, பொம்மல் ஓதி பொதுள வாரி - பொலிவுற்ற கூந்தலை நெருங்க வாரி, அரும்பு அற மலர்ந்த ஆய் பூ மராஅத்துச் சுரும்பு சூழ் அலரி - அரும்பு இல்லையாக மலர்ந்த அழகிய பூக்களை யுடைய வெண்கடம்பின் வண்டுகள் சூழ்ந்த மலர்களை, தைஇ வேய்ந்த - தொடுத்துச் சூடிய, நின் தேம் பாய் கூந்தல் குறும்பல மொசிக்கும் வண்டு - நினது தேன் பொருந்திய கூந்தலில் குறியன வாய்ப் பலவாக மொய்க்கும் வண்டுகளை, கடிந்து ஓம்பல் தேற்றாய் - கடிந்து பாதுகாத்தலையும் அறியாயாய், அணிகொள - அழகு பொருந்த, நுண்கோல் எல் வளை தெளிர்க்கும் முன்கை - நுண்ணிய திரண்ட ஒளிபொருந்திய வளை ஒலிக்கும் முன் கையையுடைய, மெல் இறை பணை தோள் விளங்க வீசி - மெல்லிய சந்தினையுடைய மூங் கில் போலும் தோள்களை விளக்கமுற வீசி, நடை வல்லுவை மன் - பெரிதும் நடத்தல் வன்மையுடையை ஆகின்றாய்.

(முடிபு) குறுமகள்! வேனில் நாட்சுரம் சிறடி சிவப்ப எம்மொடு ஓராறு படஇயர், ஓதி பொதுள வாரி அலரி தைஇ வேய்ந்த நின் கூந்தல் மொசிக்கும் வண்டு கடிந்து ஓம்பல் தேற்றாய், பணைத்தோள் விளங்க வீசி நடைவல்லுவை மன்.

(வி - ரை.) கொடுமை மிக்க மலையின்கண்ணதாகிய சுரத் திலே வெம்மை மிக்க வேனில் நாளில் எம்முடன் ஒருபெற்றியே செல்லுதலை விரும்பிச் சிறடி சிவப்ப வண்டு கடிந்தோம்புதல் தேற் றாய் பணைத்தோள் விளங்க வீசி நடத்தல் வன்மையை யுடையை யாயினாய் குறுமகளே! நின் அன்பிருந்தவாறு என்னே! என்று தலை வன் தலைவியின் நடையை வியந்து பாராட்டினான் என்க. கூந்தலை வாரி மலர்களைத் தொடுத்துச் சூடினாள் என்பது, தலைவனுடன் சேறற்கண் தலைவிக்குள்ள ஆர்வ மிகுதியைப் புலப்படுத்தியபடி யாம். ஓம்பல் - தன்னைக் காத்தலும் வண்டு மீட்டும் வாராமற் காத் தலுமாம். மிசை மரம் - மரத்தின் மேற்பகுதி. கோடு - புற்றின் புடைப்பு.

(மே - ள்.) [1]'கொண்டு தலைக் கழியினும்' என்னுஞ் சூத்திரத்து, இச் செய்யுள் கொண்டுதலைக் கழிதற்கண் தலைவன், நடையை வியந்தது என்றார் நச்.

1. தொல். அகத். சுடு.

## 258. குறிஞ்சி

[[1]அல்ல குறிப் பட்டுப் பதிப்பெயர்ந்த தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.]

நன்னன் உதியன் அருங்கடிப் பாழித்
தொன்முதிர் வேளி ரோம்பினர் வைத்த
பொன்னினு மருமைநற் கறிந்து மன்னோள்
துன்னல மாதோ எனினுமஃ தொல்லாய்
ரு தண்மழை தவழுந் தாழ்நீர் நனந்தலைக்
கடுங்காற் றெடுக்கும் நெடும்பெருங் குன்றத்து
மாய இருளளை மாய்கற் போல
மாய்கதில் [2]வாழிய நெஞ்சே நாளும்
மெல்லியற் குறுமகள் நல்லகம் நசைஇ
கo அரவிரை தேரும் அஞ்சுவரு சிறுநெறி
இரவின் எய்தியும் பெறாஅய் அருள்வரப்
புல்லென் கண்ணை புலம்புகொண் டுலகத்து
உள்ளோர்க் கெல்லாம் பெருநகை யாகக்
காமம் கைம்மிக வுறுதர
கரு ஆனா அரும்படர் தலைத்தந் தோயே.

—பரணர்.

(சொ - ள்.) அ. நெஞ்சே -, வாழிய -,

க—ச. நன்னன் உதியன் அரு கடிப் பாழி - நன்னன் உதியன் என்பானது அரிய காவலையுடைய பாழிச் சிலம்பில், தொல் முதிர் வேளிர் ஓம்பினர் வைத்த - பழைமை மிக்க வேளிர்கள் பாதுகாவல் செய்துவைத்த, பொன்னினும் அருமை நற்கு அறிந்தும் - பொன்னைக் காட்டினும் எய்துதற்கு அரியளாதலை நன்கு அறிந்தும், அன்னோள் துன்னலம் எனினும் - அவளை யாம் நெருங்குவேம் அல்லேம் என யான் கூறினும், அஃது ஒல்லாய் - அங்ஙனம் என் கூற்றிற் பொருந்தாயாய்,

அ—கரு. நாளும் - நாடோறும், மெல் இயல் குறுமகள் நல் அகம் நசைஇ - மென்மைத் தன்மை வாய்ந்த இளைய தலைவியை நின் நல்ல அகத்தில் விரும்பி, அரவு இரை தேரும் அஞ்சுவரு சிறுநெறி - பாம்புகள் இரைதேடித் திரியும் அச்சம் தோன்றும் ஒடுங்கிய நெறியில், இரவின் எய்தியும் பெறாஅய் - இராப்போதில் சென்றும் பெறுயாகி, அருள் வரப் புல் என் கண்ணை புலம்புகொண்டு - கண்டார்க்கு அருள் உண்டாக புல் என்ற கண்ணை யுடையையாய்த் தனிமை மேவி, உலகத்து உள்ளோர்க்கெல்லாம் பெரு நகை ஆக - உலகின்கண் ணுள்ள யாவர்க்கும் பெரிய இகழ்ச்சி தோன்ற, காமம் கைம்மிக உறுதர - காமம் அளவுகடந்து மிகலான், ஆனா அரும்படர் தலைத் தந்தோய் - அமையாத அரிய துன்பினை நம்பால் எய்துவித்தனை ;

(பாடம்) 1. அல்ல குறிப் பட்ட தலைமகன். 2. வாழி யென்னெஞ்சே.

ரு—அ. தண் மழை தவழும் தாழ் நீர் நனந்தலை - குளிர்ந்த மேகங்கள் தவழும் வீழும் அருவி நீரினையுடைய அகன்ற விடத்தினையுடைய, கடும் காற்று எடுக்கும் நெடு பெரு குன்றத்து - கடிய காற்றுச் சுழலும் நீண்ட பெரிய குன்றின்கண்ணே, மாய இருள் அளை மாய் கல்போல - மயக்கத்தினைத் தரும் இருளுடைய குகையில் ஒளியின்றி மறையும் மணிகள் போல, மாய்க தில் - நீ ஒளியிழந் தொழிவாயாக.

(முடிபு) நெஞ்சே! வாழிய! பொன்னினும் அருமை நற்கறிந்தும், அன்னோள் துன்னலம் எனினும், அஃது ஒல்லாய், குறுமகள் நல்லகம் நசைஇ, அஞ்சுவரு சிறுநெறி இரவின் எய்தியும் பெறுஅய், புலம்பு கொண்டு, உலகத்துள்ளோர்க்கெல்லாம் பெருநகை யாக, காமம் கைம்மிக உறுதர ஆனு அரும் படர் தலைத் தந்தோய்; நெடும் பெருங் குன்றத்து இருள் அளை மாய் கற்போல மாய்க தில்.

(வி - ரை.) நன்னன் உதியன் என்பதனால், நன்னனுக்குச் சேர மன்னர் சார்பினால் உதியன் என்பதோர் பெயர் எய்திற்றுப் போலும். அருங்கடிப் பாழி - அரிய அரண்வலியுடைய பாழிச் சிலம்பு; அச் சிலம்பிலுள்ள நகருமாம். பாழியில் வேளிர் ஓம்பினர் வைத்த பொன்னினும் அருமை நற்கறிந்தும் என்றது, தலைவியைத் தாயர் முதலியோர், பிறர் அணுகாவாறு அருங்கடிப் படுத்துள்ளார் என்பதனை அறிந்தும் என்றபடி. குறுமகள் நல்லகம் நசைஇ என்பதற்குத் தலைவியது நல்ல மனையின்கண் அவளைக் கூட விரும்பி என்றுரைத்தலுமாம். தலைவியை இரவுக்குறியில் எய்த விரும்பி ஏதமிக்க நெறியிடை இராப்போதில் பலகாலுஞ் சென்று அவளைக் கூடப்பெறாது மீண்டு வருந்துதல் கண்டார்க்கு இரக்கத்தையும், அவளைக் கூடப்பெறாமையால் காமம் கைம்மிக்கு எழுந்து வருத்துதல் உலகத்தோர்க்கெல்லாம் பெரிய இகழ்ச்சியையும் தருவனவாயின என்று தலைவன் நெஞ்சிற்குக் கூறி, நீ இன்ன தீமையையுடையை ஆகலின் இருள் அளையில் ஒளி மாழ்கிக் கிடக்கும் மணிபோல மறைந்தொழிக என்றான் என்க. இதனால் தலைவன் இரவுக்குறியிற் சென்று அல்லகுறிப்பட்டு மீண்டமை பெற்றாம்.

(மே - ள்.) [1]'மெய்தொட்டுப் பயிறல்' என்னுஞ் சூத்திரத்து, இப் பாட்டு நெஞ்சினை இரவு விலக்கியது என்பர். நச்.

## 259. பாலை

[உடன் போக்கு நேர்ந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.]

வேலும் விளங்கின வினைஞரு மியன்றனர்
தாருந் தையின தழையுந் தொடுத்தன,
நிலநீ ரற்ற வெம்மை நீங்கப்
பெயனீர் தலைஇ உலவையிலை நீத்துக்
ரு குறுமுறி யீன்றன மரனே நறுமலர்

1. தொல் - கள. கக.

வேய்ந்தன போலத் தோன்றிப் பலவுடன்
தேம்படப் பொதுளின பொழிலே கானமும்
நனிநன் றாகிய பனிநீங்கு வழிநாட்
பாலெனப் பரந்தரு நிலவின் மாலைப்
க0 போதுவந் தன்று தூதே நீயும்
கலங்கா மனத்தை யாகி யென்சொல்
நயந்தனை கொண்மோ நெஞ்சமர் தகுவி
தெற்றி யுலறினும் வயலை வாடினும்
நொச்சி மென்சினை வணர்குரல் சாயினும்
கரு நின்னினும் மடவள் நனிநின் னயந்த
அன்னை யல்லல் தாங்கிநின் னையர்
புலிமருள் செம்மல் நோக்கி
வலியாய் இன்னுந் தோய்கநின் முலையே.

—கயமனார்.

(சொ - ள்.) கஉ. நெஞ்சு அமர் தகுவி - என் உள்ளம் விரும்பும் தகுதியை யுடையாய் !

க—உ. வேலும் விளங்கின - வேல்களும் நெய் பூசப்பெற்று விளக்கமுற்றன, வினைஞரும் இயன்றனர் - ஏவலாளரும் புறப்பட்டனர், தாரும் தையின - மாலைகளும் கட்டப்பெற்றன, தழையும் தொடுத்தன - தழையுடைகளும் தொடுக்கப்பட்டன ;

ந—க0. நிலம் நீர் அற்ற வெம்மை நீங்க - நிலமானது நீர் ஒழிந்ததாலாய வெப்பம் நீங்க, பெயல் நீர் தலைஇ - மழைநீர் பொருந்துதலின், உலவை இலை நீத்து குறுமுறி ஈன்றன மரன் - மரங்கள் கிளைகளிலுள்ள முதிர் இலைகளை உதிர்த்துக் குறிய தளிர்களை ஈன்றன; பொழில் - பொழிலின்கண், நறுமலர் - நறிய மலர்கள், வேய்ந்தன போலத் தோன்றி - புனையப்பட்டன போலத் தோன்றி, பல உடன் தேம்படப் பொதுளின - பலவும் ஒருங்கே தேன் பொருந்தச் செறிந்தன; கானமும் நனிநன்று ஆகிய - காடுகளும் மிகவும் நல்லன ஆயின ; (இங்ஙனமெல்லாம் சிறக்க,) பனி நீங்கு வழிநாள் - பனிக் காலம் கழிந்த பின்னுளாகிய இளவேனிற்கண், பால் எனப் பரந்தரு நிலவின் மாலைப்போது - பால் என்னப் பரவிய நிலாவினைக்கொண்ட மாலைப்பொழுதானது, தூது வந்தன்று - தூதாக வந்தது ;

கஙு—எ. தெற்றி உலறினும் - மேடையிலுள்ள பூஞ் செடிகள் காய்ந்தாலும், வயலை வாடினும் - வயலைக்கொடி வாடுதலுற்றாலும், நொச்சிமென்சினை வணர்குரல் சாயினும் - நொச்சியின் மெல்லிய கிளைகளிலுள்ள வளைந்த கதிர்கள் வாடிக் கவிழ்ந்தாலும் அவை கருதியும், நின்னினும் மடவள் - நின்னைக் காட்டிலும் மடப்பத்தை யுடையாளாகி, நனி நின் நயந்த அன்னை அல்லல் தாங்கி - நின்னை மிக விரும்பிய அன்னை எய்தும் துன்பத்தை உளத்திற்கொண்டும், நின் ஐயர் புலிமருள் செம்மல் நோக்கி - நின் தமையன்மாரது புலியை யொத்த அச்சம் தரும் தலைமையை நோக்கியும்,

கo—உ. நீயும் கலங்கா மனத்தையாகி - நீதான் கலங்காத மனத்தினையுடையையாகி, என் சொல் நயந்தனை கொண்மோ - என் சொல்லை விரும்பி ஏற்றுக்கொள்வாயாக;

கஅ. வலியாய் - உடன் போக்கினைத் துணிவாயாக; இன்னும் தோய்க நின் முலையே - இன்னும் நின் முலை என் மார்பிலே பொருந்த முயல்வாயாக.

(முடிபு) நெஞ்சமர் தகுவி! வேலும் விளங்கின, வினைஞரும் இயன்றனர், தாரும் தையின, தழையுந் தொடுத்தன ; மரம் குறுமுறி ஈன்றன ; பொழிலில் நறுமலர் பொதுளின ; கானமும் நனி நன்குகிய ; மாலைப் போது தூது வந்தன்று ; நீயும் உலறினும் வாடினும் சாயினும் அவை கருதியும், அன்னை அல்லல் தாங்கியும், நின்னையர் செல்லல் நோக்கியும் கலங்கா மனத்தை யாகி என் சொல் நயந்தனை கொண்மோ ; வலியாய் ; இன்னும் நின்முலை தோய்க.

(வி - ரை.) வேலும் விளங்கின வினைஞரும் இயன்றனர் என்பது, தலைவன் புறப்படுவதற்கும், தாரும் தையின தழையும் தொடுத்தன என்பது, தலைவி புறப்படுவதற்கும் ஏற்ற கருவிகள் அமைந்தமை கூறியபடியாம். மரன் குறுமுறி ஈன்றன, பொழிலில் நறுமலர் பொதுளின, கானமும் நனிநன்குகிய என்பன செல்லும் நெறிகள் ஏதம் விளைக்காது இன்பம் விளைத்தற்குரியவாதல் கூறியபடி. பனி நீங்கு வழிநாள் பாலெனப் பரத்தரு நிலவின் மாலைப்போது என்பது செல்லுதற்குரிய பொழுதும் இன்பம் பயப்பதாதல் தெரிவித்தபடி. போது தூது வந்தன்று என்பது இக்காலத்தே நீவிர் ஒருங்கு வருவீராயின் பேரின்பம் துய்ப்பீர் என்று அழைப்பது போன்றதாயிற்று என்றவாறு. இங்ஙனம் யாவும் இன்பம் பயப்பனவாக அமைந்திருத்தலின், தெற்றி உலறுதல் முதலியவற்றையும் அன்னை அல்லலையும் நின்னையர் செம்மலையும் நோக்கி உள்ளம் கலங்கி உடன்போக்கால் எய்தும் பேரின்பத்தை இழத்தல் தகவன்று என்பாள் நீயும் கலங்கா மனத்தையாகி என் சொல் நயந்தனை கொண்மோ எனக் கூறி, உடன்போக்கிற்கு ஒருப்படுத்துவாள் ஆயினாள் என்க. இளையரும் என்னும் பாடத்திற்கும் ஏவலாளர் என்பதே பொருள். வலிமா என்பது பாடமாயின், மா அசை. அலமரல் என்னும் பாடத்திற்கு, நோக்கி மனங்கலங்காதே என்று உரைக்க. இன்னும் தோய்க நின் முலை என்றது தோழி தலைவியை முயங்கியபடி கூறிற்று.

(மே - ள்.) [1]'தலைவரும் விழும நிலையெடுத் துரைப்பினும்' என்னுஞ் சூத்திரத்து, இவ் வகப்பாட்டு போக்குதற்கண் முயங்கிக் கூறியது என்றனார் நச்.

---

## 260. நெய்தல்

[இரவுக் குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தோழியாற் சொல்லெடுக்கப்பட்டுத் தலைமகள் சொல்லியது.]

மண்டில மழுக மலைநிறங் கிளர
வண்டினம் [2]மலர்பாய்ந் தூதமிமிசைக்

1. தொல் அகத். கக. (பாடம்) 2. மலர்பரந்தூத பிசைய.

கண்டற் கானற் குருகினம் ஒலிப்பக்
கரையா டலவன் அளைவயிற் செறியத்
ரு திரைபா டவியத் திமிலெரு ழில் மறப்பச்
செக்கர் தோன்றத் துணைபுண ரன்றில்
எக்கர்ப் பெண்ணை யகமடல் சேரக்
கழிமலர் கமழ்முகங் கரப்பப் பொழின்மனைப்
புன்னை நறுவீ பொன்னிறங் கொளாஅ
க0 எல்லை பைப்பயக் கழிப்பி யெல்லுற
[1]யாங்கா குவள்கொல் தானே நீங்காது
முதுமரத் துறையும் முரவுவாய் முதுபுள்
கதுமெனக் குழறுங் கழுதுவழங் கரைநாள்
நெஞ்சுநெகிழ் பருவரல் செய்த
கரு அன்பி லாளன் அறிவுநயந் தேனே.

—மோசிக் கரையனார்.

(சொ - ள்.) க—கக. மலைநிறம் கிளர-மலைகள் செக்கர் வானால் ஒளி பெறவும், வண்டு இனம் மலர் பாய்ந்து ஊத - வண்டின் கூட்டம் மலர்களிற் பாய்ந்து ஊதவும், மீ மிசை கண்டல் கானல் குருகு இனம் ஒலிப்ப - தாழைகளையுடைய சோலையின் மேலே யிருந்து நாரையினங்கள் ஒலிக்கவும், கரை ஆடு அலவன் அளைவயிற் செறிய - கடற்கரையில் விளையாடிய நண்டு வளையகத்தே செல்லவும், திரை பாடு அவிய - அலைகள் ஒலித்தல் இல்லையாகவும், திமில் தொழில் மறப்ப - மீன் படகுகள் வேட்டமாடலை நீங்கவும், செக்கர் தோன்ற - செவ்வானம் தோன்றுநிற்க, துணை புணர் அன்றில் - தன் துணையைப் பிரியாது சேர்ந்திருக்கும் அன்றிற் பறவை, எக்கர் பெண்ணை அக மடல் சேர - மணல் மேட்டிலுள்ள பனைமரத்தின் உள் மடலில் சேர்ந்து தங்கவும், கழிமலர் கமழ் முகம் கரப்ப - கழியிடத்து மலர்கள் மணக்கும் இதழ்கள் குவியப்பெறவும், பொழில் மனை புன்னை நறுவீ - பொழில் சூழ்ந்த மனைக்கண் உள்ள புன்னையின் நறிய மலர், பொன் நிறம் கொளாஅ - பொன்னின் நிறத்தினைக் கொண்டு விரிய வும், எல்லை பை பய கழிப்பி - பகற் பொழுதை மெல்ல மெல்லப் போக்கி, மண்டிலம் மழுக - ஞாயிற்று மண்டிலம் வெம்மை குறைய, எல் உற - இரவு வந்தக்கால், யாங்கு ஆகுவள் கொல்தான் - இவள் எந்நிலையினை அடைவாளோ (என்று தோழி உரைப்ப,)

கக—ரு. நீங்காது முதுமரத்து உறையும் முரவுவாய் முதுபுள் - முதிய மரத்தின்கண் எப்பொழுதும் நீங்காது தங்கும் முறிந்த வாயினையுடைய பேராந்தை, கதுமெனக் குழறும் - விரைந்து குழறி யொலிப்பதும், கழுது வழங்கு அரை நாள் - பேய் இயங்குவதுமாகிய பாதி யிரவில், நெஞ்சு நெகிழ் பருவரல் செய்த - மனம் உருகும் துன்பினைச் செய்த, அன்பு இலாளன் அறிவு நயந்தேன் - அன்பில்லாதவனது அறிவுடை மொழியை மெய்ம்மை என விரும்பினேன் என்று தலைவி கூறினாள் என்க.

(பாடம்) 1, யாங்கா குவல்கொல் யானே.

(முடிபு) மலைநிறங் கிளர, வண்டினம் மலர் பாய்ந்து ஊத, குருகினம் ஒலிப்ப, அலவன் அளைவயிற் செறிய, திரை பாடு அவிய, திமில் தொழில் மறப்ப, செக்கர் தோன்ற, அன்றில் பெண்ணை அகமடல் சேர, மலர் முகங் கரப்ப, புன்னை நறு வீ பொன்னிறம் கொள்ள, எல்லை பைப்பயக் கழிப்பி மண்டிலம் மழுக, எல்லுற, நான் யாங்காகுவள்கொல் (என்று தோழி உரைப்ப,) கழுது வழங்கு அரைநாள் பருவரல் செய்த அன்பிலாளன் அறிவு நயந்தேன் (எனத் தலைவி கூறினள்.)

(வி - ரை.) மலைநிறங் கிளர்தல் முதல் புன்னை வீ பொன்னிறங் கொள்ளல் ஈருக வுள்ளவை எற்பாட்டின் நிகழ்ச்சிகளாம். கொளாஅ - கொள்ள எனத் திரிக்க. மண்டிலம் எல்லை கழிப்பி மழுக எனக் கூட்டுக. மண்டிலம் மழுக என்பதனைக் கொண்டுகூட்டாது கிடந்தாங்கு நிறீஇ, எல்லானது எல்லை கழிப்பி உற என்று உரைத்தலுமாம். தலைவி எய்தும் ஆற்றுமைக்கு இரங்கி, யாங்காகுவள் கொல் தானே எனத் தோழி கூற, அவள் தான் கொண்ட கருத்தினைக் கூறி முடிக்குமுன், அன்பிலாளன் அறிவு நயந்தேன் என்று தலைமகள் கூறினள் என்க. எனவே, எனது அறியாமையால் யான் எய்தும் துன்பத்திற்கு நீ வருந்துவதனுற் பயன் என்னை என்றுளாம்.

இச்செய்யுளில் திரைபாடவிய என்னும் ஐந்தாவது அடி நான்காவதாகவும், கரையாடலவன் என்னும் நான்காவது அடி ஐந்தாவதாகவும் பழைய பதிப்புக்களில் காணப்படினும், [1]'அடிதொறும் தலையெழுத் தொப்பது மோனை' என்னுஞ் சூத்திர உரைக்கண் பேராசிரியரும், நச்சினார்க்கினியரும் 'கண்டற்கானல்' 'கரையாடலவன்' என்னும் அடிகளை அடிமோனைத் தொடைக்கு உதாரணமாகக் காட்டியிருத்தலின் இங்ஙனம் பாடங் கொள்ளலே பொருத்தமாம். பொருளதிகாரத்தைப் பின்னர் அச்சிட்டவர்கள் இவ்வடிகள் அடி மோனைத் தொடைக்கு உதாரணமாதலைக் கருதாமலும் தாமோதரம் பிள்ளையவர்கள் பதிப்பை நோக்காமலும் அகநானூற்றின் பழைய பதிப்புக்களை நோக்கித் தவருகப் பதிப்பித்துள்ளனர் என்க.

(மே - ள்.) [2]'எழுத்து முதலா ஈண்டிய அடியில்' என்னுஞ் சூத்திரத்து, எழுத்து முதலா ஈண்டிய அடியில் குறித்த பொருளை முடிய நாட்டுதல் என்பதற்கு உதாரணம் காட்டுமிடத்தே, 'மண்டிலம் மழுக......குருகினம் ஒலிப்ப' என்னும் பகுதியை எடுத்துக் காட்டி, இது, இரு சீரானும் முச்சீரானும் நாற்சீரானும் குறித்த பொருளை முடிய நாட்டினவாறு கண்டு கொள்க என்றார் பேரா.

[3]'அடிதொறும் தலையெழுத் தொப்பது மோனை' என்னுஞ் சூத்திரத்தில் 'கண்டற்...ஒலிப்ப, கரையா டலவன்...செறிய' என்பது அடிதொறும் முதலெழுத் தொன்றி மோனைத்தொடை வந்தவாறு என்றார் பேரா.

அச் சூத்திரத்தில், அதற்கு இவ்வடிகளைக் காட்டி, இது சீர்வகையடி தொடுத்தது என்றார் நச்.

---

1. தொல் - செய். கூ௨. 2. தொல் - செய். எ௮. 3. தொல் - செய். கூ௨.

## 261. பாலை

[புணர்ந்துடன் போயினகாலை இடைச்சுரத்துப் பட்டதனை மீண்டு வந்த காலத்துத் தோழிக்குத் தலைமகன் சொல்லியது.]

கானப் பாதிரிக் கருந்தகட் டொள்வீ
வேனில் அதிரலொடு விரைஇக் காண்வரச்
சில்லைங் கூந்தல் அழுத்தி மெல்லிணர்த்
தேம்பாய் மராஅம் அடைச்சி வான்கோல்
௫ இலங்குவளை தெளிர்ப்ப வீசிச் சிலம்புநகச்
சின்மெல் லொதுக்கமொடு மென்மெல இயலிநின்
அணிமாண் சிறுபுறங் காண்கம் சிறுநனி
ஏகென ஏகல் நாணி ஒய்யென
மாகொல் நோக்கமொடு மடங்கொளச் சாஅய்
௧௦ நின்றுதலை யிறைஞ்சி யோளே அதுகண்டு
யாமுந் துறுநல் செல்லேம் ஆயிடை
அருஞ்சுரத் தல்கி யேமே இரும்புலி
களிறட்டுக் குழூஉம் ஓசையுங் களிபட்டு
வில்லோர் குறும்பிற் றதும்பும்
௧௫ வல்வாய்க் கடுந்துடிப் பாணியுங் கேட்டே.

—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

(சொ – ள்.) ௧௨ - ௫. (தோழி!) இரும்புலி களிறு அட்டு குழூஉம் ஓசையும் - பெரிய புலியானது களிற்றினைக் கொன்று முழங்கும் ஓசையினையும், வில்லோர் குறும்பில் களிபட்டு ததும்பும் - வில்லினையுடைய கானவரது சீறூரில் (அவர் தாம் கள்ளுண்டு) களிப்புறலால் ஒலிக்கும், வல்வாய் கடு துடி பாணியும் கேட்டு - வலிய முகத்தினையுடைய கடிய துடியின் ஒலியினையும் யாம் கேட்டமையின் (தலைவி அஞ்சுவாளென உட்கொண்டு),

௧—அ. வேனில் கானப் பாதிரி கரு தகட்டு ஒள் வீ - இவ்வேனிலிற் பூத்துள காட்டிலுள்ள பாதிரியின் கரிய புறவிதழையுடைய ஒளி பொருந்திய மலர்களை, அதிரலொடு விரைஇ - புனலிமலரொடு கலந்து, காண்வர - அழகு பொருந்த, சில் ஐங் கூந்தல் அழுத்தி - சிலவாய ஐவகைப்படும் கூந்தலிற் செருகி, மெல் இணர் தேம் பாய் மராஅம் அடைச்சி - மெல்லிய கொத்துக்களிலுள்ள தேன் பாயும் மராமரத்தின் மலர்களைச் சூடி, வான் கோல் இலங்கு வளை தெளிர்ப்ப வீசி - பெரிய திரண்ட ஒளிபொருந்திய வளைகள் ஒலிக்கக் கையை வீசி, சிலம்பு நக சில்மெல் ஒதுக்கமொடு மெல் மெல இயலி - சிலம்பொலி விளங்க சிலவாய மெல்லிய நடைகொண்டு மெல்ல மெல்லச் சென்று, நின் அணிமான் சிறுபுறம் காண்கம் - நினது அழகு மாண்புற்ற முதுகினை யாம் காண்பேமாக, சிறுநனி ஏகென - சிறிது தூரம் முன் நடக்கவென யாம் கூற,

அ—௧௦. ஏகல் நாணி - அங்ஙனம் முன்னே செல்லுதலை அவள் நாணி, ஒய்யென - விரைவாக, மா கொள் நோக்கமொடு மடம்

கொளச் சாஅய் நின்று - மானை ஒத்த நோக்கத்தோடு மடப்பம் பொருந்த விலகி நின்று, தலை இறைஞ்சியோள் - தலைவணங்கினள்;

௧௦—௨. அது கண்டு -, யாம் முந்துறுதல் செல்லேம் - யாம் முன்னே செல்லுதலும் இல்லேமாய், ஆயிடை அரும் சுரத்து அல்கியேம் - அரிய சுரமாய அவ்விடத்தே யாங்கள் தங்குவேம் ஆயினேம்.

(முடிபு) புலி களி றட்டுக் குழுமும் ஓசையும் வில்லோர் குறும்பிற் றதும்பும் கடுந்துடிப் பாணியும் கேட்டு, தலைவி அஞ்சுவாளென உட்கொண்டு, 'நின் அணி மாண் சிறு புறம் காண்கம்; சிறு நனி ஏக' என, ஏகல் நாணி ஒய்யென மாகொள் நோக்கமொடு மடங்கொளச் சாஅய் நின்று தலை இறைஞ்சியோள்; அது கண்டு யாம் முந்துறுதல் செல்லேம், ஆயிடை அருஞ்சுரத்து அல்கியேம்.

(வி - ரை.) காண்கம் - யாம் காண்டற்கு. ஏகென - முன்னர் ஏகென்று உரைக்க என்க. காட்டிலே களிற்றைக் கொன்று புலி முழங்கும் ஓசையையும் கானவரது துடி ஓசையையும் கேட்ட தலைவன், தனக்குப் பின்னே வரும் தலைவி அவற்றால் அஞ்சுவள் என உட்கொண்டு, அதனைப் புலப்படுத்தாமல், வேறோராற்றால் தலைவியை முன் நடக்கும்படி கூறக் கருதி, நினது மென்னடையினையும் அணிமாண் சிறுபுறத்தினையும் யாம் கண்டு மகிழுமாறு சிறிது முற்படச் செல்க என்றான்; தலைவன் தன்னை இங்ஙனம் பாராட்டுவதைக் கேட்ட தலைவி நாண்சிறந்து தலை இறைஞ்சி நின்றாள்; அந்நிலையில் தலைவன் வேறு செய்தல் கூடாமையின் இடைச் சுரத்தே தலைவியுடன் சிறிது பொழுது தங்குவானாயினன்; இங்ஙனம் நிகழ்ந்ததனை மீண்டுவந்தகாலை தோழிக்குத் தலைவன் கூறினான் என்க. வளை தெளிர்ப்ப வீசிச் சிலம்பு நக சின்மெல் லொதுக்கமொடு மென்மெல இயலி என்றதனால் தலைவியது நடையின் அழகும், கூந்தல் அழுத்தி, மராஅம் அடைச்சி என்பதனாலும், அணி மாண் சிறு புறம் என்பதனாலும் தலைவியது பிறபக்கத்து அழகும் பெறும். காண்கம் சிறு நனி ஏக என்றமையால், காண்டற்கு ஏற்ற அணிமையில் முன்னர்ச் செல்லுக என்றானாயிற்று. மாகொள் நோக்கம் - மாவடுவையொத்த கண்ணின் பார்வை யென்றுமாம்.

(மே - ள்.) [1]'மரபுநிலை திரியா மாட்சிய வாகி' என்னுஞ் சூத்திரத்து, இச்செய்யுள் மீண்டு வந்தோன் தோழிக்கு உரைத்தது என்றார் நச்.

---

## 262. குறிஞ்சி

[இரவுக் குறிக்கண் தலைமகளைப் புணர்ந்து நீங்கும் தலைமகன் தன் னெஞ்சிற்குச் சொல்லியது.]

முனைபடு பசுங்காட் டரிற்பவர் மயக்கிப்
பகடுபல பூண்ட வுழவுறு செஞ்செய்
இடுமுறை நிரம்பி ஆகுவினைக் கலிந்துப்

1. தொல். அகத். ௪௫.

பாசிலை யமன்ற பயறு புக்கென
5 வாய்மொழித் தந்தையைக் கண்களைந் தருளா
தூர்முது கோசர் நவைத்த சிறுமையிற்
கலத்து முண்ணாள் வாலிது முடாஅள்
சினத்திற் கொண்ட படிவ மாறாள்
மறங்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்
10 செருவிய னன்மான் றிதியற் குரைத்தவர்
இன்னுயிர் செகுப்பக் கண்டுசின மாறிய
அன்னி மிஞிலி போல மெய்ம்மலிந்து
ஆனா வுவகைய மாயினெம் பூமலிந்
தருவி யார்க்கு மயந்திகழ் சிலம்பில்
15 நுண்பஃ றுவலை புதன்மிசை நனைக்கும்
வண்டுபடு நறவின் வண்மகிழ்ப் பேகன்
[1]கொண்டன் மாமலை நாறி
அந்தீங் கிளவி வந்த மாறே.

—பரணர்.

(சொ—ள்.) கங—அ. பூ மலிந்து அருவி ஆர்க்கும் அயம் திகழ் சிலம்பில் - பூக்களை நிறையக்கொண்டு அருவி ஒலித்து வீழும் சுனைகள் விளங்கும் பக்கமலையில் (எழும்), நுண் பல் துவலை - நுண்ணிய பலவாய துளிகள், மிசை புதல் நனைக்கும் - அம் மலைமீதுள்ள புதல்களை யெல்லாம் நனைக்கும், வண்டுபடு நறவின் - வண்டு பொருந்தும் மதுவினையும், வண் மகிழ்ப் பேகன் - வண்மையால் எய்தும் மகிழ்ச்சியையும் உடைய பேகன் என்பானது, கொண்டல் மாமலை நாறி - மேகம் தவழும் பெரிய மலை போலும் நாற்றம் உடையளாய், அம் தீம் கிளவி வந்தமாறே - அழகிய இனிய சொல்லையுடைய நம் தலைவி வந்து புணர்ந்தமையால்,

க—ச. முதை படு பசுங் காட்டு - பழைமை மேவிய பசிய காட்டிலே, அரில் பவர் மயக்கி - பின்னிய கொடிகளை உழக்கி, பகடு பல பூண்ட உழவு உறு செஞ் செய் - எருதுகள் பூண்ட பல ஏரால் உழவினைப் பொருந்திய சிவந்த புன்செய் நிலத்தில், இடு முறை நிரம்பி - இடப் பெறுவன முறையே நிரம்ப இடப்பெற்று, ஆரு வினைக் கவித்து - பொருந்திய வினையுடைமையால் தழைத்து, பசு இலை அமன்ற பயறு - பசிய இலைகள் நிறைந்த பயற்றில், ஆ புக்கென - பசு புகுந்து மேய்ந்ததாக (அதன் பொருட்டு),

ரு—சு. ஊர் முது கோசர் - பழமை வாய்ந்த ஊரிலுள்ள கோசராவார், வாய்மொழித் தந்தையை அருளாது கண் களைந்து - வாய்மை மிக்க தன் தந்தையை அருளாமல் கண்ணைப் பிடுங்கி, நவைத்த சிறுமையின் - துன்புறுத்திய கொடுமைபற்றி,

எ—அ. கலத்தும் உண்ணாள் வாலிதும் உடாஅள் - கலத்திலிட்டு உண்ணாமலும் தூயதாய உடையினை உடாமலும், சினத்தில்

(பாடம்) 1. கொண்டகன் மாமலை.

கொண்ட படிவம் மாறுள் - சினத்தினால் மேற்கொண்ட நோன்பிற் குரிய வடிவம் மாறுமலும் இருந்து,

கூ—கரு. மறம் கெழு தானை கொற்றக் குறும்பியன் - வீரம் பொருந்திய படையினைக் கொண்ட வெற்றி பொருந்திய குறும்பிய னாகிய, செரு இயல் நல்மான் திதியற்கு உரைத்து - போர்த்திறம் வாய்ந்த நல்ல குதிரையையுடைய திதியன் என்பானுக்குக் கூறி, அவர் இன் உயிர் செகுப்பக் கண்டு - அக் கோசரது இனிய உயிர் களைப் போக்கக் கண்டு, சினம் மாறிய அன்னி மிஞிலிபோல - சினம் ஒழியப் பெற்று மகிழ்ந்த அன்னி மிஞிலி என்பாளைப் போல, மெய் மலிந்து ஆனு உவகையேம் ஆயினேம் - உடல் பூரிக்கப்பெற்று அமை யாத மகிழ்ச்சியுடையேம் ஆயினம்.

(முடிபு) சிலம்பில் பேகன் மாமலை நாறி அந்திங்கிளவி வந்தமாறே, அன்னி மிஞிலி போல மெய்ம் மலிந்து ஆனு உவகையேம் ஆயினெம்.

பயறு ஆ புக்கெனத் தந்தையைக் கண் களைந்து அருளாது முதுகோசர் நவைத்த சிறுமையின், உண்ணுள், உடாஅள், படிவம் மாறுள், திதியற்கு உரைத்து, அவர் உயிர் செகுப்பக் கண்டு சினம் மாறிய அன்னி மிஞிலிபோல என்க.

(வி-ரை.) பசுங் காடு என்றமையால் மழை பெய்து புல் முத லாயின தழைத்த காடு என்றபடியாம். அரிற் பவர் மயக்கி என்றது கொடி முதலாயின மண்ணிற் புதைந்து மடியுமாறு செய்து என்ற படி. பல - பல ஏர். இடு முறை நிரம்புதலாவது - பொருந்திய எருக் களை நிரம்ப இடுதல். ஆகு வினை – களை கட்டல், நீர் பாய்ச்சலாகிய தொழில். பயறு - கூலப் பொருள்களுள் ஒன்று. வாய் மொழித் தந்தை என்றதனுல், தன் பசு புகுந்து மேய்ந்ததனை மறையாது உண் மையுரைத்தனன் என்பது பெற்றும். கண் களைந்து அருளாது என் றதனை அருளாது கண் களைந்து என்று மாறுக. பயற்றிலே ஆ புகுந்த சிறு பிழைக்காக உண்மையுரைத்த தந்தையை அருளின்றிக் கண் களைதலாகிய கொடுஞ் செயலைச் செய்தமையால், அன்னிமிஞிலி அதனைப் பொறுக்கலாற்ருது, அன்னேரைக் கொல்வித்தன்றிக் கலத்தினும் உண்ணேன் வாலிதும் உடேன் என வஞ்சினம் கூறித் தவக் கோலம் தாங்கி நின்று, திதியன் என்பானுக்கு உரைத்து, அவ னுல் அக் கோசர் உயிரைக் கொல்வித்துச் சினம் மாறினுள் என்க. சினம் மாறிய என்றது சினம் நீங்கி உவகை எய்திய என்றபடி. அந்திங் கிளவி - ஆகுபெயர். 'நிரம்பியாகு' என்பது 'நிரம்பிய வரகு' என்றிருக்கவேண்டும் என ஒரு சாரார் கூறியது பொருந்துவதன் றென்க.

---

## 263. பாலை

[மகட் போக்கிய தாய் சொல்லியது.]

நயங்குதிரைப் பெருங்கடல் உலகுதொழத் தோன்றி
வயங்குகதிர் விரிந்த உருகெழு மண்டிலம்
கயங்கண் வறப்பப் பாஅய் நன்னிலம்

பயங்கெடத் திருகிய பைதறு காலை
ரு வேறுபல் கவலைய வெருவரு வியன்காட்டு
ஆறுசெல் வம்பலர் வருதிறம் காண்மார்
வில்வல் ஆடவர்[1] மேலான் ஒற்றி
நீடுநிலை[2] யாஅத்துக் கோடுகொள் அருஞ்சுரம்
கொண்டனன் கழிந்த வன்கட் காளைக்கு
க0 அவடுணிவு அறிந்தனென் ஆயின் அன்றே
ஒளிறுவேற் கோதை ஓம்பிக் காக்கும்
வஞ்சி யன்னவென் வளநகர் விளங்க
இனிதினிற் புணர்க்குவென் மன்றோ துனியின்று
திருநுதற் பொலிந்தவென் பேதை
கரு வருமுலை முற்றத் தேமுறு துயிலே.

—கருவூர்க் கண்ணம்பாளனார்.

(சொ-ள்.) க—ச. தயங்கு திரைப் பெரு கடல் உலகு தொழத் தோன்றி - அசையும் அலைகளையுடைய பெரிய கடலில் உயர்ந்தோர் தன்னை வணங்கத் தோன்றி, வயங்கு கதிர் விரிந்த உரு கெழு மண்டிலம் - விளங்கும் கதிர்கள் விரியப்பெற்ற உட்குப் பொருந்திய ஞாயிற்று மண்டிலம், கயம் கண் வறப்பப் பாஅய் - குளங்கள் தம்மிடத்துள்ள நீர் வற்றிடப் பரந்து, நல் நிலம் பயம் கெடத் திருகிய பைது அறு காலை - நல்ல நிலங்களின் வளம் கெடுமாறு முறுகிய பசுமையற்ற வேனிற் காலத்தே,

ரு—அ. வேறு பல் கவலைய வெருவரு வியன் காட்டு - வேறுபட்ட பலவாய கவர்த்த நெறிகளையுடைய அச்சம் தரும் பெரிய காட்டகத்தே, ஆறு செல் வம்பலர் வருதிறம் காண்மார் - வழிச் செல்லும் புதியர் வரும் இயல்பினைக் காணும் பொருட்டு, வில்வல் ஆடவர் - வில் வன்மையுடைய ஆறலைப்போராய ஆடவர், மேல் ஆன் ஒற்றி - மேலிடத்தே மறைந்து, நீடு நிலை யாஅத்துக் கோடு கொள் அருஞ் சுரம் - நீண்ட நிலை வாய்ந்த யா மரத்தினது கோட்டினை இடமாகக் கொள்ளும் அரிய சுரத்தே,

கூ—க0. கொண்டனன் கழிந்த வன்கண் காளைக்கு - என் மகளை உடன் கொண்டு போன திண்ணியனாகிய காளையிடத்தே, அவள் துணிவு அறிந்தெனென் ஆயின் - அவள் கொண்டுள்ள அன்பின் உறுதியை யான் அறிந்தேன் ஆயின், அன்றோ - ஐயோ!

கக—ரு. ஒளிறு வேல் கோதை ஓம்பிக் காக்கும் வஞ்சி அன்ன - ஒளி வீசும் வேலையுடைய சேரன் பாதுகாத்து ஆளும் வஞ்சியைப்போன்ற, என் வளநகர் விளங்க - எனது வளம் பொருந்திய மனை சிறப்புற்று விளங்க, துனியின்று - வெறுப்பின்றி, திரு நுதல் பொலிந்த என் பேதை வரு முலை முற்றத்து - அழகிய நெற்றியாற் பொலிவுற்ற என் மகளது வளரும் முலைப் பரப்பில், ஏம் உறு துயில் - அவள் தலைவன் இன்புற்றுத் துயிலும் துயிலினை, இனிதினிற் புணர்க்குவென் -

(பாடம்) 1. மேலாள் ஒற்றி. 2. மராஅத்து.

(வதுவை நெறியால்) இனிமையுறக் கூட்டிவைத்திருப்பேன் அன்றே - அந்தோ! மன் - அது கழிந்ததே!

(முடிபு) உருகெழு மண்டிலம் திருகிய பைது அறு காலை, வெருவரு வியன் காட்டு அருஞ்சுரம் கொண்டனன் கழிந்த காலைக்கு அவள்துணிவு அறிந்தனென் ஆயின், அன்றே! என் வளநகர் விளங்க, துனியின்றி, என்பேதை வருமுலை முற்றத்து ஏமுறு துயில் இனிதினிற் புணர்க்குவென் மன்.

(வி - ரை.) கயம் கண் : கண் அசையுமாம்; [1]'மீன்க ணற்றதன் சுனையே' என்புழிப்போல. ஒற்றிக் கோடுகொள் என்பதற்குக் கோட்டினை இடமாகக் கொண்டு மறைந்து அறியும் என்பது கருத் தாகக் கொள்க. வன்கண் - கலங்காமை; [2]'வன்கண் குடி காத்தல்' என்புழி அப்பொருட்டாதல் காண்க. காலைக்கு - காலை திறத்தில்; வேற்றுமை மயக்கம். அன்றே - இரங்கற் பொருள் தரும் இடைச் சொல். ஓம்பிக் காக்கும் என்றது - குறிக்கொண்டு காக்கும் என்றலு மாம். குறிக் கொண்டு காத்தலாவது, [3]'வறிஞன் ஓம்புமோர் செய் யெனக் காத்தல்.'

---

## 264. முல்லை

[பருவங் கண்டு வன்புறை யெதிரழிந்து தலைமகள் தோழிக்குச் சொல்லியது; தோழி தலைமகட்குச் சொல்லியதுமாம்.]

மழையில் வானம் மீனணிந் தன்ன
குழையமன் முசுண்டை வாலிய மலர
வரிவெண் கோடல் வாங்குகுலை வான்பூப்
பெரிய சூடிய கவர்கோற் கோவலர்
ரு எல்லுப்பெய லுழந்த பல்லான் நிரையொடு
நீர்திகழ் கண்ணியர் ஊர்வயிற் பெயர்தர
நனிசேட் பட்ட மாரி தளிசிறந்
தேர்தரு கடுநீர் தெருவுதொ றொழுகப்
பேரிசை முழக்கமொடு சிறந்துநனி மயங்கிக்
கo கூதிர் நின் றன்றாற் பொழுதே காதலர்
நந்நிலை யறியா ராயினுந் தந்நிலை
அறிந்தனர் கொல்லோ தாமே யோங்குநடைக்
காய்சின யானை கங்குற் சூழ
அஞ்சுவர விறுத்த தானை
கரு வெஞ்சின வேந்தன் பாசறை யோரே.

—உம்பற்காட்டு இளங்கண்ணனார்.

(சொ - ள்.) க—கo. மழை இல் வானம் மீன் அணிந்தன்ன - மேகம் இல்லாத வானம் விண் மீன்களை அணிந்து விளங்கினாற்போல, குழை அமல் முசுண்டை வாலிய மலர - தழை நிறைந்த முசுண்டை யின் பூக்கள் வெள்ளியவாக மலரவும், வரி வெண்கோடல் வாங்கு குலை வான் பூ - வரிகளையுடைய வெண் காந்தளின் வளைந்த குலையி

1. புறம். கoக. 2. குறள். சுஙஉ. 3. கம்ப. பால. அரசியல் கஉ.

லுள்ள சிறந்த பூக்களை, பெரிய சூடிய கவர்கோல் கோவலர் - மிகுதி யாகச் சூடிக்கொண்ட கவர்த்த கோலினைக் கொண்ட ஆயர்கள், எல்லுப்பெயல் உழந்த பல் ஆன் நிரையொடு - பகற்பொழுதில் மழை யால் வருந்திய பல பசுத்திரளொடு, நீர்திகழ் கண்ணியர் ஊர்வயின் பெயர்தர - நீர் விளங்கும் மாலையராய் ஊரிடத்தே மீண்டு வரவும், நனி சேண்பட்ட மாரி - மிகவும் சேணிடைப் பரந்த மேகங்கள், பேர் இசை முழக்கமொடு சிறந்து நனி மயங்கி - பெரிய இடி முழக்கத் தோடு மேம்பட்டு மிகவும் ஒன்றோடொன்று கலந்து, தளி சிறந்து ஏர்தரு கடுநீர் தெருவு தொறு ஒழுக - துளிகள் மிக்குப் பெய்தலால் எழுச்சி பொருந்திய விரைந்த நீர் தெருக்கடோறும் செல்லவும், கூதிர் நின்றன்று பொழுது - கூதிர்ப் பொழுது நிலைபெற்றது;

௧௧—௫. ஓங்கு நடை காய் சின யானை கங்குல் சூழ - உயர்ந்த நடையினையும் காயும் சினத்தினையும் உடைய யானைகள் இராக் காலத்தே சூழ்ந்து நிற்க, அஞ்சு வர இறுத்த தானை - பகைவர்க்கு அச்சம் உண்டாகத் தங்கிய சேனையையுடைய, வெஞ்சின வேந்தன் பாசறையோர் காதலர் - கொடிய சினத்தினையுடைய அரசனது பாச றைக் கண்ணுள்ளாராய நம் தலைவர், நம் நிலை அறியார் ஆயினும் - நமது துன்ப நிலையினை அறியாராயினும், தம் நிலை அறிந்தனர்கொல் - தாம் உறும் நிலையினை யாதல் அறிந்துளாராவரோ.

(முடிபு) முசுண்டை வாலிய மலர, கோவலர் பல்லான் நிரையொடு ஊர்வயிற் பெயர்தர, மாரி தளி சிறந்து பெய்த கடுநீர் தெருவுதொறும் ஒழுகக் கூதிர்ப் பொழுது நின்றன்று; வேந்தன் பாசறையோர் ஆகிய காதலர் நம் நிலை அறியா ராயினும் தம் நிலை அறிந்தனர்கொல்லோ.

(வி - ரை.) முகில் மறைப் பில்லாத நீலநிற விசும்பில் மீன்கள் நன்கு விளங்கினாற்போல பசுமை மிக்க முசுண்டையில் அதன் வெள் ளிய பூக்கள் மலர்ந்து விளங்கின என்க. பெரிய சூடிய - பெரிய கண்ணிகளாகக் கட்டிச் சூடிய என்றுமாம். எல் - ஈண்டுப் பகல். பேரிசை முழக்கமொடு சிறந்து கார்ப்பருவத்துடன் மயங்கிக் கூதிர்ப் பொழுது நின்றன்று என்றுரைத்தலுமாம். தலைவர் வந்துவிடுவர் என்று வற்புறுத்திய தோழிக்கு, அவர் குறித்த கார்ப்பருவம் போய், கூதிர் வந்தும் அவர் இன்னும் வந்திலர்; இப் பருவத்தில் யாம் எய்தும் துன்பத்தினை அவர் அறியாராயினும் பின் தாம் எய்தும் நிலை யையும் ஓர்ந்திலர் போலும் என்று தலைவி எதிரழிந்து கூறினாள் என்க. தம் நிலை என்றது, நாம் இறந்துபட்டபின் அவர் எய்தும் துன்பம் என்க. இன்ன காலத்து வருவேன் என்று உரைத்த சொல் தவறலாகாது என்னும் இயல்பு என்றுமாம்.

(மே—ள்.) [1]'திணைமயக்குறுதலும்' என்னுஞ் சூத்திரத்து, இச்செய் யுள் தோழிக்குத் தலைவி கூறியது, இதன்கண் முல்லையுட் கூதிர் வந்தது என்றும், [2]'நிகழ்ந்தது கூறி நிலையலும் திணையே' என்னுஞ் சூத்திரத்து, இது, தலைவன் பாசறைப் புலம்பினமை கூறக் கேட்ட தலைவி, தன்னிலை யறியா ராயினும் எனக் கூறினாள் என்றும் கூறினார் நச்.

---

1. தொல். அகத். ௧௨. 2. தொல். அகத். ௪௪.

## 265. பாலை

[பிரிவிடை வேறுபட்ட தலைமகள் ஆற்றாமை மீதூரத் தோழிக்குச் சொல்லியது.]

புகையிற் பொங்கி வியல்விசும் புகந்து
பனியூர் அழற்கொடி கடுப்பத் தோன்றும்
இமயச் செவ்வரை மானுங் கொல்லோ
பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்
ரு சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கை
நீர்முதற் கரந்த நிதியங் கொல்லோ
எவன்கொல் வாழி தோழி வயங்கொளி
நிழற்பால் அறலின் நெறித்த கூந்தல்
குழற்குரற் பாவை இரங்க நத்துறந்து
க0 ஒண்டொடி நெகிழச் சாஅய்ச் செல்லலொடு
கண்பனி கலுழ்ந்தியாம் ஒழியப் பொறையடைந்து
இன்சிலை யெழிலேறு கெண்டிப் புரைய
நிணம்பொதி விழுத்தடி நெருப்பின் வைத்தெடுத்து
அணங்கரு மரபிற் பேஎய் போல
கரு விளரூன் தின்ற வேட்கை நீங்கத்
துகளற விளைந்த தோப்பி பருகிக்
குலாஅ வல்விற் கொடுநோக் காடவர்
[1]புலாஅற் கையர் பூசா வாயர்
ஒராஅ உருட்டுங் குடுமிக் குராலொடு
உ0 மராஅஞ் சீறூர் மருங்கிற் றூங்குஞ்
செந்நுதல் யானை வேங்கடந் தழீஇ
வெம்முனை யருஞ்சுரம் இறந்தோர்
நம்மினும் வலிதாத் தூக்கிய பொருளே.

—மாமூலனார்.

(சொ - ள்.) எ—கக. தோழி -, வாழி -, வயங்கு ஒளி நிழற்பால் அறலின் நெறித்த கூந்தல் - விளங்கும் ஒளி வாய்ந்த நிழற்கண்ணுள்ள அறல் போலக் குழன்ற கூந்தலினையும், குழல் குரல் - குழலோசை போன்ற இனிய குரலினையும் உடைய, பாவை இரங்க - பாவை போன்ற நீ இரங்க, ஒள் தொடி நெகிழ - நமது ஒள்ளிய வளை நெகிழ்ந்து வீழ, சாஅய் செல்லலொடு - மெலிந்து துன்பத்துடன், கண்பனி கலுழ்ந்து யாம் ஒழிய - கண்ணீர் சொரிந்து யாம் இவண் தங்கியிருக்க, நம் துறந்து - நம்மைக் கைவிட்டு,

கக—உஉ. குலாஅ வல்வில் கொடு நோக்கு ஆடவர் - வளைந்த வலிய வில்லையும் கொடிய பார்வையினையுமுடைய மறவர்கள், பொறை அடைந்து - குன்றினை அடைந்து, இன் சிலை எழில் ஏறு கெண்டி - இனிய முழக்கம் செய்யும் எழுச்சியுள்ள எருதினைக்

(பாடம்.) 1. புலராக் கையர்.

கொன்று, புரைய நிணம் பொதி விழு தடி நெருப்பின் வைத்து எடுத்து - உயர்ச்சியுடைய கொழுப்புப் பொதிந்த சிறந்த தசையினை நெருப்பில் வைத்துச் சுட்டு எடுத்து, அணங்கு அரும் மரபின் பேஎய் போல - கண்டாரை வருத்தும் அரிய திறலுடைய பேய்களைப் போல, விளர் ஊன் தின்ற வேட்கை நீங்க - வெளுத்த அவ் வூனைத் தின்றதாலாய நீர் வேட்கை நீங்க, துகள் அற விளைந்த தோப்பி பருகி - குற்றமற முதிர்ந்த தோப்பிக் கள்ளைக் குடித்து, புலாஅல் கையர் பூசாவாயர் - புலால் நீங்காத கையினராய்க் கழுவாத வாயின ராய், ஓராஅ உருட்டும் குடுமிக் குராலொடு - இடையறாது விட்டு விட்டு ஒலிக்கும் குடுமியினையுடைய கோட்டான் ஒலியொடுகூடி, மராஅம் சீறூர் மருங்கில் தூங்கும் - வெண்கடப்ப மரங்களையுடைய சிறிய ஊர்ப்பக்கத்தே கூத்தாடும், செம் நுதல் யானை வேங்கடம் தழீஇ - சிவந்த நெற்றியினையுடைய யானைகளையுடைய வேங்கட மலையைப் பொருந்தியுள்ள, வெம்முனை அரும் சுரம் இறந்தோர் - வெவ்விய முனை யிருப்புக்களை யுடைய அரிய சுரத்தினைத் தாண்டிச் சென்ற நம் தலைவர்,

உங. நம்மினும் வலிதா தூக்கிய பொருள் - நம்மைக்காட்டினும் உறுதியுடைத்தாக ஆராய்ந்து துணிந்த பொருள்,

க—எ. வியல் விசும்பு உகந்து - அகன்ற வானில் உயர்ந்து, புகையிற் பொங்கி - புகைபோலப் பொலிவுற்று, பனி ஊர் - பனி பரவிய, அழல் கொடி கடுப்பத் தோன்றும் - தீச்சுடரை ஒப்பத் தோன்றும், இமயச் செவ்வரை மானும்கொல் - இமயமாய செவ்விய மலையினை ஒக்குமோ? அன்றி, பல் புகழ் நிறைந்த வெல்போர் நந்தர் - பல் வகைப் புகழும் மிக்க போர் வெல்லும் நந்தர் என்பாரது, சீர் மிகு பாடலி - சிறப்பு மிக்க பாடலிபுரத்திலே, குழீஇ - திரண்டிருந்து (பின்பு), கங்கை நீர் முதல் கரந்த நிதியம்கொல் - கங்கையின் நீர் அடியில் மறைவுற்ற செல்வமோ, எவன்கொல் - அவ்விரண்டும் அன்றாயின் அவர் நம்மை விட்டுப் பிரிந்தது என்னைகொல்லோ.

(முடிபு) தோழி! வாழி! பாவை இரங்க, நத்துறந்து, கண்பனி கலுழ்ந்து யாம் ஒழிய வேங்கடம் தழீஇய சுரம் இறந்தோர் நம்மினும் வலிதாத் தூக்கிய பொருள் இமயச் செவ்வரை மானுங்கொல்லோ! நந்தர் பாடலிக் குழீஇப் பின்பு கங்கை நீர்முதற் கரந்த நிதியங்கொல்லோ! எவன்கொல்!

கொடு நோக்கு ஆடவர் பேஎய் போல ஊன் தின்ற வேட்கை நீங்கத் தோப்பி பருகி, புலாற்கையராய் பூசா வாயராய், குராலொடு சீறூர் மருங்கில் தூங்கும் வேங்கடம் என்க.

(வி - ரை.) உகந்து - உயர்ந்து; [1]'உகப்பே உயர்தல்' என்பது உரியியல். இமயம் பனிமலை யாகலானும் அது பொன்மலை எனவும் படுதலானும் பனியூர் அழற்கொடி கடுப்பத் தோன்றும் இமயச் செவ்வரை என்றாள். உகந்து தோன்றும் இமயச் செவ்வரை என்க. மானும் கொல்லோ என்றது அத்துணைப் பெரியதொன்றோ என்றபடி.

1. தொல். சொல். ந.0ரு.

நந்தர், பாடலியை ஆண்ட அரசருள் ஒரு பிரிவினர். நந்தரது பாடலி என்க. நந்தருள் ஒருவனால் ஈட்டப்பட்டுப் பாடலியில் திரண்டிருந்த பெரும்பொருள், பின்னர் மாற்றார் படையெடுப்பினால் அழியா வண்ணம் அன்னோர், கங்கையாற்றின் அடியில் சுருங்கை செய்து மறைத்து வைக்க, அப்பொருள் மறைந்து ஒழிந்தது என்னும் வரலாறு இங்கே குறிக்கப்பட்டது என்க. குழீஇக் கரந்த நிதியம் என்க. 'நந்தன் வெறுக்கை' (உருக) என முன் இவ்வாசிரியராற் சுட்டப் பெற்றதும் இதுவே. இமயச் செவ்வரை ஒப்பது ஒன்று இன்மையானும், நீர் முதற் கரந்த நிதியம் பெறுதற்கு அரிதாகலானும், நம் தலைவர் அவை நோக்கிப் பிரிந்தவர் ஆகார். அவையன்றி அவர் கொண்டுவரத் துணிந்த பொருள், நம்மினும் பார்க்கில் அவர்க்கு அறமும் இன்பமும் பயவாதன்றே, அவ்வாறாகவும் பிரிவுத் துன்பத்தால் நாம் வருந்த அவர் நம்மைப் பிரிந்து சென்றது என்னையோ எனத் தலைமகள் ஆற்றாமை மீதூரத் தோழிக்குச் சொல்லினாள் என்க. பாவை என்றது தோழியை. யாம் ஒழியச் சுரம் இறந்தோர் எனக் கூட்டுக. அணங்கு அரும் மரபிற் பேஎய்-பிறரால் வருத்துதற்கரிய தன்மையையுடைய பேய் என்றுமாம். ஒராஅ - ஒருவாது : ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம்.

குராலின் ஓசை கடிப்பு உருண்டு ஒலிப்பிக்கும் துடியின் ஓசை போல்வதாகலின் உருட்டும் எனப்பட்டது. 'உருள்துடி மகுளியின் .........இசைக்கும்' (கக) என முன் வந்திருப்பதுங் காண்க. தூங்கும் என்னும் பெயரெச்சம் இடப்பெயர் கொண்டது. தூங்கும் வேங்கடம் எனவும் யானையையுடைய வேங்கடம் எனவும் தனித் தனிக் கூட்டுக. தழீஇ - தழீஇய என்னும் பொருட்டு; தழீஇய என்றே பாடம் கோடலுமாம்.

---

## 266. மருதம்

[பரத்தையிற் பிரிந்து வந்து கூடிய தலைமகற்குத் தலைமகள் சொல்லியது.]

கோடுற நிவந்த நீடிரும் [1]பரப்பின்
அந்தீம் [2]பாஅயப் புதுப்புனல் நெருநை
மைந்துமலி களிற்றிற் றலைப்புணை தழீஇ
நாந்தம் நாறுங் குவையிருங் கூந்தல்
ரு இளந்துணை மகளிரொ டீரணிக் கலைஇ
நீர்பெயர்ந் தாடிய ஏந்தெழின் மழைக்கண்
நோக்குதொறும் நோக்குதொறுந் தவிர்விலை யாகிக்
காமங் கைம்மிகச் சிறத்தலின் நாணிழந்து
ஆடினை யென்ப மகிழ்ந அதுவே
க0 யாழிசை மறுகின் நீடூர் கிழவோன்
வாய்வாள் எவ்வி ஏவல் மேவார்

---

(பாடம்) 1. பரப்பினந்தி. 2. பாஅய புது.

நெடுமிடல் சாய்த்த [1]பசும்பூட் பொருந்நலர்
அரிமண வாயில் உறத்தூர் ஆங்கட்
கள்ளுடைப் பெருஞ்சோற் றெல்லிமிழ் அன்ன
கரு கவ்வை யாகின்றாற் பெரிதே யினியஃது
அவலம் அன்றுமன் எமக்கே அயல
கழனி யுழவர் கலிசிறந் தெடுத்த
கறங்கிசை வெரீஇப் பறந்த தோகை
அணங்குடை வரைப்பகம் பொலியவந் திறுக்குந்
உ௦ திருமணி விளக்கின் அலைவாய்ச்
செருமிகு சேஎயொ டுற்ற சூளே.

— பரணர்.

(சொ - ள்.) க—கூ. மகிழ்ந - தலைவனே! கோடு உற நிவந்த - கரையின் உச்சியைப் பொருந்துமாறு உயர்ந்த, நீடு இரும் பரப்பின் - நீண்ட பெரிய பரப்பினையுடைய, அம் தீம் பாயல் புதுப்புனல் - அழகிய இனிய மனத்திற்கு விருப்பமான புதுநீர்ப் பெருக்கில், நெருநை - நேற்று, மைந்து மலி களிற்றின் - வலிமை மிக்க களிற்றினைப்போல, தலைப்புணை தழீஇ - புணையின் தலைப்புறத்தினைத் தழுவி, நரந்தம் நாறும் குவை இரும் கூந்தல் - நரந்தம்புல் நாறுகின்ற திரண்ட கரிய கூந்தலையுடைய, இளம்துணை மகளிரொடு - நினக்குத் துணையாய இளைய மகளிரொடு, ஈர் அணிக் கலீஇ - நீர் விளையாட்டிற்குரிய அணிகளைக் கொண்டு, நீர்பெயர்ந்து ஆடிய - நீரின்கண் பெயர்ந்து விளையாடிய, ஏந்து எழில் மழைக்கண் - அவர்களுடைய மிக்க அழகினையுடைய குளிர்ந்த கண்கள், நோக்குதொறும் நோக்குதொறும் - நின்னைப் பார்க்குந்தோறும் பார்க்குந்தோறும், தவிர்விலையாகி - நீ விருப்பம் தவிராயாகி, காமம் கைம்மிகச் சிறத்தலின் - காமம் அளவு கடந்து மிகுதலினால், நாண் இழந்து - நாணத்தினை இழந்து, ஆடினை யென்ப - நீ அவர்களுடன் நீர்விளையாட்டு நிகழ்த்தினை என்று பலரும் கூறுவர்;

கூ—கரு. அதுவே - அச்செயல்தான், யாழ் இசை மறுகின் நீடூர் கிழவோன் - யாழ் ஒலிக்கும் தெருக்களையுடைய நீடூரின் தலைவனான, வாய்வாள் எவ்வி - வாள் வென்றி வாய்ந்த எவ்வி என்பான், ஏவல் மேவார் - தன் ஏவுதலை ஏற்றுக்கொள்ளாராகிய, பசும்பூண் பொருந்தலர் - பசிய பொன்னணியை யுடைய பகைவரது, நெடுமிடல் சாய்த்த - மிக்க வலிமையைக் கெடுத்த, அரிமண வாயில் உறத்தூர் ஆங்கண் - அரிமண வாயில் உறத்தூராய அவ்விடத்தே, கள்ளுடைப் பெருஞ்சோற்று எல் இமிழ் அன்ன - அவருடைய படையாளரைக் களித்த கள்ளுடன் கூடிய பெருஞ்சோற்றினையே பகலில் எழுந்த ஆரவாரம் போன்று, பெரிது கவ்வை ஆகின்று - மிகவும் அலராகின்றது;

கரு—உக. இனி அஃது அவலம் அன்று எமக்கு - இப்பொழுது அதுதானும் எமக்குத் துன்பந் தருவதன்று (மற்று), அயல கழனி

(பாடம்) 1. பெரும்பூட் பொருந்திலர். பசும்பூட் பொருநிலர்.

உழவர் களி சிறந்து எடுத்த - பக்கத்தேயுள்ள வயலில் உழுவோர் செருக்கு மிக்கு எழுப்பிய, கறங்கு இசை வெரீஇ - ஒலிக்கின்ற ஆரவாரத்தினை அஞ்சி, பறந்த தோகை - பறந்துபோய மயில், அணங்கு உடை வரைப்பு அகம் பொலிய வந்து இறுக்கும் - தெய்வத்தையுடைய குன்றிடத்தே பொலிவுற வந்து தங்கும், திருமணி விளக்கின் அலைவாய் - அழகிய மணி விளக்கு ஒளிரும் திருச்சீரலைவாயமர்ந்த, செருமிகு சேஎயொடு உற்ற சூள் - போர்வன்மை மிக்க முருகனொடு பொருந்திச் செய்த சூளுறவே துன்பம் தருவதாகும்.

(முடிபு) மகிழ்ந! நெருநை புதுப்புனல் தலைப்புணை தழீஇ இளந்துணை மகளிரொடு ஈரணிக் கலைஇ மழைக்கண் நோக்குதொறும் தவிர்விலையாகி நாண் இழந்து ஆடினை என்ப; அதுவே எவ்வி, பொருந்தலர் நெடுமிடல் சாய்த்த அரிமண வாயில் உறத்தூர் ஆங்கண் பெருஞ் சோற்று இமிழ் அன்ன கவ்வை பெரிதாகின்று; இனி அஃது அவலம் அன்று எமக்கே; அலைவாய்ச் சேஎயொடு உற்ற சூளே அவலமாகும்.

(வி - ரை.) பாயம் - விருப்பம்; [1]'பாயம் பாடி' என்பதற்கு விருப்பமானவற்றைப் பாடி என நச்சினார்க்கினியர் உரைத்தமை காண்க. இனி பாஅய புதுப்புனல் என்றுதல் பராஅய புதுப்புனல் என்றுதல் பாடமிருப்பின் பரந்த புதுநீர் என்க. அந்தில் என்பது பாடமாயின் அவ்விடத்தே என்றுரைக்க. தலைப்புணை - புணையின் தலைப்பு; 'தார்பூண் களிற்றிற் றலைப்புணை தழீஇ' (௧௬௬) என முன்னரும் வந்துள்ளமை காண்க. ஈர் அணி - ஈரிய அணி; நீராட்டிற்குரிய அணி என்றபடி. கலைஇ - கலந்து; கொண்டு என்றபடி. ஏவல் மேவாராகிய பொருந்தலர் எனக் கூட்டுக. மேவார் என்பது மேவர எனவும், பொருந்தலர் என்பது பெருந்திறல் எனவும் இருக்க வேண்டும் எனக் கொண்டு, பசும்பூட் பெருந்திறல் பாண்டியன் நெடுஞ்செழியன் ஆவான் என்று உரைப்பாரும் உளர்.[2] பசும்பூட் பெருந்திறல் என்பது பாண்டியன் நெடுஞ்செழியனையே குறிக்க வேண்டும் என்னும் நியதி யின்மையும், எவ்வி என்பான் அவனது ஏவலைப் பொருந்தினான் என்றல் ஏலாமையும், 'மேவர,' 'பெருந்திறல்'என யாண்டும் பாடமின்மையும் கருதற்பாலன. இமிழ் - ஒலி, ஆரவாரம். கழனி உழவர் கறங்கிசை வெரீஇப் பறந்த தோகை வரைப்பகம் பொலிய வந்திறுக்கும் அலைவாய் என்றமையால் மருதம் குறிஞ்சி நெய்தலாகிய நிலங்கள் கலந்துள்ளமை பெற்றாம். அலைவாய் - கடலின் அலை ஓவாது அலைக்கும் செந்தில் என்னும் பதி; [3]'வெண்டலைப் புணரி அலைக்குஞ் செந்தில்' எனப் புறப்பாட்டில் வருதல் காண்க. 'சூளே அவலமாகின்றது' என விரித்துரைக்க. [4]'பெறற்கரும் பெரும்பொருள் முடிந்தபின்' என்னுஞ் சூத்திரத்து, 'சூள் நயத் திறத்தாற் சோர்வுகண் டழியினும்' என்னும் பகுதியில் கோடுற நிவந்த என்னும் மணிமிடை பவளத்தைத் தோழி கூற்றாகக் காட்டுவாரும் உளர் என்னும் நச்சினார்க்கினியர் கூற்றால் இதனைத் தோழி கூற்றாகக் கொண்டாரும் உளர் என்பது போதரும்.

1. பத்து. குறிஞ்சிப். ௫அ. 2. பாணர். பக்கம். ௩௪-௩௫. 3. புறம். ௫௫. 4. தொல். கற். ௯.

(உ - றை.) உழவர் கறங்கு இசை வெருவிப் பறந்த தோகை அணங்குடை வரைப்பகம் பொலியவந் திறுக்கும் என்பது, நீயும் ஊரில் எழுந்த அலருக்கு அஞ்சியே இம் மனை பொலிய வந்துள்ளாய் என்று கூறியவாறு.

---

## 267. பாலை

[பிரிவிடை வேறுபட்ட தலைமகளது ஆற்றாமை கண்டு ஆற்றாளாகிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

[1]நெஞ்சு நெகிழ்தகுந கூறி யன்புகலந்து
அறாஅ வஞ்சினஞ் செய்தோர் வினைபுரிந்து
திறம்வே றாகல் எற்றென் றொற்றி
[2]இனைத லான்றிசின் நீயே சினைபாய்ந்து
ரு உதிர்த்த கோடை உட்குவரு கடத்திடை
வெருக்கடி யன்ன குவிமுகிழ் இருப்பை
மருப்புக் கடைந்தன்ன கொள்ளை வான்பூ
மயிர்க்கால் எண்கின் ஈரினங் கவர
மைபட் டன்ன மாமுக [3]முசுக்கலை
க0 பைதறு நெடுங்கழை பாய்தலின் ஒய்யென
வெதிர்படு வெண்ணெல் வெவ்வறைத் தாஅய்
உகிர்நெரி யோசையிற் பொங்குவன பொரியும்
ஓங்கல் வெற்பிற் சுரம்பல இறந்தோர்
தாம்பழி யுடைய ரல்லர் நாளும்
கரு நயந்தோர்ப் பிணித்தல் தேற்றா வயங்குவினை
வாளேர் எல்வளை [4]நெகிழ்த்த
தோளே தோழி தவறுடை யவ்வே.

—பாலை பாடிய பெருங்கடுங்கோ.

(சொ - ள்.) கஎ. தோழி—,

க—ச. நீயே - நீதான், நெஞ்சு நெகிழ்தகுந கூறி - நம் நெஞ்சம் நெகிழத்தக்கனவற்றைக் கூறி, அன்பு கலந்து - அன்பினால் நம்மைக் கலந்து, அறாஅ வஞ்சினம் செய்தோர் - நாம் என்றும் பிரியாமைக்குரிய சூளுறவு செய்தோராய நம் தலைவர், வினைபுரிந்து - பொருள் ஈட்டும் தொழிலை விரும்பி, திறம் வேறு ஆகல் - வேறு தன்மையர் ஆயது, எற்று என்று ஒற்றி - என்னை யென்று ஆராய்ந்து, இனைதல் ஆன்றிசின் - வருந்துதல் ஒழிவாயாக;

ச—கச. உட்கு வரு கடத்திடை - அச்சம் தோன்றும் காட்டிடத்தே, கோடை - கோடைக்காற்று, சினை பாய்ந்து உதிர்த்த - கிளையினை மோதி உதிரச்செய்த, வெருக்கு அடி அன்ன - பூனையின் அடி

---

(பாடம்) 1. நெஞ்சு நெகிழ்க்குந. 2. உளைதல் ஆன்றிசின். 3. முசுக்கணம்.
4, நெகிழ்ந்த.

யினை யொத்த, குவிமுகிழ் இருப்பை - குவிந்த அரும்பினையுடைய இருப்பையினது, மருப்புக் கடைந்தன்ன கொள்ளை வான் பூ - தந்தத்தினைக் கடைந்தாலொத்த மிகுதியாகவுள்ள வெள்ளிய பூக்களை, மயிர்க்கால் எண்கின் ஈர் இனம் கவர - மயிர் அடர்ந்த காலினையுடைய கரடியின் பெரிய கூட்டம் கவர்ந்துண்ண, மைபட்டன்ன மாமுக முசுக்கலை - மை பூசினாலொத்த கரிய முகத்தினையுடைய ஆண் குரங்கு, பைது அறு நெடு கழை பாய்தலின் - பசுமையற்ற நீண்ட மூங்கிலிற் பாய்தலினால், ஒய்யென - விரைய, வெதிர்படு வெண்நெல் வெவ் அறை தாஅய் - மூங்கிலில் விளைந்த வெள்ளிய நெற்கள் வெப்பம் மிக்க பாறையில் உதிர்ந்து பரந்து, உகிர் நெரி ஓசையில் பொங்குவன பொரியும் - நகத்தை நெரிப்பதுபோன்ற ஓசையுடன் பொங்கிப் பொரிந்திடும், ஓங்கல் வெற்பின் சுரம் பல இறந்தோர் - உயர்ந்த மலைகளையடுத்த காடு பலவற்றையும் கடந்து சென்றவராய அவர், பழியுடையர் அல்லர் - பழியுடையோர் ஆகார் ;

கசு—எ. நாளும் - எஞ்ஞான்றும், நயந்தோர்ப் பிணித்தல் தேற்றா - தம்மை விரும்பி வந்தாரை விடாது பற்றிக்கொள்ளுதலை அறியாவாய, வயங்கு வினை வாள் ஏர் எல் வளை நெகிழ்த்த - விளங்கும் தொழிற்றிறம் வாய்ந்த வாளால் அறுத்து அழகுறுத்தப்பெற்ற ஒளி பொருந்திய வளையலை நெகிழவிட்ட, தோளே தவறுடைய - நம் தோள்களே தவறுடையன.

(முடிபு) தோழி! நீ, அறாஅ வஞ்சினம் செய்தோர் வினைபுரிந்து திறம் வேறுகல் எற்றென்று ஒற்றி இனைதல் ஆன்றிசின்; வெற்பின் சுரம் பல இறந்தோர் பழியுடையர் அல்லர்; நாளும் நயந்தோர்ப் பிணித்தல் தேற்றாவாய எல் வளை நெகிழ்த்த தோளே தவறுடைய.

இருப்பை வான்பூ எண்கின் ஈரினம் கவர, முசுவினம் கழை பாய்தலின், வெண்ணெல் வெவ்வறைத் தாஅய்ப் பொரியும் சுரம் என்க.

(வி - ரை.) அன்பு கலந்து கூறி வஞ்சினம் செய்தோர் என்க. அறாஅ வஞ்சினம் - நீங்காமையைப் புலப்படுக்கும் சூளுறவு. எற்று - எவன், என்னை. ஈர் இனம் - கரிய கூட்டமுமாம். முசுவானது [1]'மைபட்டன்ன மாமுக முசுக்கலை' என இங்ஙனமே பிறாண்டும் கூறப்பட்டுள்ளது. வஞ்சினம் செய்தோர் திறம் வேறுகல் எற்றென்று தோழி ஆற்றாளாய்க் கூறியபொழுது நீ அங்ஙனம் கூறி வருந்தாதே, கொடிய சுரம் பல கடந்த தலைவர் பழியுடையர் அல்லர், நம்மாட்டு அன்புடைய அவரைப் பிணித்துக்கொள்ள அறியாத நம் தோளே தவறுடையன, ஆதலின் நாம் ஆற்றியிருத்தலே கடன் என உரைத்தாளாம்.

---

1. குறுந். கஉக.

## 268. குறிஞ்சி

[குறைவேண்டிப் பின்னின்ற தலைமகனுக்குக் குறைநேர்ந்த தோழி தலைமகட்குக் குறைநயப்பக் கூறியது.]

அறியாய் வாழி தோழி பொறிவரிப்
பூநுதல் யானையொடு புலிபொரக் குழைந்த
குருதிச் செங்களம் புலவுற வேங்கை
உருகெழு நாற்றங் குளவியொடு விலங்கும்
ரு மாமலை நாடனொடு மறுவின் றாகிய
காமங் கலந்த காதல் உண்டெனின்
நன்றுமன் னதுநீ நாடாய் கூறுதி
நாணும் நட்பும் இல்லோர்த் தேரின்
யானல தில்லையிவ் வுலகத் தானே
க0 இன்னுயி ரன்ன நின்னொடுஞ் சூழாது
முளையணி மூங்கிலிற் கிளையொடு பொலிந்த
பெரும்பெய ரெந்தை அருங்கடி நீவிச்
செய்துபின் இரங்கா வினையொடு
மெய்யல பெரும்பழி யெய்தினென் யானே.

—வடமவண்ணக்கன் பேரிசாத்தனார்.

(சொ - ள்.) க—எ. தோழி—, வாழி—, அறியாய் - யான் கூறுவதனை நீ மனத்தான் ஆராய்ந்து பாராய், பொறி வரி பூ நுதல் யானையொடு - புள்ளிகளையும் வரிகளையுமுடைய பொலிவுற்ற நெற்றியினையுடைய யானையுடன், புலி பொர - புலி போர்செய்தலால், குழைந்த குருதிச் செங்களம் புலவு அற - குருதியால் சேறுபட்ட சிவந்த களம் புலால் நாற்றம் நீங்க, வேங்கை உருகெழு நாற்றம் குளவியொடு விலங்கும் - நிறம் பொருந்திய வேங்கை மலர்களின் நாற்றம் காட்டுமல்லிகைமலர் நாற்றத்தொடு கூடி மாற்றும், மாமலை நாடனொடு - பெரிய மலை நாட்டையுடைய தலைவனோடு, மறு இன்று ஆகிய - குற்றமில்லாததாய் அமைந்த, காமம் கலந்த காதல் உண்டு எனின் - அன்பு கலந்த கூட்டம் உண்டானால், நன்றுமன் - அது மிக நன்றாகும், அது நீ நாடாய் கூறுதி - அதனை நீ ஆராயாமற் கூறுகின்றாய்;

கO—ச. இன் உயிர் அன்ன நின்னொடும் சூழாது - இனிய உயிரையொத்த நின்னொடும் கலந்தெண்ணாது, முளை அணி மூங்கிலின் கிளையொடு பொலிந்த - முளைகளால் அழகுபெற்ற மூங்கிலைப் போலப் பெருஞ்சுற்றத்தாற் சிறப்புற்ற, பெரும்பெயர் எந்தை அருங்கடி நீவி - பெரிய புகழ் மேவிய நம் தந்தையின் அரிய காவலைத் தாண்டி, செய்து பின் இரங்கா வினையொடு - செய்தபின் வருந்துதற்கு ஏதுவாகா நல்ல வினையைச் செய்தமையால், மெய் அல பெரும்பழி எய்தினேன் - ஆயுங்கால் உண்மை ஆகாத பெரிய பழியை நான் அடைந்துள்ளேன்; ஆகலான்,

அ—கூ. இவ்வுலகத்தான் - இவ் வுலகத்தின்கண்ணே, நாணும் நட்பும் இல்லோர்த் தேரின் - நாணும் நட்பும் இலராயினாரை ஆராயின், யான் அலது இல்லை - என்னை யொழிய யாரும் இலராவர்.

(முடிபு) தோழி! வாழி! மாமலை நாடனொடு காமம் கலந்த காதல் உண்டெனின் நன்றுமன்; நீ அது நாடாய் கூறுதி அறியாய்; இன்னுயிரன்ன நின்னொடுஞ் சூழாது எந்தை அருங்கடி நீவிச் செய்து பின் இரங்கா வினையொடு மெய்யல பெரும்பழி எய்தினேனே; இவ்வுலகத்தானே நாணும் நட்பும் இல்லோர்த் தேரின் யானலதில்லை.

(வி - ரை.) 'அறியாய்' முன்னிலை ஏவல் உடன்பாடு. காதல் ஈண்டுக் கூட்டம் என்னும் பொருட்டு. நாடாய் கூறுதி அறியாய் எனக் கூட்டுக. கூறுதி என்பதனைக் கூறி எனப் பாடங்கொண்டு இகரவீற்று வியங்கோள் என்பர் [1]சிவஞான முனிவர். தலைமகனுக்குக் குறை நேர்ந்த தோழி, தலைவனொடு கூட்டம் உண்டெனின் நன்று; அதனை ஆராய்ந்து பார்; என்று தலைவிக்குக் கூறியவழி, அவள் அதற்கு இசையாள் போன்றிருந்தனளாகலின், யான் பெரும் பழி எய்தினேன்; இவ்வுலகில் நாணும் நட்பும் இல்லோர் என்னை யன்றிப் பிறர் இலர் என அவள் குறை நயப்பான்வேண்டி வன்மையாற் கூறினாள் என்க. இன்னுயிரன்ன நின்னொடும் சூழாது என்றது என்னின் வேறல்லாத நின்னொடும் சூழாதது குற்றம் ஆகாது என்பதும், செய்துபின் இரங்காவினை என்றது, தான் செய்தது பழியாகாத நல்வினையே என்பதும், பெரும்பழி எய்தினேன் என்றது யான் அங்ஙனம் செய்தும் ஏலாத பழியை எய்தினேன் என்பதும் கூறியபடியாம். தோழி கூறியதற்குத் தலைவி நாணினாளாதலின், இவ்வுலகில் யானே நாண் இல்லாதவள் என்றும், கெழுதகைமையாற் கேளாது செய்ததற்கு இசைந்து மகிழாமையின் யானே நட்பில்லாதவள் என்றும், வலிதிற் கூறினாளென்க. அதன் பயன் தலைவி குறைநயப்பாளாவது.

(உ - றை.) குருதிச் செங்களம் புலவுஅற, வேங்கைநாற்றம் குளவியொடு விலங்கும் மாமலை நாடன் என்றது, களவொழுக்கத்தால் பிறர் கூறும் பழியை வரைந்துகொண்டு இல்லறம் நிகழ்த்துதலால் போக்கியருள்வன் தலைவன் என்றபடி.

(மே - ள்.) [2]'செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல் - செய்யென் கிளவி யாகிடன் உடைத்தே' என்னுஞ் சூத்திரத்து, 'அறியாய் வாழி தோழி, . .' என்னும் அகப்பாட்டினுள், அறியாய் என்றது, 'காமங் கலந்த காதல் உண்டெனின், நன்றுமன் அது நீ நாடாய் கூறுதி' என்றதனோடு இயையுங்கால், அவனோடு கூட்டம் உண்டெனின் அது மிக நன்று, அதனை நீ ஆராயாமல் கூறுகின்றாய்; அதனை நின் மனத்தால் ஆராய்ந்து பாராய் என வேண்டிக்கோடற் பொருள் தந்து, முன்னிலை ஏவல் உடன்பாடாய் நின்றவாறுங் காண்க என்றார் நச்.

---

1. சிவஞானபாடியம். சூத். கூ. உரை. 2. தொல். சொல். எச். ருச.

## 269. பாலை

[பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.]

தொடிதோள் இவர்க எவ்வமுந் தீர்க
நெறியிருங் கதுப்பிற் கோதையும் புனைக
ஏறுடை யினநிரை பெயரப் பெயராது
செறிசுரை வெள்வேல் மழவர்த் தாங்கிய
௫ நறுகண் ணாளர் நல்லிசை நிறுமார்
பிடிமடிந் தன்ன குறும்பொறை மருங்கின்
நட்ட போலும் நடாஅ நெடுங்கல்
அகலிடங் குயின்ற பல்பெயர் மண்ணி
[1]நறுவிரை மஞ்சள் ஈர்ம்புறம் பொலிய
௧௦ அம்புகொண் டறுத்த ஆர்நார் உரிவையிற்
செம்பூங் கரந்தை புனைந்த கண்ணி
வரிவண் டார்ப்பச் சூட்டிக் கழற்கால்
இளையர்பதிப் பெயரும் அருஞ்சுரம் இறந்தோர்
தைஇ நின்ற தண்பெயற் கடைநாள்
௧௫ பொலங்காசு நிரைத்த கோடேந் தல்குல்
நலங்கேழ் மாக்குரல் குழையொடு துயல்வரப்
பாடூர் பெழுதரும் பகுவாய் மண்டை எந்து
வயிரிடைப் பட்ட தெள்விளி யியம்ப
வண்டற் பாவை உண்டுறைத் தரீஇத்
௨௦ திருநுதன் மகளிர் குரவை அயரும்
[2]பெருநீர்க் கானல் தழீஇய இருக்கை
வாணன் சிறுகுடி வணங்குகதிர் நெல்லின்
யாணர்த் தண்பணைப் போதுவா யவிழ்ந்த
ஒண்செங் கழுநீ ரன்ன நின்
௨௫ கண்பனி துடைமார் வந்தனர் விரைந்தே.

—மதுரை மருதனிளநாகனார்.

(சொ - ள்.) ௩—௧௩. தோழி, ஏறு உடை இனநிரை பெயர - ஏறுகளுடன் கூடிய பசுவினமாய நிரைகள் மீளவும், பெயராது - மீளாது நின்று, செறி சுரை வெள் வேல் மழவர்த் தாங்கிய - நிறைந்த சுரையையுடைய வெள்ளிய வேலையுடைய வெட்சிவீரரைத் தடுத்துப் பொருதுபட்ட, நறு கண்ணாளர் நல் இசை நிறுமார் - அஞ்சாமையுடைய கரந்தை வீரது நல்ல புகழை நிலை நிறுத்துமாறு, பிடி மடிந்தன்ன குறும்பொறை மருங்கின் - பெண் யானைகள் கிடந்தாலொத்த குன்றுகளின் பக்கத்தே, நட்ட போலும் நடாஅ நெடுங் கல் - நட்டு வைத்தவை போன்ற இயற்கையிலெழுந்த நீண்ட கற்களின், அகல் இடம் குயின்ற பல் பெயர் மண்ணி - அகன்ற இடத்தைச் செதுக்கி இயற்றிய பல வடிவுகளையும் நீராட்டி, நறுவிரை மஞ்சள் ஈர்ம் புறம்

(பாடம்) 1. நறுவரை. 2. பெருமீழக் கானல்.

பொலிய - நறுமணமுள்ள மஞ்சள் அவற்றின் ஈரிய புறத்தில் விளங்குமாறு பூசி, அம்புகொண்டு அறுத்த ஆர் நார் உரிவையின் - அம்பினால் அறுத்தெடுத்த ஆத்தியின் பட்டையாகிய நாரினால், செம் பூ கரந்தை புனைந்த கண்ணி - சிவந்த கரந்தைப் பூவைத் தொடுத்து இயற்றிய கண்ணியை, வரி வண்டு ஆர்ப்பச் சூட்டி - வரிகளையுடைய வண்டுகள் ஒலிக்கச் சூட்டி, கழல் கால் இளையர் பதிப்பெயரும் - கழலினைத் தரித்த காலினையுடைய வீரர்கள் தம் பதிக்கண்ணே மீளும், அரும் சுரம் இறந்தோர் - அரிய காட்டைக் கடந்து சென்றோராய நம் தலைவர்,

கச. தைஇ நின்ற தண்பெயல் கடைநாள் - தைத் திங்களில் எஞ்சி நிற்கும் குளிர்ந்த பெயலின் இறுதி நாட்களில்,

கரு—உரு. பொலன் காசு நிரைத்த கோடு ஏந்து அல்குல் - பொன்னாலாய காசினைத் தொடுத்து அணிந்த பக்கம் உயர்ந்த அல்குலிடத்தே, நலம் கேழ் மா குரல் குழையொடு துயல்வர - நன்னிறம் வாய்ந்த சிறந்த பூங்கொத்துக்கள் தழையுடன் கூடி அசைய, பாடு ஊர்பு எழுதரும் பகுவாய் மண்டிலத்து - ஓசை பரந்து எழும் பெரிய வாய் வட்டத்தை யுடைய, வயிரிடைப்பட்ட தெள் விளி இயம்ப - ஊது கொம்பினிடத்து எழுந்த தெளிந்த இசை ஒலிக்க, வண்டல் பாவை உண்துறை தரீஇ - வண்டல் விளையாட்டுக்குரிய பாவையை நீர் உண்ணும் துறையில் கொணர்ந்து வைத்து, திரு நுதல் மகளிர் குரவை அயரும் - அழகிய நெற்றியினையுடைய பெண்கள் குரவைக் கூத்தாடும், பெரு நீர்க் கானல் தழீஇய இருக்கை - கடற் கரைச் சோலை சூழ்ந்த ஊராகிய, வாணன் சிறுகுடி - வாணன் என்பானது சிறுகுடியிலுள்ள, வணங்கு கதிர் நெல்லின் யாணர்த் தண் பணை - வளைந்த கதிர்களைக்கொண்ட நெல்லினையுடைய அழகிய நீர்வளஞ்சான்ற வயலில், போதுவாய் அவிழ்ந்த ஒள் செங் கழுநீர் அன்ன - அரும்பு வாய்திறந்த ஒள்ளிய செங்கழுநீர் மலர் போன்ற, நின் கண் பனி துடைமார் - நின் கண்ணினின்று வரும் நீரைத் துடைத்து ஆற்றுவிக்க, விரைந்து வந்தனர் - விரைந்து வந்துள்ளார்; ஆதலான், தோழி!

க—உ. தொடி தோள் இவர்க - நின் வளைகள் தோளில் ஏறுவனவாக, எவ்வமும் தீர்க - நின் துன்பமும் தீர்வதாக, நெறி இரும் கதுப்பில் கோதையும் புனைக - நெளிந்த கரிய கூந்தலில் மாலையையும் நீ புனைக.

(முடிபு) அருஞ்சுரம் இறந்தோர் நின் கண்பனி துடைமார் விரைந்து வந்தனர்; ஆதலான், நின் தொடி தோள் இவர்க; எவ்வமும் தீர்க; கதுப்பிற் கோதையும் புனைக.

(வி - ரை.) தொடி தோள் இவர்க என்றதனால், தலைவனை பிரிந்த தலைவியின் தோள் மெலிவால் தொடிகள் கழலப்பெற்றன என்பதும், எவ்வமும் தீர்க என்றதனால், தலைவி தீராத வருத்தம் உடையள் ஆயினாள் என்பதும், கதுப்பிற் கோதையும் புனைக என்றதனால், அவ் வருத்தத்தால் தலைவி கோதை புனைதல் முதலிய

ஒப்பனையின்றி யிருந்தாள் என்பதும் பெற்றாம். மழவர் என்பார் வெட்சி மறவர்; தறுகணாளர் - கரந்தை மறவர். நிரை கவர்ந்து சென்ற வெட்சி மறவரிடத்தினின்றும் அதனை மீட்ட கரந்தை மறவர், அவ் வெட்சியார் மீட்டும் நிரைமேற் செல்லாது தடுத்து நின்று தறுகண்மையுடன் பொருது பட்டனர் ஆதலின், அவர் புகழை நிறுத்துதற்கு அவரைச் சார்ந்த வீரர்கள் கல்லிலே அவர் படிவத்தை இயற்றி வழிபடுவாராயினர் என்க. நடாஅ நெடுங்கல் அகலிடம் குயின்ற என்றதனால், பல்லவர் காலத்திற்போல இயல்பாய பாறையைக் குடைந்து படிவம் இயற்றும் வழக்கு அஞ்ஞான்றும் இருந்த தென்பது புலனாகின்றது. பல் பெயர் என்புழி, பெயர் என்பது பொருள்; ஆவது படிவம் என்க. தறுகணாளர் நல்லிசை நிறுமார் நெடுங் கல் குயின்ற பல் பெயர் என்க. பொருதுபட்ட கரந்தையாரது புகழை நிறுத்தவேண்டி நெடுங்கல்லிலே குயின்ற படிவத்தை நீராட்டி மஞ்சட்பூசிக் கண்ணி சூட்டி வழிபட்டு இளையர் தாம் பதிக்கு ஏகும் அரும் சுரம் என்க. தைஇ நின்ற - தைத் தன்மை நிலைபெற்ற என்றுமாம். கடைநாளில் வண்டற்பாவையை உண்துறைத் தரீஇ மகளிர் குரவை அயருங் கானல் எனவும் கானல் தழீஇய இருக்கைச் சிறுகுடி எனவும் இயையும். துயல்வர இயம்பக் குரவை அயரும் என்க. தைத் திங்களில் கன்னியர் பாவையை நீர்த்துறையில் வைத்து விளையாடும் நோன்புடையர் என்பது, "[1]தவநெகிழ் பிணி நிவந்த" என்னும் குறிஞ்சிக் கலியானும் அறியப்படும். விரைந்து வருவார் என்பதனை வந்தனர் விரைந்து எனத் துணிவுபற்றி ஓதினான் என்க.

---

## 270. நெய்தல்

[பகற்குறிக்கண் வந்துநீங்குந் தலைமகனைத் தோழி வரைவு கடாயது.]

இருங்கழி மலர்ந்த வள்ளிதழ் நீலம்
புலாஅன் மறுகிற் சிறுகுடிப் பாக்கத்து
இனமீன் வேட்டுவர் ஞாழலொடு மிலையும்
மெல்லம் புலம்ப நெகிழ்ந்த தோளே
ரு சேயிறாத் துழந்த நுரைபிதிர்ப் படுதிரை
பராஅரைப் புன்னை வாங்குசினைத் தோயுங்
கானலம் பெருந்துறை நோக்கி யிவளே
கொய்சுவற் புரவிக் கைவண் கோமான்
நற்றேர்க் குட்டுவன் கழுமலத் தன்ன
அம்மா மேனித் [2]தொன்னலந் தொலையத்
துஞ்சாக் கண்ணள் அலமரும் நீயே
கடவுள் மரத்த முண்மிடை குடம்பைச்
சேவலொடு புணராச் சிறுகரும் பேடை

---

1. குறிஞ்சிக், உக. (பாடம்) 2. தொன்னலம் சிதைய.

**[1]இன்னா துயங்குங் கங்குலும்**
**கரு [2]நும்மூர் உள்ளுதிர் நோகோ யானே.**

—சாகலாசனார்.

(சொ - ள்.) க—ச. புலாஅல் மறுகின் சிறுகுடிப் பாக்கத்து - புலால் நாற்றம் வீசும் தெருவினையுடைய சிறிய குடியிருப்புக்களை யுடைய பாக்கத்தில், இன மீன் வேட்டுவர் - கூட்டமாய மீன் வேட்டம் புரிபவர், இரு கழி மலர்ந்த வள் இதழ் நீலம் - பெரிய உப்பங் கழியில் மலர்ந்த வளம் வாய்ந்த இதழ்களையுடைய நீலப் பூக்களை, ஞாழலொடு மிலையும் - புலிநகக் கொன்றைப் பூக்களுடன் சூடும், மெல் அம் புலம்ப - மென்னிலமாகிய நெய்தற் றலைவனே,

ச—கக. தோள் நெகிழ்ந்த - இவள் தோள்கள் மெலிந்தன; இவள்—இத் தலைவி, சேய் இரு துமிந்த நுரை பிதிர்ப் படுதிரை - சிவந்த இருமீன் கலக்கிய நுரையுடன் கூடிய திவலை பொருந்திய அலைகள், பரு அரைப் புன்னை வாங்கு சினைத் தோயும் - பெரிய அடியினையுடைய புன்னைமரத்தின் வளைந்த கிளைகளில் பொருந்தும், கானல் அம் பெருந் துறை நோக்கி - சோலையை யடுத்த அழகிய பெரிய துறையை நோக்கி, கொய் சுவல் புரவிக் கைவண் கோமான் - கொய்யப் பெற்ற பிடரிமயிரினையுடைய குதிரைகளை யுடைய கைவண்மை மிக்க தலைவனாகிய, நல் தேர் குட்டுவன் - நல்ல தேரினையுடைய குட்டுவனது, கழுமலத்து அன்ன - கழுமலம் என்னும் ஊரினைப் போன்ற, அம் மா மேனி தொல் நலம் தொலைய - அழகிய மாமை நிறம் வாய்ந்த மேனி பழைய அழகு கெட, துஞ்சாக் கண்ணள் அலமரும் - கண் துயிலாளாகி மனம் கலங்குவள்;

கக—ரு. நீயே -, கடவுள் மரத்த முள் மிடை குடம்பை - தெய்வத்தினையுடைய மரத்திடத்த வாகிய முள்ளால் மிடையப்பெற்ற கூட்டில், சேவலொடு புணராச் சிறுகரும் பேடை – தன் சேவலுடன் கூடப்பெறாத சிறிய கரிய அன்றிற் பேடை, இன்னாது உயங்கும் கங்குலும் - துன்பமுற்று வருந்தும் இரவிலும், நும் ஊர் உள்ளுதிர் - நுமது ஊர்க்கு ஏகிவிட எண்ணுகின்றீர், யான் நோகு - யான் நோகின்றேன்.

(முடிபு) மெல்லம் புலம்ப! இவள் தோள் மெலிந்த; இவள் கானலம் பெருந்துறை நோக்கி, மேனி தொன்னலம் தொலையத் துஞ்சாக் கண்ணள் அலமரும்; நீர் நாம் பேடை இன்னாது உயங்கும் கங்குலும் நும் ஊர் உள்ளுதிர்; யான் நோகு.

(வி - ரை.) கானலம் பெருந்துறை நோக்கித் துஞ்சாக் கண்ணள் அலமரும் என்றதனால், முன்பு நின்னுடன் தலைப்பெய்து இன்பந் துய்த்த அவ்விடத்திலே, இனிப் பகற் குறிக்கண் கூடுதல் அரிதென்னும் கருத்தினால் தலைவி துயிலாது வருந்துகின்றாள் என்பதும்,

(பாடம்) 1. இன்னாது உயவும். 2. நும்மூர் உள்ளுவை.

சேவலொடு புணராப்பேடை இன்னாது உயங்கும் கங்குலும் நம் ஊர் உள்ளுதிர் என்றதனால், நீர் இரவுக் குறிக்கண் வந்ததால் தலைவியின் வருத்தத்தைப் போக்க நினைக்கின்றிலிர் என்பதூஉம், இவ்வாற்றால் பகற் குறியினும் இரவுக் குறியினும் நும்மைத் தலைப்படுமாறின்றித் தலைவி எய்தும் வருத்தத்தினை நோக்கி, யான் வருந்துகின்றேன் என்பதும் தோழி தலைவனிடத்துக் கூறி, ஒருஞான்றும் பிரியாது இன்பம் துய்த்தற்கு இனி நீர் வரைந்துகொள்ள வேண்டுமெனக் குறிப்பித்தாளாம் என்க. பேடை உயங்கும் கங்குலும் நம் ஊர் உள்ளுதிர் என்றது, தனது கூட்டமின்மையால் தலைவி எய்தும் வருத்தத்தைச் சிறிதும் கருதாது தலைவன் செல்லும் கொடுமையை விளக்கியபடியாம்.

---

## 271. பாலை

[[1]செலவுணர்த்திய தோழி தலைமகளது குறிப்பறிந்து தலைமகனைச் செலவழுங்கச் சொல்லியது.]

பொறிவரிப் புறவின் செங்காற் சேவல்
சிறுபுன் பெடையொடு சேட்புலம் போகி
அரிமண லியவிற் பரறேர்ந் துண்டு
வரிமரல் வாடிய வானீங்கு நனந்தலைக்
ரு குறும்பொறை மருங்கிற் கோட்சுரம் நீந்தி
நெடுஞ்சேண் வந்த நீர்நசை வம்பலர்
செல்லுயிர் நிறுத்த சுவைக்காய் நெல்லிப்
பல்காய் அஞ்சினை யகவும் அத்தம்
சென்றுநீ ரவணி ராகி நின்றுதரும்
க0 நிலையரும் பொருட்பிணி நினைந்தனி ராயினே
[2]வல்வ தாகநுஞ் செய்வினை யிவட்கே
களிமலி கள்ளில் நற்றே [3]ரயியன்
ஆடியல் இளமழை சூடித் தோன்றும்
பழந்தூங்கு விடரகத் தெழுந்த காம்பின்
கரு கண்ணிடை புரையும் நெடுமென் பணைத்தோள்
திருந்துகோ லாய்தொடி ஒருத்தியின்
மருந்து முண்டோ பிரிந்துறை நாட்டே.

—காவிரிப்பூம் பட்டினத்துச் செங்கண்ணனார்.

(சொ - ள்.) க—கக. (தலைவ!) பொறிவரி செங்கால் புறவின் சேவல் - புள்ளிகளையும் வரிகளையும் சிவந்த கால்களையுமுடைய ஆண் புறா, சிறு புன் பெடையொடு சேண் புலம் போகி - தனது சிறிய புல்லிய பெடையுடன் சேய்மையாய இடத்திற்குச் சென்று, அரி மணல் இயவில் பரல் தேர்ந்து உண்டு - விளங்கும் மணல் நெறி

(பாடம்.) 1. பிரிவுணர்த்திய தோழி -. 2. வாய்வதாக. 3. அவையன்.

யில் பரற் கற்களை ஆய்ந்து உண்டு, வரிமரல் வாடிய வான் நீங்கு நனந்தலை - வரிகளையுடைய மரற்செடி வாடியுள்ள மேகம் பெய்யா தொழிந்த அகன்ற இடத்தையுடைய, குறும்பொறை மருங்கில் கோள் சுரம் நீந்தி - குன்றுகளின் பக்கத்திலுள்ள ஊறுபொருந்திய சுரத்தினைக் கடந்து, நெடுசேண் வந்த நீர் நசை வம்பலர் - நெடுந்தூரம் வந்த நீர்வேட்கை மிக்க புதியர்களின், செல் உயிர் நிறுத்த சுவைக்காய் நெல்லி - போகும் உயிரைப் போகாது நிறுத்திய சுவையுடைய காய்களைக் கொண்ட நெல்லி மரத்தின், பல்காய் அம் சினை அகவும் அத்தம் - பல காய்களையுடைய அழகிய கிளையி லிருந்து ஒலிக்கும் காட்டு நெறியில், நீர் சென்று - நீர் போய், அவணிர் ஆகி நின்று - அவ்விடத்தி ராகி நின்று, தரும் - ஈட்டி வரும், நிலை அரும் பொருட்பிணி நினைந்தனிர் எனினே - ஓரிடத்தும் நிற்றலில்லாத பொருளை நினைந்து செல்வீராயின், நும் செய்வினை வல்வதாக - நும் பொருள் ஈட்டும் வினை வலிமை யுறுவதாக; ஆயின்,

கக—எ. இவட்கு - இத்தலைவிக்கு, களிமலி கள்ளின் நல்தேர் அவியன் - களிப்பு மிக்க கள்ளில் என்ற ஊரினையும் நல்ல தேரினையுமுடைய அவியன் என்பானது, ஆடு இயல் இளமழை சூடித் தோன்றும் - அசைதல் பொருந்திய இளமுகிலை அணிந்து தோன்றுகின்ற, பழம் தூங்கு விடர் அகத்து - பழங்கள் பொருந்திய மலைப் பிளவிடத்தே, எழுந்த காம்பின் கண் இடை புரையும் - வளர்ந்த மூங்கிலின் இரு கணுக்களின் இடைப் பகுதியை ஒக்கும், நெடு மென் பணைத் தோள் - நீண்ட மெல்லிய பெரிய தோளின்கண்ணுள்ள, திருந்து கோல் ஆய் தொடி - திருந்திய திரண்ட அழகிய வளையல், ஞெகிழின் - நெகிழ்ந்து வீழின், பிரிந்து உறை நாட்டு - நீ பிரிந்து தங்கியிருக்கும் நாட்டில், மருந்தும் உண்டோ - அதனை மாற்றும் மருந்தும் உளதாமோ? உளதாயிற் செல்க.

(முடிபு) நீர் அத்தம் சென்று அவணிராகி நின்று தரும் பொருட்பிணி நினைந்தனிர் எனின், நும் செய்வினை வல்வதாக; இவட்குப் பணைத்தோள் ஆய் தொடி ஞெகிழின், பிரிந்துறை நாட்டு மருந்தும் உண்டோ.

(வி - ரை.) சேவல் பெடையொடு போகிப் பரல் தேர்ந்து உண்டு நெல்லி அஞ்சினையிலிருந்து அகவும் அத்தம் என்க. மரல் வாடிய நனந்தலை வானீங்கு நனந்தலை எனத் தனித்தனி கூட்டுக. கோட் சுரம் - ஆறலைப் போராலும் கொடு விலங்குகளாலும் உண்டாம் ஊறுபாட்டினையுடைய சுரம். வந்த நீர் நசை என்புழிப் பெயரெச்சம் காரண காரியப் பொருட்டாய் நின்றது. நீர்நசை வம்பலர் செல்லுயிர் நிறுத்த சுவைக்காய் நெல்லி என்றமையால், வம்பலர் நீர் விடாய் தாங்காது உயிர் கழியப் பெறும் எல்லையில் நெல்லிக்காய் அவ்விடாயைப் போக்கி அவர்கள் உயிரை நிறுத்தும் என்பதாயிற்று. நீரற்ற காட்டு நெறிகளில் வழிச் செல்வார் விடாய் தணித்தல் கருதி நெல்லி மரத்தை வைத்து வளர்த்தல் உண்டென்பது [1]'அறந்தலைப்பட்ட நெல்லியம் பசுங்காய்' என்பதனாலும் அறியப்

1. குறுந். உ0கூ.

படும். களி மலி கள்ளின் எனக் கொண்டு களிப்புமிக்க மதுவினை யுடைய என்றுரைத்தலுமாம். தோள் ஆய்தொடி நெகிழின் என்றது மருந்துமுண்டோ என்னும் குறிப்பால் அவள் பிரிவுத் துயரால் மெலிந்து இறந்துபடுவள் என்று கூறியவாறாயிற்று. நீர் பிரிந்துறை யும் அவ்விடத்திருந்து இவள் உயிரைக் காக்கத் தக்கதொரு மருந் தும் இன்மையால் நீர் செல்லுதல் தவிர்க எனத் தோழி செலவு அழுங்குவித்தாளாம் என்க.

---

## 272. குறிஞ்சி

[இரவுக்குறி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது.]

இரும்புலி தொலைத்த பெருங்கை வேழத்துப்
புலவுநாறு புகர்நுதல் கழுவக் கங்குல்
அருவி தந்த அணங்குடை நெடுங்கோட்டு
அஞ்சுவரு விடர்முகை ஆரிருள் அகற்றிய
ரு மின்னொளிர் எஃகஞ் சென்னெறி விளக்கத்
தனியன் வந்து [1]பனியலை முனியான்
நீரிழி மருங்கின் ஆரிடத் தமன்ற
குளவியொடு மிடைந்த கூதளங் கண்ணி
அசையா நாற்றம் அசைவளி பகரத்
கo துறுகல் நண்ணிய கறியிவர் படப்பைக்
குறியிறைக் குரம்பைநம் மனைவயிற் புகுதரும்
மெய்ம்மலி யுவகையன் அந்நிலை கண்டு
முருகென உணர்ந்து முகமன் கூறி
உருவச் செந்தினை நீரொடு தூஉய்
கரு நெடுவேட் பரவும் அன்னை அன்னோ
என்னா வதுகொ றானே பொன்னென
மலர்ந்த வேங்கை அலங்குசினை பொலிய
மணிநிற மஞ்ஞை யகவும்
அணிமலை நாடனொ டமைந்தநந் தொடர்பே.

—மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்.

(சொ - ள்.) க—கரு. (நம் தலைவன்), இரும்புலி தொலைத்த பெருங்கை வேழத்து - பெரிய புலியை வென்ற பெரிய கையினை யுடைய யானையின், புலவு நாறு புகர் நுதல் கழுவ - புலால் நாறும் புள்ளி பொருந்திய நெற்றியினைக் கழுவ, கங்குல் - இரவில், அருவி தந்த - அருவியைத் தந்த, அணங்கு உடை நெடுங்கோட்டு - தெய்வத் தினையுடைய நெடிய மலையினது, அஞ்சுவரு விடர்முகை - அச்சம் தரும் பிளப்பாகிய குகைகளிலுள்ள, ஆர் இருள் அகற்றிய - அரிய

---

(பாடம்) 1. பணியலை.

இருளைப் போக்கிய, மின் ஒளிர் எஃகம் செல்நெறி விளக்க - மின்
போல் விளங்கும் வேல் தான் செல்லும் நெறியினைக் காட்ட, தனி
யன் வந்து பனி அலை முனியான் - நம் தலைவன் தமியனாய் வந்து பனி
அலைத்தலை வெருனாகி, நீர் இழி மருங்கின் ஆர்இடத்து அமன்ற -
அருவிநீர் ஒழுகும் பக்கத்தினையுடைய அரிய இடத்தே நெருங்கிய,
குளவியொடு மிடைந்த கூதளம் கண்ணி - காட்டு மல்லிகை மலருடன்
கூதள மலரையும் சேரத்தொடுத்த கண்ணியின், அசையா நாற்றம்
அசைவளி பகர - விட்டு நீங்காத மணத்தினை அசையும் காற்று
வெளிப்படுத்த, துறுகல் நண்ணிய கறி இவர் படப்பை - பொற்றைக்
கல் பொருந்திய மிளகு கொடி படர்ந்த தோட்டத்தையுடைய, குறி
இறை குரம்பை நம் மனைவயின் - குறிய இறப்பினையுடைய குடிசை
யாய நம் மனையினிடத்தே, மெய்ம்மலி உவகையன் - உடல் பூரிக்
கும் மகிழ்ச்சி யுடையனாய், புகுதரும் அந்நிலை - புகும் அந்நிலையை,
கண்டு - நோக்கி, அன்னை - நம் அன்னை, முருகுஎன உணர்ந்து -
முருகனே என எண்ணி, முகமன் கூறி - புகழுரை கூறி, உருவச்
செந்தினை நீரொடு தூஉய் - நல்ல நிறம் வாய்ந்த செந்தினையை
நீரொடு தூவி, நெடு வேள் பரவும் - முருகனைப் பரவாநின்றாள்;

௧௫—௯. பொன் என மலர்ந்த வேங்கை - பொன்னிறங்
கொண்டு மலர்ந்த வேங்கையின், அலங்கு சினை பொலிய - அசையும்
கிளை பொலிவுற, மணிநிற மஞ்ஞை அகவும் - நீலமணியையொத்த
நிறத்தையுடைய மயில் ஆடும், அணிமலை நாடனொடு அமைந்த நம்
தொடர்பு - அழகிய மலை நாட்டையுடையனாய தலைவனொடு
பொருந்தியநம் நட்பானது, அன்றோ -, என் ஆகுவதுகொல் - என்ன
நிலையினை அடையுமோ.

(முடிபு) (நம் தலைவன்) எஃகம் செல்நெறி விளக்க, தனியன் வந்து, பனி
யலை முனியான், கண்ணி நாற்றம் வெளிபகர, மெய்ம்மலி யுவகையன் நம் மனை
யிற் புகுதர, புகும் அந்நிலை கண்டு, முருகென உணர்ந்து முகமன் கூறி, செந்
தினை நீரொடு தூஉய் அன்னை நெடுவேள் பரவும்; மலைநாடனொடு அமைந்த நம்
தொடர்பு அன்றோ என்னாவதுகொல்.

(வி-ரை.) நெடுங்கோடு மலைக்கு ஆயிற்று. விடராகிய முழை
என்க. பனியலை முனியான் என்பது பாடமாயின், தாழ்ந்து நிற்
றலை வெருது என்று பொருள் உரைத்தல் வேண்டும். இப்பாடம்
பொருந்துமேற் கொள்க. நீடுநிலை மாடத்தில் வதியும் இயல்
புடைய நம் தலைவன் நமது குறியிறைக் குரம்பையையும் மதித்து
உவகையுடன் புகுவான் ஆயினன் என்று தோழி வியந்து கூறினாள்
என்க. புகுதரும் - புகாநிற்க; அங்ஙனம் புகும் என வேறறுத்து
உரைக்க. வேல் உடைமையானும் அஞ்சாமையானும் கண்ணி நாற்
றத்தானும் தலைவனை முருகென உணர்ந்தாளென்று கொள்க. முரு
கென உணர்ந்து அன்னை பரவும் என்றமையால், முருகனால் நமக்குத்
தீங்கு உண்டாகும் என்று அஞ்சி இனி இற்செறிப்பள் என்பது
புலப்படுத்தி அதனால் தலைவனொடு அமைந்த நம் தொடர்பு இனி

யாதாகுமோ எனத் தோழி தலைவிக்குக் கூறினள் என்க. சிறைப் புறத்தானாகிய தலைவன் கேட்டு வரைந்துகொள்ளுதல் இதன் பயனும் என்க.

(மே - ள்.) [1]'களவல ராயினும்' என்னும் சூத்திரத்து, இச் செய்யுளைக் கூறி, இம் மணிமிடை பவளத்துத் தலைவியைச் செவிலி கண்டு முருகெனப் பராவினமை தோழி கொண்டு கூறினள் என்றார் நச்.

---

## 273. பாலை

[பிரிவின்கண் தலைமகள் அறிவுமயங்கிச் சொல்லியது.]

விசும்பு [2]விசைத்தெறிந்த கூதளங் கோதையிற்
பசுங்கால் வெண்குருகு வாப்பறை வளைஇ
ஆர்கலி வளவயிற் போதொடு பரப்பப்
புலம்புவிறு இருந்த புதுவர லற்சிரம்
௫ நலங்கவர் பசலை நலியவும் நந்துயர்
அறியார் கொல்லோ தாமே அறியினும்
நம்மனத் [3]தன்ன மென்மை யின்மையின்
நம்முடை யுலகம் உள்ளார் கொல்லோ
யாங்கென உணர்கோ யானே வீங்குபு
௧0 [4]தலைவரம் பறியாத் தகைவரல் வாடையொடு
முலையிடைத் தோன்றிய நோய்வளர் இளமுளை
அசையுடை நெஞ்சத் துயவுத்திரள் நீடி
ஊரோர் எடுத்த அம்பல் அஞ்சினை
ஆராக் காதல் அவிர்தளிர் பரப்பிப்
௧௫ புலவர் புகழ்ந்த [5]நாணில் பெருமரம்
நிலவரை யெல்லாம் நிழற்றி
அலரரும் பூழ்ப்பவும் வாரா தோரே.

— ஔவையார்.

(சொ - ள்.) ௧0—௧௭. வீங்குபு தலை வரம்பு அறியாத் தகைவரல் வாடையொடு - மிகுந்து முடிவெல்லை இல்லாத அடக்கலாகாத பெருத தன்மையொடு வருதலையுடைய வாடைக் காற்றொடு, முலையிடைத் தோன்றிய நோய் வளர் இளமுளை - முலையிடத்தே தோன்றிய வேட்கை நோயாகிய வளரும் இளைய முளை, அசைவு உடை நெஞ்சத்து உயவுத் திரள் நீடி - தளர்ச்சியையுடைய நெஞ்சினிடத்தே வருத்தமாகிய திரண்ட அடியாய் நீண்டு, ஊரோர் எடுத்த அம்பல் அம் சினை - ஊரார் எழுப்பிய அம்பலாய அழகிய கிளைகளைக் கொண்டு, ஆராக் காதல் அவிர் தளிர் பரப்பி - அமையாக் காதல்

---

1. தொல். கள. உ௪. (பாடம்) 2. விசைத்தெழுந்த. 3. [illegible] யின். 4, தலைவரம்பு. 5. நாணில் பெருமரம்.

என்னும் விளங்கும் தளிர்களைப் பரப்பி, புலவர் புகழ்ந்த நாண் இல் பெருமரம் - புலவரால் புகழப்பெற்ற நாணம் இல்லாத பெரிய மரம் ஆகி, நிலவரை எல்லாம் நிழற்றி - நிலத்தின் எல்லை யெல்லாம் கவிந்து, அலர் அரும்பு ஊழ்ப்பவும் - அலர் ஆகிய மலர்களைச் சொரியவும், வாராதோர் - வாராராயினர்; ஆகலின், அங்ஙனம் வாராத நம் தலைவர்,

க—கா. விசும்பு விசைத்து எறிந்த - வானில் வேகங் கொண்டெறிந்த, கூதளம் கோதையின் - கூதாளியின் மாலைபோல, பசு கால் வெண் குருகு - பசிய காலினையுடைய வெள்ளாங் குருகு, வாப் பறை வளைஇ - தாவும் சிறகினை வளைத்து, ஆர்கலி வளவயின் போதொடு பரப்ப - வளம் பொருந்திய கடற்பக்கத்தே நாட்காலையில் பரவி அமர, புலம் புனிறு தீர்ந்த புதுவரல் அற்சிரம் - விளை நிலங்கள் கதிர் களை ஈன்ற அணிமை நீங்கிய புதிதாக வந்த பனிக்காலத்தே, நலம் கவர் பசலை நலியவும் - நமது அழகினைக் கவர்ந்த பசலை நம்மை வருத்தவும், நம் துயர் அறியார் கொல்லோ - அதனால் நாம் எய்தும் துயரினை அறிந்திலரோ;

கா—கூ. அறியினும் - அன்றி அறிந்திருப்பினும், நம் மனத்து அன்ன மென்மை இன்மையின் - நம் மனத்தின் மென்மை போன்ற மென்மை தம்மனத்தே யின்மையின், தாம் - அவர், நம்முடை உலகம் உள்ளார் கொல் - நமது பெண்டிர் உலகத்து இயல்பினை நினைந் திலரோ, யான் யாங்கு என உணர்கு - யான் என்னென உணர் வேன்?

(முடிபு) வாடையொடு முலையிடைத் தோன்றிய நோய் வளர் இளமுளை, நெஞ்சந்து உயவுத் திரள் நீடி, அம்பல் அஞ்சினை கொண்டு காநற் றளிர் பரப்பி, நாணில் பெரு மரமாகி, நிலவரை யெல்லாம் நிழற்றி, அலர் அரும்பு ஊழ்ப்பவும் வாராதோர், அற்சிரம் பசலை நலியவும், நம் துயர் அறியார் கொல்லோ; அறியி னும், மென்மை யின்மையின், நாம் நம்முடை யுலகம் உள்ளார்கொல்லோ; யான் யாங்கென உணர்கு.

(வி - ரை.) விரிந்த கூதாளி மலரும் வெண்குருகும் தோற்றத் தான் ஒப்புமையுடைய வாதல், [1]'பைம்புதல் நளிசினைக் குருகிருந் தன்ன, வன்பிணி யவிழ்ந்த வெண்கூ தாளத்து, அலங்குகுலை யலரி' என்பதனானும் அறியப்படும். நிலத்திலிருந்து வானிலே விசைத் தெழுந்த வெண்குருகு வானில் விசையுடன் எறியப்பட்ட வெள்ளிய கூதாளி மலர் போல்வதாயிற்று. குருகுபல நிரைந்து சென்றமையின் கூதள மாலைபோல என்றார். போது - காலைப்பொழுது. வாடையுடன் கூடிய கூதிர்ப் பருவம் தலைவனைப் பிரிந்து வருந்தும் தனக்கு மிக கொடிதாய்த்தோன்றுதலின் 'தலைவரம்பு அறியா வாடை' என்றாள். அக் காலத்தே, தலைவி தலைவனை அணையப்பெறாத முலையினை நோக்குழிப் பிரிவுத் துன்பம் தோன்றுதலின் அது முளையாகவும், பின்னும் அதற் கேற்ப, அவ்வருத்தம் மிகுதலும், அதனால் ஊரார் எழுப்பிய அம்ப

1. அகம். கஎஅ.

லும், அதுபற்றி மிக்கெழுகின்ற காதலும், காதல் மிக்குழி நாண் அழிதலும், பின் அலர் பரத்தலும் முறையே பராரை, சினை, தளிர், பெருமரம், மலர் என்பனவாகவும் உருவகிக்கப்பெற்றன. இப்பாட்டு உருவகம். அம்பல் - முகிழ் முகிழ்த்தல்; பிறர் பழிப்பினைச் சிலர் கூடிச் செவிச் சொல்லாகப் பேசுதல். காதல் - அன்பு வேட்கை நோய். அம்பலால் நோய் வளருமென்பது [1]"ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல், நீராக நீளுமிந் நோய்" என்பதனுள் அறிக. மகளிர்க்கு நாண் உயிரினும் சிறந்தது என்று புலவர் பலரானும் போற்றப்படுதலின் புலவர் புகழ்ந்த நாண் எனப்பட்டது. நாண் இல் பெருமரம் என்றதனை நாண் இன்மையாகிய பெருமரம் எனப் பொருள் கொள்க. அலர் - பலர் அறியப் பேசும் பழிமொழி. இங்ஙனம் உருவகங்களைக் காரண காரிய முறையால் அமைத்திருப்பது ஔவையாரது நல்லிசைப் புலமையின் எல்லையில் பெருமைக்குச் சான்றாகுமாறு அறிக. வாராதோர் - என்பதனை வாராதவர் ஆதலின், அங்ஙனம் வாராத நம் தலைவர் என விரித்துரைத்துக் கொள்க. ஆகலின் நம் துயர் அறியார்கொல்லோ என்றியைக்க. தம் பிரிவால் நம்மிடைத் தோன்றிய நோய் இவ்வாறெல்லாம் பெருகி நம்மைத் துன்புறுத்தவும் வந்திலராகலின் நம் துயரினை அறியாரோ எனவும், அறிந்துவைத்தும் நம்போலும் மனநோயின்மையின் இத் துன்பத்தைத் தாங்கும் திண்மையுடையராகலின், மகளிராவார் துயர் பொறுக்கலாற்றாது உயிர்விடும் நீரர் என்பதனை நினைந்திலரோ எனவும், அவற்றுள் ஒன்று துணியப்படாமையின் யாங்ஙனம் உணர்கோ எனவும் தலைவி அறிவு மயங்கிக் கூறினாள் என்க.

---

## 274. முல்லை

[தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.]

இருவிசும் பதிர முழங்கி அரநலிந்து
இகுபெயல் அழிதுளி தலைஇ வானம்
பருவஞ் செய்த பானாட் கங்குல்
ஆடுதலைத் துருவின் தோடே மார்பக்
ரு கடைகோற் சிறுதீ அடைய மாட்டித்
திண்கால் உறியன் பானையன் அதளன்
நுண்பஃ றுவலை யொருதிற நனைப்பத்
தண்டுகால் ஊன்றிய தனிநிலை யிடையன்
மடிவிடு வீளை கடிதுசென் றிசைப்பத்
க0 தெறிமறி பார்க்குங் குறுநரி வெரீஇ
முள்ளுடைக் குறுந்தூ [2]றிரியப் போகுந்
தண்ணறும் புறவி னதுவே நறுமலர்

---

1. குறள். அலரறி. எ. (பாடம்) 2. இரியப் பெயரும்.

முல்லை சான்ற கற்பின்
மெல்லியற் குறுமகள் உறைவின் ஊரே.

—[1]இடைக்காடனார்.

(சொ - ள்.) கஉ—ச. பாக, நறுமலர் முல்லை சான்ற - நறு மணமுடைய முல்லை மலர் அணிந்த, கற்பின் மெல்லியல் குறுமகள் - கற்பினையுடைய மென்மைத் தன்மை வாய்ந்த நம் தலைவி, உறைவு இன் ஊர் - உறைவிடமாய இனிய ஊர்,

க—ங. வானம் - மேகம், இரு விசும்பு அதிர முழங்கி - பெரிய ஆகாயம் அதிரும்படி முழங்கி, அரநலிந்து - பாம்பினை வருத்தி, இகு பெயல் அழி துளி தலைஇ - சொரியும் பெயலாகிய மிக்க துளியினைப் பொருந்தி, பருவம் செய்த பால் நாள் கங்குல் - கார்ப் பருவத்தினைச் செய்த பாதி இரவில்,

ச—கஉ. ஆடு தலைத் துருவின் தோடு ஏம் ஆர்ப்ப - அசையும் தலையினையுடைய செம்மறியாட்டின் தொகுதி பாதுகாவல் அடைய, கடை கோல் சிறு தீ அடைய மாட்டி - கடையும் கோலினின் றெழுந்த சிறு தீயை (அது) வளர்ந்திட விறகிற் சேர்த்து, திண்கால் உறியன் - வலிய தாம்பினையுடைய உறியுடையோனும், பானையன் - பானையையுடையோனும், அதளன் - தோற்படுக்கை உடையோனும், நுண் பல் துவலை ஒருதிறம் நனைப்ப - நுண்ணிய பலவாய மழைத்துளி தனது ஒரு பக்கத்தை நனைத்திட, தண்டு கால் ஊன்றிய தனி நிலை - கோலினைக் காலுடன் சார்த்தி ஊன்றிய தனியே நிற்றலையுடை யோனுமாகிய, இடையன்—, மடிவிடு வீளை கடிது சென்று இசைப்ப - வாயை மடித்து எழுப்பும் சீழ்க்கை விரைந்து சென்று ஒலித்தலின், தெறி மறி பார்க்கும் குறு நரி வெரீஇ - துள்ளி விளையாடும் குட்டி யினைக் கவரப் பார்த்திருக்கும் குள்ள நரி அஞ்சி, முள் உடைக் குறுந்தூறு இரியப் போகும் - முட்களையுடைய குறிய தூற்றின்கண் கெட்டு ஓடிப்போகும், தண்நறும் புறவினது - குளிர்ந்த நறிய காட் டின் கண்ணது.

(முடிபு) (பாக) குறுமகள் உறைவுஇன் ஊர், தண் நறும் புறவினது. பானாட்கங்குல் தனி நிலை இடையன் மடிவிடு வீளை இசைப்பக் குறுநரி வெரீஇக் குறுந்தூறு இரியப் போகும் புறவு என்க.

(வி - ரை.) அர, குறியதன் இறுதிச் சினைகெட உகரம் பெறாது வந்தது. அழிதுளி - மிக்கதுளி. கற்புடை மகளிர் முல்லை மலரை விரும்பி அணிவாராகலின், நறுமலர் முல்லை சான்ற கற்பின் என்றான். அன்றி, முல்லை சான்ற கற்பு என்பதற்கு இருத்தல் அமைந்த கற்பு எனப் பொருள்கொண்டு நறுமலர் என்ற அடை முல்லை என்னும் பெயர் நோக்கி வந்தது என்றலுமாம். வானம் பருவம் செய்த என்ற மையால், நாம் தலைவிக்கு மீண்டு வருவதாகக் குறித்த பருவம் வந்து விட்டதென்பதும், குறுமகள் உறைவின் ஊர் தண்ணறும் புறவினது என்றமையால், நாம் செல்லுதற்கு நெறியும் செவ்வியுடைத்தென் பதும் கூறி, ஆண்டுத் தேரைச் செலுத்துக எனத் தலைவன் பாகற்கு உணர்த்தினான் என்க.

---

(பாடம்) 1. கல்லாடனார்.

## 275. பாலை

[மகட் போக்கிய [1]தாய் சொல்லியது.]

ஓங்குநிலைத் தாழி மல்கச் சார்த்திக்
குடையடை நீரின் மடையினள் எடுத்த
பந்தர் வயலைப் பந்தெறிந் தாடி
இளமைத் தகைமையை [2]வளமனைக் கிழத்தி
௫ பிதிர்வை நீரை பெண்ணீ றாகென
யாந்தற் கழறுங் காலைத் தான்றன்
மழலை யின்சொற் கழறல் இன்றி
இன்னுயிர் கலப்பக் கூறி நன்னுதல்
பெருஞ்சோற் றில்லத் தொருங்கிவண் இராஅள்
௧௦ ஏதி லாளன் காதல் நம்பித்
திரளரை யிருப்பைத் தொள்ளை வான்பூக்
குருளை [3]யெண்கி னிரிநங் கவரும்
[4]வெம்மலை யருஞ்சுரம் நம்மிவண் ஒழியா
இருநிலன் உயிர்க்கு மின்னாக் கானம்
௧௫ நெருநைப் போகிய பெருமடத் தகுவி
ஐதகல் அல்குற் றழையணிக் கூட்டுங்
கூழை நொச்சிக் கீழ தென்மகள்
செம்புடைச் சிறுவிரல் வரித்த
வண்டலுங் காண்டிரோ கண்ணுடை யீரே.

— கயமனார்.

(சொ - ள்.) ௧—௫. வளமனைக் கிழத்தி - வளம் பொருந்திய மனைக்கு உரியளாகிய செல்வியே! ஓங்கு நிலைத் தாழி - உயர்ந்த நிலையினதாகிய சாடியில், மல்கச் சார்த்தி - நிறைய அமைத்து, குடை அடை நீரின் - பனங்குடையால் முகந்த நீரினை, மடையினள் எடுத்த - சொரிந்து வளர்த்த, பந்தர் வயலை - வயலைக் கொடி படர்ந்த பந்தரில், பந்து எறிந்து ஆடி - பந்தினை எறிந்து விளையாடி, இளமைத் தகைமையை - இளமைத் தன்மையை உடையையாய், பிதிர்வை நீரை - திரியும் இயல்பினையுடையை ஆகின்றாய்; பெண் நீறு ஆக என - நினது பெண்மை அழிவதாக என்று, யாம் தன் கழறுங்காலை - யாம் அவளைக் கடிந்து கூறுங்காலத்து,

௬—௮. நல் நுதல் - நல்ல நெற்றியினையுடைய அவள், தான் கழறல் இன்றி - தான் வன்சொற் கூறுதலின்றி, தன் மழலை இன் சொல்லால் - தனது மழலையாகிய இன் சொல்லால், இன் உயிர் கலப்பக் கூறி - இனிய உயிருடன் பொருந்தும்படி கூறி,

௯—௧௧. பெருஞ்சோற்று இல்லத்து - (நாளும்) பெருஞ்சோறு நிகழும் எம் இல்லில், ஒருங்கு இவண் இராஅள் - எம்முடன் ஒருங்கு

(பாடம்) 1. செவிலி சொல்லியது. 2. வளமனை கழிப்பி. 3. எண்கின் இருங்கிளை. 4. வெம்முனை அருஞ்சுரம்.

இங்குத் தங்காளாய், ஏதிலாளன் காதல் நம்பி - அயலானது காதலை விரும்பி, நம் இவண் ஒழிய - நாம் இங்கே பிரிந்திருக்க, திரள் அரை இருப்பை தொள்ளை வான்பூ - திரண்ட அரையினையுடைய இருப்பை மரத்தின் துளையுடைய வெள்ளிய பூக்களை, குருளை எண்கின் ஈர் இனம் கவரும் - குட்டிக் கரடிகளின் பெரிய கூட்டம் கவர்ந்துண்ணும், வெம் மலை அரும் சுரம் - கொடிய மலைகளை யடுத்த அரிய வழியை யுடைய, இரு நிலம் உயிர்க்கும் இன்னாக் கானம் - பெரிய உலகம் அஞ்சி உயிர்த்தற்கேதுவாகிய இன்னாமையையுடைய பெரிய காட்டின்கண், நெருநை போகிய - நேற்றுப் போய்விட்ட, பெருமடத் தகுவி - பெரிய மடப்பத்தையுடையளாகிய, என்மகள் - என்மகள், ஐது அகல் அல்குல் - அழகிதாக அகன்ற அல்குலிடத்தே, தழை அணி கூட்டும் - தழையாகிய அணிக்குக் கொய்யும், கூழை நொச்சிக் கீழது - குறிய நொச்சியின் கீழதாய், செம் புடைச் சிறு விரல் வரித்த - அவளது சிவந்த பக்கத்தினையுடைய சிறுவிரல்களால் இயற்றப்பெற்றதாய, வண்டலும் - வண்டலையும், கண் உடையீர் - கண்ணுடையவர்களே, காண்டிரோ - நீவிர் காண்பிரோ.

(முடிபு) யாம் நன் கழறுங்காலை, தான் மழலையின் சொற்கூறி, இவண் இராள், காதல் நம்பிக் கானம் போகிய என் மகள் சிறுவிரல் வரித்த வண்டலும் கண்ணுடையீர் காண்டிரோ.

(வி - ரை.) நீரின் - சாரியை நிற்க உருபு தொக்கது. மடையினள் - மடுத்தவளாய்ச் சொரிந்து என்றபடி. எடுத்த - வளர்த்த. வயலைப்பந்தர் என மாறுக. மணைக்கிழத்தியாதற்குரிய பருவம் எய்திய நீ இளமைத்தன்மையை யுடையையாய்ப் பந்தினை விளையாடிப் புறத்தே திரிகின்றனையாகலின் நினது பெண்மை நீருக என்று தாய் கழறினள் என்க. [1]'பேதை யல்லை மேதையங் குறுமகள், பெதும்பைப் பருவத் தொதுங்கினை புறத்தென்' என முன் வந்தமையுங் காண்க. பெண் - பெண்மை, பெண்டன்மை. [2]'கண்ணார்ந்த . . . பெண்ணன்று புனையிழாய்' என்புழிப் பெண் இப் பொருட்டாதல் காண்க. பெண் ஈருக எனப் பிரித்துரைத்தலுமாம். கூழை நொச்சி - தழை யணியின் பொருட்டுக் கொய்து குறைந்த நொச்சி என்றுமாம். கீழது வண்டலும் என்று இயையும். கண்ணுடையீர் காண்டிரோ என்றது காணில் ஆற்றீர் எனத் தாய் தன் ஆற்றாமை தோன்றக் கூறியபடியாம்.

(மே - ள்.) [3]'ஏமப் பேரூர்' என்னுஞ் சூத்திரத்து, 'வெம்மலை அருஞ்சுரம் . . . கண்ணுடையீரே' என்பதன்கண், வண்டலைக் காணார் தேய்த்து நின்று, காணில் ஆற்றீர் எனக் கூறினமையின், ஆயத்திற்கன்றிப் புறஞ்சென்று சேரியோர்க்கு உரைத்ததாயிற்று என்றார் நச்.

---

## 276. மருதம் -

[தலைமகட்குப் பாங்காயினார் கேட்பப் பரத்தை சொல்லியது.]

நீளிரும் பொய்கை யிரைவேட் டெழுந்த
வாளை வெண்போத் துணீஇய நாரைதன்

---

1. அகம். எ. 2. கலி. குறிஞ். உச. 3. தொல். அகத். ஙஎ.

அடியறி வுறுதல் அஞ்சிப் பைப்பயக்
கடியிலம் புகூஉங் கள்வன் போலச்
ரு சாஅய் ஒதுங்குந் துறைகேழ் ஊரனொடு
ஆவ தாக இனிநாண் உண்டோ
வருகதில் லம்மவெஞ் சேரி சேர
அரிவேய் உண்க ணவன்பெண்டிர் காணத்
தாரும் தானையும் பற்றி ஆரியர்
க0 பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு போலத்
தோள்கந் தாகக் கூந்தலிற் பிணித்தவன்
மார்புகடி கொள்ளே னாயின் ஆர்வுற்று
இரந்தோர்க் கீயா தீட்டியோன் பொருள்போற்
பரந்து வெளிப்படா தாகி
கரு வருந்துக தில்லயாய் ஓம்பிய நலனே.

— பரணர்.

(சொ - ள்.) க—ரு. நீள் இரும் பொய்கை - நீண்ட பெரிய பொய்கையில், இரை வேட்டு எழுந்த வாளை வெண் போத்து - இரையை விரும்பிப் புறப்பட்ட வெள்ளிய வாளைப் போத்தினை, உணீஇய - உண்ணும் பொருட்டு, நாரை - நாரையானது, தன் அடி அறிவுறுதல் அஞ்சி - தன் அடியின் ஒலியை அவ்வாளை உணர்ந்து கொள்ளலை அஞ்சி, பைப்பய - மெல்லமெல்ல, கடி இலம் புகூஉம் கள்வன்போல - காவல் பொருந்திய வீட்டிற் புகும் கள்வனைப்போல, சாஅய் ஒதுங்கும் துறை கேழ் ஊரனொடு - தளர்ந்து நடக்கும் இடமாகிய துறை பொருந்திய ஊரனுடன், ஆவது ஆக - [illegible] பழி ஆவதாக, இனி நாண் உண்டோ - இனி யாங்கு நாண் என்பதும் உளதாகுமோ?

எ—கஉ. எம் சேரி சேர வருக - அவ்வூரன் எம் சேரிக்கண் பொருந்த வருவானாக; அரிவேய் உண்கண் அவன் பெண்டிர் காண - செவ்வரி பொருந்திய மையுண்ட கண்களையுடைய அவன் பெண்கள் காண, தாரும் தானையும் பற்றி - அவன் மாலையையும் ஆடையையும் பிடித்துக்கொண்டு, ஆரியர் பிடி பயின்று தரூஉம் களிறு போல - ஆரியர் பழக்கிவைத்துள்ள பெண்யானை தான் பழகிக் கொணர்ந்து தரும் பெரிய ஆண் யானை போல, தோள் கந்தாகக் கூந்தலில் பிணித்து - தோள் கட்டுந் தறியாக அதன்கண் கூந்தலாற் கட்டி, அவன் மார்பு கடி கொள்ளேன் ஆயின் - அவன் மார்பின்கண் சிறை செய்யேனாயின்,

கஉ—ரு. யாய் ஓம்பிய நலன் - என் தாய் பாதுகாத்து வளர்த்த என் அழகானது, ஆர்வு உற்று - பொருளை விரும்பி, இரந்தோர்க்கு ஈயாது - இரந்தவர்களுக்கு ஈயாமல், ஈட்டியோன் பொருள் போல - சேர்த்தவன் பொருளைப்போல, பரந்து வெளிப்படாது ஆகி - வெளிப்பட்டுப் பரவாததாகி, வருந்துக - வருந்தி ஒழிவதாக.

(முடிபு) ஊரனொடு ஆவது ஆக; இனி நாண் உண்டோ; அவன் எம் சேரி சேர வருக தில்; அவன் பெண்டிர் காணத் தாரும் தானையும் பற்றித் தோள் கந்தாகக்

கூந்தலிற் பிணித்து, அவன் மார்பு கடிகொள்ளேன் ஆயின், யாய் ஓம்பிய நலன் பரந்து வெளிப்படாதாகி வருந்துக.

(வி - ரை.) வாளைப் போத்து - ஆண் வாளை; [1]'நீர் வாழ் சாதியுள் அறுபிறப் புரிய' என்பதனால் வாளை போத்து எனப்பட்டது. நாரை கள்வன்போலச் சாஅய் ஒதுங்கும் ஊரன் என்றதனால் தலைவன் மறைவிற் பிறரை நாடுவன் என்பது குறிப்பித்தவாறாயிற்று. நாண் உண்டோ - நாணியிருத்தலாற் பயனுண்டோ என்றபடி. வருகதில் என்புழி வந்தால் இன்னது செய்வல் என்னும் பொருட்டாகலின் தில் ஒழியிசைக்கண் வந்தது. அவன் பெண்டிர் என்றது, தலைமகட்குப் பாங்காயினாரை. ஆர்வுஉற்று - விரும்பி, இவறுதலை மேற்கொண்டு; ஆர்வுற்று ஈட்டியோன் என்க. இரந்தோர்க்கு ஈயாது ஈட்டியோன் பொருள் அறனும் இன்பமும் பயவாமையின், நன்மக்களால் அறியப் படாதாகியிருந்து ஒழிதல்போல, யாய் ஓம்பிய நலன் வெளிப் பாடின்றி இருந்து அழிக எனப் பரத்தை வஞ்சினம் கூறினாள் என்க. இச் செய்யுள் காமக்கிழத்தி சேரிப் பரத்தையைப் புலந்து கூறியதென்பது நச்சினார்க்கினியர் கருத்தாகும்.

(மே - ள்.) [2]'புல்லுதல் மயக்கும் புலவிக் கண்ணும்' என்னுஞ் சூத்திரத்து இச்செய்யுளைக் காட்டி, இதனுட் 'பரந்து வெளிப்படாதாகி வருந்துக என்னலம்' என்றமையிற் சேரிப்பரத்தையைப் புலந்து கூறுதல் முதலியனவுங் கொள்க என்றார் நச்.

[3]'விழைவே காலம்' என்னுஞ் சூத்திரத்து, 'தில்' ஒழியிசைப் பொருளில் வந்ததற்கு, 'வருக தில் அம்ம' என்பதனை எடுத்துக் காட்டி, வந்தக்கால் இன்னது செய்வல் என்பது பொருள் என்றனர். இளம், சேனா, தெய்வச், நச்.

## 277. பாலை

[தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குப் பருவங்கண்டழிந்து சொல்லியது.]

தண்கதிர் மண்டிலம் அவிரறச் சாஅய்ப்
பகலுரி தோற்றம் போலப் பையென
நுதலொளி கரப்பவும் ஆள்வினை தருமார்
தவலில் உள்ளமொ டெஃகுதுணை யாகக்
௫ கடையலங் குரல வாள்வரி யுழுவை
பேழ்வாய்ப் பிணவின் விழுப்பசி நோனாது
இரும்பனஞ் [4]செறும்பி னன்ன பரூஉமயிர்ச்
சிறுகட் பன்றி வருதிறம் பார்க்கும்
அத்தமார் அழுவந் தாங்கண் நணந்தலைப்

1. தொல். மரபு. ௬௨. 2. தொல். கற். ௧௦. 3. தொல். இடை. ௫. (பாடம்) 4. செறும்பி னனைய.

கo பொத்துடை மரத்த புகர்படு நீழல்
ஆறுசெல் வம்பலர் [1]அசையுந ரிருக்கும்
ஈரமில் வெஞ்சுரம் இறந்தோர் நம்வயின்
வாரா அளவை ஆயிழை கூர்வாய்
அழலகைந் தன்ன காமர் துதைமயிர்
கரு மனையுறை கோழி மறனுடைச் சேவற்
போர்புரி யெருத்தம் போலக் கஞலிய
[2]பொங்கழல் முருக்கின் ஒண்குரல் மாந்திச்
சிதர்சிதர்ந் துகுத்த செவ்வி வேனில்
வந்தன் றம்ம தானே
உo வாரார் தோழிநங் காத லோரே.

—கருவூர் நன்மார்பனார்.

(சொ - ள்.) கஅ. ஆய் இழை - ஆய்ந்த அணிகலனுடைய தோழியே,

க—கஅ. தண் கதிர் மண்டிலம் - குளிர்ந்த கதிர்களையுடைய திங்கள் மண்டிலம், அவிர் அற - விளக்கம் அற, சாஅய் - ஒளிகுன்றி, பகல் அழி தோற்றம்போல - பகலில் மறையும் செயல் போல, பை என நுதல் ஒளி கரப்பவும் - மெல்லென நமது நெற்றியின் ஒளி மாழ்கவும், ஆள்வினை தருமார் - முயற்சியால் பொருள் ஈட்டுதற்காக, தவல் இல் உள்ளமொடு - நீங்குதல் இல்லாத ஊக்கத்துடன், எஃகு துணையாக - தமது வேலே உற்ற துணையாகக் கொண்டு, கடையல் அம் குரல - தயிர்கடைவது போன்ற குரலையுடைய, வாள் வரி உழுவை - ஒளிபொருந்திய வரிகளையுடைய வேங்கையானது, பேழ் வாய் பிணவின் விழு பசி நோனாது - பிளந்த வாயினையுடைய தன் பெண்புலியின் மிக்க பசியினைப் பொறாது (சென்று), இரு பனம் செறும்பின் அன்ன - கரியபனையின் சிறும்பினைப்போன்ற, பரூஉ மயிர் - தடித்த மயிரினையும், சிறு கண் - சிறிய கண்ணினையு முடைய, பன்றி வரு திறம் பார்க்கும் - பன்றி வருகிற நெறியினைப் பார்த்திருக்கும், அத்தம் ஆர்அழுவத்து நனந்தலை ஆங்கண் - காட்டின் பரப்பாகிய அகன்ற இடத்திலே, பொத்து உடை மரத்த புகர்படு நீழல் - பொந்தினையுடைய மரங்களின் புள்ளி பட்ட நீழலில், ஆறு செல் வம்பலர் அசையுநர் இருக்கும் - வழிச் செல்லும் புதியர் தளர்ந்தனராகித் தங்கியிருக்கும், ஈரம் இல் வெம் சுரம் இறந்தோர் - ஈரம் அற்ற வெவ்விய பாலையைக் கடந்து சென்ற நம் தலைவர், நம்வயின் வாரா அளவை - நம்பால் மீண்டு வாராக் காலத்தே,

கஅ—உo. தோழி -, கூர்வாய் - கூரிய வாயினையும், அழல் அகைந்தன்ன - தீ கொழுந்துவிட் டெரிந்தாற்போலும், காமர் துதை மயிர் - அழகிய செறிந்த மயிர்ச் சிறகினையுடைய, மனை உறை கோழி மறன் உடைச் சேவல் - மனையில் உறையும் கோழியின் தறுகண்மையையுடைய சேவலின், போர் புரி எருத்தம்போல - போர்

(பாடம்) 1. அசைவின ரிருக்கும். 2. புன்காய் முருக்கின்.

செய்யுங்கால் இளர்ந்தெழும் கழுத்தினைப்போல, கஞலிய பொங்கு அழல் முருக்கின் ஒண் குரல் மாந்தி - நெருங்கிய மிக்க தீப்போலும் நிறம் வாய்ந்த செம் முருக்கினது ஒள்ளிய கொத்திலுள்ள மதுவை ஆர உண்டு, சிதர் சிதர்ந்து உகுத்த செவ்வி வேனில் - வண்டுகள் அத் தேன் சிதறுமாறு உகுத்த இளவேனிற்காலம், வந்தன்று - வந்தது, நம் காதலோர் வாரார் - நமது காதலர் இன்னும் வந்திலர், என்செய்வாம்.

(முடிபு) ஆய் இழை! நம் நுதல் ஒளி கரப்பவும், ஆள்வினை தருமார் எமக்கு துணையாக வெஞ்சுரம் இறந்தோர் நம்வயின் வாரா அளவை, செவ்வி வேனில் வந்தன்று; தோழி! நம் காதலோர் வாரார்; என் செய்வாம்.

(வி - ரை.) பகலில் ஞாயிற்றின் கதிர் முறுகுந்தோறும், திங்கள் மண்டிலம் ஒளி சிறிது சிறிதாகக் குறைந்து மறைதலின் தலைவியின் நுதல் ஒளி சிறிது சிறிதாகக் குன்றி ஒழிதற்கு உவமையாகக் கூறப்பட்டது. நுதலொளி கரப்பவும் ஆள்வினை தருமார் வெஞ்சுரம் இறந்தோர் என்றது, பிரிவுக்குறிப்பு அறிந்து தலைவர் பிரிவர் என்னும் அச்சத்தால் நமது நெற்றியின் ஒளி ஒழுகக் கெடவும், அது நோக்கி யொழியாது முயற்சியை மேற்கொண்டு சென்றவர் என்றபடி. 'தவலில் உள்ளமொடு எமக்கு துணையாக . . . சுரமில் வெஞ்சுரம் இறந்தோர்' என்றது, தலைவனுடைய ஆண்மையையும் அஞ்சாமையையும் கூறியபடியாம். கடையலங்குரல: கடையல் - தயிர் கடைதல்; அம் - அசை. தயிர் கடையும் ஓசையும் புலியின் முழக்கமும் ஒரு நிகரன என்பது [1]'புலிக்குரல் மத்தம் ஒலிப்ப வாங்கி' [2]'கடைதயிர்க் குரலவேங்கை' என்பவற்றாலும் அறியப்படும். பொத்து - பொந்து; வலித்தல் விகாரம். வெஞ்சுரம் இறந்தோர் வாராஅளவை செவ்வி வேனில் வந்தன்று; காதலோர் வாரார் என்றமையால் இள வேனிற்குமுன் வருவேம் என்று காலம் குறித்துச் சென்ற தலைவர் அது வந்த பின்னும் வந்திலரே எனத் தலைவி பருவங் கண்டழிந்து கூறினளாயிற்று. துதைமயிர்ச் சேவல் எனக் கூட்டுக. சிதர் - வண்டு. சிதர்ந்து - சிதர்ந்திட. உகுத்த என்னும் பெயரெச்சம் காலப் பெயர் கொண்டது. வண்டு உண்டு எஞ்சிய தேனைச் சிதறும்படி உகுத்த வேனில் என்றது இன்பம் நுகர்வார்க்குச் சிறந்த இளவேனில் என அதன் சிறப்புக் கூறியபடி.

---

## 278. குறிஞ்சி

[இரவுக் குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது.]

குணகடன் முகந்த கொள்ளை வானம்
பணைகெழு வேந்தர் பல்படைத் தானைத்
தோனிரைத் தனைய வாகி வலனேர்பு
கோனிமிர் கொடியின் வசிபட மின்னி

1. பெரும்பாண் - கருசு. 2. சிந்தா - உஎசஎ.

ரு உருமுர றதிர்குரல் தலைஇப் பானாட்
[1]பெருமலை மீமிசை முற்றின வாயின்
வாளிலங் கருவி தாஅய் நாளை
இருவெதி ரங்கழை ஓசியத் தீண்டி
வருவது மாதோ வண்பரி யுந்தி
கo நனிபெரும் பரப்பின் நம்மூர் முன்றுறைப்
பனிபொரு மழைக்கண் [2]சிவப்பப் பானாண்
முனிபட ரகல மூழ்குவங் கொல்லோ
மணிமருண் மேனி யாய்நலந் தொலையத்
தணிவருந் துயரஞ் செய்தோன்
கரு அணிகிளர் நெடுவரை யாடிய நீரே.

—கபிலர்.

(சொ - ள்.) தோழி !

க—கூ. குணகடல் முகந்த கொள்ளை வானம் - கீழ்கடலின் நீரை முகந்த மிகுதியையுடைய மேகங்கள், பணைகெழு வேந்தர் பல் படைத் தானை தோல் நிரைத்த அனையவாகி - முரசு பொருந்திய அரசர்களது பலவாகிய படைக்கலங்களை யுடைய சேனையின்கண்ணே நிரைக்கப்பட்ட யானைகளை ஒப்பனவாகி, வலன் ஏர்பு - வலமாக எழுந்து, கோல்நிமிர் கொடியின் வசி பட மின்னி - கோலின்கண் நிமிர்ந்த கொடிபோல வானம் பிளக்கும்படி மின்னுதலைச் செய்து, உரும் உரறு அதிர் குரல் தலைஇ - இடி இடிக்கின்ற மிக்க முழக்கத்தைப் பொருந்தி, பால் நாள் - நடு இரவில், பெருமலை மீமிசை முற்றின ஆயின் - பெரிய மலையின் உச்சியில் சூழ்ந்தன ஆகலின்,

எ—கo. நாளை - நாளை, வாள் இலங்கு அருவி தாஅய் - ஒளிவிளங்கும் அருவியானது பரந்து, இரு வெதிர் அம் கழை ஓசியத் தீண்டி - பெரிய மூங்கிலின் அழகிய தண்டு முரியும்படி தாக்கி, வண் பரி உந்தி - அழகிய குதிரை மரங்களைச் சாய்த்து, நனி பெரும் பரப்பின் நம் ஊர் முன்துறை - மிக்க பெரிய பரப்பினையுடைய நம் ஊரின் நீர்த்துறையில், வருவது - வாரா நிற்கும் (வந்தால்),

கக—ரு. மணி மருள் மேனி ஆய் நலம் தொலைய - மணியை ஒக்கும் மேனியின் அழகிய நலம் கெடும்படி, தணிவு அரும் துயரம் செய்தோன் - நீங்குதல் இல்லாத துயரத்தைச் செய்தவனுடைய, அணிகிளர் நெடுவரை ஆடிய நீர் – அழகு விளங்குகின்ற நீண்ட மலையிலே தோய்ந்து வருகின்ற நீரின்கண், பனிபொரு மழைக்கண் சிவப்ப - பனியை யொக்கும் குளிர்ந்த கண்கள் சிவக்க, பால் நாள் முனிபடர் அகல - நள்ளிரவில் வெறுக்கும் துன்பம் நீங்க, மூழ்குவம் கொல்லோ - மூழ்குவேமோ.

(முடிபு) தோழி! வானம் பெருமலை மீமிசை முற்றின; ஆயின், நாளை அருவி நம் ஊர் முன்றுறை வருவது; வந்நால், துயரஞ் செய்தோன் நெடுவரை ஆடிய நீர் பானாள் படர் அகல மூழ்குவங்கொல்லோ.

(பாடம்) 1. பெருவரை. 2. சிவப்பப் பன்னாள்.

(வி - ரை.) கொள்ளை - நீர்ப் பெருக்கு. நீருண்ட மேகத்திற்கு யானை உவமையாதலை, [1]'ஒளிறுவாட் பொருப்பன் உடல்சமத் திறுத்த, களிறு நிரைத்தவை போற் கொண்மூ' [2]'நெய்யணி குஞ்சரம் போல இருங்கொண்மூ, வைகலும் ஏரும் வலம்' என்பவற்றாலும் அறிக. இனி, தோல் பரிசை என்றலுமாம்; [3]'நெய்கனி நெடுவேல் எஃகிலை யிமைக்கும், மழைமருள் பஃறோல் மாவண் சோழர்' [4]'மாரி யம்பின் மழைத்தோற் பழையன்' என்பன காண்க. ஆயின் - ஆதலால். பரி - யாற்றில் அணை கோலுவார் நிறுத்தும் குதிரை மரம்; [5]'பரி நிறுத்துவார்' என்பது காண்க. தலைவன் நமது அழகு கெட நம்மைப் பிரிந்து நாம் முயங்குதற்குத் தன் மார்பினைத் தாராது துன்பம் செய்தான் ஆயினும், அவனது மலையினைத் தோய்ந்து வரும் நீரில் நாம் மூழ்குதலால் அவனது மார்பினைத் தோய்ந்தாற் போல் படர் அகலப் பெறுவேம் என்று தனது வேட்கை மிகுதி புலப்படுத்துத் தலைமகட்குக் கூறுவாளாய்த் தோழி தலைமகன் சிறைப்புறமாகக் கூறினாளென்க. தலைவன் இதனைக் கேட்டு விரைந்து வரைவானாதல் பயன்.

---

## 279. பாலை

[பொருள்வயிற் பிரிந்து போகாநின்ற தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.]

நட்டோ ரின்மையுங் கேளிர் துன்பமும்
ஒட்டா துறையுநர் பெருக்கமுங் காணூஉ
ஒருபதி வாழ்த லாற்றுப தில்ல
பொன்னவிர் சுணங்கொடு செறிய வீங்கிய
௫ மென்முலை முற்றங் கடவா தோரென
நன்னென் கங்குலும் பகலு மியைந்தியைந்
துள்ளம் பொத்திய உரஞ்சுடு கூரெரி
ஆள்வினை மாரியின் அவியா நாளும்
கடறுழந் திவண மாகப் படருழந்
௧௦ தியாங்கா குவள்கொல் தானே தீந்தொடை
விளரி நரம்பின் நயவரு சீறியாழ்
[6]மலிபூம் பொங்கர் மகிழ்குரற் குயிலொடு
புணர்துயி லெடுப்பும் புனறெளி காலையும்
நம்முடை மதுகைய ளாகி யணிநடை
௧௫ அன்னமாண் பெடையின் மென்மெல இயலிக்
கையறு நெஞ்சின ளடைதரும்
மையீ ரோதி மாஅ யோளே.

—[7]இருங்கோன் ஒல்லையாயன் செங்கண்ணனார்.

---

1. பரிபாடல். ௨௨ : க-௨. 2. கார்நாற்பது. ௧௨. 3. அகம். ௩௨௬. 4. அகம். ௧௮௬. 5. திருவிளை. மண்சுமந்த. ௫. (பாடம்) 6. நறை மலி பொங்கர். 7. இருங்கோக் கண்ணனார்.

(சொ - ள்.) நெஞ்சே!

௧—௯. பொன் அவிர் சுணங்கொடு - பொன்னென விளங்கும் சுணங்கினைக் கொண்டு, செறிய வீங்கிய - நெருங்கப் பணைத்த, மெல் முலை முற்றம் - மெல்லிய முலைப் பரப்பினை, கடவாதோர் - விட்டு நீங்காத நெஞ்சினர், நட்டோர் இன்மையும் - நண்புற்றார் இல்லாதொழிதலும், கேளிர் துன்பமும் - சுற்றத்தார் துன்பமுறுதலும், ஒட்டாது உறையுநர் பெருக்கமும் - மனம் பொருந்தாது உறைபவர் பெருமிதத்துடனிருத்தலும், காணூஉ - கண்டு வைத்தும், ஒரு பதி வாழ்தல் ஆற்றுப - ஒரே யிடத்தில் மடிந்திருத்தலைப் பொறுத்திருப்பார்கள், என - என்று, நள் என் கங்குலும் பகலும் - நள்ளென்னும் ஓசையையுடைய இரவிலும் பகலிலும், உள்ளம் இயைந்து இயைந்து பொத்திய - உள்ளத்திலே தோன்றித் தோன்றி மூண்ட, உரம் சுடு கூர் எரி - நெஞ்சினைச் சுடுகின்ற கவலையாகிய மிக்க தீயினை, ஆள்வினை மாரியின் அவியா - முயற்சியாகிய மழையால் அவித்து, நாளும் - ஒவ்வொரு நாளும், கடறு உழந்து இவணம் ஆக - இக்காட்டில் வருந்தி நாம் இங்கே பிரிந்திருப்பேம் ஆக,

௯—௧௭. தீம் தொடை விளரி நரம்பின் நயவரு சீறியாழ் - இனிய தொடுத்தல் அமைந்த விளரி என்னும் நரம்பினது இனிமை பொருந்திய சிறிய யாழின் இசை, மலி பூங் கொம்பர் மகிழ்குரற் குயிலொடு - மிக்க பூக்களையுடைய கொம்புகளிலிருந்து மகிழ்ந்து கூவும் குயிலின் ஒலியுடன் கூடி, புணர் துயில் எடுப்பும் புனல் தெளி காலையும் - பொருந்திய துயிலை எழுப்பும் நீர் தெளிந்து வரும் காலையும், நம்முடை மதுகையள் ஆகி - நம்மையே தன் வலியாகக்கொண்டனளாகி, அணி நடை அன்ன மாண் பெடையின் மெல்மெல இயலி - மாண்புற்ற அன்னப்பெடை போலும் அழகிய நடையால் மெல்லென நடந்து, கையறு நெஞ்சினள் - செயலற்ற நெஞ்சினளாகி, அடைதரும் - நம்மை அணையும், மை ஈர் ஓதி மாயோள் - கரிய நெடிய கூந்தலையுடைய மாமை நிறத்தினளாய நம் தலைவி, படர் உழந்து யாங்கு ஆகுவள்கொல் - துன்பத்தால் வருந்தி எத்தன்மையள் ஆவளோ.

(முடிபு) நெஞ்சே! மென்முலை முற்றம் கடவாதோர், நட்டோரின்மையும் கேளிர் துன்பமும் ஒட்டா துறையுநர் பெருக்கமும் காணூஉ, ஒருபதி வாழ்தல் ஆற்றுப; என, உள்ளம் பொத்திய உரஞ்சுடு கூரெரி, ஆள்வினை மாரியின் அவியா, நாளும் கடறுழந்திவணமாக, மை ஈர் ஓதி மாயோள் யாங்காகுவள்கொல்.

(வி - ரை.) ஒட்டாது உறையுநர் - ஒட்டார், பகைவர். மென்முலை முற்றம் கடவாதோர் என்றது - போகம் வேண்டி ஆள்வினையாற் பொருள் ஈட்டாதவர் என அதன் காரியத்தை உணர்த்திற்று. பொருள் ஈட்டாதவர் நட்டாரது வறுமையையும், சுற்றத்தாரது துன்பத்தையும் பகைவரது மிகுதியையும் களைதல் ஆற்றார் என்க. நட்டோரும் கேளிரும் துன்பமுறுதலையும் பகைவர் பெருமிதத்தோடு வாழ்தலையும் கண்டு வைத்து அவர்களுடன் ஒரு பதியில் வாழ்தல் என்பது மானமுடையார்க்குப் பொறுத்தற்கரியதாகவும், மென்முலை

முற்றங் கடவாதோர் அதனையும் பொறுப்பரென அவரது இகழ்ச்சி தோன்றக் கூறியபடி. [1]"செறுவோர் செம்மல் வாட்டலும் சேர்ந் தோர்க், குறுமிடத் துய்க்கு முதவி யாண்மையும், இல்லிருந் தமை வோர்க் கில்லென் றெண்ணி" என்பதும், அச் செய்யுளின் உரையும் ஈண்டு அறியற்பாலன. பொத்திய - ஈண்டு மூண்ட என்றபடி. அவியா உழந்து என இயையும். யாழ் குயில் என்பன ஆகுபெயர். சிறியாழ் துயிலெடுப்பும் என்றது, துயிலெடைநிலை பாடுதலைக் குறிப்பித்தவாறு. புனல் தெளி காலை - இளவேனிற் காலம். காலை யும் : உம்மை, சிறப்பும்மை. நம்முடை மதுகையள் ஆகி மென்மெல இயலிக் கையறு நெஞ்சினள் அடைதரும் மாயோள் என்றது - நாம் பிரியும் முன்பே பிரிவேமோ என்னும் அச்சத்தால் கையற்ற நெஞ் சுடன் நம்மை அகலாது அணுகும் இயல்புடையவள் என்றபடி. பிரியாவூங்கே அங்ஙனம் வருந்துபவள் நாம் பிரிந்திருக்கும் இக் காலத்தே ஊடினுரெல்லாம் கூடுதற்குரிய இவ்விளவேனிலில் யாங் காகுவளோ என்று தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லி வருந்தினு னென்க.

---

## 280. நெய்தல் –

[தலைமகளைக் கண்ணுற்று நீங்குந் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல் லியது. அல்லகுறிப்பட்டுப் போகாநின்றவன் சொல்லியதுமாம்.]

பொன்னடர்ந் தன்ன ஒள்ளிணர்ச் செருந்திப்
பன்மலர் வேய்ந்த நலம்பெறு கோதையள்
திணிமண லடைகரை அலவன் ஆட்டி
அசையின ளிருந்த ஆய்தொடிக் குறுமகள்
ரு நலஞ்சால் விழுப்பொருள் கலநிறை கொடுப்பினும்
பெறலருங் குரைய [2]ளாயின் அறந்தெரிந்து
நாமுறை தேஎம் மரூஉப்பெயர்ந் தவனொடு
இருநீர்ச் சேர்ப்பின் [3]உப்புடன் உழந்தும்
பெருநீர்க் குட்டம் புணையொடு புக்கும்
க0 படுத்தனம் பணிந்தனம் [4]அடுத்தனம் இருப்பில்
தருகுவன் கொல்லோ தானே விரிதிரைக்
கண்டிரள் முத்தங் கொண்டு ஞாங்கர்த்
தேனிமிர் அகன்கரைப் பகுக்குங்
கானலம் பெருந்துறைப் [5]பரதவன் நமக்கே.

—அம்மூவனார்.

(சொ - ள்.) (நெஞ்சே!) க—ரு. பொன் அடர்ந்தன்ன - பொற்பூக்கள் நெருங்கி யிருந்தாற்போன்ற, ஒள் இணர் செருந்தி

---

1. அகம் - உ௩௧. (பாடம்) 2. ஆயினந்தில். 3. உப்புடனுழுதும். 4. மடுத்தனம் விரும்பில். 5. பரதவன் மகளே.

பல் மலர் வேய்ந்த - ஒளி பொருந்திய கொத்துக்களையுடைய செருந்தியின் பல பூக்களைச் சூடிய, நலம் பெறு கோதையள் - அழகு பொருந்திய கூந்தலையுடையாளாகி, திணி மணல் அடைகரை - செறிந்த மணலையுடைய கடற்கரையில், அலவன் ஆட்டி - ஞெண்டினை ஓட்டி விளையாடி, அசையினள் இருந்த - இளைப்பாறி யிருந்த, ஆய் தொடி குறுமகள் - ஆய்ந்த தொடியினை அணிந்த தலைவி, நலம் சால் விழு பொருள் கலம் நிறை கொடுப்பினும் - நன்மை மிக்க சிறந்த பொருளும் அணிகலமும் நிறையக் கொடுப்பினும், பெறல் அருங் குரையள் ஆயின் - பெறுதற்கு அரியள் ஆனால்,

கக—ச. விரி திரை கண் திரள் முத்தம் கொண்டு - விரிந்த கடலில் திரண்ட வடிவினையுடைய முத்துக்களைக்கொண்டு, தேன் இமிர் அகன் கரை ஞாங்கர் பகுக்கும் - வண்டுகள் ஒலிக்கும் அகன்ற கரையிடத்தே அவைகளைப் பகுத்துக்கொள்ளும், கானல் அம் பெருந் துறை பரதவன் - சோலையினையுடைய அழகிய பெரிய துறையினையுடைய நெய்தற் றலைவனாகிய அவள் தந்தை, நமக்கு—,

கரு—கக. நாம் உறை தேஎம் மரூஉ பெயர்ந்து - நாம் தங்கும் இந்நாட்டில் பயின்றிருத்தலின் நீங்கி, அவனொடு - அவனுடன் கூடி, இரு நீர் சேர்ப்பின் உப்பு உடன் உழந்தும் - பெரிய கடற்கரையினை யடுத்த உப்புச் செறுவில் உப்புப் பொதியுடன் திரிந்து வருந்தியும், பெரு நீர் குட்டம் புணையொடு புக்கும் - பெரிய கடலின் ஆழத்தில் புணையின்கட் சென்றும், படுத்தனம் பணிந்தனம் அடுத்தனம் இருப்பின் - அவன் வயமாகியும் பணிந்தும் சார்ந்தும் இருப்பின், அறம் தெரிந்து - அறமாதலை உணர்ந்து, தருகுவன் கொல் - அவளைத் தருவானோ.

(முடிபு) நெஞ்சே! விழுப்பொருள் கலநிறை கொடுப்பினும் பெறலருங் குரையள் ஆயின், நாம் பெயர்ந்து அவனொடு உடன் உழந்தும், புணையொடு புக்கும் படுத்தனம் பணிந்தனம் அடுத்தனம் இருப்பில், பரதவன் அறந்தெரிந்து நமக்கு (அவளைத்) தருகுவன் கொல்லோ.

(வி-ரை.) பொன் அடர்ந்தன்ன - பொன் தகடாயினாற்போன்ற (செருந்திமலர்) என்றுரைத்தலுமாம். கடற்கரை யிடங்களில் உள்ள சிறு ஞெண்டுகள் மக்களைக் காண்புழி விரைந்து ஓடி அளையிற் புகுதல் சிறந்ததோர் காட்சியாக இருக்குமாகலின், சிறுவர் சிறுமியர் அவற்றை அங்கும் இங்கும் அலைத்து விளையாடுதல் இற்றைக்கும் கண்கூடு. விழுப்பொருள் - பொன். கலம் - அணிகலம். நிறை - நிறைய. மருவுதல் - பயின்று வதிதல். ஒப்புடன் உழுதும் என்று பாடங் காணப்படினும், இவ்வாசிரியரே, [1]'இருங்கழிச் செறுவின் உழாஅது செய்த, வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி' என்று கூறியிருத்தலின், ஈண்டு உழுதும் என்ற பாடம் பொருந்தாமை யுணர்க. உப்புடன் உழத்தலாவது உப்பு விற்றுத் திரிந்து வருந்துதல். படுத்தல் - அகப்படுத்தல்; அவன்வயம் ஆக்குதல். அடுத்தல் - சார்ந்திருந்

1. அகம். கசO.

தல். தருகுவன் கொல்லோ என்றமையால், தருவனாயின் அவ்வாறு செய்தும் அவளைப் பெறக்கடவேம் என்று தலைமகன் நெஞ்சிற்குக் கூறினான் என்க. நச்சினார்க்கினியர் இச் செய்யுளைத் தலைவன் பொருள்வயிற் பிரியக் கருதியதாகக்கொண்டு உரைப்பர்.

(மே - ள்.) [1]'வெளிப்படை தானே' என்னுஞ் சூத்திரத்து, இச் செய்யுளைக் காட்டி, இதனுள் பொருள் கொடுத்தாற் பெறல் அரியளாயின், தன்னை வழிபட்டால் தந்தை தருவனோ ! அது நமக்கு அரிதாகலின், இன் னும் பொருள் நாம் மிகத் தேடி வந்து வரைதும் எனப் பொருள்வயிற் பிரியக் கருதியவாறு காண்க என்பர் நச்.

---

## 281. பாலை

[தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு ஆற்றாளாகிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

செய்வது தெரிந்திசின் தோழி அல்கலும்
[2]அகலுள் ஆங்கண் அச்சறக் கூறிய
சொற்பழு தாகும் என்றும் அஞ்சாது
ஒல்கியல் மடமயில் ஒழித்த பீலி
ரு வான்போழ் வல்விற் சுற்றி நோன்சிலை
அவ்வார் விளிம்பிற் கமைந்த நொவ்வியல்
கணைகுர லிசைக்கும் விரைசெலற் கடுங்கணை
முரண்மிகு வடுகர் முன்னுற மோரியர்
தென்றிசை மாதிரம் முன்னிய வரவிற்கு
க0 விண்ணுற வோங்கிய பனியிருங் குன்றத்து
ஒண்கதிர்த் திகிரி யுருளிய குறைத்த
அறையிறந் தவரோ சென்றனர்
பறையறைந் தன்ன அலர்நமக் கொழித்தே.

—மாமூலனார்.

(சொ - ள்.) க—ங. தோழி—, அல்கலும் அகலுள் ஆங்கண், நாடோறும் ஊரின்கண்ணே யிருந்து, அச்சு அறக் கூறிய சொல் - நமக்கு அச்சம் இன்றாகக் கூறிய சொல், பழுது ஆகும் என்றும் அஞ் சாது - பழுதுபடும் எனவும் அஞ்சாமல்,

ச—கஉ. ஒல்கு இயல் மட மயில் ஒழித்த பீலி - நுடங்கும் தன்மை வாய்ந்த இளமை பொருந்திய மயில் கழித்த தோகையை, வான் போழ் வல் வில் சுற்றி - நீண்டவாரினால் வலிய வில்லில் வைத் துக் கட்டி, நோன்சிலை - அந்த வலிய வில்லின், அவ் வார் விளிம்பிற்கு அமைந்த - அழகிய நெடிய நாணின் விளிம்பிற்குப் பொருந்திய, நொவ்வு இயல் கணை குரல் இசைக்கும் விரை செலல் கடு கணை -

---

1. தொல். களா. ௰. (பாடம்) 2. அகலுள் ஆண்மை.

விரைவுத் தன்மையுடைய மிக்க ஒலி ஒலிக்கும் விரைந்தசெலவு பொருந்திய கடிய அம்புகளையுடைய, முரண் மிகு வடுகர் முன் உற-மாறுபாடு மிக்க வடுகர் தமக்கு முன்னே துணையாகி வர, மோரியர் தென் திசை மாதிரம் முன்னிய வரவிற்கு - மோரியர் என்பார் தென்றிசை நாடுகளைப் பற்ற எண்ணிப் போந்த வருகைக்கு, விண் உற ஓங்கிய பனி இரு குன்றத்து - வான் அளாவ உயர்ந்த பனியுடைய பெரிய மலையினை, ஒண் கதிர் திகிரி உருளிய - தமது ஒள்ளிய கதிர்களையுடைய ஆழி தடையின்றிச் செல்ல, குறைத்த - போழ்ந்து வழியாக்கிய, அறை இறந்து - பாறைகளைக் கடந்து,

௧௨—௩. பறை அறைந்தன்ன அலர் நமக்கு ஒழித்து - பறை அறைந்தாலொத்த அலரினை நம்பால் விடுத்து, அவரோ சென்றனர் - நம் தலைவர் போய்விட்டார்;

௧. செய்வது தெரிந்திசின் - நாம் இனிச் செயற்பாலதனை ஆராய்ந்து காண்பாயாக.

(முடிபு) தோழி, அச்சறக் கூறிய சொற்பழுதாகு மென்றும் அஞ்சாது, அவர் அறையிறந்து அலர் நமக்கு ஒழித்துச் சென்றனர்; செய்வது தெரிந்திசின்.

(வி - ரை.) அகலுள் - அகன்ற இடத்தை யுடைய ஊர் [1]'அகலுளாங்கண் அறியுநர் வினவும்' என்புழி நச்சினார்க்கினியர் உரைத்தமை காண்க. அச்சம் - அச்சு எனக் குறைந்து நின்றது. கூறிய சொல்லாவது - நின்னிற் பிரியேன் என்று பலகாலும் தெருட்டிய சொல். அஞ்சாது சென்றனர் என்று இயையும். நொவ்வு இயல் கணை குரல் - கணை விரைந்து செல்லுதலால் எழும் ஓசை. பறை அறைந்தன்ன அலர் - பறை யறைந்தாற்போல யாண்டும் பரந்து வெளிப்படும் அலர். அலர் நமக்கு ஒழித்து என்றது அலரானாகிய துன்பம் ஒன்றையே நமக்கு உரியதாக்கிச் சென்றனர் என்றபடி.

---

## 282. குறிஞ்சி

[இரவுக் குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது. தலைமகன் பிரிவின்கண் தோழிக்குத் தலைமகள் சொல்லியதுமாம்.]

பெருமலைச் சிலம்பின் வேட்டம் போகிய
செறிமடை யம்பின் வல்விற் கானவன்
பொருதுதொலை யானை வெண்கோடு கொண்டு
நீர்திகழ் சிலம்பின் நன்பொன் அகழ்வோன்
௫ கண்பொரு திமைக்குந் திண்மணி [2]கிளர்ப்ப
வைந்நுதி வான்மருப் பொடிய வுக்க
தெண்ணீ ராலி கடுக்கும் முத்தமொடு

---

1. குறிஞ்சிப். ௪. (பாடம்) 2. கிளர.

மூவேறு தாரமும் [1]ஒருங்குடன் கொண்டு
சாந்தம் பொறைமர மாக நறைநார்
க0 வேங்கைக் கண்ணியன் இழிதரு நாடற்கு
இன்றீம் பலவின் ஏர்கெழு செல்வத்து
எந்தையும் எதிர்ந்தனன் கொடையே அலர்வாய்
அம்ப லூரும் அவனொடு மொழியுஞ்
சாயிறைத் திரண்ட தோள்பா ராட்டி
கரு யாயு மவனே யென்னும் யாமும்
வல்லே வருக வரைந்த நாளென
நல்லிறை மெல்விரல் கூப்பி
இல்லுறை [2]கடவுட் கோக்குதும் பலியே.

—தொல் கபிலர்.

(சொ - ள்.) தோழி! க—க0. பெருமலைச் சிலம்பின் வேட்டம் போகிய - பெரிய மலையின் பக்கத்தே வேட்டைக்குச் சென்று, செறிமடை அம்பின் வல் வில் கானவன் - மூட்டுவாய் செறிந்த அம்பினையும் வலிய வில்லினையுமுடைய வேட்டுவன், பொருது தொலை யானை வெண் கோடு கொண்டு - தன்னுடன் போர் செய்துபட்ட யானையின் வெள்ளிய கொம்பினைக்கொண்டு, நீர் திகழ் சிலம்பின் - நீர் விளங்கும் மலையில், நன் பொன் அகழ்வோன் - சிறந்த பொன்னை அகழ்ந்து எடுப்போன், கண் பொருது இமைக்கும் திண் மணி கிளர்ப்ப - கண்ணினைப் பொருது விளங்குகின்ற திண்ணிய மணிகள் பொன்னுடன் மீப்போந்து விளங்க அவற்றை, வை நுதி வால் மருப்பு ஒடிய உக்க - கூரிய முனையையுடைய வெள்ளிய யானைக் கொம்பு ஒடிதலால் உதிர்ந்த, தெள் நீர் ஆலி கடுக்கும் முத்தமொடு - தெளிந்த நீர்மையையுடைய ஆலங்கட்டியை யொக்கும் முத்துக்களுடன் கூட்டி, மூ வேறு தாரமும் - வெவ்வேறாகிய அம் மூன்று பண்டங்களையும், சாந்தம் பொறை மரம் ஆக ஒருங்கு உடன் கொண்டு - சந்தன மரம் காவு மரமாக அவற்றை ஒரு சேரக் காவிக்கொண்டு, நறை நார் வேங்கைக் கண்ணியன் - நறைக் கொடியாய நாரினால் வேங்கை மலரைத் தொடுத்த கண்ணியை யுடையனாய், இழிதரும் நாடற்கு - அம் மலையினின்றும் இறங்கிவரும் நாட்டையுடைய நம் தலைவனுக்கு,

கக—அ. இன் தீம் பலவின் ஏர் கெழு செல்வத்து எந்தையும் - மிக்க இனிமையுடைய பலாமரங்களையுடைய அழகு மிக்க செல்வத்தையுடைய நம் தந்தையும், கொடை எதிர்ந்தனன் - நின்னைக் கொடுத்தலை ஏற்றுக்கொண்டான், அலர்வாய் அம்பல் ஊரும் - பழிமொழியினைச் சிலரும் பலரும் அறியக் கூறும் வாயினையுடைய ஊரிலுள்ளாரும், அவனொடு மொழியும் - அவனொடு நின்னைச் சேர்த்தே கூறுவர், யாயும் - நம் தாயும், சாய் இறை திரண்ட தோள் பாராட்டி - வளைந்த சந்தினையுடைய திரண்ட நின் தோள்களைப் பாராட்டி,

(பாடம்) 1. ஒருங்குடன் சாற்றிச். 2. கடவுட் காக்குதும்.

அவனே என்னும் - நினக்கு உரியன் அவனே என்று கூறுவள், யாமும் - நாமும், வரைந்த நாள் வல்லே வருக என - நம் மணத்திற்கு வரைந்த நாள் விரைந்து வருவதாக என்று, நல் இறை மெல்விரல் கூப்பி - நல்ல இறையினையுடைய மெல்லிய விரல்களைக் குவித்து, இல்லுறை கடவுட்கு - மனையுறை தெய்வத்திற்கு, பலி ஒக்குதும் - பலி செலுத்துவோமாக.

(முடிபு) கானவன் வெண்கோடு கொண்டு பொன் அகழ்வோன் மூவேறு தாரமும் ஒருங்குடன் கொண்டு இழிதரும் நாடற்கு எந்தையும் கொடை எதிர்ந்தனன்; அலர்வாய் அம்பலூரும் அவனொடு மொழியும்; யாயும் அவனே என்னும்; யாமும் நாள் வல்லே வருக என இல்லுறை கடவுட்குப் பலி ஒக்குதும்.

(வி - ரை.) நீர்திகழ் சிலம்பு - நீர் வெளிப்பட்டு விளங்கும் மலை; மாரிக்கண் உண்ட நீரினைக் கோடைக்கண் உமிழும் மலையென்க. கண்பொருது - கண்ணொளியுடன் மாறுபட்டு; கண் வழுக்குற விளங்கும் என்றபடி. பொன்னுடன் மணி கிளர்ப்ப என்க. ஆலி - நீர்த்திரள் என்னும் பொருளது; ஆலம் - நீர். தெண்ணீர் - தெளிந்த நீர் என்றே கொண்டு ஆலி பெயர் மாத்திரையாய் நின்றது என்றலுமாம். அவற்றை முத்தமொடு கூட்டி எனச் சில சொல் வருவித்துரைக்க. ஒருங்குடன் சாற்றி என்னும் பாடத்திற்கு ஒருங்கே விலை கூறி எனப் பொருள் உரைக்க. வேட்டம் போகிய கானவன், யானைக்கோடும் பொன்னும் மணியும் முத்தும் சந்தனமும் வேங்கை மலரும் பெற்று வருவன் என்றது அம் மலையின் சிறப்புக்கூறியபடி, அத்தகைய நாட்டினையுடையவன் நம் தலைவன் என்றமையால், அவன் அரும் பொருள் பலவற்றை வரை பொருளாகக் கொண்டுவந்துளான் என்றவாறாயிற்று. எந்தை நின்னை அவனுக்குக் கொடுத்தல் ஒருதலை என்பாள் எதிர்ந்தனன் கொடையெனத் துணிவுபற்றிக் கூறினாள். எதிர்ந்தனன் கொடை என்பதற்கு நின்பொருட்டுத் தலைவன் கொண்டுவந்த பொருட்கொடையை ஏற்றுக்கொண்டனன் என்றலுமாம். எந்தை கொடை எதிர்ந்தமையாலும் யாயும் அவனே உரியன் என்றதாலும் ஊரும் அவனொடு சார்த்தியே மொழிதலாலும் நீ தலைவனுக்கே உரியையாதல் ஒருதலை; எனினும் மணநாள் விரைந்து வருக என்று கடவுட்குப் பலி ஒக்குதும் எனத் தோழி தலைவிக்குக் கூறினாள் என்க. தலைவன் கேட்டு விரைந்து வரைய வருவானாதல் இதன் பயன். 'யாயும் அவனே' என்பது தாய் தெய்வத்தைப் பராவுங் குறிப்பினதென்பது நச்சினார்க்கினியர் கருத்து. இச்செய்யுள் தலைமகள் தோழிக்குச் சொல்லியதெனக் கொள்ளின், நின் என்னும் இடங்களில் நம் என உரைத்துக் கொள்க. ஆக்குதும் பலி என்பது பாடமாயின் பலி அமைப்போம் என்று உரைக்க. [1]'சேர்ப்பனை, யானுங் காதலென் யாயுநனி வெய்யள், எந்தையுங் கொடீஇயர் வேண்டும், அம்ப லூரும் அவனொடு மொழிமே' என்பது இச் செய்யுட் கருத்தொடு பெரிதும் ஒத்திருத்தல் அறிந்து இன்புறற் பாலது.

---

1. குறு. ருக.

(மே - ள்.) [1]'களவலராயினும்' என்னும் சூத்திரத்து, தெய்வம் வாழ்த்தலும் என்னும் பகுதிக்கண் இச்செய்யுளைக் காட்டி, இதனுள் 'தோள் பாராட்டி, யாயும் அவனே யென்னும்' என்று யாய் தெய்வம் பராயினள் என்பதுபடக் கூறி, யாம் அத்தெய்வத்திற்குப் பலிகொடுத்தும் என்றவாறு காண்க என்றனர் நச்.

---

## 283. பாலை

[உடன்போக்கு வலித்த தோழி தலைமகற்குச் சொல்லியது.]

நன்னெடுங் கதுப்பொடு பெருந்தோள் [2]நீவிய
நின்னிவண் ஒழிதல் அஞ்சிய என்னினுஞ்
செலவுதலைக் கொண்ட பெருவிதுப் புறுவி
பல்கவர் மருப்பின் முதுமான் போக்கிச்
ரு சில்லுணைத் தந்த சீறூர்ப் பெண்டிர்
திரிவயிற் றெவிட்டுஞ் சேட்புலக் குடிஞைப்
பைதல் மென்குரல் ஐதுவந் திசைத்தொறும்
போகுநர் புலம்பு மாறே [3]ஏகுதற்கு
அரிய வாகுமென் னுமைக் கரிமரங்
கo கண்ணகை யிளங்குழை கான்முதற் கவினி
விசும்புடன் இருண்டு வெம்மை நீங்கப்
பசுங்கண் வானம் பாய்தளி பொழிந்தெனப்
புன்னுகும் பெடுத்த நன்னெடுங் கானத்து
ஊட்டு பஞ்சிப் பிசிர்பரந் தன்ன
கரு வண்ண மூதாய் தண்ணிலம் [4]வரிப்ப
இனிய வாகுக தணிந்தே
இன்னா நீப்பின் நின்னொடு செலற்கே.

—மதுரை மருதனிளநாகனார்.

(சொ - ள்.) தலைவ! க—ரு. நல் நெடுங் கதுப்பொடு பெருந் தோள்நீவிய - தலைவியின் நல்ல நீண்ட கூந்தலொடு பெரிய தோளினைத் தடவிய, நின் இவண் ஒழிதல் அஞ்சிய என்னினும் - நின்னை ஒழிந்து இங்குத் தங்கியிருத்தலை அஞ்சியுள என்னைக்காட்டிலும், செலவு தலைக்கொண்ட - உடன்போக்கினை மேற்கொண்ட பெரு விதுப்பு உறுவி - பெரிய விரைவினை யுற்றிருக்கும் தலைவி,

கஎ. இன்னா நீப்பின் நின்னொடு செலற்கு - துன்பத்தைத் தரும் பிரிவின்கண் நின்னுடன் போதற்கு,

ச—கo. பல் கவர் மருப்பின் முதுமான் போக்கி - பல கிளைகள் பொருந்திய கொம்பினையுடைய முதிய மான்களைத் துரந்து, சில் உணா தந்த - சிறிய உணவுப் பொருளைக் கொண்டுவந்த, சீறூர் பெண்டிர்

1. தொல். கள. உச. (பாடம்) 2. நீவி. 3. ஏகுநர்க்கு. 4. பரிப்ப.

திரிவயின் - சிறிய ஊர்களிலுள்ள பெண்கள் திரியுமிடத்தே, தெவிட்டும் சேட்புலக் குடிஞை - சேய்மையிடத்தே யிருந்து ஒலிக்கும் பேராந்தையின், பைதல் மென் குரல் ஐது வந்து இசைத்தொறும் - வருத்தந்தரும் மெல்லிய குரல் மென்மையாகவந்து ஒலிக்குந்தோறும், போகுநர் புலம்பும் ஆறு - வழிப்போவார் கேட்டு வருந்தும் சுர நெறிகள், ஏகுதற்கு அரிய ஆகும் என்னுமை - செல்லற்கு அரியன ஆகும் என்றதபடி,

௧௨—௧௭. கரி மரம் கண் அகை இளம் குழை கால் முதல் கவினி - கரிந்த மரங்கள் தம்மிடத்தே கிளைக்கப்பெறும் இளைய தளிர்கள் அடிமுதற் கிளைத்து அழகு பெறவும், வெம்மை நீங்க - வெப்பம் ஒழியவும், விசும்பு உடன் இருண்டு - வானில் ஒருங்கே இருட்சியுற்று, பசுங் கண் வானம் பாய் தளி பொழிந்தென - பசுமையைத் தன்பாற் கொண்ட மேகம் பரந்த துளியினைச் சொரிந்ததாக, புல் நுகும்பு எடுத்த நல் நெடுங் கானத்து - புற்கள் குருத்தினை விட்ட நல்ல நீண்ட காட்டில், ஊட்டு பஞ்சிப் பிசிர் பரந்தன்ன - செந்நிறம் ஊட்டிய பஞ்சின் பிதிர் பரவியதுபோன்ற, வண்ணம் மூதாய் தண் நிலம் வரிப்ப - செந்நிறமுடைய தம்பலப் பூச்சிகள் குளிர்ந்த நிலத்தே அழகுறுத்த, தணிந்து இனிய ஆகுக - வெப்பம் தணிந்து இனிமையுடையன ஆகுக.

(முடிபு) தலைவ! பெருவிதுப் புறுவி நின்னொடு செலற்கு, ஆறுகள் ஏகுதற்கு அரிய ஆகும் என்னுமை, வானம் தளி பொழிந்தென, நல்நெடுங் கானத்து மூதாய் வரிப்ப, தணிந்து இனிய ஆகுக.

(வி - ரை.) அஞ்சிய - அஞ்சி உடன்போக்கு வலித்த என்றபடி. கதுப்பும் தோளும் நீவித் தலையளிசெய்த பேரன்புடைய நின்னைப் பிரிந்து தலைவி ஆற்றியிருத்தல் அரிதென அஞ்சி யான் உடன்போக்கு வலித்தேனாக, தலைவி என்னினும் முந்துற உடன்போக்கிற்கு விரைகின்றாள் என்பாள், 'அஞ்சிய என்னினும், செலவுத்தலைக்கொண்ட பெரு விதுப்புறுவி' என்றாள். விதுப்புறுதல் - ஆர்வமுடன் விரைதல். சில் உணா - மான் உண்டு எஞ்சிய சிறிய உணவு; நெல்லி முதலியன. சேட்புலத்தினின்று ஒலித்தலால் குடிஞையின் குரல் மென்குரல் எனப்பட்டது. கவினி - கவின எனத் திரிக்க. புல் - புறக் காழனவாகிய பனை முதலியனவுமாம். மழை பெய்த பின்னை நிலத்திலே பரந்துகிடக்கும் தம்பலப் பூச்சிகள் நிலத்தினைக் கோலஞ் செய்தாற்போல இனிய காட்சியைப் பயக்குமாகலின், வண்ண மூதாய் தண்ணிலம் வரிப்ப இனியவாகுக என்றாள். உடன்போக்கில் தலைவி தலைவனுடன் செல்லினும் தோழி ஆயத்தார் உள்ளிட்டாரையும் பயின்ற இடத்தையும் விடுத்துச்சேறலின் அதனையும் பாலையாகவே கொண்டு புலனெறி வழக்கம் செய்தனர் சான்றோர். உடன்போக்கானது தனக்கும் தாய் முதலாயினார்க்கும் இன்னாமை விளைத்தலின் அதனை இன்னா நீப்பு என்று தோழி கூறினள் என்க.

## 284. முல்லை

[வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது. தன்னெஞ்சிற்குச் சொல்லியதுமாம்.]

சிறியிலை நெல்லிக் காய்கண் டன்ன
குறுவிழிக் கண்ண கூரலங் குறுமுயல்
முடந்தை வரகின் வீங்குபீள் அருந்துபு
குடந்தையஞ் செவிய கோட்பவர் ஒடுங்கி
௫ இன்றுயி லெழுந்து துணையொடு போகி
முன்றிற் சிறுநிறை நீர்கண் டுண்ணும்
புன்புலந் தழீஇய பொறைமுதற் சிறுகுடித்
தினைக்கள் ளுண்ட தெறிகோல் மறவர்
விசைத்த வில்லர் வேட்டம் போகி
௧௦ முல்லைப் படப்பைப் புல்வாய் கெண்டுங்
காமர் புறவி னதுவே காமம்
நம்மினுந் தான்றலை மயங்கிய
அம்மா அரிவை உறைவி னூரே.

—இடைக்காடனார்.

(சொ - ள்.) ௧௧—௩. காமம் நம்மினும் தலைமயங்கிய - காமத்தால் நம்மைக்காட்டினும் மிக்க மயக்கமுற்ற, அம் மா அரிவை - அழகிய மாமை நிறமுடைய நம் தலைவி, உறைவு இன் ஊர் - உறைதலுறும் இனிய ஊரானது,

௧—௧௧. சிறி இலை நெல்லிக் காய் கண்டன்ன - சிறிய இலைகளையுடைய நெல்லியின் காயைக் கண்டாலொத்த, குறுவிழிக் கண்ண - குறிய விழி பொருந்திய கண்களையும், கூரல் குறுமுயல் - கூரிய மயிரினையுமுடைய குறிய முயல்கள், முடந்தை வரகின் வீங்கு பீள் அருந்துபு - வளைந்து கிடக்கும் வரகினது பருத்த குருத்தினைத் தின்று, குடந்தை அம் செவிய - வளைந்த அழகிய செவியினவாகி, கோள் பவர் ஒடுங்கி - காய்களைக் கொண்ட கொடிகளுட் புகுந்து கிடந்து, இன் துயில் எழுந்து - இனிய துயிலினின்றும் எழுந்து, துணையொடு போகி - தம் துணையொடுபோகி, முன்றில் சிறு நிறை நீர் கண்டு உண்ணும் - வீட்டு முற்றத்தேயுள்ள சிறிய சால்களிலுள்ள நீரைக்கண்டு பருகும், புன்புலம் தழீஇய - முல்லை நிலத்து ஊர்கள் சூழ்ந்த, பொறை முதல் சிறுகுடி - குன்றின் அடிகளிலுள்ள சிறிய ஊர்களிடத்தே, தினைக் கள் உண்ட தெறி கோல் மறவர் - தினையினாலாக்கிய கள்ளினையுண்ட நாணினைத் தெறித்து விடுக்கும் அம்பினையுடைய மறவர்கள், விசைத்த வில்லர் - வேகமாக இழுத்து நாண் பூட்டிய வில்லினராய், வேட்டம் போகி - வேட்டையாடி, முல்லைப் படப்பை புல்வாய் கெண்டும் - முல்லை நிலத் தோட்டத்தே மானை அறுத்து உண்ணும், காமர் புறவினது - அழகிய காட்டின் கண்ணது.

(முடிபு) காமம் நம்மினும் தலைமயங்கிய அரிவை ஊர் காபர் புறவினது. குறுமுயல் வரகின் பீள் அருந்துபு, பவர் ஒடுங்கி, துயிலெழுந்து, துணையொடு போகி, முன்றில் நிறையின் நீர் கண்டு உண்ணும் புன்புலம் எனவும், சிறு குடி மறவர் வேட்டம் போகிப் புல்வாய் கெண்டும் புறவு எனவும் இயையும்.

(வி - ரை.) கண்ணவாகிய குறுமுயல், கூரலை யுடைய குறுமுயல் என்க. கூரல் - மயிர். நிறை - நீர்ச்சால். புன்புலம் - முல்லை நிலம். முன்றில் நிறை நீர் கண்டு உண்ணும் புன்புலம் என்றமையால் முல்லை நிலத்து ஊர்கள் எனப் பொருளுரைக்கப்பட்டது. மருத நிலத்து நெல்லாற்கள் அமைத்தல் போலக் குறிஞ்சி நிலத்துத் தினையால் கள் அமைத்து உண்பராகலின் தினைக்கள் உண்ட மறவர் என்றான். புறவினது ஆகலின் நம் தேரினை ஆண்டு விரைந்து செலுத்துக எனத் தலைமகன் பாகற்குக் கூறினான் என்க. நெஞ்சிற்குக் கூறியதாயின், தலைவியிருக்கும் ஊர் புறவினது; நாம் இன்னும் ஈண்டுளோம்! என்றான் என்க.

---

## 285. பாலை

[[1]உடன்போக் குடன்படுவித்த தோழி தலைமகட்குச் சொல்லியது.]

ஒழியச் சென்மார் செல்ப வென்றுநாம்
அழிபட ருழக்கும் அவல நெஞ்சத்து
எவ்வம் இகத்துசேண் அகல வைவெயிற்று
ஊனசைப் பிணவி னுறுபசி களைஇயர்
ரு காடுதேர் மடப்பிணை யலறக் கலையின்
ஒடுகுறங் கறுத்த செந்நா யேற்றை
வெயில்புலந் திளைக்கும் வெம்மைய பயில்வரி
இரும்புலி வேங்கைக் கருந்தோ லன்ன
கல்லெடுத் தெறிந்த பல்கிழி யுடுக்கை
க0 உலறுகுடை வம்பல ருயர்மர மேறி
ஏறுவேட் டெழுந்த இனந்தீ ரெருவை
ஆடுசெவி நோக்கும் அத்தம் பணைத்தோட்
குவளை யுண்க ணிவளும் நம்மொடு
வருஉ மென்றனரே காதலர்
கரு வாராய் தோழி முயங்குகம் பலவே.

—காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக் கண்ணனார்.

(சொ - ள்.) கரு. தோழி -,

கச. காதலர் - நம் காதலர்,

க—ந. ஒழியச் சென்மார் செல்ப என்று - நாம் பிரிந்திருக்கப் பொருளீட்டச் செல்லுதற்குச் செல்வார் என்று, நாம் அழிபடர்

---

(பாடம்) 1. உடன்போக்கு அமைத்த.

உழக்கும் - நாம் மிக்க துன்பத்தால் எப்பொழுதும் வருந்தும், அவலம் நெஞ்சத்து - ஆற்றாமையுடைய மனத்தின், எவ்வம் இகந்து சேண் அகல - துன்பம் நீங்கிச் சேய்மைக்கண் ஒழியுமாறு,

௯—௧௪. வை எயிற்று ஊன் நசைப் பிணவின் உறுபசி களை இயர் - கூரிய பல்லினையுடைய ஊனை விரும்பும் பெண் நாயின் மிக்க பசியினைப் போக்குதற்கு, காடு தேர் மடப் பிணை அலற - தன் கலையினைக் காட்டில் தேடும் இளைய பெண்மான் கதற, கலையின் ஓடு குறங்கு அறுத்த செந்நாய் ஏற்றை - ஆண் மானின் ஓடித் தப்பற்குரிய தொடையினைச் சிதைத்த செந்நாயின் ஆண், வெயில் புலந்து இளைக்கும் - வெய்யிலை வெறுத்து மெலியும், வெம்மைய - வெப்பம் பொருந்தியனவும், பயில் வரி இரும்புலி வேங்கை - வரிகள் பொருந்திய பெரிய வேங்கைப் புலியின், கருந் தோல் அன்ன - விளங்கும் தோலினைப் போன்ற, கல் எடுத்து எறிந்த - ஆறலைப்போர் கல்லை எடுத்து எறிதலின், பல்கிழி உடுக்கை உலறு குடை வம்பலர் - பல கிழிவுகளைக் கொண்ட உடையினையும் உலறிய குடையினையுமுடைய புதியராய வழிச்செல்வார், உயர் மரம் ஏறி - உயர்ந்த மரத்தில் ஏறி, ஏறு வேட்டு எழுந்த - உணவை எற்றுதலை விரும்பி எழுந்த, இனம் தீர் எருவை - இனத்திற் பிரிந்து வந்த பருந்து, ஆடுசெவி நோக்கும் அத்தம் - வானில் அசையும் செவ்வியை நோக்கியிருப்பனவும் ஆகிய காட்டு நெறிகளில், பணைத்தோள் - பெருத்த தோளினையும், குவளை உண்கண் இவளும் - குவளை மலரைப் போன்ற மையுண்ட கண்களையுமுடைய இவளும், நம்மொடு வரூஉம் என்றனர் - நம்முடன் வாராநிற்பள் என்று கூறினர் ;

௧௫. வாராய் முயங்குகம் பலவே - ஆகையால் நாம் பன்முறை முயங்குதற்கு நீ வருவாயாக.

(முடிபு) தோழி! காதலர் நாம் அழிபடர் உழக்கும் நெஞ்சத்து எவ்வம் இகந்து சேண் அகல, அத்தம் இவளும் நம்மொடு வரூஉம் என்றனர்; ஆகையால் முயங்குகம் பல; வாராய்.

(வி - ரை.) அகல என்னும் எச்சம் என்றனர் என்பதன் முதனிலை கொண்டு முடியும். காடு தேர் பிணை - காட்டிலே ஆண்மான் இருக்குமிடத்தை ஆராய்ந்து திரியும் பிணை. ஓடு குறங்கு - ஓடுதற்கு ஏதுவாகிய குறங்கு. செந்நாய் ஏற்றை வெயில் புலந்து இளைக்கும் வெம்மைய என்றது காட்டின் வெம்மை மிகுதி கூறியபடி. வெம்மைய அத்தம் எனவும், வம்பலர் மரம் ஏறி எருவை ஆடு செவி நோக்கும் அத்தம் எனவும் இயையும். ஏறு - எறிதல்; [1]'கூருகிர்ப் பருந்தின் ஏறுகுறித் தொரீஇ' என்றதனாலும் இஃது இப் பொருட்டாதல் அறியப்படும். செவ்வி செவி என்றாயது. உணவு குறித்து எழுந்த பருந்து விசும்பிலே இயங்கும் திசைபற்றி, காட்டின் இயல்பு அறியப்படுமாகலின், வம்பலர் அதனை நோக்குவாராயினர் என்க.

---

1. புறம். ௪௩.

## 286. மருதம்

[வரைந் தெய்துவலென்று நீங்கும் தலைமகன் தலைமகளை ஆற்றுவித்துக் கொண்டிருத்தல் வேண்டுமென்று தோழியைக் கைப்பற்றியது தன்னைத்தொட்டுச் சூளுறுவானுகக் கருதித் தோழி சொல்லியது.

வெள்ளி விழுத்தொடி மென்கருப் புலக்கை
வள்ளி நுண்ணிடை வயின்வயி னுடங்க
மீன்சினை யன்ன வெண்மணற் குவைஇக்
காஞ்சி நீழல் தமர்வளம் பாடி
௫ ஊர்க்குறு மகளிர் குறுவழி விறந்த
இருஅல் அருந்திய சிறுசிரல் மருதின்
தாழ்சினை யுறங்குந் தண்டுறை யூர
விழையா வுள்ளம் விழையு மாயினும்
என்றுங், கேட்டவை தோட்டி யாக மீட்டாங்
௧௦ கறனும் பொருளும் வழாமை நாடித்
தற்றக வுடைமை நோக்கி மற்றதன்
பின்னா கும்மே முன்னியது முடிந்நல்
அனைய பெரியோ ரொழுக்க மதனால்
அரிய பெரியோர்த் தெரியுங் காலை
௧௫ நும்மோ ரன்னோர் மாட்டு மின்ன
பொய்யொடு மிடைந்தவை தோன்றின்
மெய்யாண் டுளதோவிவ் வுலகத் தானே.

—ஓரம்போகியார்.

(சொ - ள்.) ௧—௭. வெள்ளி விழு தொடி - வெள்ளியினாலாகிய சிறந்த பூணையுடைய, மெல் கருப்பு உலக்கை - மெல்லிய கரும்பாகிய உலக்கையால், வள்ளி நுண் இடை - கொடி போன்ற நுண்ணிய இடை, வயின் வயின் நுடங்க - அங்கும் இங்கும் அசைய, மீன் சினை அன்ன வெண்மணல் குவைஇ - மீனின் முட்டை போன்ற வெள்ளிய மணலைக் குவித்து, காஞ்சி நீழல் - காஞ்சி மரத்தின் நிழலில், தமர் வளம் பாடி - தம் குடியினர் பெருமைகளைப் பாடி, ஊர்க் குறுமகளிர் குறுவழி - ஊரிலுள்ள இளைய பெண்கள் குற்றுங்கால், விறந்த இருஅல் அருந்திய சிறு சிரல் - செறிந்த இருல் மீனைத் தின்ற சிறிய சிரற்பறவை, மருதின் தாழ்சினை உறங்கும் தண் துறை ஊர - மருதமரத்தின் தாழ்ந்த கிளையிற் சென்று துயிலும் குளிர்ந்த துறையையுடைய ஊரனே !,

௮—௧௩. என்றும் விழையா உள்ளம் விழையும் ஆயினும் - அறனல்லவற்றை என்றும் விரும்பா உள்ளம் ஒரோவழி மயங்கி விரும்புமாயினும்; கேட்டவை தோட்டியாக - கேட்ட கேள்விகள் அங்குசமாக, மீட்டு - உள்ளமாய யானையை மீட்டு, அறனும் பொருளும் வழாமை நாடி - இல்லறமும் பொருளும் வழுவாவகையை ஆய்ந்து, தன் தகவுடைமை நோக்கி - தனது தகுதியுடைமையை

உணர்ந்து, அதன் பின் - அதன் பின்னரே, முன்னியது முடித்தல் ஆகும் - தான் கருதியதை முடித்தல் உளதாகும், பெரியோர் ஒழுக்கம் - பெரியோர் ஒழுக்கங்கள், அனைய - அத்தன்மையவாம்;

௧௩—௭. அதனால் -, அரிய பெரியோர்த் தெரியுங்காலை - அரியன செய்யும் பெரியோர் செயல்களை ஆராயுமிடத்து, நும் ஓரன்னோர் மாட்டும் - நும்மை யொத்த பெரியோரிடத்தும், இன்ன பொய்யொடு மிடைந்தவை தோன்றின் - இத்தகையன பொய்யொடு கூடிய கூற்றுக்கள் தோன்றின், இவ்வுலகத்தான் - இவ்வுலகின்கண், மெய்யாண்டு உளதோ - மெய் எங்கு உளதாகும்?

(முடிபு) தண் துறை ஊர! விழையா வுள்ளம் விழையுமாயினும், மீட்டு, நாடி, நோக்கி, அதன் பின்னும் முன்னியது முடித்தல்; பெரியோர் ஒழுக்கம் அனைய; அதனால் தெரியுங்காலை நும்மோரன்னோர் மாட்டும் பொய்யொடு மிடைந்தவை தோன்றின் இவ்வுலகத்தான் மெய்யாண்டுளதோ?

(வி - ரை.) குறுமகளிர் காஞ்சி நீழலில் வெண்மணற் குவைஇ கருப்பு உலக்கையால் இடைநுடங்கத் தமர் வளம் பாடிக் குறுவழி என்க. தமர் என்றது, தம் திணை முதல்வர்களையும் அரசர் முதலாயினோரையும் குறிக்கும். கரும்புலக்கையால் குறுவர் என்றது மருதநிலத்தின் வளமிகுதி கூறியபடி; [1]'திங்கரும்பு நல்லுலக்கையாகச் செழுமுத்தம், பூங்காஞ்சி நீழல் அவைப்பார் புகார் மகளிர், ஆழிக் கொடித்திண்டேர்ச் செம்பியன் வம்பலர் தார்ப், பாழித் தடவரைத்தோட் பாடலே பாடல், பாவைமார் ஆரிக்கும் பாடலே பாடல்' என்னும் வள்ளைப் பாட்டு ஈண்டு அறிந்து இன்புறற்பாலது. அருந்திய சிறுசிரல் என்றதனால் வராஅல் என்னும் பாடம் பொருந்தாமை அறிக. பாட்டினைக் கேட்டு உறங்கும் என்க. விழையா உள்ளம் என்றது இயல்பிலே நன்றல்லதனை விரும்பாத உள்ளம் என உள்ளத்தின் தூய்மை கூறியபடி. கேட்டவை தோட்டியாக என்றமையால், உள்ளமாகிய யானையை என்க. இஃது ஏகதேச உருவகம். உள்ளம் விரும்பிய வழி அதனைச் செல்லவிடாது, விரும்பிய பொருளின் நலம் தீங்கினை ஆராய்ந்து, நன்மையாயினவழிச் செலுத்த வேண்டுமென்பது, [2]'சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ, நன்றின்பால் உய்ப்பது அறிவு' என்னும் வாயுறை வாழ்த்தால் அறியப்படும். அங்ஙனம் உள்ளத்தை மீட்டு நல்வழிப்படுத்தற்குச் சான்றோர்பால் தாம் கேட்ட பொருண்மொழிகள் பெரிதும் துணையாவன ஆகலின், 'கேட்டவை தோட்டியாக மீட்டு' என்றார். தலைவன் தன்னைக் கைப்பற்றிய அதனைச் சூளுறவாகக் கருதிய தோழி, உலகத்துப் பெரியோர் ஒழுக்கம் அத்தன்மைய ஆகலின் நும்மாட்டுப் பொய் தோன்றுமாறில்லை என்பதுபட அவனுக்குக் கூறினாள் என்பது இச் செய்யுளின் கருத்தாகும். ஆசிரியர் நக்கீரனாரும் இச் செய்யுளின் கருத்து இதுவேயாகக் கொண்டுள்ளார். நச்சினார்க்கினியர், முன்னியது என்பதற்குப் புறத் தொழுக்கம் என்றும், அரிய பெரியோர்த் தெரியுங்காலை என்பதற்குப் பெரியோர்

1. சிலப். வாழ்த்துக். ௨௯. 2. குறள். ௪௨௨.

ஒழுக்கத்தை ஆராயு மிடத்து அவை அரியவாய் இருந்தன என்றும் பொருள் கொண்டு, தலைமகன் முன்பு சூள் தப்பினன் எனத் தோழி புலந்து கூறுகின்றாளாகக் கருத்துக் கொண்டனர்.

(மே - ள்.) [1]'குறியெனப் படுவது ... மொழிப' என்னும் சூத்திரத்துச் 'செறிப் பறிவுறுக்கப்பட்ட தலைமகன் தெருள்வானாயின் இந்நாள் வரைவல், அத்துணையும் இவளை ஆற்றுவித்துக் கொண்டிரு; நினக்கு அடைக்கலமெனக் கைப்பற்றும்; கைப்பற்றியதனைத் தோழி சூளுற வாகக் கருதினள்; உலகத்துச் சூளுறுவார் பசுவையும் பார்ப்பாரையும் பெண்டிரையும் தொட்டுச் சூளுறுவராகலான்; சூளுற வாற்றார் என்பது நினைந்து, நீ வரைவல் என்றதே அமையாதோ! சூளுறல் வேண்டுமோ? பொய்த்தலும் வாய்த்தலும் உடையாரன்றே சூளுறுவர்! மெய்யல்லது சொல்லாதார்க்குச் சூளுறவு வேண்டுமோ! நின் கண்ணும் பொய்யுண்டாயின் மெய்யென்பது இவ்வுலகத்து நிலைபெற்றவழி இல்லையாகாதே!' என்னும்;' என்று உரைத்து அதற்கு உதாரணமாக இச்செய்யுளைக் காட்டினர் நக்கீரர்.

[2]'கூதிர் வேனில் என்றிரு பாசறை' என்னும் சூத்திரத்து, கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமையானும் என்னும் பகுதிக்கு, இச்செய்யுளில் 'விழையா வுள்ளம் விழையு மாயினும் ... அரிய பெரியோர்த் தெரியுங் காலை' என்னும் பகுதியை எடுத்துக் காட்டி, இது தொகுத்துக் கூறியது என்றும், [3]'பெறற்கரும் பெரும்பொருள் முடிந்தபின் வந்த' என்னும் சூத்திரத்து, பெரியோர் ஒழுக்கம் பெரிது எனக் கிளந்து பெறுதலை யில்லாப் பிழைப்பினும் என்ற பகுதியில் இச்செய்யுளைக் காட்டி, இதனுள் அறன் என்றது இல்லறத்தை; தற்றக வுடைமை நோக்கி என்றது தன்னால் அவ் வறனும் பொருளும் தகுதிப்பா டுடையவாம் தன்மை நோக்கி என்றவாறும்; முன்னியது என்றது புறத்தொழுக்கத்தை; பெரியோர் ஒழுக்கம் அனைய என்றது பெரியோர் ஒழுக்கம் பெரிய என்றவாறு, என்று உரைத்து, இது முன்னர் நிகழ்ந்த பொய்ச்சூள் பற்றி, நம்மகேளார்மாட்டும் இன்ன பொய்ச்சூள் பிறக்குமாயின் இவ்வுலகத்து மெய்ச்சூள் இனி இன்றாம்; அதனால் பெரியோரைத் தமது ஒழுக்கத்தைத் தேருங்காலை அரியவாயிருந்தனவெனத் தலைவனை நோக்கித் தோழி கூறலின், அவனை வழிபாடு தப்பினளாயிற்று. உள்ளுறை யுவமம் இதற்கு ஏற்குமாறு உணர்க என்றும் கூறினர் நச்.

---

## 287. பாலை

[பிரிந்து போகாநின்ற தலைமகன் இடைச்சுரத்து நின்று தன்னெஞ்சிற்குச் சொல்லியது.]

தொடியணி முன்கைத் தொகுவிரற் குவைஇப்
படிவ நெஞ்சமொடு பகல்துணை யாக
நோங்கொல் அளியள் தானே தூங்குநிலை

1. இறையனார் களவியல், கஅ. 2. தொல். புறத். உக. 3. தொல். கற்பு. கூ.

மரையேறு சொறிந்த மாத்தாட் கந்தின்
௫ சுரையிவர் பொதியில் அங்குடிச் சீறூர்
நாட்பலி மறந்த நரைக்கண் இட்டிகைப்
புரிசை மூழ்கிய பொரியரை யாலத்து
ஒருதனி நெடுவீழ் உதைத்த கோடை
துணைப்புறு இரிக்குந் தூமழை நனந்தலைக்
௧௦ கணைக்கா லம்பிணை யேறுபுறம் நக்க
ஒல்குநிலை யாஅத் தோங்குசினை பயந்த
அல்குறு வரிநிழல் அசையினம் நோக்க
அரம்புவந் தலைக்கு மாலை
நிரம்பா நீளிடை வருந்துதும் யாமே.

—குடவாயிற் கீரத்தனார்.

(சொ - ள்.) ௫—௯. மரை ஏறு சொறிந்த – ஆண் மரை உராய்ந் தமையால், தூங்கு நிலை - அசையும் நிலையினைப் பொருந்திய, மா தாள் கந்தின் - கரிய அடி பொருந்திய கந்தினையுடைய, சுரை இவர் பொதியில் - சுரைக்கொடி படர்ந்த அம்பலத்தின்கண்ணே, அம் குடி சீறூர் - அழகிய குடியிருப்பினையுடைய சிறூரிலுள்ளார், நாட் பலி மறந்த - விடியற்காலத்தே யிடும் பலியை மறந்தமையால், நரைக் கண் - வெளிதாகிய இடத்தினையுடைய, இட்டிகை - பலிபீடத்தை யடுத்து, புரிசை மூழ்கிய பொரி அரை ஆலத்து - மதில்போற் சூழ்ந்த பொரிகள் பொருந்திய அடியினையுடைய ஆலமரத்தின், ஒரு தனி நெடுவீழ் உதைத்த கோடை - ஒன்றாய்த் தனித்த நீண்ட விழுதினை மோதிய கோடைக் காற்று, துணைப்புறு இரிக்கும் - துணையுடன் மேவியிருந்த புறுக்களை ஓட்டும் இடமாகிய, தூ மழை நனந்தலை - மழை அற்ற அகன்ற இடத்தே,

௧௦—௪. கணைக் கால் அம் பிணை ஏறு புறம் நக்க - திரண்ட காலினையுடைய அழகிய பிணையினை அதன் கலை முதுகிடத்தே நக்க, ஒல்கு நிலை யாத்து ஓங்கு சினை பயந்த - அசையும் நிலையினை யுடைய யாமரத்தின் உயர்ந்த கிளைகளாலாகிய, அல்குறு வரி நிழல் அசையி னம் நோக்க – சுருங்கிய வரிவரியாய நிழலில் தங்கினேமாய் நோக்க, அரம்பு வந்து அலைக்கும் மாலை - குறும்பாக வந்து வருத்தும் மாலை யில், நிரம்பா நீளிடை யாம் வருந்துதும் - இந்தத் தொலையாத நீண்ட நெறியில் யாம் தனித்து வருந்துகின்றேம், (நம் தலைவி,)

௧—௩. தொடி அணி முன்கைத் தொகுவிரல் குவைஇ - வளை யினை அணிந்த முன்கையில் தொக்க விரலைக் குவித்து, படிவ நெஞ்ச மொடு - நம்மைக்காணலாம் விரதம் கொண்ட நெஞ்சத்துடன், பகல் துணையாக நோம்கொல் - பகல் நேரமே தனக்குத் துணையாக வருந்தியிருப்பளோ, அளியள் - இரங்கத்தக்காள்.

(முடிபு) யாம் யாத்து வரி நிழல் அசையினம் நோக்க அரம்பு வந்தலைக்கும் மாலை நிரம்பா நீளிடை வருந்துதும்; நம் காதலி படிவ நெஞ்சமொடு பகல் துணை யாக நோய்கொல்? அளியள்.

(வி - ரை.) தொகு விரல் குவைஇ என்றது, மகளிர்க்கு வருத்தம் மிக்கவழி நிகழ்வதொரு நிகழ்ச்சி. படிவம் - நோன்பு. வேறு துணையின்றி யென்பான் பகல்துணையாக என்றான். தான் விரைந்து சென்று அவளது வருத்தத்தைப் போக்க முடியாமை கருதி அளியள் தானே என்றான். கந்து - பொதியிலின்கண் தெய்வம் உறையும் தறி; அதன் அடி கரிதாயிருத்தலின் மாந்தாட் கந்து எனப் பட்டது. அங்குடிச் சீறூர் - முன்பு அழகிய குடியிருப்பினதாயிருந்த சீறூர் என்க. சீறூர் குடி போகப்பட்டமையின், நாட்காலத்தே பலி கொடுப்பாரின்றிப் பொதியில் பாழ்பட்டது என்பான், மரையேறு சொறிந்த தூங்கு நிலைக் கந்து எனவும், சுரை இவர் பொதியில் எனவும் கூறினான். இட்டிகை - செங்கல்; ஈண்டுப் பலிபீடம்; அதன் கண் பலியிடப் பெறுமையின் நரைக்கண் இட்டிகை எனப்பட்டது. [1]'கலிகெழு கடவுள் கந்தங் கைவிடப், பலிகண் மாறிய பாழ்படு பொதியில்' [2]'கடவுள் போகிய கருந்தாட் கந்தம்' என்பனவற்றாலும் பொதியிலில் கந்தின்கண்ணே தெய்வம் உறைதலும், பலியிடுவோ ரின்றி அது பாழ்படுதலும் அறியப்படும். தூமழை - மழை தூ என மாறுக; தூவுதல் - ஒழிதல்; [3]'கருமஞ் செயவொருவன் கைதூவேன்' என்புழித் தூவுதல் ஒழிதல் என்னும் பொருட்டாதல் காண்க. பிணை யின் வெப்பத்தைத் தணித்தற்காக ஏறு அதன் புறத்தினை நக்கும் என்க. நோக்க அலைக்கும் மாலை என்க. அரம்பு - குறும்பு. இரு பேரரசர்க்கு இடையே சிறிது பொழுது புகுந்து குடிகளை வருத்திச் செல்லும் குறுநில மன்னர் போலப் பகலுக்கும் இரவுக்கும் நடுவே புகுந்து சிறிது பொழுது நின்று தனைத்தாரிடைத் துன்புறுத்திச் செல்வதாகலின், மாலையை அரம்பு என்றான்; [4]'புன்கண் மாலைக் குறும்பெறிந்து ஓட்டி' என்றார் இளங்கோவடிகளும். நிரம்பா நீளிடை - செல்லத் தொலையாத நெடிய வழி.

---

## 288. குறிஞ்சி

[பகற்குறிக்கண் தோழி செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.]

சென்மதி சிறக்கநின் உள்ளம் நின்மலை
ஆரம் நீவிய அம்பகட்டு மார்பினை
சாரல் வேங்கைப் படுசினைப் புதுப்பூ
முருகுமுரண் கொள்ளும் உருவக் கண்ணியை
௫ எரிதின் கொல்லை யிறைஞ்சிய ஏனல்
எவ்வங் கூறிய வைகலும் வருவோய்
கனிமுதி ரடுக்கத்தெந் தனிமை காண்டலின்
எண்மை செய்தனை யாகுவை நண்ணிக்
கொடியோர் குறுகும் நெடியிருங் குன்றத்து
௧௦ இட்டா ரிரங்கும் விட்டொளி ரருவி

---

1. புறம். ௫௨. 2. அகம். ௩௦௭. 3. குறள். ௧௦௨௩. 4. சிலப். ௪-௨௪.

அருவரை யிழிதரும் வெருவரு படாஅர்க்
கயந்தலை மந்தி உயங்குபசி களைஇயர்
பார்ப்பின் றந்தை பழச்சுளை தொடினும்
நனிநோய் ஏய்க்கும் பனிகூ ரடுக்கத்து
௧௫ மகளிர் மாங்காட் டற்றே துகளறக்
[1]கொந்தோ டுதிர்த்த கதுப்பின்
அந்தீங் கிளவி தந்தை காப்பே.

—[2]விற்றூற்று மூதெயினனார்.

(சொ - ள்.) (தலைவ), ௧—௬. நின் மலை ஆரம் நீவிய அம்பகட்டு மார்பினை - நினது மலையின் சந்தனம் பூசப்பெற்ற அழகிய விளக்கம் பொருந்திய மார்பினையுடையையாய், சாரல் வேங்கை படுசினை புது பூ - பக்கமலையிலுள்ள வேங்கைமரத்தின் மிக்க கிளைகளிலுள்ள புதிய பூக்களாலாய, முருகு முரண்கொள்ளும் உருவக் கண்ணியை - பிறவற்றின் மணத்துடன் மாறுபடும் அழகிய கண்ணியை யுடையையாய், எரி தின் கொல்லை இறைஞ்சிய ஏனல் - தீயானது எரித்த கொல்லையின்கண் விளைந்து கதிர் வளைந்த தினைப்புனத்தே, எவ்வம் கூறிய வைகலும் வருவோய் - நினது துன்பத்தைக் கூறுதற்கு நாடோறும் வருவோய்!

அ—௧௫. கொடியோர் நண்ணி குறுகும் நெடி இரு குன்றத்து - ஆறலைப்போர் பொருந்தி நெருங்கியிருக்கும் நீண்ட பெரிய குன்றின், இட்டு ஆறு இரங்கும் விட்டு ஒளிர் அருவி - குறுகிய நெறியில் ஒலிக்கும் இடையிட்டு விளங்கும் அருவியானது, அருவரை இழிதரும் வெருவரு படாஅர் - அரிய மலையினின்று வந்து விழும் இடமாகிய அச்சந்தோன்றும் சிறு தூறுகளிலிருக்கும், கயந்தலை மந்தி உயங்கு பசி களைஇயர் - மெல்லிய தலையினையுடைய மந்தியின் வருத்தும் பசியினை நீக்குமாறு, பார்ப்பின் தந்தை - அதன் குட்டியினது தந்தையாய கடுவன், பழச் சுளை தொடினும் - பலாப்பழத்தின் சுளையினைத் தோண்டினும், நனி நோய் ஏய்க்கும் பனி கூர் அடுக்கத்து - மிக்க துன்பம் வந்து பொருந்தும் நடுக்கம் மிக்க (தெய்வமுடைய) பக்கமலையில் உள்ள, மகளிர் மாங்காட்டு அற்றே - கன்னியர் உறையும் மாங்காடு என்னும் ஊரின் காவலை ஒத்தது,

௧௫—௭. துகள் அற - குற்றமற, கொந்தோடு உதிர்த்த - பூங்கொத்துக்களை உதிர்த்து அணிந்த, கதுப்பின் - கூந்தலையும், அம் தீம் கிளவி தந்தை காப்பு - அழகிய இனிய சொற்களையுமுடைய இவள் தந்தையின் காவலிடம்;

எ—அ. (அங்ஙனமாகவும்), கனி முதிர் அடுக்கத்து எம் தனிமை காண்டலின் - கனிகள் முதிர்ந்துள்ள இந்தப் பக்கமலையில் நாங்கள் தனிமையுற்றிருத்தலைக் காணுதலின், எண்மை செய்தனை ஆகுவை - நீ எங்கள் அருமையுணராது எளிமை செய்தனை ஆகின்றாய்;

---

(பாடம்) 1. கொங்கோ டுதிர்த்த. 2. முத்தூற்று மூதெயினனார்.

௧. நின் உள்ளம் சிறக்க - நின் எண்ணம் சிறப்புறுவதாக; சென்மதி - சென்று வருவாயாக.

(முடிபு) தலைவ! மார்பினை, கண்ணியை, ஏனல் எவ்வங் கூறிய வைகலும் வருவோய்! அந்தீங் கிளவி தந்தை காப்பு, பனிகூர் அடுக்கத்து மகளிர் மாங்காட்டு அற்று; (அங்ஙனமாகவும்) எம் தனிமை காண்டலின் எண்மை செய்தனை ஆகுவை; சென்மதி; சிறக்க நின் உள்ளம்.

(வி - ரை.) தோழி, செறிப்பறிவுறுத்தி, தலைவனைப் பகற்குறி விலக்குகின்றாளாகலின், சென்மதி என்றும், தலைவி இற்செறிப்பு உற்றமையால், இனி எய்துதற்கு அரியள் என மனம் மாழ்கியிராது முயன்று வரைந்து கொள்ளுதி என்பாள், சிறக்க நின் உள்ளம் என்றும் கூறினாள். நின் மலை ஆரம் நீவிய என்றதனால், தலைமகன் அம்மலை நாட்டிற்குத் தலைவன் ஆதல் பெற்றாம். புதுப் பூவாலாகிய கண்ணியையுடையை என்று இயையும். முருகு முரண் கொள்ளல், பிற பூக்களின் மணத்துடன் மாறுபடுதல்; முருகனுடன் மாறுபடத் தக்க கண்ணியை யுடையையாய் என்றலுமாம். இயிமால் காட்டினை யெரித்துத் திருத்திய கொல்லையாகலின், எரிதின் கொல்லை எனப் பட்டது. எவ்வங் கூறுதல் - கெடுதி வினுதல் முதலியனவும் ஆம். அடுக்கத்து எம் தனிமை காண்டலின் என்றமையால் பிறவுழித் தனித்துக்காண்டல் அரிது என்பதாயிற்று. நெடிய என்பது நெடி என விகாரமாயிற்று. குன்றத்து இரங்கும் அருவி இழிதரும் படாஅர் என்க. இழிதரும் என்னும் பெயரெச்சம் இடப்பெயர் கொண்டது. படாஅர் - சிறுதூறு; குறுங்காடு எனலுமாம். குட்டியை ஈன்ற மந்தி என்பது தோன்ற, ஆண் குரங்கு பார்ப்பின் தந்தை எனப்பட்டது. ஈன்ற மந்தியின் அழி பசியைப் போக்குதற்கு அதன் கணவனாகிய கடுவன், தமக்கு இயல்பில் உணவாயுள்ள பழக்குலையைத் தோண்டி எடுத்தல் குற்றமாகாதென்பது தோன்ற, மந்தி உயங்கு பசி களைஇயர்...தந்தை பழச்சுளை தொடினும் எனப்பட்டது. தக்கன தகாதன அறிந்து ஒழுகற்பாலராய மக்களுட் படாது விலங்கினத்திற்பட்ட குரங்கு, இன்றியமையாக் கடப்பாடுபற்றிப் பழச்சுளை தொட்டதாயின், ஆண்டுறையும் தெய்வத்தால் அதற்கும் துன்பம் உண்டாகும் என அவ்விடத்தின் இயல்பு கூறியவாறாயிற்று. ஏய்க்கும் - ஏயும் என்றபடி. எனவே மகளிரே யுறையும் மாங்காடு எனும் பதி, தெய்வத்தின் காப்பு மிக்குடைய தென்பது போதரும். கொங்தோடு - கொந்துகளை; வேற்றுமை மயக்கம்.

---

## 289. பாலை

[பிரிந்து போகாநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]

சிலையே றட்ட கணைவீழ் வம்பலர்
உயர்பதுக் கிவர்ந்த ததர்கொடி அதிரல்
[1]நெடுநிலை நடுகல் நாட்பலிக் கூட்டுஞ்

---

(பாடம்) 1. நிரைநிலை.

சுரனிடை விலங்கிய மரனோங் கியவின்
௫ வந்துவினை வலித்த நம்வயின் என்றும்
நெருமரல் உள்ளமொடு வருந்த லானாது
நெகிழா மென்பிணி வீங்கிய கைசிறிது
அவிழினும் உயவும் ஆய்மடத் தகுவி
சேணுறை புலம்பின் நாண்முறை யிழைத்த
௧௦ திண்சுவர் நோக்கி நினைந்து கண்பனி
நெகிழ்நூல் முத்தின் முகிழ்முலைத் தெறிப்ப
மையற விரிந்த படையமை சேக்கை
ஐமென் றூவி யணைசேர் பசைஇ
மையல் கொண்ட மதனழி யிருக்கையள்
௧௫ பருவாய்ப் பல்லி படுதொறும் பரவி
நல்ல கூறென நடுங்கிப்
புல்லென் மாலையொடு பொருங்கொல் தானே.

—எயினந்தை மகன் இளங்கீரனார்.

(சொ - ள்.) ௧—௬. சிலை ஏறட்ட கணை வீழ் வம்பலர் உயர் பதுக்கு - வில்லிற் கோத்த கணையால் வீழ்ந்திறந்த புதியர்களின் உடலை மூடிய உயர்ந்த கற்குவியல்களில், இவர்ந்த - ஏறிப்படர்ந்த, ததர்கொடி அதிரல் - நெருங்கிய கொடியாகிய காட்டு மல்லிகையின் பூக்கள், நெடுநிலை நடுகல் நாள்பலி கூட்டும் - உயர்ந்த நிலையினை யுடைய நடுகல்லின் காலைப் பலிக்குக் கூட்டப்பெறும், சுரனிடை விலங்கிய மரன் ஓங்கு இயவின் - பாலை நிலத்தே குறுக்கே செல்லும் மரங்கள் உயர்ந்துள நெறியில், வந்து வினை வலித்த நம்வயின் — வந்து பொருளீட்டும் தொழிலில் உறுதி கொண்டுள நம்மிடத்தே, என்றும் நெருமரல் உள்ளமொடு வருந்தல் ஆனாது - எப்பொழுதும் நினைந்து சுழலும் உள்ளத்தால் வருந்துதல் அமையாது,

௭—௮. மென்பிணி வீங்கிய கை நெகிழா சிறிது அவிழினும் - மெத்தென்ற பிணிப்பு மிக்க கை நெகிழ்ந்து சிறிது விலகினும், உயவும் ஆய் மட தகுவி - வருந்தும் அழகிய மடப்பமுடைய நம் தலைவி,

௯—௧௪. சேண் உறை புலம்பின் நாள் முறை இழைத்த - நாம் சேய்மைக்கண் உறையும் தனிமையால் நாடோறும் முறை முறையாகக் கோடிட்டு வந்த, திண் சுவர் நோக்கி நினைந்து - திண்ணிய சுவரினைப் பார்த்து உடனுறையப் பெறுமையை நினைந்து, கண்பனி நெகிழ் நூல் முத்தின் முகிழ்முலை தெறிப்ப - கண்ணீர் நூலற்று உதிரும் முத்துக்களைப்போல முகிழ்த்த முலைமீது தெறித்து விழ, மை அற விரிந்த படை அமை சேக்கை — குற்றமற அகன்ற படுத்தல் அமைந்த படுக்கையில், ஐ மென் தூவி அணை சேர்பு அசைஇ - அழகிய மெல்லிய அன்னத்தின் சிறகாலாய அணையினைச் சேர்ந்து தங்கி, மையல் கொண்ட மதன் அழி இருக்கையள் - மயக்கம் கொண்டமையின் வலியற்ற இருக்கையளாகி,

கரு—எ. பகு வாய்ப் பல்லி படு தொறும் பரவி - பிளந்த வாயினையுடைய பல்லி ஒலிக்குந் தொறும் தெய்வத்தைத் தொழுது, நல்ல கூறு என - நல்ல மொழியினைக் கூறுவாயாக என அதனை வேண்டி, நடுங்கி - மனம் நடுங்கி, புல் என் மாலையொடு பொரும் கொல் - பொலிவற்ற மாலைக் காலத்தொடு மாறுபடுவளோ.

(முடிபு) நெகிழா மென் பிணி வீங்கிய கை சிறிது அவிழினும் உயவும் ஆய் மடத் தகுவி, மரன்ஓங்கு இயவின் வந்து வினை வலித்த நம் வயின் என்றும் வருந்தல் ஆனாது, சேண் உறை புலம்பின், நாண் முறை இழைத்த சுவர் நோக்கி நினைந்து, கண்பனி தெறிப்ப, சேக்கை அணை சேர்பு அசைஇ, மதன் அழி இருக்கையள், பல்லி படுதொறும் பரவி, நடுங்கி, மாலையொடு பொருங்கொல்.

(வி - ரை.) பதுக்கு - பதுக்கை. வழிச் செல்வார் அதிரலைப் பலிக்குக் கூட்டும் என்க; பலியாகக் கூட்டும் என்றலுமாம். ஆய் மடத் தகுவி வருந்தல் ஆனாது இழைத்த சுவர் நோக்கி நினைந்து என்று இயையும். கை சிறிது அவிழினும் உயவும் ஆய் மடத் தகுவி என்றது அவளது இளமை கூறியபடி. இழைத்த - கோடிட்ட. நோக்கி என்றது சென்ற நாட்களையும் செல்லக் கடவ நாட்களையும் எண்ணி யறிந்து என்னும் காரியம் தோன்ற நின்றது. சேக்கை அணைசேர்பு அசைஇ மதன் அழி இருக்கையள் என்றது தலைவி துயிலின்றி வருந்துதலை உணர்த்தியபடி. படுதல் - ஒலித்தல். நல்ல என்றது தலைவன் வரவு என்றபடி. கூறு என - கூறு என்று கூறி, தணந்தார்க்கு மாலைப்பொழுது பல்லாற்றானும் துன்பம் விளைப்ப தாகலான் அதனொடு நடுங்கிப் பொருங்கொல் என்றான். மாலையொடு மாறுபடுதலை [1]'மாலையோ அல்லை மணந்தார் உயிருண்ணும் - வேலைநீ வாழி பொழுது' என்பதனால் அறிக.

---

## 290. நெய்தல் -

[இரவுக் குறிக்கண் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொல்லியது ]

குடுமிக் கொக்கின் பைங்காற் பேடை
இருஞ்சேற் றள்ளல் நாட்புலம் போகிய
கொழுமீன் வல்சிப் புன்றலைச் சிறாஅர்
நுண்ஞா ணவ்வலைச் சேவல் பட்டென
ரு அல்குறு பொழுதின் மெல்கிரை மிசையாது
பைதற் பிள்ளை தழீஇ யொய்யென
அங்கட் பெண்ணை யன்புற நரலுந்
சிறுபன் மெல்குடிப் பெருநீர்ச் சேர்ப்பன்
கழிசேர் புன்னை யழிபூங் கானல்
க0 தணவா நெஞ்சமொடு தமியன் வந்துநம்

1. குறள், கஉ௩உக.

மணவா முன்னும் எவனோ தோழி
வெண்கோட் டியானை விறற்போர்க் குட்டுவன்
தெண்டிரைப் பரப்பிற் றொண்டி முன்றுறைச்
சுரும்புண மலர்ந்த பெருந்தண் நெய்தல்
௧௫ [1]மணியேர் மாணலம் ஒரிஇப்
பொன்னேர் வண்ணங் கொண்டவென் கண்ணே.

—நக்கீரர்.

(சொ - ள்.) ௧௧. தோழி—,

௧—அ. இரு சேற்று அள்ளல் - கரிய குழம்பாகிய சேற்றினையுடைய, புலம் - செய்யின்கண், நாள் போகிய - காலை வேட்டத்திற்குச் சென்ற, கொழுமீன் வல்சிப் புல்தலை சிறாஅர் - கொழுமீனாகிய உணவினையுடைய புற்கென்ற தலையினையுடைய சிறுவர் (இட்ட), நுண்ஞாண் அ வலை சேவல் பட்டெனை - நுண்ணிய கயிற்றாலாய அழகிய வலையில் சேவல் அகப்பட்டதாக, குடுமிக் கொக்கின் பைங்கால் பேடை, சூட்டினையுடைய அக்கொக்கின் பசிய காலினையுடைய பேடை, அல்குறு பொழுதின் மெல்கு இரை மிசையாது - தனித்துத் தங்கியிருக்கும் காலத்தே மெல்லும் இரையினைத் தின்னாது, பைதல் பிள்ளை தழீஇ - துன்புறும் தன் குஞ்சினைத் தழுவி - ஒய் என அம் கண் பெண்ணை அன்பு உற நரலும் - அழகிய இடத்தையுடைய பனைமரத்தின்கண் விரைவாக அன்பு தோன்ற ஒலித்திருக்கும், சிறு பல் தொல் குடி பெரு நீர்ச் சேர்ப்பன் - சிறிய பலவாய பழைய குடிகளைக்கொண்ட கடற்கரையையுடைய நம் தலைவன்,

௯—௧௧. கழி சேர் புன்னை அழி பூ கானல் - கழியைச் சார்ந்த புன்னையின் மிக்க பூக்களையுடைய சோலையில், தணவா நெஞ்சமொடு தமியன் வந்து, அன்பு நீங்காத நெஞ்சமுடன் தனியனாகி வந்து, நம் மணவா முன்னும் - நம்மைக் கலத்தற்கு முன்னும்,

௧௧—௬. என்கண் - என் கண்கள், வெண் கோட்டு யானை விறல் போர்க் குட்டுவன் - வெள்ளிய தந்தத்தினையுடைய யானையையும் போர் வெற்றியினையுமுடைய குட்டுவனது, தெண்திரைப் பரப்பின் தொண்டி முன்துறை - தெளிந்த அலைகள் பொருந்திய பரப்பினையுடைய தொண்டியின் துறைமுற்றத்தே, சுரும்புண மலர்ந்த பெரு தண் நெய்தல் - வண்டு தேனையுண்ண மலர்ந்த பெரிய தண்ணிய நெய்தற்பூவின், மணி ஏர் மாண் நலம் ஒரீஇ - நீலமணியை நிகர்த்த மாண்புற்ற அழகிய நிறத்தினை நீங்கி, பொன் நேர் வண்ணம் கொண்ட - பொன் போலும் நிறத்தைக் கொண்டன; எவனோ - இஃதென்னையோ.

(முடிபு) தோழி! சேர்ப்பன், கானல் தமியன் வந்து நம் மணவா முன்னும் என்கண் குட்டுவன் தொண்டி முன்றுறை நெய்தல் மாண்நலம் ஒரீஇ, பொன் நேர் வண்ணம் கொண்ட ; எவன்?

(பாடம்) 1. மலரேர் மாணலம்.

(வி - ரை.) குடுமி - சூடு; உச்சியின் கண்ணதோர் உறுப்பு. அள்ளற் புலம் நாட்போகிய என மாறுக. போகிய சிறாஅர் அவ் வலைச் சேவல் பட்டென என்று இயையும். அல்குறு பொழுது - தனித்துத் தங்கியிருக்கும் பொழுது. மெல்குஇரை - மென்று தின்னும் இரை; [1]'மெல்குபு பெயரா' என்புழி மெல்குதல் இப்பொருட்டாதல் காண்க. பைதற் பிள்ளை - பறக்கலாற்ரு வருத்தத்தை யுடைய பிள்ளை; பிறவற்றைக் கண்டு அஞ்சும் வருத்தத்தையுடைய பிள்ளை என்றுமாம். அன்பு - சேவலிடத்துள்ள அன்பு. கண்டார்க்கு இரக்கம் தோன்ற ஒலிக்கும் என்றலுமாம். தணவா நெஞ்சம் - காதல் நீங்காத நெஞ்சம். தலைவன் கானலிடத்துத் தனியன் வந்து இரவுக் குறிக்கண் நம்மை மணத்தல் ஒருதலை என்பாள் மணவா முன்னும் என்ருள். இரவுக் குறிக்கண் என்ன இடையீடு நேருங்கொல் என்னும் அச்சத்தால் கண்கள் பசலையுற்றன என்பாள், மணவா முன்னும் என்கண் பொன் நேர் வண்ணம் கொண்ட என்ருள். இது பசப்புறு பருவரல். மணவா முன்னும் கண்கள் பசலையுற்றன எவனே என்றதன் பயன், தலைவி நும்மைப் பிரிந்து சிறிதும் ஆற்றகிலாள் ஆகலின் நாம் விரைந்து வரைதல் வேண்டுமெனத் தலைவன் உணர்தலாம் என்க.

---

## 291. பாலை

[பொருள்வயிற் போகாநின்ற தலைமகன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.]

வானம் பெயல்வளங் கரப்பக் கானம்
உலறி யிலையில வாகப் பலவுடன்
ஏறுடை யாயந் தினம்பசி தெறுப்பக்
கயனற வறந்த கோடையொடு நயனறப்
௫ பெருவரை நிவந்த மருங்கிற் கொடுவரிப்
புலியொடு பொருது சினஞ்சிறந்து வலியோடு
உரவுக்களி றொதுங்கிய மருங்கிற் பருஉப்பரல்
சிறுபன் மின்மினி கடுப்ப எவ்வாயும்
நிறைவன இமைக்கும் நிரம்பா நீளிடை
௧௦ எருவை யிருஞ்சிறை யிரீஇய விரியிணர்த்
தாதுண் தும்பி முரலிசை கடுப்பப்
பரியின துயிர்க்கும் அம்பினர் வெருவர
உவலை சூடிய தலையர் கவலை
ஆர்த்துடன் அரும்பொருள் வவ்வலின் யாவதும்
௧௫ சாத்திடை வழங்காச் சேட்சிமை யதர
சிறியிலை நெல்லித் தீஞ்சுவைத் திரள்காய்
உதிர்வன தாஅம் அத்தம் தவிர்வின்று

---

1. சிறுபாண், ௬௫.

புள்ளி யம்பிணை உணீஇய உள்ளி
அறு[1]மருப் பொழிந்த தலைய தோல்பொதி
௨௦ மறுமருப் பிளங்கோ டதிரக் கூஉஞ்
சுடர்நெற வருந்திய அருஞ்சுரம் இறந்தாங்கு
உள்ளினை வாழிய நெஞ்சே போதெனப்
புலங்கமழ் நாற்றத் திரும்பல் கூந்தல்
நல்லெழின் மழைக்கணங் காதலி
௨௫ மெல்லிறைப் பணைத்தோள் விளங்குமாண் கவினே.

—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

(சொ - ள்.) ௨௨—௫. நெஞ்சே -, வாழிய -, போது என புலம் கமழ் நாற்றத்து - மலர் எனப் புலமெலாம் கமழும் நாற்றத்தினை யுடைய, இரும்பல் கூந்தல் - கரிய பலவாய கூந்தலையும், நல் எழில் மழைக் கண் - நல்ல அழகிய குளிர்ந்த கண்ணினையும் உடைய, நம் காதலி - நம் காதலியின், மெல் இறைப் பணைத்தோள் - மெல்லிய இறையினையுடைய பருத்த தோளின், விளங்கும் மாண் கவின் - விளங் கும் மாண்புற்ற அழகினை,

க—௯. வானம் பெயல் வளம் கரப்ப - மேகம் பெயலாய வளத் தினைத் தராதொழிய, கானம் உலறி இலையிலவாக - காடுகள் காய்ந்து இலைகளில்லாதனவாக, ஏறு உடை ஆயத்து இனம் பல உடன் பசி தெறுப்ப - ஏறுகளையுடைய ஆயமாகிய ஆனிரைகள் பலவற்றையும் ஒருங்கே பசி வருத்த, கயன் அற வறந்த கோடையொடு — குளங்கள் நீரறவற்றிய கோடையால், நயன் அற பெரு வரை நிவந்த மருங் கில் - வளம் ஒழியப் பெரிய மலை உயர்ந்த பக்கத்தில், கொடு வரிப் புலியொடு சினம் சிறந்து பொருது - வளைந்த வரிகளையுடைய புலி யுடன் சினம் மிக்குப் போர் செய்து, வலியோடு உரவுக்களிறு ஒதுங் கிய மருங்கில் - செருக்குடன் வலிய யானை நடந்த இடங்களில், பரூஉப்பரல் - பெரிய பரற்கற்கள், சிறு பல் மின் மினி கடுப்ப - சிறிய பலவாய மின்மினிப் பூச்சிகளைப் போல, எவ்வாயும் நிறைவன இமைக்கும் நிரம்பா நீளிடை - எவ்விடத்தும் நிறைந்து ஒளிவிடும் செல்லத் தொலையாத நீண்ட இடத்தே,

க0—௫. இரும் சிறை எருவை இரீஇய - பெரிய சிறகினை யுடைய பருந்து அஞ்சியோட, விரி இணர் தாது உண் தும்பி முரல் இசை கடுப்ப - விரிந்த பூங்கொத்துக்களில் பூந்துகளை உண்ணும் வண்டுகள் ஒலிக்கும் இசையைப்போல, பரியினது உயிர்க்கும் அம் பினர் - விரைந்து செல்வதாய் ஒலிக்கும் அம்பினையுடையவரும், வெருவர உவலை சூடிய தலையர் - கண்டார்க்கு அச்சம் தோன்றத் தழைக் கண்ணி சூடிய தலையினையுடையரும் ஆகிய ஆறலைப் போர், கவலை ஆர்த்து உடன் அரும் பொருள் வவ்வலின் - கவர்த்த நெறி களில் ஆரவாரித்து ஒருங்கு அரிய பொருள்களைப் பறித்துக் கோட லின், யாவதும் சாத்து இடை வழங்கா - வாணிகச் சாத்தர் சிறிதும் நெறியிடையே இயங்குதல் அற்றதும்,

(பாடம்) 1. மருப்பொழிந்த.

௧௫—௨௨. சேண் சிமை அதர - உயர்ந்த மலையுச்சிகளை யடுத்த நெறிகளிடத்தவாய, சிறி யிலை நெல்லித் தீம் சுவைத் திரள் காய் - சிறிய இலையினையுடைய நெல்லியின் இனிய சுவை பொருந்திய திரண்ட காய்கள், உதிர்வன தாஅம் அத்தம் - உதிர்ந்து பரந்து கிடக்கும் காட்டில், தவிர்வு இன்று புள்ளி அம் பிணை உணீஇய உள்ளி - தவிர்தல் இன்றிப் புள்ளிகளையுடைய அழகிய பிணைமான் உண்ண நினைந்து, அறு மருப்பு ஒழித்த தலைய - அற்று வீழும் கொம்பினை ஒழித்த தலையிற் றோன்றுவனவும், தோல் பொதி மறு மருப்பு - தோலாற் பொதியப் பெறுவனவும் ஆகிய பின்னர்த் தோன்றும் கொம்புகளாகிய, இளங்கோடு அதிர - இளைய கொம்புகள் அதிர்ந்திட, கூஉம் - ஆண்மான்கள் கூவி அழைக்கும் இடமாய, சுடர் தெற வருந்திய அரும் சுரம் இறந்து - ஞாயிறு தெறுதலால் வருத்த முற்ற அரிய சுர நெறியைக் கடந்து வந்து, உள்ளினை - நினைத்தனை.

(முடிபு) பெருவரை நிவந்த மருங்கில், களிறு ஒதுங்கிய மருங்கில், பரல் இமைக்கும் நீளிடையில், அம்பினர், நலையர் அரும்பொருள் வவ்வலின், சாத்திடை வழங்காத அருஞ்சுரம் இறந்து, நம் காதலியின் மாண்கவினை உள்ளினை.

(வி - ரை.) பொருது சினஞ் சிறந்து எனக் கிடந்தவாறே உரைத்தலுமாம். வலி - ஈண்டுத் தருக்கு; பெருமிதமுமாம். பரல் மின்மினி கடுப்ப இமைக்கும் என்றது வெயிலின் விளக்க மிகுதி கூறியபடி. இருஞ்சிறை எருவை இரீஇய என மாறுக. பரியினது - விரைந்து செல்வதாய். உயிர்த்தல் - ஒலித்தல். கலைமான் கூஉம் என எழுவாய் வருவித்துரைக்க. முன் முளைத்த கொம்பு கழன்று வேறு கொம்பு தோன்றிய பொழுது, அதனைத் தோல் மூடியிருக்குமாதலானும், அப்பொழுது உரக்க ஒலிப்பின் அவ் விளங் கொம்பு நடுங்கும் ஆதலானும், அறுமருப் பொழிந்த தலைய தோல் பொதி, மறு மருப் பிளங்கோடு அதிரக் கூஉம் எனப்பட்டது. வருந்திய சுரம் - ஆண்டுள்ள மாவும் புள்ளும் மரனும் முதலாயின வெல்லாம் வருந்திய சுரம் என்க. கொடிய காட்டினை இத்துணையும் கடந்து வந்து காதலியின் கவினை உள்ளுதலாற் பயன் என்னை என்பான், நெஞ்சே! அருஞ் சுரம் இறந்து காதலி கவின் உள்ளினை என்றான்.

ஆங்கு, அசை.

---

## 292. குறிஞ்சி

[வெறி யச்சுறீஇத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

கூறுய் செய்வது தேரா(ர்) வேறுணர்ந்து
அன்னையும் பொருளுகுத் தலமரும் மென்முறிச்
சிறுகுள கருந்து தாய்முலை பெருஅ
மறிகொலைப் படுத்தல் வேண்டி வெறிபுரி
௫ ஏதில் வேலன் கோதை துயல்வரத்
தூங்கு மாயின் அதூஉம் நாணுவல்
இலங்குவளை நெகிழ்ந்த செல்லல் புலம்படர்ந்து

இரவின் மேயல் மரூஉம் யானைக்
கால்வ லியக்கம் ஒற்றி நடுநாள்
௧0 வரையிடைக் கழுதின் [1]வன்கைக் கானவன்
கடுவிசைக் கவணின் எறிந்த சிறுகல்
உடுவுறு கணையிற் போகிச் சாரல்
வேங்கை விரியிணர் சிதறித்தேன் சிதைஉப்
பலவின் பழத்துட் டங்கும்
௧௫ மலைகெழு நாடன் மணவாக் காலே.

—கபிலர்.

(சொ - ள்.) ௧. தோழி—,

௭. இலங்குவளை நெகிழ்ந்த செல்லல் - விளங்கும் வளை நெகிழற்கு ஏதுவாய துன்பத்தினைக் கண்டு,

௧—௨. அன்னையும் - நமது அன்னையும், வேறு உணர்ந்து, அது பிறிதொன்றானுயதென உணர்ந்து, பொருள் உகுத்து - பொருளைச் சொரிந்து, அலமரும் - மனம் சுழலாநிற்கும்;

௨—௬. மெல் முறி சிறு குளகு அருந்து – மெல்லிய தளிராய சிறிய தழையுணவைத் தின்னும், தாய் முலை பெறாஅ - தாய் முலையினைப் பெறுதொழியும், மறி கொலைப் படுத்தல் வேண்டி - யாட்டுக் குட்டியினைப் பலிக்காகக் கொல்லுதலை விரும்பி, வெறிபுரி - வெறியாடலைச் செய்யும், ஏதில் வேலன் - யாதும் இயைபில்லாத வேலன், கோதை துயல்வர - மாலை தன் மார்பில் அசைந்திட, தூங்கும் ஆயின் - வெறி ஆடுவானாயின், அதூஉம் நாணுவல் – அதனையும் நாணுநிற்பேன்;

௭—௧௫. புலம் படர்ந்து இரவில் மேயல் மரூஉம் யானை - வேற்றுப்புலம் சென்று இரவில் மேய்தலைப் பொருந்தி வரும் யானையின், கால்வல் இயக்கம் ஒற்றி - கால் ஊன்றி நடக்கும் வலிய நடையைக் கூர்த்து அறிந்து, நடு நாள் – நள்ளிரவில், வரையிடைக் கழுதின் வன் கைக் கானவன் - மலையிடத்தே பரண்மீதுள்ள வலிய கையையுடைய வேட்டுவன், கடு விசைக் கவணின் எறிந்த சிறுகல் - மிக்க விசையினையுடைய கவணால் எறிந்த சிறுகல், உடு உறு கணையில் போகி – இறகினைப் பொருந்திய அம்பெனை விரைந்து சென்று, சாரல் வேங்கை விரி இணர் சிதறி - பக்கமலையிலுள்ள வேங்கை மரத்தின் விரிந்த பூங் கொத்துக்களைச் சிதறி, தேன் சிதைஉ - தேனை அழித்து, பலவின் பழத்துள் தங்கும் - பலாப் பழத்தினுள் தங்கிவிடும், மலைகெழு நாடன் மணவாக்கால் - மலைநாட்டையுடைய நம் தலைவன் நம்மை மணந்து கொள்ளாத வழி;

௧. செய்வது கூறாய் – நாம் செய்வதனைக் கூறுவாயாக.

---

(பாடம்) 1. வன்கட் கானவன்.

(முடிபு) தோழி, வளை நெகிழ்ந்த செல்லல் வேறு உணர்ந்து அன்னையும் பொருள் உகுத்து அலமரும்; வெறிபுரி ஏதில் வேலன் தூங்குமாயின் அதூஉம் நாணுவல்; மலைகெழு நாடன் மணவாக்கால், செய்வது கூறாய்.

(வி - ரை.) வேறு உணரல் – தலைவனால் உண்டாகிய செல்லலைப் பிறிதொன்றால் ஆயதெனை உணர்தல். பொருள் உகுத்து அலமரும் என்றது, கட்டினும் கழங்கினும் குறிகூறுவாரிடத்தும் வேலனிடத்தும் வறிதே பொருளைச் சொரிந்தும் அதனாற் றீராமையால் மனங்கலங்கும் என்றபடி. குளகருந்து மறி, தாய் தலை பெருஅ மறியெனத் தனித்தனி கூட்டுக; என்றது மிக்க இளமையுடையதோர் மறியென இரங்கிக் கூறியபடியாம். வேலன் வெறியாடலின் பயன் மறியைக் கோறலன்றிப் பிறிதின்றென்பாள் மறிகொலைப் படுத்தல்வேண்டித் தூங்குமாயின் என்றாள். அதூஉம் நாணுவல் என்ற உம்மையால், அன்னை அலமரும் அதனையும் நாணுவல் என்றாளாகும். [1]'பிறர்பழியும் தம் பழியும் நாணுவார் நாணுக் - குறைபதி யென்னும் உலகு' என்பதனால், அன்னையின் பயனில் செயலும் வேலனது தீச்செயலும் ஆகிய பழிகட்குத் தலைவி நாணுவாள் ஆயினள் என்க. செல்லல் வேறு உணர்ந்து எனக் கூட்டுக. ஒற்றி - மறைய நின்றுணர்ந்து என்றலுமாம். உடு - நாணிற் பொருந்தும் அம்பின் அடியுமாம். மலைகெழு நாடன் மணவாக்கால் யாது செய்வது என அஞ்சுகின்றேன் என்பாள், செய்வது கூறுயெனத் தோழிக்குக் கூறினள் என்க. [2]'நெடுவரை ஆசினிப் பணவை யேறிக், கடுவிசைக் கவணையிற் கல்கை விடுதலின், இறுவரை வேங்கையின் ஒள்வீ சிதறி, ஆசினி மென்பழம் அளிந்தவை உதிராத், தேன்செய் இறாஅல் துளைபடப் போகி, நறுவடி மாவின் பைந்துணர் உழக்கிக், குலையுடை வாழைக் கொழுமடல் கிழியாப், பலவின் பழத்துட் டங்கும், மலைகெழு வெற்பன்' என இவ்வாசிரியர் பாடிய பிறிதொரு செய்யுளின் பகுதி. 'வரையிடை....மலைகெழு நாடன்' என்னும் இப்பகுதியொடு ஒத்திருத்தல் அறிந்து மகிழ்வதற்குரியது.

(உ - றை.) கானவன் எறிந்த கல் வேங்கை வீயினை சிதறி தேன் சிதையூஉ பலவின் பழத்துட் டங்கும் என்றது, வெறியாடலால் எழும் அலர், தலைவன் குறியிடத்து வருதலைக் கெடுத்து, நமது இன்பத்தை அழித்து, நமது உள்ளத்திலே தங்குவதாகும் என்றபடி.

---

1. குறள், க0கரு. 2. குறிஞ்சிக்கலி, ரு.

## 293. பாலை

[பொருள்வயிற் பிரியக்கருதிய தலைமகன் குறிப்பறிந்து தலைமகள் தோழிக்குச் சொல்லியது. தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகட்குச் சொல்லியதூஉமாம்.]

இலையொழித் துலறிய புன்றலை யுலவை
வலைவலந் தனைய வாகப் பலவுடன்
சிலம்பி சூழ்ந்த புலங்கெடு வைப்பின்
[1]துகிலாய் செய்கைப் பாவிரிந் தன்ன
ரு வெயிலவிர்பு நுடங்கும் [2]வெவ்வெங் களரிக்
குயிற்கண் ணன்ன குரூஉக்காய் முற்றி
மணிக்கா சன்ன மானிற இருங்கனி
உகாஅ மென்சினை உதிர்வன கழியும்
வேனில் வெஞ்சுரம் தமியர் தாமே
க0 [3]செல்ப என்ப தோழி யாமே
பண்பில் கோவலர் தாய்பிரித் தியாத்த
நெஞ்சமர் குழவி போல நொந்துநொந்து
இன்னா மொழிதும் என்ப
[4]என்மயங் கினர்கொனங் காத லோரே.

—காவன்முல்லைப் பூதனார்.

(சொ – ள்.) க0. தோழி—,

கச. நம் காதலோர் - நமது காதலர்,

க—ங. இலை ஒழித்து உலறிய புன் தலை உலவை - இலைகளை உதிர்த்து வற்றிய பொலிவற்ற உச்சியினையுடைய வேல மரத்தில், வலை வலந்தனைய ஆக - வலை கட்டியன போல, சிலம்பி பல உடன் சூழ்ந்த - சிலம்பி நூல் பலவும் ஒருங்கே சூழ்ந்த, புலம் கெடு வைப்பின் - நிலம் பாழ்பட்ட இடங்களையுடைய,

ச—ரு. துகில் ஆய் செய்கை பா விரிந்தன்ன - ஆடை ஆய்ந்து நெய்யுங்கால் பாவானது விரிந்ததுபோல, வெயில் அவிர்பு நுடங்கும் வெவ் வெங் களரி - வெய்யில் விளங்கி அசையும் மிக்க வெப்பத்தையுடைய காட்டிடத்தே,

சா—க0. குயில் கண் அன்ன குரூஉக் காய் முற்றி - குயிலின் கண்ணைப் போன்ற விளங்கும் காய் முற்றி, மணிக்காசு அன்ன மால் நிற இரு கனி - அழகிய பொற்காசு போன்ற பெருமை பொருந்திய நிறத்தினையுடைய பெரிய கனி, உகாஅ மென்சினை உதிர்வன கழியும் - உகாவின் மெல்லிய கிளைகளினின்றும் உதிர்ந்து ஒழியும், வேனில் வெம் சுரம் தமியர் தாம் செல்ப என்ப - வேனிலால் வெப்பமிக்க சுரத்தில் தனித்து நம் காதலர் செல்லுவார் என்று ஊரார் கூறுகின்றனர்; மற்றும் அவரே,

---

(பாடம்) 1. துகிலானெய்கை. 2. வேல்வெங்களரி. 3. செல்ப என்னுனர், 4. என் மயங்கினர் நம்.

கo—ங. பண்பு இல் கோவலர் தாய் பிரித்து யாத்த - இரக்கம் இல்லாத கோவலர் தாயைப் பிரித்துக் கட்டிய, நெஞ்சு அமர் குழவி போல - நெஞ்சத்து அதனை விரும்பிய கன்றுபோல - நொந்து நொந்து இன்னு மொழிதும் என்ப - யாம் மிக நொந்து இன்னுதவற்றை மொழிந்திருக்கின்றேம் என்று நம்மைப் புறங்கூறுகின்றனர் ;

கச. என் மயங்கினர் கொல் - அவர் இங்ஙனம் மயங்கியது என்னையோ.

(முடிபு) தோழி! (இவ்வூரார்,) நம் காதலோர் வேனில் வெஞ்சுரம் தமியர் செல்ப என்ப; மற்றும் அவர், யாம் நொந்து நொந்து இன்னுமொழிதும் என்ப; என் மயங்கினர்கொல்.

(வி – ரை.) சிலம்பி சூழ்ந்த வைப்பு என்றதனுல் மழையின்மையும், பா விரிந்தன்ன வெயில் அவிர்பு நுடங்கும் என்றதனுல் வெம்மை மிகுதியும் கூறியபடியாம். விரிந்தன்ன – விரிந்தன்னவாக என வினையெச்சப் படுத்துக. காசு ஈண்டு பொற்காசு. உகா - பாலைக் கண்ணுள்ளதோர் மரம்; இது உகாய் எனவும் வழங்கும். குழவி போல - குழவி பலகாலும் வருந்திக் கதறுவதுபோல என விரித்துரைத்துக் கொள்க. தலைவர் கொடிய காட்டிலே தனித்துச் செல்ல, அவரைப் பிரிந்து நாம் வருந்துதல் இயல்பாகவும் அதனை அறிந்து வைத்தும் ஊரார் நம்மைப் புறன் உரைத்தல் என்னென்பாள் என் மயங்கினர் என்றாள்.

---

## 294. முல்லை

[பருவவரவின்கண் வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

மங்குல் மாமழை விண்ணதிர்பு முழங்கித்
துள்ளுப்பெயல் [1]கழிந்த பின்றைப் புகையுறப்
புள்ளிநுண் துவலை பூவகம் நிறையக்
காதலர்ப் பிரிந்த கையறு மகளிர்
ரு நீர்வார் கண்ணிற் கருவிளை மலரத்
துய்த்தலைப் பூவின் புதலிவர் ஈங்கை
நெய்த்தோய்த் தன்ன நீர்நனை யந்தளிர்
[2]இருவகிர் ஈருளின் ஈரிய துயல்வர
அவரைப் பைம்பூப் பயில அகல்வயற்
கo கதிர்வார் காய்நெல் கட்கினி நிறைஞ்சச்
சிதர்சினை தூங்கும் அற்சிர அரைநாட்
காய்சின வேந்தன் பாசறை நீடி
நந்நோய் அறியா அறனி லாளர்

(பாடம்) 1. பொழிந்த பின்றை. 2. இருவகிர் இருளின்.

இந்நிலை களைய வருகுவர் கொல்லென
கரு ஆறு தெறிதரும் வாடையொடு
நோனேன் தோழியென் [1]தனிமை யானே.

—கழார்க்கீர னெயிற்றியார்.

(சொ - ள்.) கஎ. தோழீ—, க - ௩. மங்குல் மா மழை - மிகவும் இருண்ட மேகமானது, விண் அதிர்பு முழங்கி - வானில் அதிர்ந்து முழங்கி, துள்ளு பெயல் கழிந்த பின்றை - குதித்தலாகிய பெய்தலைச் செய்து கழிந்த பின்பு, புகை உற புள்ளி நுண் துவலை - புகையைப் போலப் புள்ளியாய நுண்ணிய பனித் துளிகள், பூ அகம் நிறைய - பூக்களின் உள்ளே நிறையவும்,

ச—ரு. காதலர்ப் பிரிந்த கையறு மகளிர் — தம் காதலரைப் பிரிந்துள்ள செயலற்ற மகளிரது, நீர்வார் கண்ணில் கருவிளை மலர - நீர் ஒழுகும் கண்களைப் போலக் காக்கணம் பூ மலரவும்,

கா—அ. துய் தலை பூவின் புதல் இவர் ஈங்கை - பஞ்சு போன்ற தலையினையுடைய பூவினையுடையதும் புதர்களிற் படர்வதுமான ஈங்கையது, நெய்த் தோய்த்தன்ன நீர் நனை அம் தளிர் — நெய்யிற் றோய்த்தெடுத்தாற் போன்ற நீரால் நனைந்த அழகிய தளிர்கள், இருவகிர் ஈருளின் - இருபிளவாகிய ஈரல் போல, ஈரிய துயல்வர - ஈரமுடையனவாய் அசைந்திட,

கூ—க0. அவரை பைம் பூ பயில - அவரையின் அழகிய பூக்கள் எங்கும் செறிய, அகல் வயல் கதிர்வார் காய் நெல் கட்கு இனிது இறைஞ்ச - அகன்ற வயலிடத்தே கதிர்கள் நீண்ட காய்த்த நெல் கண்ணிற்கு இனிமையுறத் தலை வளைந்திட,

கக. சிதர் சினை தூங்கும் அற்சிர அரை நாள் — வண்டுகள் கிளைகளில் அசையாநிற்கும் முன்பனிக்காலத்து நள்ளிரவில்,

கஉ—ச. காய் சின வேந்தன் பாசறை நீடி — சின மிக்க அரசனது பாசறைக்கண்ணே நெடிது மேவி, நம் நோய் அறியா அறன் இலாளர் - நமது துன்பினை அறியாத அறன் இல்லாத தலைவர், இந்நிலை களைய வருகுவர் கொல் என — நமது இத் துயர் நிலையினை நீக்க வருவரோ என்று எண்ணி,

கரு—கா. ஆறு து எறிதரும் வாடையொடு - அமையாது வீசும் வாடைக் காற்றால், என் தனிமை - எனது தனிமையை, யான் நோனேன் - யான் பொறேனாகின்றேன்.

(முடிபு) தோழி! மங்குல் மாமழை பெயல் கழிந்த பின்றை, அற்சிர அரைநாள் வேந்தன் பாசறை நீடி, நந்நோய் அறியா அறனிலாளர் இந்நிலை களைய வருகுவர் கொல் என வாடையொடு என் தனிமை நோனேன்.

(வி - ரை.) துள்ளுப் பெயல் என்றது கார் காலத்து மிக்க மழை என்றபடி. புகையுற என்றமையால், துவலை - பனித்துவலையாயிற்று.

---

(பாடம்) 1. தனிமையினுனே,

தலைவி தலைவனைப் பிரிந்த வருத்தத்தால் நீர் ஒழுகும் கண்ணினளா யிருத்தலின், அவ்வாறே காதலரைப் பிரிந்த ஏனை மகளிரும் துன்புறுவர் எனக் கொண்டு, பனிநீர் வார மலர்ந்திருக்கும் கருவிளை மலருக்கு, மகளிர் நீர் வார் கண்ணினை உவமை கூறினாள் என்க. ஈங்கை - இண்டை. நெய்யிற் றோய்த்தெடுத்தா லொத்த நெய்ப்பும் பசுமையும் உடைய இண்டையின் தளிர் இருவகிராக ஈரல் போன்றிருக்குமாகலின், அதனை, இருவகிர் ஈருளின் ஈரிய துயல்வர என்றாள். ஈருள் - ஈரல்; 'ஈருட்டடி மூடி'[1] என்பதனால் இது அறியப்படும். வாடைக் காற்றினால் வண்டுகள் ஓரிடத்தில் நிலைபெறுதலின்றிக் கிளைகளிலே திரிந்துகொண்டிருக்குமாகலின், சிதர்சினை தூங்கும் அற்சிர அரைநாள் என்றாள். தலைவர் வந்துவிடுவர் என வற்புறுக்கும் தோழிக்குத் தாம் குறித்த கார்ப்பருவமேயன்றிக் கூதிரும் முன்பனியும் வந்தும் நாம் எய்தலாகும் துன்பத்தினை அறிந்து வருதலில்லாத அறனில்லாதவர் இனியும் வருவரோ என ஐயுற்று வாடையால் என் தனிமையைப் பொறுக்கலாற்றேன் ஆகின்றேன் எனத் தலைமகள் வன்புறை எதிரழிந்து கூறினாள் என்க. வருகுவர் கொல் என என்பது வாரார் எனக் கருதி என்றபடி. தான் நோனாமைக்குப் பிறிதும் ஏதுக் கூறுவாள் வாடையொடு நோனேன் என்றாள்.

(மே - ள்.) 'திணை மயக்குறுதலும்'[2] என்னுஞ் சூத்திரத்து, இச்செய்யுளைக் காட்டி, இம் மணிமிடை பவளத்து, முல்லையுள் முன்பனி வந்தது; நிலமும் கருவும் மயங்கிற்று; என்றார் நச்.

---

## 295. பாலை

[பிரிவிடை வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.]

நிலநீ ரற்று நீள்சுனை வறப்பக்
குன்றுகோ டகையக் கடுங்கதிர் தெறுதலின்
என்றூழ் [3]நீடிய வேய்படு நனந்தலை
நிலவுநிற மருப்பிற் பெருங்கை சேர்த்தி
௫ வேங்கை வென்ற வெருவரு பணைத்தோள்
ஓங்கல் யானை யுயங்கிமதந் தேம்பிப்
பன்மர வொருசிறைப் பிடியொடு வதியுங்
கல்லுடை யதர கானம் நீந்திக்
கடனீ ருப்பின் கணஞ்சால் உமணர்
௰ உயங்குபக டுயிர்ப்ப அசைஇ முரம்பிடித்து
அகலிடங் குழிந்த அகல்வாய்க் கூவல்
ஆறுசெல் வம்பலர் அசைவிட ஊறும்
புடையலங் கழற்காற் புல்லி குன்றத்து

---

1, சிந்தா. 2791, 2, தொல். அகத். கஉ. (பாடம்) 3. நீடியவெய்படு.

நடையருங் கானம் விலங்கி நோன்சிலைத்
கரு தொடையமை பகழித் துவன்றுநிலை வடுகர்
பிழியார் மகிழர் கலிசிறந் தார்க்கும்
மொழிபெயர் தேஎம் இறந்தனர் ஆயினும்
பழிதீர் மாணலந் தருகுவர் மாதோ
மாரிப் பித்திகத் தீரிதழ் புரையும்
உ0 அங்கலுழ் கொண்ட செங்கடை மழைக்கண்
மணங்கமழ் ஐம்பால் மடந்தைநின்
அணங்குநிலை பெற்ற தடமென் றோளே.

—மாமூலனார்.

(சொ - ள்.) கசா - உக. மாரி பித்திகத்து ஈர் இதழ் புரையும் - மாரிக்காலத்தே பூக்கும் பிச்சி மலரின் குளிர்ந்த இதழை ஒக்கும், அம் கலுழ் கொண்ட செம்கடை மழைக் கண் - அழகு ஒழுகும் சிவந்த கடையினையுடைய குளிர்ந்த கண்ணினையும், மணம் கமழ் ஐம்பால் - மணம் நாறும் கூந்தலையுமுடைய, மடந்தை - மடந்தையே!

கூ. கடல் நீர் உப்பின் கணம் சால் உமணர் - கடல் நீரால் விளைந்த உப்புவாணிகரது கூட்டம்,

க—அ. நிலம் நீர் அற்று - நிலங்கள் நீர் இல்லையாகி, நீள் சுனை வறப்ப - ஆழ்ந்த சுனைகள் வறளவும், குன்று கோடு அகைய - மலையிலே மரக்கிளைகள் எரியவும், கடு கதிர் தெறுதலின் - ஞாயிற்றின் கடிய கதிர் தெறுதலால், என்றூழ் நீடிய வேய் படு நனந்தலை - வெம்மை மிக்க மூங்கில்கள் தெறிக்கும் அகன்ற இடமாகிய, வேங்கை வென்ற வெருவரு பணை தோள் - வேங்கைப் புலியினை வென்ற அச்சம் வரும் பருத்த கையினையுடைய, ஓங்கல் யானை உயங்கி மதம் தேம்பி - மலை போன்ற யானை வருந்தி மதம் வாடி, நிலவு நிற மருப்பின் பெருங் கை சேர்த்தி - நிலாப் போலும் நிறத்தினையுடைய கொம்பிலே பெரிய கையை அணைத்துக் கொண்டு, பல்மர ஒரு சிறை பிடியொடு வதியும் - பல மரங்களையுடைய ஒரு பக்கத்தே தன் பிடியோடு தங்கிக் கிடக்கும், கல் உடை அதர கானம் நீந்தி - கற்கள் பொருந்திய நெறிகளையுடைய காட்டினைக் கடந்து,

க0—உ. உயங்கு பகடு உயிர்ப்ப அசைஇ - உப்புப் பொறையினை ஈர்த்து வருந்திய எருதுகள் இளைப்பாறத் தங்கி, முரம்பு இடித்து அகல் இடம் குழித்த அகல்வாய்க் கூவல் - வன்னிலத்தை இடித்து விரிந்த இடத்திலே தோண்டின அகன்ற வாயினையுடைய கிணறு, ஆறு செல் வம்பலர் அசைவிட ஊறும் - அந்நெறியே செல்லும் புதியர்கள் தளர்ச்சி நீங்க ஊறும் இடமாகிய,

கங—எ. புடையல் கழல் கால் புல்லி குன்றத்து - ஒலிக்கின்ற வீரக் கழலணிந்த காலையுடைய புல்லி என்பானது வேங்கட மலையைச் சார்ந்த, நடை அரு கானம் விலங்கி - செல்லற்கு அரிய காட்டினைக் கடந்து, நோன் சிலை தொடை அமை பகழி துவன்று நிலை வடுகர் - வலிய வில்லில் தொடுத்தல் அமைந்த அம்புகளின் செறிவினை

யுடைய வடுகர், பிழிஆர் மகிழர் - கள்ளினை யுண்ட மகிழ்ச்சியுடைய ராய், கலி சிறந்து ஆர்க்கும் - செருக்கு மிக்கு ஆரவாரிக்கும், மொழி பெயர் தேஎம் இறந்தனர் ஆயினும் - வேற்று மொழி வழங்கும் தேயத்தைக் கடந்து சென்றுளாராயினும்,

௨௧—௨. நின் அணங்கு நிலைபெற்ற தடமென் தோள் - நினது அழகு நிலைபெற்ற பெரிய மெல்லிய தோளின்,

௧௮. பழிதீர் மாண் நலம் தருகுவர் - குற்றமற்ற சிறந்த நலத்தினை வந்து தந்தருள்வர்.

(முடிபு) மடந்தை! (நம் தலைவர்) புல்லிகுன்றத்துக் கானம் விலங்கி வடுகர் கலிசிறந்தார்க்கும் மொழி பெயர் தேஎம் இறந்தனராயினும், நின்தோள் மாண் நலம் தருகுவர்.

உமணர் கானம் நீந்திப் பகடு உயிர்ப்ப அசைஇக் குழீஇந்த கூவல் வம்பலர் அசைவிட ஊறும் புல்லிகுன்றம் என்க.

(வி - ரை.) என்றூழ் நீடிய கானம் எனவும், நனந்தலைக் கானம் எனவும், யானை பிடியோடு வதியும் கானம் எனவும் தனித்தனிக் கூட்டுக. யானை மருப்பிற் கைசேர்த்திவதியும் என்க. ஓங்கல் - உயர்ச்சியுமாம். அசை - அசைவு; நீர் வேட்கையால் ஆம் தளர்ச்சி. தலைவர் விரைந்து வந்து நின் துன்பத்தைப் போக்கி இன்பம் தருவர் என்பாள் நின் தோள் மாணலம் தருகுவர் என்றாள்.

## 296. மருதம்

[வாயில் வேண்டிச் சென்ற தலைமகற்கு வாயின் மறுக்கும் தோழி சொல்லியது.]

கோதை யிணர குறுங்காற் காஞ்சிப்
போதவிழ் நறுந்தா தணிந்த கூந்தல்
அரிமதர் மழைக்கண் மாஅ யோளொடு
நெருநையுங் கமழ்பொழிற் [1]றுஞ்சி இன்றும்
௫ பெருநீர் வையை அவளொ டாடிப்
புலரா மார்பினை வந்துநின் றெம்வயிற்
கரத்தல் கூடுமோ மற்றே பரப்பிற்
பன்மீன் கொள்பவர் முகந்த இப்பி
நாரரி நறவின் மகிழ்நொடைக் கூட்டும்
௧௦ பேரிசைக் கொற்கைப் பொருநன் வென்வேற்
கடும்பகட் டியானை நெடுந்தேர்ச் செழியன்
மலைபுரை நெடுநகர்க் [2]கூடல் ஆடிய
மலிதரு கம்பலை போல
அலரா கின்றது பலர்வாய்ப் பட்டே.

—மதுரைப் பேராலவாயார்.

(பாடம்) 1. துஞ்சினை யின்றும். 2. கூடனிடிய.

(சொ - ள்). தலைவ !

க—எ. கோதை இணர குறுங்கால் காஞ்சி - மாலை போன்ற கொத்துக்களையுடைய குறிய அடியினையுடைய காஞ்சிமரத்தின், போது அவிழ் நறும் தாது அணிந்த கூந்தல் - மலர் விரிந்த நறிய பொடியினை அணிந்த கூந்தலையும், அரிமதர் மழைக் கண் - செவ்வரி பரந்த மதர்த்த குளிர்ந்த கண்ணினையும் உடைய, மாஅயோளொடு - மாமை நிறத்தினையுடைய பரத்தையுடன், நெருநையும் கமழ் பொழில் துஞ்சி - நேற்றும் மணம் கமழும் பொழிலில் துயின்று, இன்றும் அவளொடு பெருநீர் வையை ஆடி - இன்றும் அவளுடன் வையை நீர்ப்பெருக்கில் விளையாடி, புலரா மார்பினை - ஈரம் புலராத மார்பினையுடையையாய், எம் வயின் வந்து நின்று - எம்பால் வந்து நின்று, கரத்தல் கூடுமோ - எமக்கு மறைத்தல் இயலுமோ ?, மற்று - இயலாதன்றே, (அச்செயல்)

எ—கச. பரப்பில் - கடல் நீர்ப் பரப்பில், பல் மீன் கொள்பவர் - பல மீன்களையும் பிடிப்போர், முகந்த இப்பி - அவற்றுடன் சேரக் கொண்ட சிப்பிகளை, நார் அரி நறவின் மகிழ் நொடைக் கூட்டும் - பன்னாடையால் அரிக்கப் பெறும் மகிழ்ச்சி தரும் கள்ளின் விலையாகச் சேர்க்கும், பேர் இசைக் கொற்கைப் பொருநன் - பெரிய புகழினையுடைய கொற்கைக்குத் தலைவனாகிய, வென்வேல் - வென்றியைத் தரும் வேலையும், கடு பகட்டு யானை நெடுந்தேர்ச் செழியன் - கடிய பெரிய யானையினையும் நெடிய தேரினையுமுடைய பாண்டியன் நெடுஞ் செழியன், மலைபுரை நெடு நகர் கூடல் - மலையையொத்த நீண்ட கோயிலையுடைய மதுரைக்கண், ஆடிய - வெற்றிக் களிப்பால் ஆடியதனால் எழுந்த, மலிதரு கம்பலை போல - நிறைந்த ஆரவாரம்போல, பலர்வாய்ப்பட்டு அலராகின்றது - பலர் வாயாலும் கூறப்பட்டு அலராகின்றது.

(முடிபு) தலைவ, மாஅயோளொடு நெருநையும் பொழில் துஞ்சி, இன்றும் வையை அவளொடு ஆடிப் புலரா மார்பினை வந்து நின்று, எம்வயிற் கரத்தல் கூடுமோ ? மற்று ; அது செழியன் கூடல் ஆடிய கம்பலைபோலப் பலர் வாய்ப் பட்டு அலராகின்றது.

(வி - ரை.) புலரா மார்பினை என்பதனை இரட்டுற மொழிதலாகக் கொண்டு, பரத்தை செய்த குறி நீங்காத மார்பினையுடையையாய் எனவும் உரைத்துக் கொள்க. பரத்தையிற் பிரிந்து வந்து தலைவியை ஊடல் நீக்கிக் கூட விழைந்து தோழியை வாயில் வேண்டி நிற்பவன், யான் பரத்தையை அறியேன் என்றானாக, நீ நெருநை அவளுடன் துஞ்சி அவள் செய்த குறியோடும் இன்று அவளுடன் நீராடிப் புலராத மார்போடும் வந்து நின்று, நின் புறத் தொழுக்கத்தை மறைத்தல் யாங்ஙனம் என்பாள், புலரா மார்பினை வந்து நின்று எமவயிற் கரந்தல் கூடுமோ என்றாள். மற்று, வினைமாற்று. இப்பி - முத்துக்கு ஆகுபெயருமாம்.

பாண்டியன் கூடலில் ஆடியபொழுது ஆரவாரம் எழுந்தது, [1]'வாடாப்பூவிற் கொங்கரோட்டி, நாடுபல தந்த பசும்பூட் பாண்டியன், பொன்மலி நெடுநகர்க் கூட லாடிய, இன்னிசை யார்ப்பினும் பெரிதே' என முன்னரும் போந்தமை அறியற்பாலது.

---

## 297. பாலை

[பொருள்வயிற் போகாநின்ற தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.]

பாஅட் கங்குலும் பெரும்புன் மாலையும்
ஆறு நோயொ டுறிபடர்க் கலங்கி
நம்வயின் நினையும் இடும்பை கைம்மிக
என்னை யாகுமோ நெஞ்சே நம்வயின்
௫ இருங்கவின் இல்லாப் பெரும்புன் றாடிக்
[2]கடுங்கண் மறவர் பகழி மாய்த்தென
[3]மருங்குல் நுணுகிய பேஎமுதிர் நடுகற்
பெயர்பயம் படரத் [4]தோன்று குயிலெழுத்து
இயைபுடன் நோக்கல் செல்லா தசைவுடன்
க0 ஆறுசெல் வம்பலர் விட்டனர் கழியுஞ்
[5]சூர்முதலிருந்த ஓமையம் புறவின்
ஈர்முள் வேலிப் புலவுநாறு முன்றில்
எழுதி யன்ன கொடிபடு வெருகின்
பூளை யன்ன பொங்குமயிர்ப் பிள்ளை
கரு மதிசூழ் மீனிற் றாய்வழிப் படூஉஞ்
சிறுகுடி மறவர் சேக்கோட் டண்ணுமைக்கு
எருவைச் சேவல் இருஞ்சிறை பெயர்க்கும்
வெருவரு கானம் நம்மொடு
வருவ லென்றோள் மகிழ்மட நோக்கே.

—மதுரை மருத னிளநாகனார்.

(சொ - ள்.) ச. நெஞ்சே—,

௫—கக. இரும் கவின் இல்லாப் பெரும் புல் தாடி - மிக்க அழகு இல்லாத பெரிய பொலிவற்ற தாடியினையும், கடுங்கண் மறவர் பகழி மாய்த்தென - வன்கண்மையையும் உடைய மறவரது அம்பு தேய்த்ததாக, மருங்குல் நுணுகிய பேஎம் முதிர் நடுகல் - பக்கம் மெலிந்த அச்சம் மிக்க நடுகல்லில், பெயர் பயம் படரத் தோன்று குயில் எழுத்து - பெயரும் பீடும் விரியத் தோன்றுமாறு பொறித்த எழுத்துக்களை, இயைவு உடன் நோக்கல் செல்லாது - ஒருங்கு சேர்த்து நோக்குதல் மாட்டாராய், அசைவுடன் - தளர்ச்சியுடன், ஆறு செல் வம்பலர் விட்டனர் கழியும் - வழிச் செல்லும் புதியர்

1. அகம். உ௫௩. (பாடம்) 2. கடுங்கணை மழவர், 3. மருங்கில் நுணுகிய. 4. தோன்று குயிலெழுத்து. 5. சுரமுதலிருந்த.

அதனை விடுத்து நீங்கும், சூர் முதல் இருந்த ஓமைப் புறவின் - தெய்வம் அடியிலிருக்கப் பெற்ற ஓமை மரங்களையுடைய காட்டிலுள்ள,

கஉ—கரு. ஈர்முள் வேலிப் புலவு நாறு முன்றில் - ஈர்கின்ற முள் வேலியினையுடைய புலால் நாறும் முற்றத்தே, எழுதி யன்ன கொடி படு வெருகின் - ஓவியத்து எழுதினாற் போன்ற மெலிந்து நீண்ட பூனையின், பூளை அன்ன பொங்கு மயிர்ப் பிள்ளை - பூளைப் பூவினை யொத்த விளங்குகின்ற மயிரினையுடைய குட்டிகள், மதிசூழ் மீனில் தாய் வழிப் படூஉம் - திங்களைச் சூழ்ந்துள விண்மீன் போலத் தம் தாயின் பின் சூழ்ந்திருக்கும், சிறு குடி மறவர் - சீறூரிலுள்ள மறவர்களது, சேக்கோள் தண்ணுமைக்கு - ஏறு கோட்பறை யொலிக்கு, எருவைச் சேவல் இரு சிறை பெயர்க்கும் - ஆண் பருந்து தனது பெரிய சிறகினை எழுப்பிப் பறந்தேகும், வெருவரு கானம் - அச்சம் வரும் காட்டிற்கு, நம்மொடு வருவல் என்றோள் - நம்முடன் வருவேன் என்று கூறிய நம் தலைவியின், மகிழ்மட நோக்கு - மகிழ்ச்சியைத் தரும் மடப்பம் வாய்ந்த நோக்கம்,

கூ—ச. பால் நாள் கங்குலும் பெரும் புல் மாலையும் - பாதி நாளாகிய இரவிலும் மிக்க பொலிவற்ற மாலைக் காலத்தும், ஆறு நோயொடு அழிபடர்க் கலங்கி - அமையாத வருத்தத்துடன் மிக்க துயரத்தாற் கலங்க, நம் வயின் நினையும் இடும்பை - நம்மை நினைதலாலாகும் துன்பம், கைமிக - அளவு கடத்தலின், நம்வயின் என்னை ஆகுமோ - நம்பால் என்ன தீங்கு நிகழுமோ.

(முடிபு) நெஞ்சே! சிறுகுடி மறவர் சேக்கோள் தண்ணுமைக்கு எருவைச் சேவல் இருஞ்சிறை பெயர்க்கும் வெருவரு கானம் நம்மொடு வருவல் என்றோள் மடநோக்கு, கங்குலும் மாலையும் கலங்கி, இடும்பை கைம்மிக, நம்வயின் என்னை யாகுமோ ?

(வி - ரை.) கலங்கி - கலங்க. நம்வயின் நினையும் - நம்மை நினையும்; வேற்றுமை மயக்கம். நோக்குக் கலங்க, இடும்பை கைம்மிக, நம்வயின் என்னை ஆகுமோ? எனத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறினான் என்க. என்னை யாகுமோ - யாது துன்பம் நிகழுமோ என்றபடி. மாய்த்தல் - திட்டுதல், [1]'மாய்த்த போல மழுகு நுனை தோற்றி.' [2]'கொடுவில் லெயினர் பகழி மாய்க்கும்' என்பவற்றில் மாய்த்தல் இப் பொருட்டாதல் காண்க. மறவர் தம் அம்பினைத் திட்டுதலால், புறம் தேய்ந்து எழுத்துக்கள் இடையிடை மறைந்திருந்தலின், வம்பலர் அவற்றை இயைத்து நோக்கலாற்றாது விடுத்து அகல்வார் என்க. பெயர் பயம் - பெயரும் பீடும் என்க. குயில் எழுத்து - குயிற்றிய எழுத்து. புறவின் முன்றிலில் வெருகின் பிள்ளை தாய்வழிப் படும் சிறுகுடி என்க. வெண்ணிறமுடைய வெருகிற்கு மதியும் அதனைச் சூழும் பிள்ளைகட்கு மதியைச் சூழும் மீன்களும் உவமமாயின. தண்ணுமை ஒலியைக் கேட்ட எருவைச் சேவல், ஆண்டு உணவு உளதாதல் கருதிச் செல்லும் என்பது சிறை பெயர்க்கும் என்பதனாற் குறிக்கப்பட்டது. அஞ்சத்தக்க காட்டிலும்

1. அகம். ரு. 2. குறு. கஉ.

தலைவி உடன் போக்குத் துணிந்து கூறிய காலை அவளது நோக்கம் மகிழ்ச்சியால் மலர்ந்திருந்தது, தலைவனது நெஞ்சில் நிலைபெற்றிருந் தமையின் அதனை விதந்து மகிழ் மடநோக்கு என்றான்.

---

## 298. குறிஞ்சி

[இரவுக்குறிக்கண் தலைமகற்குத் தலைமகள் சொல்லியது.]

பயங்கெழு திருவிற் பல்கதிர் ஞாயிறு
வயங்குதொழில் தரீஇயர் வலனேர்பு விளங்கி
மல்குகடற் றோன்றி யாங்கு மல்குபட
மணிமருண் மாலை மலர்ந்த வேங்கை
ரு ஒண்டளிர் அவிர்வரும் ஒலிகெழு பெருஞ்சினைத்
தண்டுளி அசைவளி தைவரும் நாட
கொன்றுசினந் தணியாது வென்றுமுரண் சாம்பாது
இரும்பிடித் தொழுதியின் இனந்தலை மயங்காது
பெரும்பெயற் கடாஅஞ் செருக்கி வளமலை
கய இருங்களி றியல்வரும் பெருங்காட் டியவின்
ஆரிருள் துமிய வெள்வேல் [1]ஏந்தித்
தாழ்பூங் கோதை ஊதுவண் டிரீஇ
மென்பிணி யவிழ்ந்த அரைநாள் இரவின்
நீவந் ததனினும் இனிதா கின்றே
கரு தூவற் கள்ளின் துனைதேர் எந்தை
கடியுடை வியனகர் ஓம்பினள் உறையும்
யாயறி வுறுதல் அஞ்சிப் பானாட்
[2]கரவல் நெஞ்சமொடு காமஞ் செப்பேன்
யானின் கொடுமை கூற நினைபாங்கு
உ0 இனையல் வாழி தோழிநந் துறந்தவர்
நீடல ராகி வருவர் வல்லெனக்
கங்குல் உயவுத்துணை யாகிய
துஞ்சா துறைவி இவளுவந் ததுவே.

—மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனார்.

(சொ - ள்.) க—ரு. பயம் கெழு திருவின் பல் கதிர் ஞாயிறு - உலகிற்குப் பயன்மிக்க திருவினைத் தரும் பல கதிர்களையுடைய ஞாயிறு, வயங்கு தொழில் தரீஇயர் - விளங்கும் தொழில்களை அவ் வுலகிற்குத் தருமாறு, வலன் ஏர்பு - வலமாக எழுந்து, விளங்கி - விளக்கமுற்று, மல்கு கடல் தோன்றியாங்கு - பெரிய கடலில் தோன் றினாற் போல, மணி மருள் மாலை - நீல மணியினை யொத்த மாலைக் காலத்தே, மல்குபட மலர்ந்த வேங்கை - நிறைதல் உண்டாக மலர்ந்

(பாடம்.) 1, கக—கச. ஏந்தி, மென்பிணி யவிழ்ந்த தாழ்பூங் கோதை, ஊது வண்டிரிய வழிப்பனை முயங்கிய, நீவந் ததனினும். 2. காவல்.

துள வேங்கை மரத்தின், ஒள் தளிர் அவிர் வரும் ஒலிகெழு பெருஞ் சினை - ஒளி பொருந்திய தளிர்கள் விளங்கும் தழைத்தல் பொருந்திய பெரிய கிளையிலுள்ள, தண் துளி அசைவளி தைவரும் நாட - தண்ணிய துளிகளை அசைந்துவரும் காற்று மெல்லெனத் தடவி உதிர்க்கும் நாடனே!

எ—கூ0. கொன்று சினம் தணியாது - தன் பகையினைக் கொன்று தன் சினத்தினைப் போக்கிக்கொள்ளாமலும், வென்று முரண் சாம்பாது - அன்றி அதனை வென்றோட்டி மாறுபாட்டினை மெலிவிக்காமலும், இரும் பிடித் தொழுதியின் இனம் தலைமயங்காது, பெரிய பெண் யானைகளின் கூட்டமாகிய இனத்துடன் கலவாமலும், பெரும் பெயல் கடாஅம் செருக்கி - பெரும் மழை போலும் மதத்தால் செருக்குற்று, வளமலை இருங் களிறு - வளமிக்க மலையிடத்ததாய பெரிய களிறு, இயல்வரும் பெருங் காட்டு இயவின் - இயங்கும் பெரிய காட்டு நெறியில்,

கக—ரு. ஆர் இருள் துமிய வெள் வேல் ஏந்தி - அரிய இருள் நீங்க வெள்ளிய வேலைக் கையிற் கொண்டு, மெல் பிணி அவிழ்ந்த - மெல்லிய அரும்பு மலர்ந்த, தாழ் பூ கோதை - தாழ்ந்த பூமாலைக்கண், ஊது வண்டு இரீஇ - ஊதும் வண்டினை ஓட்டி, அரை நாள் இரவு இவண் நீ வந்த அதனினும், நடு நாளாய இரவில் இங்கு நீ வந்த வருகையினும்,

கரு—உந. தூவல் கள்ளின் துனை தேர் எந்தை - மழை போன்ற கள்ளையும் விரையும் தேரினையுமுடைய எம் தந்தையின், கடி உடை வியன் நகர் ஓம்பினள் உறையும் - காவலையுடைய பெரிய மனையின் கண் எம்மைப் பாதுகாத்து அகலாதிருக்கும், யாய் அறிவுறுதல் அஞ்சி - எம் தாய் அறிந்திடலை அஞ்சி, பால் நாள் - நடு இரவில், கரவல் நெஞ்சமொடு காமம் செப்பேன் - மறைத்தல் பொருந்திய மனத்தினொடு எனது காமத்தினைச் செப்பாது, யான் —, நின் கொடுமை கூற - நீ வந்திலை என்னும் கொடுமையினை மெல்லெனக் கூற, ஆங்கு நினைபு, அங்கு என் கருத்தினை உணர்ந்து, தோழி —, வாழி —, இனையல் - வருந்தாதே, நம் துறந்தவர் - நம்மைத் துறந்த நம் தலைவர், நீடலர் ஆகி வல் வருவர் என - தாழ்க்காதவராகி விரைந்து வருவர் எனக் கூறி, கங்குல் உயவுத் துணையாகிய - இரவில் உசாத்துணையாதற்கு, துஞ்சாது உறைவி - துயிலாது என்னுடன் கூடியிருந்த என் தோழியாய, இவள் உவந்தது - இவள் மகிழ்ந்தது, இனிது ஆகின்று - எனக்கு இனியதாகவுள்ளது.

(முடிபு) நாட! பெருங்காட்டியவின் வேல் ஏந்தி அரைநாள் இரவு இவண் நீ வந்ததனினும், தோழி இனையல், நந்துறந்தவர் நீடலராகி வருவர் எனக் கூறி, கங்குல் உயவுத் துணையாகிய துஞ்சாது உறைவி இவள் உவந்தது இனிது ஆகின்று.

(வி - ரை.) பயம் கெழு திருவிற் பல் கதிர் - பயன் மிக்க வானவிற்போலும் பல கதிர்கள் என்றுமாம். வயங்கு தொழில் - உயிர்கள் விளங்குதற்கு ஏதுவாகிய தொழில்கள். ஞாயிறு தோன்றின்

அன்றித் தொழில் நிகழாதாகலின், ஞாயிறு தொழில் தரீஇயர் கடற்ருேன்றி யாங்கு எனப்பட்டது. மாலைப் பொழுதில் நீலமணி போலும் இருளிற்கும், அதன்கண் மலரொடும் தளிரொடும் சிவந்து விளங்கும் வேங்கைக்கும், நீலநிறமுடைய கடலும் அதன்கண் உதிக்கும் ஞாயிறும் உவமமாயின என்க. வென்று - பகையைத் துரந்து வென்று என்க. கொன்றும் வென்றும் என உம்மை விரித்துரைத்தலுமாம். களிறு மதச் செருக்கினுலே சினம் தணியாது முரண் சாம்பாது இனம் தலை மயங்காது திரியும் காடு என்க. இரவிற் பூக்கும் 'இருள் நாறி' முதலிய பூக்கள் மென் பிணி அவிழ்ந்த இரவு என்க. இரவு நீ வந்ததனினும் இனிதாகின்று என்றமையால், தலைவன் வருகை தனக்கு இனிதாயிற்று என்றாளாம். நின் காதல் மிகுதியை அறிந்து வைத்தும் அன்னை அறிதற் கஞ்சிப் பானுள் அதனை மொழியாது, நின் கொடுமை கூறினேளுக, 'நீ வருந்தாதே தலைவர் வருவர்' என்று கூறி, இரவெல்லாம் உசாத்துணையாகித் துயிலாதிருந்த தோழி எய்திய மகிழ்ச்சி நீ வந்த மகிழ்ச்சியினும் இனிதாயிற்று எனத் தலைவி தலைவற்குக் கூறினுள் என்க.

---

## 299. பாலை

[இடைச்சுரத்துப் போகாநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]

[1]எல்லையும் இரவும் வினைவயிற் பிரிந்த
[2]உள்ளம் முன்னுறு படைய உள்ளிய
பதிமறந் துறைதல் [3]வல்லுநம் ஆயினும்
அதுமறந் துறைதல் அரிதா கின்றே
ரு கடுவளி யெடுத்த கால்கழி தேக்கிலை
நெடுவிளிப் [4]பருந்தின் வெறியெழுந் தாங்கு
விசும்புகண் புதையப் பாஅய்ப் பலவுடன்
[5]அகலிடஞ் செல்லுந ரறிவுகெடத் தாஅய்க்
கவலை கரக்குங் [6]காடகல் அத்தஞ்
கo செய்பொருண் மருங்கிற் செலவுதனக் குரைத்தென
வைகுநிலை மதியம் போலப் பையெனப்
புலம்புகொள் அவலமொடு புதுக்கவின் இழந்த
நலங்கெழு திருமுகம் இறைஞ்சி நிலங்கிளையா
நீரொடு பொருத ஈரிதழ் மழைக்கண்
கரு இகுதரு தெண்பனி ஆகந் துறைப்பக்
கானிலை செல்லாது கழிபடர்க் கலங்கி
நாநடுக் குற்ற நவிலாக் கிளவியொடு

(பாடம்) 1. எல்லியும் இரவும். 2. முன்னம். 3. வல்லாமையினும். 4. பருந்தினம். 5. அகலிடைச் செல்லுநர். 6. காய்கலத்தம்.

அறல்மருள் கூந்தலின் மறையினள் திறன்மாண்டு
திருந்துக மாதோ நும் செலவென வெய்துயிராப்
உ௦ பருவரல் எவ்வமொ டழிந்த
பெருவிதுப் புறுவி பேதுறு நிலையே.

— எயினந்தைமகனார் இளங்கீரனார்.

(சொ - ள்.) க—ங. வினைவயின் பிரிந்த உள்ளம் - வினையின் பொருட்டுப் பிரிந்து போந்த உள்ளமே! முன் உறுபு - பண்டு தொட்டு, எல்லையும் இரவும் அடைய உள்ளிய - பகலும் இரவும் முழுதும் நினைக்கப்பட்ட, பதிமறந்து உறைதல் வல்லுநம் ஆயினும் - நம் பதியை மறந்து தங்குதலை மாட்டுவேமாயினும்,

ரு—கூ. கடுவளி எடுத்த கால்கழி தேக்கு இலை - கடிய காற்றினாற் பறிக்கப்பெற்ற காம்பு ஒழிந்த தேக்கின் இலைகள், நெடுவிளிப் பருந்தின் வெறி எழுந்தாங்கு - நீண்ட கூப்பீட்டினைச் செய்யும் பருந்தின் வட்டம் எழுந்ததுபோன்று, விசும்பு கண்புதையப் பாஅய் - விசும்பு இடம் மறையப் பரவி, பல உடன் - பலவும் ஒருங்கே சேர்ந்து, அகல் இடம் செல்லுநர் அறிவுகெடத் தாஅய் - அகன்ற பாலையிடத்தே செல்லுவோரின் அறிவு (சுவடு அறியாது) மயங்கும்படி பரந்து, கவலை கரக்கும் காடு அகல் அத்தம் - கவர்த்த நெறிகளையெல்லாம் மறைத்துவிடும் அகன்ற காட்டு நெறியில்,

க௦. செய்பொருள் மருங்கின் செலவு தனக்கு உரைத்தென - பொருளீட்டும் வினைக்கட் செல்லுதலை அவளுக்கு உரைத்தேனாக,

கக—உக. வைகுநிலை மதியம் போல - இரவு புலரும் காலத்து மதியினைப்போல, புலம்புகொள் அவலமொடு - தனிமையுறும் துன்பத்தொடு, மையெனப் புதுக்கவின் இழந்த நலம்கெழு திருமுகம் இறைஞ்சி - புதிய அழகினை மெல்ல இழந்த நலம் பொருந்திய அழகிய முகத்தினைக் கவிழ்த்து, நிலம் கிளையா - கால் விரலால் நிலத்தைக் கிளைத்து, நீரொடு பொருத ஈர்இதழ் மழைக்கண் - நீருடன் கூடிய ஈரம் வாய்ந்த இதழினையுடைய குளிர்ந்த கண், இகுதரு தெண்பனி ஆகத்து உறைப்ப - சொரிகின்ற தெளிந்த நீர் மார்பின் கண் துளித்துவிழ, கால்நிலை செல்லாது - கால் ஓரிடத்தில் நிற்றல் ஆற்றாதாக, கழிபடர் கலங்கி - மிக்க துன்பத்தாற் கலக்கமுற்று, அறல் மருள் கூந்தலின் மறைந்தனள் - கருமணலை ஒத்த விரிந்த கூந்தலில் மறைந்து, நாநடுக்குற்ற நவிலாக் கிளவியொடு - நாவானது நடுக்கமுற்ற திருந்தாத சொற்களால், நும்செலவு திறன்மாண்டு திருந்துக என - நுமது போக்கானது கூறுபாடு மாட்சியுற்றுச் செப்பமுறுக என்று கூறி, வெய்து உயிரா - வெவ்விதாக உயிர்த்து, பருவரல் எவ்வமொடு அழிந்த - துன்பத்தைத் தரும் வருத்தத்தால் அழிந்த, பெருவிதுப்புறுவி பேதுஉறுநிலை - மிக்க விரைவினையுறுவாளாய தலைவி மயக்குற்ற நிலையாய,

௯. அது மறந்து உறைதல் அரிதாகின்று - அதனை மறந்து தங்கு தல் அரியதாக வுள்ளது.

(முடிபு) வினைவயிற் பிரிந்த உள்ளமே! பதிமறந்துறைதல் வல்லுநம் ஆயி னும், காடகல் அத்தம் செலவு தனக்கு உரைத்தனென, திருமுகம் இறைஞ்சி, நிலம் கிளையா, மழைக்கண் தெண்பனி ஆகத்து உறைப்ப, கால்நிலை செல்லாது, கழி படர்க் கலங்கி, கூந்தலின் மறையினள், நவிலாக் கிளவியொடு, நம் செலவு இறன் மாண்டு திருந்துக எனக் கூறி, அழிந்த பெருவிதுப்புறுவி பேதுறுநிலை அது மறந் துறைதல் அரிதாகின்று.

(வி - ரை.) பிரிந்த - பிரிந்து என்றுடன் போந்த என்க. உள் ளம், விளி. பிறந்த நாள் தொட்டுப் பகலும் இரவும் பயின்று வதிந்து நினைந்துவந்த பதியை ஒரு காலத்து மறந்துறைதல் என்பது அரிதென்பான், பதி மறந்துறைதல் வல்லுநமாயினும் என்றான். தேக்கிலை பாஅய்த் தாஅய்க் கவலை கரக்கும் அத்தம் என்க. கடுங் காற்றினல் கவரப்பெற்ற தேக்கிலைகள் முதற்கண் விசும்பிடமெல் லாம் மறையும்படி படர்ந்து, பின் நிலமிசை வீழ்ந்து பரவி வழிகளை மறைக்கும் அத்தம் என்றான். பொருள்வயிற் செலவை உரைத்தது கேட்ட தலைவியின் முகம், முதலில் மெல்லென ஒளிகுன்றிக் காட் டிற்று ஆதலின், அதனை விடியற்காலையில் ஒளி குறைந்து தோன்றும் மதியத்தொடு உவமித்தான். பொருத - தடுத்த என்றுமாம். இறும் - இமை. தான் பொருள்வயிற் பிரிவு உரைப்பக் கேட்டபொழுது, தலைவியின் முகம் ஒளிகுன்றிக் கவிழ்ந்திருக்க, கால்கள் நிலத்தைக் கிளைத்து நிலைபெறுவாக, கண்கள் நீரினைச் சொரிய, உள்ளம் பெரும் துன்பத்தால் கலங்குதலுற, கூந்தல் விரிந்து உடம்பினை மறைக்க, இங்ஙனமாகத் தலைவி எவ்வம் உற்று அழிந்து வெய்துயிர்த்து, உரைத்தற்கு நாஎழாது நடுங்க, நும்செலவு திருந்துக எனக் கூறிய வருத்தம் மிக்க நிலை தலைவன் உள்ளத்தே மாறாது நிலைபெற்றிருந் தமையின், பேதுறு நிலையாகிய அது மறந்துறைதல் அரிதாகின்று எனத் தலைவன் நெஞ்சிற்கு உரைத்தான் என்க. பேது உறு நிலை - வருத்தத்தை மிகுவிக்கும் நிலை என்றுமாம்.

---

## 300. நெய்தல்

[பகற்குறி வந்து நீங்குந் தலைமகற்குத் தோழி சொல்லியது.]

நாள்வலை முகந்த கோள்வல் பரதவர்
நுணங்குமணல் ஆங்கண் உணங்கப் பெய்ம்மார்
பறிகொள் கொள்ளையர் மறுக உக்க
மீனர் குருகின் கானலம் பெருந்துறை
ரு எல்லை தண்பொழிற் சென்றெனச் செலீஇயர்
தேர்பூட் டயர ஏஎய் வார்கோற்
செறிதொடி திருத்திப் பாறுமயிர் நீவிச்
செல்லினி மடந்தைநின் தோழியொடு மனையெனச்
சொல்லிய அளவை தான்பெரிது கலுழ்ந்து

க0 தீங்கா யினளிவ ளாயின் தாங்காது
நொதுமலர் போலப் பிரியிற் கதுமெனப்
பிறிதொன் றாகலும் அஞ்சுவல் அதனாற்
சேணின் வருநர் போலப் பேணாய்
[1]இருங்கழி யாணரெஞ் சிறுகுடித் தோன்றின்
கரு வல்லெதிர் கொண்டு மெல்லிதின் விளைஇத்
துறையும் மான்றின்று பொழுதே சுறவும்
[2]ஓதம் மல்கலின் மாறா யினவே
எல்லின்று தோன்றல் செல்லா தீமென
எமர்குறை கூறத் தங்கி ஏமுற
உ0 இளையரும் புரவியும் இன்புற நீயும்
இல்லுறை நல்விருந் தயர்தல்
ஒல்லுதும் பெருமநீ நல்குதல் பெறினே.

—உலோச்சனார்.

(சொ - ள்.) உஉ. பெரும - பெருமானே !

க—ச. நாள் வலை முகந்த கோள் வல் பரதவர் - நாட் காலையில் வலையினால் மீன்களை முகந்துகொண்ட மீன் பிடித்தலில் வல்ல பரதவர்கள், பறி கொள் கொள்ளையர் - பின் பறியால் கொண்ட மிக்க மீனினை யுடையராகி அவற்றை, நுணங்கு மணல் ஆங்கண் - நுண்ணிய மணலிடத்தே, உணங்கப் பெய்ம்மார் - புலரும்படி பெய்வாராய், மறுக உக்க - வருந்துமாறு சொரிந்த, மீன் ஆர் குருகின் - மீன்களைத் தின்னும் பறவைகளையுடைய, கானல் அம் பெருந் துறை - சோலையையுடைய அழகிய பெரிய கடற்றுறையின்கண்,

ரு—கஉ. தண்பொழில் எல்லை சென்றென - குளிர்ந்த சோலையிற் பகற் பொழுது சென்றதாக, செலீஇயர் - நின் ஊர்க்குச் செல்ல, தேர் பூட்டு அயர ஏஎய் - தேரைப் பூட்டுமாறு ஏவி, வார் கோல் செறி தொடி திருத்தி - இவளது நெடிய திரண்ட நெருங்கிய வளையினைத் திருந்த அணிவித்து, பாறு மயிர் நீவி - சிதறிய கூந்தலைத் தடவி, மடந்தை நின் தோழியொடு இனி மனை செல் என - மடந்தையே நின் மனைக்கு நின் தோழியுடன் இப்போது செல்வாயாக என்று, சொல்லிய அளவை - சொன்ன அளவிலே,

கூ—கஉ. இவள் பெரிது கலுழ்ந்து தீங்காயினள் ஆயின் - இவள் மிகவும் அழுது வருந்துகின்றாளாதலின், தாங்காது நொதுமலர் போலப் பிரியின் - அதனை எண்ணாது ஏதிலர் போலப் பிரிந்து செல்லின், கதுமெனப் பிறிதொன்று ஆகலும் அஞ்சுவல் அதனால் - விரைந்து இவள் வேறு தீங்கு அடையினும் அடைவளென அஞ்சுகின்றேன் அதனால்,

கங—உஉ. நீ நல்குதல் பெறினே - யான் கூறுவதனை நீ கேட்டருளுதல் செய்யின், சேணின் வருநர் போல பேணாய் - நீயும் நின் இளையரும் சேய்மையினின்றும் வருவார் போலக் கருதாயாய், இரு

(பாடம்) 1. பெருங்கழி. 2. ஓதமலி கடலின்.

கலி யாணர் எம் சிறுகுடித் தோன்றின் - மிக்க ஆரவார முடைய அழகிய எமது சீறூரின்கண் வரின், எமர் - எங்கள் மனையிலார், வல் எதிர் கொண்டு - விரைய எதிர்கொண் டழைத்து, மெல்லிதின் வினைஇ - மெல்லென வினவி, பொழுது மான்றின்று - பொழுது மயங்கிவிட்டது, துறையும் ஓதம் மல்கலின் சுறவும் மாறு ஆயினவே - நீர்த்துறையும் அலை பெருகி ஏறலின் சுறாக்களும் பகையாயின, எல்லின்று - இருண்டுவிட்டது, தோன்றல் - தலைவ, செல்லாதீம் என - செல்லற்க என, குறை கூற - குறையிரந்து வேண்ட, ஏம் உறத் தங்கி - அங்கு இன்ப முறத் தங்குதல் செய்து, இளையரும் புரவியும் நீயும் இன்பு உற - நின் ஏவலரும் குதிரையும் நீயும் இன்பம் எய்த, இல் உறை நல் விருந்து அயர்தல் ஒல்லுதும் - எம் இல்லில் தங்கும் நல்ல விருந்தாக ஏற்றுப் பேணுதலைப் பொருந்துவேம்.

(முடிபு) பெரும! நீ எல்லை சென்றெனச் செலீஇயர் தேர் பூட்டயர எனாய், மடந்தை! நின் தோழியொடு இனி மனைசெல் எனச் சொல்லிய அளவை இவள் பெரிது தீங்காயினள் ஆயின், நீ பிரியின், பிறிதொன்றாகலும் அஞ்சுவல்; அதனால் நீ நல்குநல் பெறின், எம் சிறுகுடித் தோன்றின், எமர் குறை கூறத் தங்கி, ஏமுற, நல்விருந்தயர்தல் ஒல்லுதும்.

(வி - ரை.) பறி - மீன் படுக்கும் ஓர் கருவி. எல்லை தன் பொழிற் சென்றென என்பது பகற்குறிக்கண் கூட்டம் புணர்ந்தமை உணர்த்தியவாறும். செலீஇயர் - ஊர்க்கண் செல்லுதற்கு. எனாய் - இளையரை ஏவி என்க. இளையரை ஏவி, தொடி திருத்தி, மயிர் நீவிச் சொல்லிய அளவை என்றியையும். கூட்டத்தால் தொடி பிறழ்ந்தும் மயிர் குலைந்தும் இருந்தவற்றைத் திருத்தியும் நீவியும் செம்மை செய்தான் என்க. தாங்காது - உள்ளத்திற் கொள்ளாது. பிறி தொன்றாகல் - பெரும்பிறி தடைதல்; உயிர் துறத்தல் என்றதனை வெளிப்படக் கூறாததற்கும் ஆற்றாது பிறிதொன் றாகலும் என்றான்; பிறிதொன்றாகலும் கூடுமோ என அஞ்சுவல் என்றான் என்க. சேணின் வருநர்போலப் பேணாது என்றது, பழையார் போலக் கருதி என்றபடியாம். அன்றிச் சேய்மைக்கணின்றும் புதியராய் வருவார் போல எம்முடனுள்ள தொடர்பு புலப்படாது சிறுகுடித் தோன் றின் என்றுரைத்தலும் ஆம். பொழுது மான்றின்று துறையும் ஓதம் மல்கலின் சுறவும் மாறாயின எனக் கொண்டு கூட்டுக. குறை கூறு தல் - குறை யிரத்தல். ஏமுறத் தங்கி நீ நல்குநல் பெறின் என இயைத்துரைத்தலுமாம்.

(மே - ள்.) [1]'இருவகைக் குறிபிழைப் பாகிய விடத்தும்' என்னுஞ் சூத்திரத்து இச்செய்யுளைக் காட்டி, இதனுள் தான் பெரிது கலுழ்ந்து தீங் காயினள் எனவே அக்குறிப்புத் தலைவன் போகாமற் றடுப்பக் கூறிய தென்று உணர்ந்து தோழி கூறினாள் என்றும், [2]'நாற்றமும் தோற்றமும்' என்னுஞ் சூத்திரத்து, வேளாண் பெருநெறி வேண்டிய விடத்தும் என்ற பகுதியில், இச்செய்யுளும் அது என்றும் கூறினார் நச்.

---

1. தொல். கள. கக. 2. தொல். கள. உ௩.

# அகநானூறு மணிமிடை பவளம்

## பாட்டு முதற்குறிப்பு அகரவரிசை

# ஆசிரியர் பெயர் அகரவரிசை